# ஆசியத் திருச்சபை வரலாறு

(கி.பி. 40 - 1800 ஆண்டுகள் வரை சில பதிவுகள்)

பாகம் ஒன்று

கலாநிதி
சுவாமி ஜெ.இ. ஜெயசீலன்

வெளியீடு
வளன் ஆச்சிரமம்
47, 6ஆம் குறுக்குத்தெரு,
யாழ்ப்பாணம்.
2007

அச்சேற்ற அனுமதி:
அதி.வண. கலாநிதி தோமஸ் சவுந்தரநாயகம் ஆண்டகை
*யாழ் மறைமாவட்ட ஆயர்.*

20 மாசி 2007
ஆயர் இல்லம்.
யாழ்ப்பாணம்.


| | |
|---|---|
| நூலின் பெயர் | : ஆசியத் திருச்சபை வரலாறு (கி.பி. 40 – 1800 ஆண்டுகள் வரை சில பதிவுகள்) |
| ஆசிரியர் | : கலாநிதி சுவாமி ஜெ.இ. ஜெயசீலன் |
| வெளியீடு | : வளன் ஆச்சிரமம் 47, 6ஆம் குறுக்குத்தெரு, யாழ்ப்பாணம். |
| பதிப்புரிமை | : கலாநிதி சுவாமி ஜெ.இ. ஜெயசீலன் |
| முதற்பதிப்பு | : மாசி 2007 |
| பக்கங்கள் | : XIV + 214 = 228 |
| அட்டைப்பட வடிவமைப்பு | : ஆர். சத்தியவாணி |
| வடிவமைப்பு | : வி.பி.தனேந்திரா |
| அச்சுப்பதிப்பு | : 'சுரபி' பதிப்பகம் நாவலர் வீதி, யாழ்ப்பாணம். |
| விலை | : 200/= |

ISBN: 978-955-50109-0-0



**அமரர் சாமுவேல் பெனடிக்ற் அவர்களுக்கு**
**இந்நூல் சமர்ப்பணம்**

# உள்ளே...

**அத்தியாயம் பத்து**



**அத்தியாயழ் பதினொன்று**



**அத்தியாயம் பன்னிரண்டு**

# ஆசிரியர் உரை

எமது வெளியீடான 'தேவதாயின் குரல்' என்னும் இதழில், 1997ஆம் ஆண்டு தொட்டு வெளிவந்த ஆசியத் திருச்சபை வரலாற்றுத் தொடரை நூல் வடிவமாக்க முனைகிறேன். யப்பான், பிலிப்பைன்ஸ் முதலிய பகுதிகளையும், வெளிவராத வேறு சிலவற்றையும் முழுமைப்படுத்த உதவியவர் மறைந்த அமரர் சாமுவேல் பெனடிக்ற் அவர்கள். அவர் எமது ஆச்சிரமத்தினால் வெளிவரும் அச்சு ஊடகவழி நற்செய்திப் பணிக்கு தம்மால் இயன்ற பணிகளைச் செய்தவர். அவருக்கு இந்நூலை அர்ப்பணிக் கின்றேன்.

2000ஆம் ஆண்டு யூபிலிக்காக 'ஆசியாவில் திருச்சபை' என்ற பாப்பரசர் இரண் டாம் யோவான் பவுல் அவர்களின் திருமடல் வெளிவந்தபொழுது இப்படியான கருவூலத்தில் ஒரு நூல் தேவை என்பதை உணர்ந்தோம். அதுவும் நாம் ஆச்சிரமத்திலும், வெளிக்கிராமங்களிலும் நடத்திய கருத்தமர்வுகளில் தேவைப்பட்டதை அறிந்து கொண்டோம்.

அடிப்படைவாதம் - பிற சமயங்களில் தோன்றி நவீன உலகியல் வாத அலை களில் மூழ்கடிக்கப்படும் நம் தமிழ் கத்தோலிக்க உள்ளங்கள் தம் சுய கௌரவத்தையும், தனித்துவத்தையும் தக்கவைத்து வளர்க்க இந்நூல் சிறிது உதவலாம்.

யாழ்ப்பாண கத்தோலிக்க புதிப்பித்தலுக்கும் - படிப்பகங்களிலும் - மாணவ, இல்லற, துறவற, இளைஞர் புதிப்பித்தலுக்கும் இதில் காணப்படும் மிசனரிகளின் வீரசாட்சியங்கள், தியாகங்கள் பெரும் உதவியாகலாம்.

பன்னிரண்டு அத்தியாயங்கள் கிறிஸ்தவ வரலாற்றை ஆதிதொட்டு ஆங்கி லேயர் வருகை வரை ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இலங்கை பற்றிய நிறைய நூல்கள் உள்ளதாலும், யாழ்ப்பாணத் திருச்சபை வரலாறு ஏற்கனவே வெளிவந்துள்ளதாலும், இந்தியாவின் தமிழ்நாடு, யப்பான், பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளுடன் இந்நூல் அடங்கிக் கொள்கிறது. முழுமையாக வரையப்படாததால் ஆசியத் திருச்சபை வரலாறு கி.பி.40 -1800 ஆண்டுகள் வரை சில பதிவுகள் என்று அடக்கமான தலைப்பினை இந்நூலிற்கு கொடுத்துள்ளேன்.

இப்பிரதிகளைப் படித்து அச்சிட ஊக்குவித்தோர் எம்.அன்ரன் சுதாகரன், ஏ.ஜஸ்மின் யூலியற் முதலியோர். இந்நூலை ஆய்வு செய்து முகவுரை தந்தவர் வரலாற்றுத் துறை முதுநிலை விரிவுரையாளர் திரு. சீலன் கதிர்காமர் அவர்கள். இந்நூல் அச்சிட அனுமதி தந்தவர் யாழ். மறைமாவட்ட ஆயர் மேதகு தோமஸ் சவுந்தரநாயகம் ஆண்டகை.



கலாநிதி சுவாமி ஜெ.இ. ஜெயசீலன்

தம்பி வி.பி.தனேந்திரா (யாழ். ராதவல்லி)வின் அயராத முயற்சி இருந்திரா விடின் இந்நூல் வடிவமைக்கப்பட்டு உங்கள் கைகளில் தவழாது. அவரே இந்நூலின் முழுப்பிரதிகளையும் படித்துப்பார்த்து எடிற்றிங் செய்துள்ளார். கணனிக் கோப்பு, அட்டைப்பட வடிவமைப்பு, பிரதிகளை ஒப்புநோக்குதல் ஆகிய அனைத்துக்கும் பொறுப்பாக இருந்து அழகாக இந்நூலை வெளிக்கொண்டு வந்துள்ளார். இயேசு அவரை நிறைவாக ஆசீர்வதிக்க வேண்டுகிறேன்.

மேலும் இந்நூலை கணனிமூலம் அச்சுக்கோத்து வடிவமைக்கவும், அட்டைப் படத்தை வடிவமைக்கவும் உதவியவர் சுரபி பதிப்பகத்தைச் சேர்ந்த ஆர். சத்தியவாணி. மற்றும் நூலை அழகாக அச்சுப்பதித்துத் தந்தவர்கள் 'சுரபி' பதிப்பகப் பணியாளர்கள்.

இவர்கள் எல்லோருக்கும் எனது நன்றிகள்.

**சுவாமி ஜெ.இ. ஜெயசீலன்**
*வளன் ஆச்சிரமம்*
*49, 6ஆம் குறுக்குத்தெரு,*
*யாழ்ப்பாணம்*

# முகவுரை

ஆங்கில மொழி அறிவு உச்சநிலையில் இருந்தபொழுது, 20ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் யாழ்ப்பாணத்தில் உச்சநிலையை எட்டிற்று. தரமான நூல்கள், சஞ்சிகைகள், கால இதழ்களைப் படிப்போரின் - அவற்றை விமர்சிப்போரின் தொகை வரையறுக்கப்பட்டதாக இருந்திருப்பினும் உலக சிந்தனைகள் மேல் மட்டத்தில் இருந்து கீழே படிப்படியாக ஊறாமல் இருக்கவில்லை.

சிறந்த கல்விமான்கள், சமூக ஊழியர், கல்லூரிகள், மதபீடங்கள் ஊடாக யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற பல கருத்தரங்குகள், சமய சார்பற்ற ஒன்று கூடல்கள் மூலம் கல்வி அறிவு எல்லா மட்டங்களிற்கும் பரவிற்று. சிறந்த ஆய்வாளர், இறையியலாளர், சமய அனுபூதிமான்கள் - மேற்குலகு, இந்தியா, தென்இலங்கையில் இருந்து யாழ்ப்பாணம் வந்தனர். இவர்களுடனான உரையாடல் யாழ்ப்பாணத்தை சிந்தனையில் விறுவிறுப்பூட்டி அறிவு ஆற்றல், கற்றல் ஆர்வம் முதலியன அதன் அடிநாதமாக விளங்கப்பண்ணிற்று.

வடக்கிலும் கிழக்கிலும் தேசியவாதிகளிடையே ஏற்பட்ட போட்டியின் சுறுசுறுப்பில் ஆங்கிலம் செயற்பாட்டிலும் செயற்பட தவறியதிலும் வெளியே எறியப்பட்டது (ஏற்றப்பட்டது). தொடர்ந்து வந்த இளைஞர் கல்வித்தரத்தில் இதனால் ஏற்பட்ட பாரிய விளைவுகளை உணர்கின்றோம். 1940இல் கொண்டு வரப்பட்ட சுதேச மொழிக்கல்வியை கொச்சைப்படுத்த விரும்பவில்லை; அது தேவையானதும் நன்மை பயப்பதெனினும் சர்வகலாசாலைகளில் இரு மொழிகளின் வளர்ச்சிப் பாவனைக்குக் கொடுக்க வேண்டிய இடம் கொடுக்கப்படவில்லை. யப்பானில் ஆங்கில அறிவுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. அதே போல் வேறு வேறு ஐரோப்பிய மொழிகளுக்கும் அண்மையில் பல ஆசிய மொழிகளுக்கும் இடம் அளிக்கப்பட்டுள்ளது. நம் வலுவற்ற ஏழை நாடுகளில் இவ்வகை கல்வி மாற்றங்கள் பெரிய அளவில் கடினம்.

பல ஆண்டுகளூடாக அறிவாளிகளும் ஆய்வாளரும் சேர்ந்துள்ள அறிவை மக்களுக்குப் பரவலாகக் கொடுக்கும் கடமை தமிழ், சிங்கள எழுத்தாளர்கள் ஆய்வாளர்களில் பொதிந்துள்ளது. இவ்வகை வெளியீடுகள் அருமையாகவே காணப்படுகின்றன. ஆங்கிலத்தில் வெளியிடும் அறிஞர் தேசிய மொழிகளில் வெளியீடுகள் செய்வதில்லை. இந்நூலை வெளியிடுவதனூடாக ஜெயசீலன் அடிகளார் தமிழ் வாசகர்களுக்கு குறிப்பாக நம் கிறிஸ்தவ குருத்துவ இல்லற தலைமைகளுக்கும் அளப்பரிய சேவை புரிந்துள்ளார்.

நகர்புற வளர்ச்சியும் சமய சார்பற்ற வளர்ச்சியும் மிகத் துரித வளர்ச்சி

அடையும் தெற்காசிய, கிழக்காசிய நாடுகள் பலவற்றில் கிறிஸ்தவம் பெருகிவரும் மதமாக மாறியுள்ளது. இன்று இப்பிராந்தியத்தில் இளைஞரிடையே ஆன்மீக நாட்டம் பெருகி வருகின்றது. முன்னைய ஐரோப்பிய காலனித்துவ சாம்ராஜ்ஜிய ஆதிக்க பரவலாக்க குடைநிழலில் இது நடைபெறவில்லை. கிறிஸ்தவ திருச்சபை சில இடங்களைத் தவிர்த்து மண்மயமாகி மக்களில் வேரூண்டிவிட்ட சபை, இந்நூல் ஆசியாவில் கிறிஸ்தவத்தை அதன் வரலாற்றுப் பின்னணியில் ஊன்றிவிடுகின்றது. இந்நூல் ஆதித்திருச்சபை பற்றிய சிறிய குறிப்போடு ஆரம்பித்து பலஸ்தீன, சீரிய திருச்சபைகளின் ஆரம்ப பிதாக்கள் பிரதேசம் பிரதேசமாக 40ஆம் ஆண்டு தொட்டு 1000 ஆண்டுகள் வரையிலுள்ள வரலாற்றை சுருக்கமாகக் கொடுக்கின்றது. இவற்றுள் மத்திய கிழக்கு, இந்தியா, சீனா உள்ளடக்கப்படுகின்றது. 1000ஆம் ஆண்டு தொட்டு 1500ஆம் ஆண்டுவரை சுருக்கமாக எழுதி அதன் முக்கிய காலமான 1500 - 1800 ஆண்டுகளுக்குள் உட்புகவைக்கிறது.

16ஆம் 17ஆம் நூற்றாண்டின் மதுரை மிசன் இறையியலாளர் றொபேட் டி நோபிலியின் ஊழியமும் தமிழர்களாகிய எமக்கு தமிழ்நாட்டுத் திருச்சபை வரலாறு எமக்கு முக்கியமாகத் தென்பட்ட அதே வேளை புனித சவேரியாரின் யப்பானிய மறைபரப்பு ஊழியமும், பிலிப்பைன்ஸ் திருச்சபை வளர்ச்சியும் சமமாக விவரிக்கப் படுகிறது. யேசு சபையினரின் அச்சுப் பணிகள் கிறிஸ்தவ இலக்கிய வளர்ச்சி வியா பாரத் தொடர்புகள் வணிக வளர்ச்சி பற்றிய குறிப்புகள் நம்மைக் கவர்கின்றன. ஆசிரியர் வரலாற்று விவரிப்பு மத்தியிலும், நூலின் மையக் கருத்தினை மறக்காது; கிறிஸ்தவ படிப்பினைகள், சவால்கள், துன்பங்கள், பரித்தியாகங்கள் இவற்றைத் தாங்கிய ஆதித்திருச்சபையின் சீரற்ற குறுக்கும் மறுக்குமாகத் தோன்றும் வரலாற்றின் நாயகர்களையும் சித்தரிக்கின்றார்.

ஆசிரியர் இவ்வரலாற்றை வரைய அவர் பல்கலை உருவாக்கத்தினால் தகுதி படைத்தவர். யாழ்ப்பாணத்தில் கடினமான பல வருடங்களினூடாக வாழ்ந்த பலரா லும் ஏற்கப்பட்ட அவர் வாழ்வுச் சீர்நிலை வைரமடைந்த வேளையில் மக்களின் அன்றாட வாழ்க்கை குறிப்பாக ஏழைகளின் வாழ்வு, வசதிகள் அற்றோர், ஒதுக்கப் பட்டோர், ஓரங்கட்டப்பட்டோர் வாழ்வில் அவர் ஈடுபாடு அறியப்பட்டதே.

அவர் கற்பித்தலிலும் செயல் அனுபவத்திலும் தெளிவை உட்புகுத்துபவர். யாழ்ப்பாணத்தில் பிரசவ வேதனைகள் மத்தியிலும் அன்றாட வாழ்வு வேதனைகள் குறைகள் மத்தியிலும் இவ்வகை நூலை வெளிக்கொணருவது மெச்சப்பட வேண்டிய தொன்று.

யாழ் சர்வகலாசாலையில் அவர் முதல் இளமாணி வருடப் படிப்பின் காலம் தொட்டு கடந்த 30 வருடங்களாக அறிந்துள்ளோம். யாழ்ப்பாணத்தின் மனித உரிமை மீறல்கள் மத்தியில் நாம் இறங்கிய போது அவரை இன்னும் நெருக்கமாக அறிந்து வந்தேன். 1979ஆம் ஆண்டு ஜூலை இளைஞர்களின் நடுச்சாம கொலைக்குப் பின்ன ணியில் நம் சமூகம் கலக்கமுற்ற வேளையில், இது தமிழ் இளைஞர் போராட்டத்தை பிறப்பித்து ஊக்குவித்த கட்டத்தில் இவர்களுக்கு இடையில் நீதிக்கும் சமாதானத் திற்குமான இயக்கத்தின் யாழ்ப்பாணக் கிளை ஆரம்பமான பொழுது, வண.போல் கஸ்பேர்ஸ் அடிகள் பரவலாக அரசியல் கட்சிகள், தொழிற் சங்கங்கள், சமூக இயக்கங் கள், தனி மனிதர்கள் முதலியோரை ஒரு மக்கள் முன்னணியில் இணைத்து முன்னெடுத் தார். இன்று அண்மையில் எழுந்துள்ள அரசசார்பற்ற நிறுவனங்கள் (NGO) போன் றல்ல எல்லோரும் தொண்டர்களாக, ஒரு முழு நேர ஊதியம் பெறும் வேலையாளு மில்லாமல், தொண்டின் இலட்சிய உதாரணமாக இயங்கிய காலம்.

எல்லா மதத்தினர் கருத்தாளருடனான தோழமை பற்றி கிறிஸ்தவ சபை ஒற்றுமை இயக்கம் உலகு உரையாடிய காலகட்டம். இலங்கையிலும் குறிப்பாக யாழ்ப்பாண வாழ்க்கை அனுபவமாக மாறிற்று. இனங்களுக்கிடையே நீதிக்கும் சமத்துவத்துக்குமான இயக்கத்தின் யாழ்ப்பாண தொடக்கச் செயலாளராக இவர் இருந்தவேளை நான் அங்கு தலைவராக இருந்தேன். வண பிதா ஜெயசீலனும் வேறு சில நண்பர்களும் வேலைகளில் முக்கிய பொறுப்புக்களை ஏற்று பாதிக்கப்பட்ட குடும்பங்களைச் சந்தித்து, மனித உரிமை மீறல்களை பதிவு செய்து சாத்வீக போராட்டங்களை நடத்தினர்.

பிதா ஜெயசீலனின் விசுவாசத்தில் ஊன்றப்பட்ட ஆன்மீகம் எங்களில் பலருக்கு புத்துணர்ச்சி ஊட்டிற்று. என்னைப் பொறுத்தமட்டில் புத்தி ஜீவிகளாகிய எம்மில் சிலருக்கு கருத்தரங்குகள், விரிவுரைகள், கருத்தாய்வுகள் போன்ற எம் தந்தக் கோபுர உயர்நிலையில் இருந்து மக்கள் மட்டத்திற்கு இறங்கி வீதிகளுக்கு வந்து பகிரங்க கூட்டங்கள், பகிரங்க ஊர்வலங்கள், மக்கள் செயல்திட்டங்கள் முதலியவற்றில் பங்கு கொள்ள ஆழமான பாதிப்பை ஏற்படுத்திற்று. சிந்தனையிலிருந்து செயலாற்றத்திற்கு மாறுவது ஒரு சிறு அளவிலேனும் புத்துணர்வு ஊட்டுவதும் ஆன்மீக ரீதியில் அர்த்த முள்ளதும், பெறுமதியானதும். ஆசியத் திருச்சபை வரலாறு என்னும் இந்நூலுக்கு இம் முகவுரை எழுதுவதில் நான் பெருமகிழ்வு அடைகின்றேன். ஜெயசீலன் அடிகளுடனான நீண்டகால நட்புறவிற்கும் தோழமைக்கும் நன்றிக் கடனாக இந்தப் பதிவை செய்வதற்கு இது எனக்கு நல்ல வாய்ப்பை அளித்துள்ளது.

**சீலன் கதிர்காமர்**

பெப்ரவரி 2007

# FOREWORD

Education in Jaffna reached its highest point in the mid-decades of the twentieth century, When literacy in the English language was at its highest. Though the number of people who read and discussed books, joumals, and periodicals of high quality was limited, there was a filter down effect of the world's best output in knowledge. This was through distinguished educationists, social activists, colleges, churches and numerous seminars and conferences, religious and secular held in Jaffna. Distinguished scholars, theologians and religious savants from many parts of the world, notably from the West, India and the South in Lanka visited Jaffna. The interaction that took place made Jaffna intellectually vibrant, where learning and education was its very ethos.

English, through acts of commission and omission, was virtually thrown out of the window in the heat of competing nationalisms both in the north and the south. We have paid a heavy price in the quality of education imparted to generations of young people. These comments are not made to belittle the transition to education in Swabasha that was set in motion from the 1940s. Education in the mother tongue was the right and correct decision. But unfortunately bilingualism was not developed and the given the importance that it should have been given, especially in the universities. In a country like Japan utmost importance has been given to the study of English in addition to other European languages and in recent times to several Asian languages as well. The best works in English and European languages are immediately available in Japanese translation, the Japanese edition being much cheaper that the English one due to the large market available for books in Japan.

In a resource poor country like ours translations on that scale are impossible. Hence the responsibility has fallen on writers and scholars to publish in Tamil or Sinhalese enabling a larger reading public to have access to the knowledge these scholars have accumulated by wide reading and research over the years. Unfortunately such publications worthy of note are rare. Many who publish scholarly works in English do not have editions In the national languages. In writing this very welcome book Fr.Jeyaseelan has done a yeoman service to the Tamil reading public, and especially the Christian community, its clergy and lay leadership.

Christianity is a fast growing religion in several Asian countries, especially in South East and East Asia, where urbanization and the consequent secularization process has taken place at a fast pace. Today there is a search for spirituality in this region especially among young people. This is no longer taking place under the umbrella of Christian triumphalism associated with European imperialism and expansion. The church in Asia, with some exceptions, is today a very much home grown church. This book places Christianity in Asia in historical perspective.

The book begins with a brief history of the early church, and provides a broad survey of the early period in Palestine and Syria, with references to the founding fathers, and then moves on to a region-by-region account covering the period 40 to 1000 A.D. The regions include the Middle East, India and China. The period 1000 to 1500 A.D. is covered briefly, bringing us to the substantial part of the work, from 1500 to 1800 A.D. Of special interest to us as Tamils is the history of the church in Tamil Nadu and the work of the Madurai Mission theologian and priest Robert de Nobily in the 16th and 17th centuries, which is matched by the survey of the work of Francis Xavier and Christianity in Japan, and the growth of the Church in the Philippines. Other interesting and valuable references in the book are to trade and commerce, the growth of Christian literature and the publications of the Jesuit press. The author does well in not losing the main focus of his book while providing us with a valuable narrative history. He dwells on the teachings, the challenges faced, the sufferings undergone and the sacrifices made by several famous personalities in the long and chequered history of the Church in Asia.

Fr. Jeyaseelan is well equipped by his academic training to write this history. Living through decades of life in a turbulent Jaffna, his integrity remains unquestioned and is widely acknowledged. His life has been marked by involvements in the daily life of people, especially the poor, the under privileged and marginalized. He brings to his teaching mission the enlightenment that comes from practice. Any scholar who comes out with a book of this nature in spite of the limitations imposed by the travails of everyday life in Jaffna needs to be congratulated.

I have known him for over three decades from the time he read for his first degree in the University of Jaffna. My intimate interactions with him began when he plunged himself into the struggle for human rights in Jaffna. In July 1979 soon after the midnight murders of Tamil youth that sere stock waves through the whole community, and which in turn accelerated the rise of Tamil youth militancy, the Jaffna Branch of the Movement for Inter-Racial Justice and Equality (MIRJE) came into existence. Fr.Paul Caspersz, bringing together a broad spectrum of political parties, trade unions, social movements and individuals, led the national movement. This was truly a Peoples Movement and not one of the many well-funded NGOs that have propped up in recent Years. We did not have a single paid full time worker. It was a volunteerism at its best.

This was the time when in the ecumenical world there was a great deal of discussion on the theme "In Partnership with Peoples of all Faiths and Ideologies" In Lanka and in Jaffna in particular this became a reality in action. Fr. Jayaseelan became the founding secretary of the Jaffna branch of MIRJE in which I happened to be the president. Needless to say, Fr. Jayaseelan and some of our comrades in the movement did most of the work including that of visiting affected families, and documenting the violations of human rights and organizing non-violent campaigns.

The spirituality rooted in deep faith that Fr.Jeyaseelan brought into our work had an ennobling effect on many of us. This had a deep impact on my life, as we stepped on to the streets and participated in public rallies and meetings getting involved in action oriented work, coming down from the ivory tower of seminars, conferences and university teaching around which the life of most of us academics revolved. The transition from theory to practice even in a small way was invigorating and spiritually meaningful and valuable.

I have great joy in writing this foreword to his book "History of the Asian Church." This also enables me to also place on record my gratitude to Fr.Jeyaseelan for a lifetime of friendship and comradeship.

**Silan Kadirgamar**
*February 2007*

# பலஸ்தீனம் : ஆரம்பகாலத் திருச்சபை

ஆசியாவின் பரந்த நிலப்பரப்பை - மேற்கு ஆசியா, தெற்கு ஆசியா, தென் கிழக்கு ஆசியா, வடகிழக்கு ஆசியா, தூரகிழக்கு ஆசியா, மத்திய ஆசியா எனப் பிரிக்கலாம். இங்கு தோன்றிய மாபெரும் உலகமதங்கள், உயிருள்ளவையாக இன்றும் இயங்குகின்றன, வாழ்கின்றன. அவை - யூத, பௌத்த, இந்து, கிறிஸ்தவ, இஸ்லாமிய மதங்களாகும்.

நம் ஆண்டவர் யேசுக்கிறிஸ்துவினால் நிறுவப்பட்ட முதல் திருச்சபை மேற்கு ஆசியாவைச் சேர்ந்த பலஸ்தீன திருச்சபையாகும். புனித யாக்கோபு இத்திருச் சபையின் ஆதி அங்கத்தினர். இதுபற்றி திருத்தூதர் பணி 21ஆம் அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது:

''இதைக் கேட்டவர்கள் கடவுளைப் போற்றிப் புகழ்ந்தார்கள். எனினும் அவர்கள் அவரிடம், 'சகோதரரே! யூதருள் எத்தனையோ ஆயிரம்பேர் நம்பிக்கை கொண்டுள்ளதையும் அவர்கள் அனைவரும் திருச்சட்டத்தின் மீது ஆர்வமுடையவர் களாயிருப்பதையும் நீர் பார்க்கிறீர் அல்லவா?'' (தி.தூ. ப.21:20)

இதன் தலைமைப்பீடம் ஜெருசலேமிலேயே இருந்தது. பெந்தக்கோஸ்தே திருவிழாவின்பொழுது புனித பேதுருவின் நற்செய்தி அறிவிப்பின் பயனால் மனந் திரும்பியோர் தொகை 3000 (தி.தூ.ப 2:41). முடவன் குணமடைந்தபின் நடந்த நற்செய்தி அறைகூவலைத் தொடர்ந்து 5000 பேர் (தி.தூ.ப.4:4) மனந்திரும்பி நம்பிக்கை கொண்டனர். அப்போஸ்தலரின் பணி பலஸ்தீனத்திலும், பின் எழுந்த வேதகலாபனையைத் தொடர்ந்து வேறு ஆசிய நாடுகளிலும் பரவிற்று. முதல் நூற்றாண்டில் ஜெருசலேமின் திருச்சபை, இந்நற்செய்திப் பரவலாக்கத்தின் முனைப்பில் நின்றது. பின் சிறிது சிறிதாக அது நற்செய்தி அறிவிப்பின் விருதுக் கொடியாக மாறிற்று.

முதலில் கிறிஸ்துவுக்காக இரத்தசாட்சியாக கொலை செய்யப்பட்ட அப் போஸ்தலர் புனித பெரிய யாக்கோப்பரே (கி.பி.44). இக்கொலைக்கு முதலாம் ஏரோது அகிரிப்பாவைத் தூண்டியது யூத செனகத்திறம்[1] தான் (தி.தூ.ப. 12:3). கி.பி. 62இல் சின்ன யாக்கோபு ஜெருசலேம் ஆலயத்தின் மேல் இருந்து தூக்கி எறியப்பட்டு, தடியால் அடித்துக் கொல்லப்பட்டதை யோசேப்பு பிலாவியுஸ் என்ற யூத வரலாற்று ஆசிரியர் கூட கண்டித்தார்[2]. அதன் பின் வேத விரோதிகளின் கவனம் பவுல் அப்போஸ்தலர் பக்கம் திரும்பியது. ஜெருசலேமில் இருந்து அவர் வெளியேற்றப்பட்டார்.

70ஆம் ஆண்டுப் போர் பற்றி, யேசு கூறிய இறைவாக்குரைப்பை.

''அப்போது யூதேயாவில் உள்ளவர்கள் மலைகளுக்குத் தப்பி ஓடட்டும்; நகரத்தின் நடுவில் உள்ளவர்கள் வெளியேறட்டும்; நாட்டுப் புறங்களில் இருப்பவர்கள் நகரத்துக்குள்ளே வரவேண்டாம்.'' (லூக் 21:21)

கவனத்தில் எடுத்து யோர்தான் ஆற்றுக்கு அப்பாலிருந்த மலைப்பிரதேசமான பெல்லாவிற்கு, கிறிஸ்தவர்கள் இடம்பெயர்ந்து குடியேறினர்.[3] (மாற் 13:14, மத் 24:16)

அவர்கள் மனக்கண் முன் நின்றது திருவெளிப்பாட்டின் 12ஆம் அதிகாரம், 6ஆம் வசனம்: ''அப்பெண் பாலை நிலத்துக்கு ஓடிப்போனார்; அங்கு ஆயிரத்து இருநூற்று அறுபது நாள் அவரைப் பேணுமாறு கடவுள் அவருக்கென ஓர் இடத்தை ஏற்பாடு செய்திருந்தார்.''

தேவதாயும் திருச்சபையும் பெல்லாவில் புலம் பெயர்ந்து வாழ்ந்ததையும் குறிக்கலாம். நேரோ மன்னன்தான் ஆலயத்தையும் அதில் இருந்தவர்களையும் அழித்த அந்திக் கிறிஸ்து, 666 இலக்கம் 'எசாயாவின் விண்ணேற்றம்' என்ற நூலும் காட்சியாகமும் அதே இலக்கத்தை கொடுப்பது குறிப்பிடத்தக்கது.[4]

ஜெருசலேமின் அழிவுக்குப்பின் கிறிஸ்தவர்கள் அங்கு திரும்பினர். திபுத்திஸ் என்பவனின் பேராசையை நிராகரித்துவிட்டு, யேசுவின் ஒன்றுவிட்ட சகோதரனான சிமியோனை ஜெருசலேமின் ஆயராக நியமித்தனர். இவர் 107ஆம் ஆண்டில் நிரஜன் அரசனின் கீழ் வேதசாட்சி முடி பெற்றார்.

135ஆம் ஆண்டு இரண்டாம் யூதப்போரின் பின் ஜெருசலேம் திருச்சபையில் இப்போது யூதர் அல்லாதோரும் விருத்தசேதனம் செய்யப்பட்ட கிறிஸ்தவர்களோடு வாழந்தனர். அவர்களின் முதல் யூதர் அல்லாத கிறிஸ்தவ ஆயர் மாற்கு.

4ஆம் நூற்றாண்டின் குறிப்புகளின்படி யூதக் கிறிஸ்தவர்கள் சியோன் மலையிலும், யூதரல்லாத கிறிஸ்தவர்கள் புனித கல்லறைக் கோவிலிலும் வழிபாடியற்றினர். புனித நிசா கிரகோரியாரும் இதே நிலையை குறிப்பிடுகிறார். புனித ஜெரோமும், புனித சிறிலும் யூதக் கிறிஸ்தவர்களைப்பற்றி குறிப்பிடும் போது அவர்கள் தங்களை கிறிஸ்தவர்கள் என்றல்ல 'நசரேனயர்' என்றழைத்தனர் எனக் கூறுகிறார்.

ஜெருசலேமின் கிறிஸ்தவர்கள் அப்போஸ்தலர்கள் பேசிய மொழியையே 4ஆம் நூற்றாண்டில் பாவித்து வந்தனர் என வரலாற்று ஆசிரியர் எயுசேபியுஸ் குறிப்பிடுகிறார். இலக்கிய அறிவு இல்லாத ஏழைகள் பேசும் சீரியாக் என்பது அவர் அபிப்பிராயம்.

5ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கூட எத்தேரிய என்ற யாத்திரிகன் ஜெருசலேமுக்கு வந்தபோது கிரேக்கம், புனித கல்லறையில் நடைபெற்ற வழிபாட்டில் சீரியாக்கிய மொழியில் பெயர்க்கப்பட்டது.

புனித லூக்கா, திருத்தூதர் பணியில் 9ஆம் அதிகாரம் 35ஆம், 42ஆம் வசனங்களில் இதுபற்றிக் குறிப்பிடுகிறார். செசரேயாவில் பிலிப்புவும் பேதுருவும் கிறிஸ்துவை அறிமுகம் செய்தனர். இப்பகுதியில் பெத்தலகேம் முக்கியமானதாக இருந்தது. கி.பி. 90 - 103இல் பாப்பரசராக இருந்த இவறிஸ்ரஸ் என்பவரின் தந்தை யூட் பெத்லகேம் ஊரவர். போரினால் அவர் புலம் பெயர்ந்து அந்தியோக்கி யாவில் குடியேறினார்.

சமாரியர் பற்றி யோவான் தம் நற்செய்தியில் (4:4 - 42) விபரமாகக் கூறியுள்ளார்.

(காண்க தி.தூ.ப. 8:13, 14,17,25)[5]

புனித யுஸ்தீன் சமாரியாவிலுள்ள சபைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அவர்கள் தொடர்ந்தும் விருத்தசேதனம் செய்துவந்தனர். நெபோ மலையில் சமாரித்த பெண்ணைச் சந்தித்த கிணற்றருகே சில அகழ்வாராய்ச்சிச் சான்றுகள் கண்டெடுக்கப்பட்டன. யுஸ்தீனியன் மன்னனின் வேதகலாபனையின் போது இக்கிறிஸ்தவ சபையினர் சிதறிப்போயினர்.

கலிலேயாவில் முதல் மூன்று நூற்றாண்டுகளும் யூதக் கிறிஸ்தவர்கள் வாழ்ந்து வந்தனர். யூலியுஸ் அபிரிக்கானுஸ் என்பவர் 8ஆம் நூற்றாண்டில் ''எம் ஆண்டவரின் இனத்தவர் இன்னும் நாசரேத்தில் வாழ்கின்றனர். அவர்கள் யூதா எனப்படும் யேசுவின் ஒன்றுவிட்ட சகோதரரின் வம்சாவழிகள். அவர்கள் தங்கள் பாரம்பரிய நிலங்களைப் பண்படுத்தி வாழும் விவசாயக் குடும்பங்கள். சக்கரவர்த்தி டொமிற்சியன் அவர்களை ரோமாபுரிக்கு பிடித்துவந்து அவர்களது சொத்துக்கள் பற்றி விசாரித்தபோது கடின உழைப்பால் கண்டிப்போன தங்கள் கை, கால் உடலங்களை அவர்கள் அரசனுக்குக் காண்பித்தனர்'' என்று எழுதி யுள்ளார்.[6]

கி.பி 249இல் சின்ன ஆசியாவில் வேதசாட்சியாக மரித்த புனித கொனன், தனது வழக்கு விசாரணையில், தான் யேசுவின் குடும்பத்தில் கலிலேயாவில் நாசரேத்தில் பிறந்து வளர்ந்த ஓர் விவசாயி எனக் குறிப்பிட்டுள்ளார். நாசரேத்தில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகளில் சில குகைக் குறியீட்டு ஓவியங்கள், எழுத்து கள், இடிபாடுகளின் மத்தியில் கபிரியேல் தூதர் தேவதாய்க்கு மங்களங் கூறியது, புனித சூசையப்பர் வரலாற்றுக் குறிப்புக்கள் என்பன காணக்கிடக்கின்றன.[7]

1968இல் அகழ்வாராய்ச்சிகள், கபர்ணாமில் 2ஆம் 3ஆம் நூற்றாண்டு களில் 'பேதுருவின் வீடு' மினிம் என்றழைக்கப்பட்ட யூதக் கிறிஸ்தவர்கள் வாழ்ந்து வந்ததை எண்பிக்கின்றன.[8]

திருத்தூதர் பணி 21:3,7, - 27:3இல் குறிப்பிடப்பட்டுள்ள தாரளமாய், தீர், சீதோன் நகர்களில், பவுலை வரவேற்றோர் யூதேயக் கிறிஸ்தவர்களே. நான்கு நற்செய்தி ஏடுகளிலும் காணப்படாத பல யேசுவின் வாழ்க்கை நிகழ்வுகள், கலிலேயப் பின்னணியில் எழுதப்பட்ட வேறுபல நூல்களில் காணப்படுகின்றன.[9] உ+ம்: 'அப்போஸ் தலர்களின் கடிதங்கள்', 'தோமையார் நற்செய்தி'.[9]

யோர்தானுக்கு அப்பால் பல ஏழை யூதக் கிறிஸ்தவ கிராமங்கள், அகழ்வா ராய்ச்சிகள் மூலம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மோவா, ஆமோன் பகுதிகளில் பலர் கிறிஸ்தவர்களாயினர். சீரியாவிலும் பல யூதக் கிறிஸ்தவக் கோவில்களும் குடிசைகளும் இருந்தன. இவ்வாராய்ச்சிகளில் வான ஏணியில் எவ்விதம் ஏறிக் கல்லறைக் கப்பலில் பயணம் செய்வது என்பதை விபரிக்கும் ஓவியம் ஒன்றும் காணப்படுகிறது.[10]

பேய்ரூட் கல்லறைகளிலும் இவ்வகைக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. டிடா ஃகேயில் காணப்படும் நற்கருணை மன்றாட்டுகள் போன்று இங்கும் ஏழை யூதக் கிறிஸ்தவக் குழுக்களில் பாவிக்கப்படுவதை 3ஆம் நூற்றாண்டு செபக்கூட இடிபாடுகளில் கவனிக்கிறோம்.[11]

சின்ன ஆசியாவின் கிறிஸ்தவ வாழ்வும் கலாசாரமும் எபேசு நகரையே நடுநிலையமாகக் கொண்டிருந்தது. இங்கு புனித யோவானின் கல்லறை, ஒரு

வெளிச்சவீடாக இயங்குகிறது. இங்கு 1000மாம் ஆண்டு முடிவுபற்றிய நம்பிக்கைகள், வானதூதர், நிசாம் மாதம் 14ஆம் திகதி பாஸ்கா கொண்டாடுதல், பலஸ்தீனத்தில் எழுந்த யோவானின் மொழிப்பாவனை என்பன கண்டுபிடிக்கப்பட்டன.[12]

இங்கும் யூதக்கிறிஸ்தவர்களின் கட்டிடங்கள், லத்தீன் எழுத்துகளில் எபிரேய குறிப்புகள் காணப்பட்டன. இவை புனித செபஸ்தியார், கலிஸ்ரஸ் நிலச்சுரங்க கல்லறைகளில் காணப்படுகின்றன. 'ஆயன்' என்ற பதம் எபிரேயத்தில் கொன்ஸ்ரன்ரைன் சிலுவைச் சின்னத்துடன் காணப்படுகின்றது.

யூதக் கிறிஸ்தவ சபைகளுள் பல பிரிவுகள் காணப்பட்டன. இவற்றுள் முக்கியமானது நாசரேயர் என்ற குழுவாகும்.

இரண்டாம் நூற்றாண்டு கிறிஸ்தவ வரலாற்றாசிரியர் கேஜேசிப்புஸ் பல யூதக் கிறிஸ்தவ சபைகளுள் நாசரேயர் உண்மையான கிறிஸ்தவர்கள் எனக் குறிப்பிடுகிறார்; ஏனையவர்களை பதிதர் என்கிறார். இவர்கள் எபிரேயருக்கு எழுதப்பட்ட நற்செய்தி நூல் ஒன்றை வைத்திருந்தனர். இதை எபிரேயத்தில் எழுதப்பட்ட மத்தேயுவின் ஆதி நற்செய்தி என்று அழைத்தனர். இந்த ஆதி யூதக் கிறிஸ்தவ சபைகளில் இருந்து தான் திருச்சபையின் முதல் விசுவாச ஏடுகளான டிடாக்கே, ஆயர் (கெர்மஸ்) முதலியன எழுந்தன.[13]

## ஆதித் திருச்சபையின் ஆசிரியம்

புனித லூக்கா, ஜெருசலேம் தாய்த்திருச்சபையைப்பற்றித் தான் திருத்தூதர் பணியில் குறிப்பிடுகிறார். எல்லா ஒன்றுகூடல்களிலும் பேதுருவுக்கு முதல் இடம் கிடைக்கிறது. அதேவேளை கலாத்தியருக்கு புனிதபவுல் எழுதியதுபோல (கலா 2:9) "அந்த அருள்பணி எனக்கு அளிக்கப்பட்டதை உணர்ந்து திருச்சபையின் தூண்கள் எனக்கருதப்பட்ட யாக்கோபு, கேபா, யோவான் ஆகியோர் நட்புறவின் அடையாளமாக எனக்கும் பர்னபாவுக்கும் கை கொடுத்தனர். யூதர்களுக்கு அவர்களும் யூதரல்லாதோர்க்கு நாங்களும் நற்செய்தி அறிவிக்க வேண்டும் என்று ஒத்துக் கொண்டோம்."

யாக்கோபு 45ஆம் ஆண்டு தொட்டு ஜெருசலேமை பரிபாலிக்கிறார். பவுல் 58இல் அங்கு சென்றபோது (தி.தூ.ப.21:20) "யூதருள் எத்தனையோ ஆயிரம்பேர் நம்பிக்கை கொண்டுள்ளதையும் அவர்கள் அனைவரும் திருச்சட்டத்தின் மீது ஆர்வமுடையவர்களாயிருப்பதையும் நீர் பார்க்கிறீர் அல்லவா?" அவரே பாவுல் ஆலயத்தில் நசரேய வாக்கை நிறைவேற்றும்படி ஊக்குவித்ததைக் காண்கிறோம்.

அகிரிப்பாவின் சிறையில் இருந்து மீண்ட பேதுரு, மாற்கு வீட்டுக்குச் சென்று (தி.தூ.ப. 12:6-16) தம் விடுதலை பற்றிக் கூறியபின் ஜெருசலேமை விட்டு வெளியேறிவிட்டார். இதன் பின் யாக்கோபு பற்றி லூக்கா குறிப்பிடுவதே இல்லை. 62இல் சிறிய அன்னாஸ் யூாக்கோபைக் கொலை செய்கிறான். சீமோன் அவர் வாரிசாக அமைகிறார். அதுவும் ஜெருசலேம் அழிவுக்குப்பின்னரே.

ஆதித் திருச்சபையினர் மூன்று வகையினர். அவர்கள் அப்போஸ்தலர், முதியோர், தீர்க்கர்கள்.

எபிரேயருக்கு பாவுல் கூறுவதுபோல் (எபி 13:17) "உங்கள் தலைவர்

களுக்குக் கீழ்ப்படியுங்கள்; அவர்களுக்குப் பணிந்திருங்கள். அவர்கள் உங்களைப் பற்றிக் கணக்கு கொடுக்கவேண்டியிருப்பதால் உங்கள் நலனில் விழிப்பாயிருக் கிறார்கள். இப்பணி அவர்களுக்கு மகிழ்ச்சி உள்ளதாய் இருக்கும்படி நடந்து கொள்ளுங்கள். அவர்களுக்கு மனத்துயர் தராதீர்கள். அவர்களுடைய துயரம் உங்களுக்கு நலம் பயக்காது'' என்ற வாக்குப்படி திருச்சபையினர் ஒழுகினர்.

நம் ஆண்டவர் யேசுவின் கூட்டுக் குடும்பத்தினரிடமிருந்து ஜெருசலேம் திருச் சபைத் தலைவர்களைத் தெரிவது சாதாரணமாகவே ஏற்றுக்கொள்ளப்பட்ட மரபு.

பலஸ்தீனத் திருச்சபைக்குப் பொறுப்பாகவிருந்த யேசுவின் குடும்பத்தினர், விருத்தசேதனம் செய்யப்பட்ட யூதக் கிறிஸ்தவத் தலைவர்களாக ஒன்றன்பின் ஒன்றாக (இரு வருடத்திற்கு ஒருவராக 28 ஆண்டுகளுக்கு, 135ஆம் ஆண்டு வரை, (2ஆம் யூதப் போர்வரை) ஆட்சி நடத்தினர்.

240ஆம் ஆண்டில்கூட, யேசுவின் கூட்டுக்குடும்பப் பட்டியல் காப்பாற் றப்பட்டு வந்தது. திராஜன் சக்கரவர்த்தியின் சமாதான காலகட்டத்தில் இவர் களில் சிலர் வேதசாட்சிகளாகவும் உயிர் கொடுத்தனர். பல பலஸ்தீனத் திருச் சபைகளுக்கும் யேசுவின் இனத்தவர்கள் பொறுப்பேற்றனர்.[14]

பலஸ்தீனத் திருச்சபையின் முக்கிய குணாம்சங்கள்; குழுவாழ்வு, தப வாழ்வு, வறுமை, ஏழ்மை நிறை வாழ்வாகும். இதனை ஜெருசலேம் திருச்சபையில் அவதானிக்கிறார் புனித லூக்கா.

''நம்பிக்கை கொண்டோர் அனைவரும் ஒன்றாயிருந்தனர்; எல்லா உடை மைகளையும் பொதுவாய் வைத்திருந்தனர். நிலபுலன்களும் பிற உடைமை களும் உடையோர் அவற்றை விற்று, அனைவருக்கும் அவரவர் தேவைகளுக் கேற்ப, பகிர்ந்தளித்தனர்'' (தி.தூ.பணி 2:44-45)

''தேவையில் உழல்வோர் எவரும் அவர்களுள் காணப்படவில்லை. நில புலன்களை அல்லது வீடுகளை உடையோர் அவற்றை விற்று அந்தத் தொகை யைக் கொண்டு வந்து திருத்தூதருடைய காலடியில் வைப்பர்; அது அவரவர் தேவைக்குத் தக்கவாறு பகிர்ந்து கொடுக்கப்படும்.'' (தி.தூ.ப. 4: 34-35)

44ஆம் ஆண்டுப் பஞ்சம் இவர்களைப் பாதித்ததினால் வெளியே இருந்த கிறிஸ்தவ சபைகளின் உதவி பாவுலின் ஊடாகக் கிடைத்தது.

அவர்களுள் 'அகபு' என்னும் பெயருடைய ஒருவர் எழுந்து நின்று தூய ஆவியா ரால் ஏவப்பட்டவராய் உலகமெங்கும் கொடிய பஞ்சம் ஏற்படப்போகிறது என்று முன்னுரைத்தார். அது கிளாதியு பேரரசர் காலத்தில் ஏற்பட்டது. அப் பொழுது சீடர்கள் ஒவ்வொருவரும் தங்களால் இயன்ற பொருளுதவியை யூதே யாவில் வாழ்ந்த சகோதரர் சகோதரிகளுக்கு அனுப்பத் தீர்மானித்தனர். அப் பொருளுதவியைப் பர்னபா, சவுல் ஆகியோர் வாயிலாக மூப்பர்களுக்கு அவர்கள் அனுப்பி வைத்தார்கள். (தி.தூ.ப. 11: 28-30)

''எனினும் தற்பொழுது இறைமக்களுக்குச் செய்யப்படவேண்டிய பொருள் உதவியை முன்னிட்டு எருசலேமுக்குப் புறப்படுகிறேன்'' (உரோமர் 15:25)

''சகோதர சகோதரிகளே, மாசிதோனியத் திருச்சபைகளுக்குக் கடவுள் கொடுத்த அருளைப்பற்றி உங்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறோம்.

அவர்களுக்கு ஏற்பட்ட இன்னல்களால் கடுமையாகச் சோதிக்கப்பட்டபோதும் அவர்கள் எப்போதும் மகிழ்ச்சி நிறைந்தவர்களாய் இருந்தார்கள். அவர்கள் வறுமையில் மூழ்கி இருந்தாலும் வள்ளன்மையோடு வாரி வழங்கினார்கள். அவர்கள் தங்களால் இயன்ற அளவுக்குத் தாங்களாகவே கொடுத்தார்கள். ஏன், அளவுக்கு மீறியே கொடுத்தார்கள். இதற்கு நானே சாட்சி. இறைமக்களுக்குச் செய்யும் அறப்பணியில் பங்குபெறும் பேறு தங்களுக்கும் அளிக்கப்பட வேண்டும் என மிகவும் வருந்திக்கேட்டுக் கொண்டார்கள். நாங்கள் எதிர் பார்த்ததற்கு மேலாக அவர்கள் தங்களை முதன்மையாக ஆண்டவருக்கு அர்ப் பணித்தார்கள்; நாங்கள் கடவுளின் திருவுளப்படி செயல்படுவதால், எங்களுக்கும் தங்களை அர்ப்பணித்தார்கள்." *(2 கொரி: 8: 1-5)*

"இப்போது இறைமக்களுக்கு வழங்கும் நன்கொடையைக் குறித்துப் பார்ப் போம். கலாத்திய திருச்சபைகளுக்கு நான் வகுத்துக் கொடுத்த திட்டத்தின் படியே நீங்களும் செய்யுங்கள். நீங்கள் ஒவ்வொருவரும் வாரத்தின் முதல் நாளில் அவரவர் வருவாய்க்கு ஏற்றவாறு ஒரு தொகையைச் சேர்த்து வைத்துக் கொள்ளுங்கள். அப்படிச் செய்தால் நான் அங்கு வந்தபின் நன்கொடை திரட்ட வேண்டியிராது. தகுதியுள்ளவர்கள் என நீங்கள் கருதுவோரிடம் நான் வரும் போது அறிமுகக் கடிதங்களைக் கொடுத்து உங்கள் கொடையை எருசலேமுக்கு அனுப்பிவைப்பேன். நானும் போவது நல்லதெனத் தோன்றினால் நானும் போவேன்; அவர்கள் என்னோடு வரலாம்." *(1 கொரி 16: 1-4)*

புனித ஸ்நாபகர் இவ்விதம் ஒரு குழுமங்களை வனாந்திர ஓரங்களில் நடாத்தினார்.

புனித யாக்கோபு தமது திருமடல்களில் செல்வந்தர்களுக்கு எதிராக ஏழ்மையின் மகத்துவம் பற்றி அழகாக விளக்குகிறார். வீம்பு பேசுவோருக்கு எச்சரிக்கைவிடுக்கும் போது, இன்றோ நளையோ, குறிப்பிட்ட நகருக்குப்போய் அங்கு வாணிகம் செய்து பணம் சம்பாதிப்போம் என வீம்புபேசுவோரை விளித்து (யாக் 4:13) அவர் கூறுகிறார்:

''செல்வர்களே, சற்றுக்கேளுங்கள். உங்களுக்கு வரப்போகும் இழி நிலையை நினைத்து அலறி அழுங்கள். உங்கள் செல்வம் மக்கிப்போயிற்று. உங்கள் ஆடைகள் பூச்சிகளினால் அரிக்கப்பட்டுவிட்டன. உங்கள் பொன்னும் வெள்ளியும் துருப்பிடித்துவிட்டன. அந்த துருவே உங்களுக்கு எதிர்ச் சான்றாக இருக்கும்; அது நெருப்புப் போல உங்கள் சதையை அழித்துவிடும். இந்த இறுதி நாட்களில் செல்வத்தைக் குவித்து வைத்திருக்கின்றீர்களே! உங்கள் வயலில் அறுவடை செய்த வேலையாட்களுக்குரிய கூலியைப் பிடித்துக்கொண்டீர்கள்; அது கூக்குரலிடுகிறது. அறுவடை செய்தவர்களின் கூக்குரல் படைகளின் ஆண்ட வருடைய செவிக்கு எட்டியுள்ளது. இவ்வுலகில் ஆடம்பரமாகவும் இன்பமாகவும் வாழ்ந்தீர்கள். கொல்லப்படும் நாளுக்காக உங்கள் உள்ளங்களைக் கொழுக்க வைத்தீர்கள். நேர்மையான்வரைக் குற்றவாளி எனத்தீர்ப்பளித்துக் கொலை செய்தீர்கள். ஆனால் அவர் உங்களை எதிர்த்து நிற்கவில்லை." (யாக் 5: 1-6)

"தளரா மனமுடையோர் பேறுபெற்றோர் என்கிறோம். யோபுவின் தளரா மனதைக் குறித்துக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். இறுதியில் ஆண்டவர் என்ன செய்தார் என்பது உங்களுக்குத் தெரியும். ஏனெனில், ஆண்டவர் மிகுந்த பரி வுள்ளமும் இரக்கமும் கொண்டவர்.'' (யாக் 5:11)

இயேசுவைச் சந்திக்கும் செல்வந்தனான இளைஞன் பற்றியும் இங்கு கவனிக்கலாம். (மத் 19: 16-23) அதற்கு இயேசு நிறைவுள்ளவராக விரும்பினால் நீர் போய், உம் உடைமைகளை விற்று ஏழைகளுக்குக் கொடுத்துவிட்டு வந்து என்னைப் பின் செல்லும் என்றார். அந்த இளைஞர் வருத்தத்தோடு போய்விட்டார். ஏனெனில் அவருக்கு ஏராளமான சொத்து இருந்தது. இங்கு செல்வத்துக்கு எதிரான ஏழ்மையின் மகத்துவத்தை இயேசு குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

பல ஏழைகளை - அங்கவீனர்களை குணமாக்கினார் என்றால் அவர்கள் பிச்சை எடுக்காது தம் கால் , கைகளைப் பாவித்து உழைத்து வாழவே வழி காட்டினார். புனித யோசேப்பு தன் சொந்த உழைப்பாலேயே திருக்குடும்பத்தைப் பராமரித்தார் என்ற பாரம்பரியத்தை பலஸ்தீனிய திருச்சபையின் 'சூசை வரலாறு' என்ற நூலில் காண்கிறோம்.[15]

வறுமை வாழ்வுடன், செபம், தபம், உலக மறுப்பு, இவைக்கு உதவியாக வனவாசம் மேற்கொள்ளல் என்பன இயேசுவினதும் மேலும் பல ஆதிக்கிறிஸ்தவரதும் வாழ்வு நெறிகளில் வெற்றிகரமாக மேற்கொள்ளப்பட்டது. காண்க: (லூக் 4: 1-12) பின்னர் அவர் அதே ஆவியால் பாலைநிலத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார். (மத் 4:11) (மாற்கு 1:45)

பகிரங்க பணிகளின் மத்தியிலும் (லூக் 5:6) (மாற்கு 1:45) இது தொடர்ந்தது. பெரும் புதுமைகளும் (மத் 14: 16-21) வனாந்தரத்தில் செய்யப்பட்டன.

விரதத்துவம் ஸ்நாபகர் வாழ்விலும், இயேசுவின் வாழ்விலும் காணப்பட்டது.

இயேசு தன் சீடர்களுடன் குழுவாழ்வையே, மூன்று வருடங்களாக மேற்கொண்டார். இதை பல கிறிஸ்தவ குடும்பங்கள் பின்பற்றின. திருத்தூதர் பணி குறிப்பிடும் (8:4-40) தியாக்கோன் பிலிப்புவும் அவரது நான்கு மணமாகாத புதல்விகளும் நடத்திய குழும வாழ்வு ஒரு உதாரணம். மேலும் பேதுரு சிறையிலிருந்து தேவதூதனால் விடுவிக்கப்பட்டு மரியாயின் வீட்டுக்குச் சென்றபோது அங்கு பல கிறிஸ்தவர்கள் கூடி அவருக்காகச் செபித்துக் கொண்டிருந்தனர். (தி.தூ.ப. 12: 12-17)

இவர் எழுதிய கடிதத்தில் இவர்களின் விரதத்துவ நிலைபற்றிக் குறிப்பிடுகிறார். அவர்களில் ஒருவர் பெயர் கேர்மியோன், (117 - 138) இவள் ஒரு கிரேக்க வைத்தியர். வேதசாட்சி முடி எய்தினாள்.

ஆதித் திருச்சபையின் ஏழு தியாக்கோன்களில் இவ்வகைத் துறவு வாழ்வை இருவர் மேற்கொண்டனர். இவர்கள் நீக்கிலாசும், பிலிப்புவும். வேதகலாபனையின் போது பலஸ்தீனத்தில் இரு இளம் தபசிகள் யூதக் கிறிஸ்தவர்கள் பீற்றர் அப்சொலோ, கப்படோக்கியோவைச் சேர்ந்த செலேயுக்கஸ், 309ஆம் ஆண்டில் வேதசாட்சி முடிபெற்றனர். பின்னையவர் பிரபல போர்த்தளபதி. தன் பதவியைத் துறந்து, தனக்குள்ளதெல்லாம் விற்று, ஏழைகளுக்குக் கொடுத்தபின் ஏழைகளுக்கு உதவும் பணியில் ஈடுபட்டிருந்தார்.[16]

## மரியாளும் நற்கருணையும்

புதை பொருளாராய்ச்சியாளர், ''டுரா யுரோப்போஸ்'' என்ற 256இல் அழிந்து மறைந்த பண்டைய நகர் ஒன்றைக் கண்டுபிடித்தார். அங்கு கண்டெடுக்கப்

பட்ட இரண்டு ஏட்டுத் துண்டுகள் நற்கருணைச் செபம் ஒன்றை வெளிக்கொண்டு வந்தது. அதற்கும் ஆதித் திருச்சபையின் டிடாகேயில் காணப்படும் நற்கருணைச் செபத்திற்கும் நெருங்கிய ஒற்றுமை இருப்பதைக் காணமுடிந்தது.[17]

நசரேத்தின் மங்களவார்த்தைக் கோவிலின் இடிபாடுகளில் இருந்து மூன்று அகழ்வாராய்ச்சி தகழிகள் மீட்டெடுக்கப்பட்டன. மூன்றாம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை அங்கு தேவதாயின் குடும்பத்தினர் வாழ்ந்தனர் என்பது இவை மூலம் தெரியவருகிறது. இவ்வினசனத்தினர் குடும்பச் சொத்துக்களை பாது காத்துடன் தேவதாயின் பக்தியையும் நினைவுகளையும் பாதுகாத்து வந்தனர். அங்குவந்த பக்தர்கள் தங்கள் விசுவாசத்தை அறிக்கையிடவும் சந்தர்ப்பமளித் தனர். இதன் குறியீடுகளே பின்வரும் தகவல்கள் ஆகும். பிளாஸ்ரரில் இரு கிரேக்க சொற்களும் மாபிள் கல்லில் அரமெய்க் சொற்களும் கிறுக்கப்பட்டி ருந்தன. ஒரு தூணின் அடிக் கட்டில் XEMARIA என்ற தேவதூரின் வாழ்த்து வரையப் பட்டிருந்தன.[18]

சம்மனசானவரின் இடத்தில் தன்னை நிறுத்தி மரியாளை வாழ்த்தும் பக்தனின் உதடு இது. மரியாள் வணங்கப்பட்டது, மகிமைப்படுத்தப்பட்டது் நசரேத்தில் மட்டுமல்ல; யோசேபத் பள்ளத்தாக்கில் காணப்பட்ட அவளது கல்லறையும் பக்தர்களின் தரிசனைக்குரியதாயிற்று.

யாக்கோபுவின் முன்னைய நற்செய்தி, எசாயாவின் உத்தானம் என்ற இரு நூல்களும் தேவதாயின் கன்னிமையை எடுத்துரைக்கின்றன. இரண்டாம் நூற் றாண்டின் வேறு சில இலக்கியங்களும் தேவதாயின் கன்னிமையை அறை கூவுகின்றன.

சிபிலென் அசரீதிகள் 11, 311 தேவதாயின் பரிந்துரையால்தான் மரிக்கிற ஆன்மாக்கள் ஏழுநாட்களுக்கு சுதந்திரமாக எங்கும் செல்ல அனுமதிக்கப்படு கின்றன. அதன் பிறகே அவை தடுத்து வைக்கப்படுகின்றன எனக் கூறுகிறது.[19]

## பலஸ்தீனத் திருச்சபைச் சின்னங்கள்

பலஸ்தீனத் திருச்சபையிடம் இருந்தே பல கிறிஸ்தவ அடையாளங்கள், பாரம்பரிய நம்பிக்கைகள், குறியீடுகள், உருவாகி இன்றும் நம்மத்தியில் உயிர் வாழ்கின்றன.

ஆதிக் கிறிஸ்தவர்களின் மத்தியில் வானதூதர் பற்றிய நம்பிக்கைகள் முக்கியமானவை. இக்கிறிஸ்தவர்களின் மனதில் அதிதூதர் மிக்கேலும் கபிரியேலும் முக்கிய இடத்தைப் பிடித்திருந்தனர். குறிப்பாக மரணத்தின் பின் ஆன்மாவை மோட்சத்திற்கு நடத்திச் செல்லும் பணியில் முக்கிய பங்கு அவர்களுடையதே, என நம்பினர்.

'தச்சன் யோசேப்பின் வரலாறு' என்னும் நூலில் யோசேப்பின் மரணத்தின் போது இயேசு, பிதாவை "இங்கிருந்து கடந்துவர, சேனைத்தலைவன் மிக்கேலை யும், ஒளியின் தலைவன் கபிரியேலையும், எல்லா வானதூதரின் பிரசன்னத் தையும் அனுப்பும்" என வேண்டுவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆபிரகாமுக்கு மம்பிறே பள்ளத்தாக்கில் கிடைத்த தெய்வீகக்காட்சி, இயேசுவும் மிக்கேல், கபிரியேலுமாகவே 14ஆம், 15ஆம் நூற்றாண்டு ரூசிய திருப்படங்களிலே சித்திரிக்கப்பட்டுள்ளது.[20]

இயேசுவுக்கு குறியீடாக 'நீரையும்', யோவான் 4:14, 7: 37, திருவெளி 22:1 காட்டப்பட்டுள்ளது. ஞானஸ்நான நீரையும் வரைந்தனர். இதோடு ஒட்டிய மரமும் கிறிஸ்துவை குறிப்பதாக கூறப்படுகின்றது. 'ஒளி' யோவான் 1:4, 9: 5, 9:39, 8: 12 ஏழு தீபங்களுள்ள மெழுகுவர்த்தித்தண்டு திருவெளி 4:5. யூதர்களும் கிறிஸ்தவர்களும் ஒரே விழாக்களையே கொண்டாடினர் என்பதை மறத்தலாகாது.[21]

கிறிஸ்துவுக்கு சட்டம், ஏட்டுச்சுருள் - மத் 5:17, கதவு - யோ: 10: 9, விடுத 12: 12. ஏணி - தொடக் 28: 12 - 13, யோவா 1: 51. ஏணிபற்றிய காட்சி, ஆபிரிக்க வேதசாட்சியான பேர்பெத்துவாவின் வாழ்வில் இடம் பெற்றுள்ளது.

இந்த ஆதிக் கிறிஸ்தவர்கள் பாவித்த இரட்சிப்பின் சின்னங்கள் - புறா, மீன், ஏர், கப்பல், பேழை (நோவாவைக்காத்த பெட்டகம்) பிரபஞ்ச சிலுவை, பாம்பு, கோடரி (மத் 3: 10) திருமுழுக்காட்டும் தொட்டிகளும் இரட்சிப்பின் சின்னங்களாக கருதப்பட்டன. நோயாளருக்கு எண்ணெய் பூசுதல் யாக் 5: 13 - 16 சாத்தானைக் கலைக்கும் ஜெப மந்திரத்திலும் இவை இடம்பெறுகின்றன.

மேற்கூறப்பட்ட அடையாளங்கள் பலஸ்தீன, பின் ஆசிய ஆபிரிக்க கிறிஸ்தவர்கள் பாவித்த, அணிந்த வரவணிக்கங்கள் கட்டியிருந்த தகடு அணிகலங்களில் காணப்பட்டன.[22]

இவர்களின் இறுதிச் சடங்குகளிலும் கல்லறைகளிலும் இவை வைக்கப்பட்டன. இங்கு சிறிய கல், உலோகங்களாலான உருவங்களும் காணப்பட்டன. குறிப்பாக இறந்தோரின் எலும்புகள் வைக்கப்பட்ட கற்தொட்டிகள் பெட்டிகளில் இறந்தவர்களுக்கான நினைவு தினங்கள்; 3ஆம் நாள், 8ஆம் நாள், 30ஆம் நாள்களும் அனுசரிக்கப்பட்டன.

இக்கிறிஸ்தவர்கள் தங்கள் விசுவாச வாழ்வின் சன்மானமாக இயேசுவிடம் இருந்து பெறப்போகும் வெற்றி முடியை நம்பிக்கையோடு எதிர்பார்த்திருந்தனர் (திருவெளி 2:10, 4:10) (யாக் 1: 12). சிலர் உலகமுடிவில் இயேசு தொடங்கவிருக்கும் 1000 ஆண்டு சமாதான ஆட்சியில் நம்பிக்கை வைத்திருந்தனர். (லூக் 21: 5-28), (மத் 19:28, 24-34) (திருவெளி 20: 2-3). இந்த மிலேனியத்தைப்பற்றிய நம்பிக்கையை வெளிப்படுத்த எக்ஸ் (X), 5ஆம் நம்பர் (SOTER, PATER) ஐஞ் செயல்கள், கொண்டன.[23]

குருத்தோலை, மூன்று இலைமரம் (TREGOLIS), குறிப்பாக கல்லறைகளிலும் சிறுவழிபாட்டிடங்களிலும் வரையப்பட்டிருந்தன.[24]

# அந்தியோக்கியாவின் திருச்சபைகள்

ஜெருசலேமின் வேதகலாபனைக்களுக்குப்பின் அந்தியோக்கியா திருச் சபையின் அடுத்த நடுநிலையமும்; கிறிஸ்தவ வாழ்வும், மிசனரி தொழிற்பாடு களின் பிறப்பிடமுமாகிற்று. அதன்பின் எழுந்த எபேசூஸ் திருச்சபை முக்கியம் பெற, அந்தியோக்கியா, டமஸ்குவுக்குத் தெற்கேயும், கிழக்கேயும் எடெஸ்சா வரை, நிஸ்பிஸ் வரை வளர்ந்தது. எடெஸ்சாவில் இருந்து ரோம சாம்ராஜ்சி யத்தின் எல்லைகளைத் தாண்டி மெசப்பெத்தேமியா வரை படர்ந்தது. இங்கி ருந்துதான் தோமையார் இந்தியா வந்தார். இங்கு கிரேக்கத்தை விட சீரியாக் மொழியே முக்கியத்துவம் பெற்றிருந்தது. முதல் மூன்று நூற்றாண்டுகளின் உரோமகலாபனைகளின் பொழுது பாரசீக ஆளுகையின் கீழ் மெசெப்பெத் தேமியா, பபிலோனியாத் திருச்சபைகள் செழித்து வளர்ந்தன. இருபது ஆயர் களைக் கொண்ட செழிப்புற்ற சபையாகத் திகழ்ந்தது.[25]

451ஆம் ஆண்டு கல்சடன் திருச்சங்கத்தின் அந்தியோக்கிய பிதாக்களின் பீடத்தில், அதிகாரப் பின்னடைவு ஏற்பட்டது. ஜெருசலேமின் பிதாக்களின் பீடத்திற்கு முன்பிருந்த வற்றுள் 58 மறை மாவட்டங்களின் அதிகாரம் மாற்றப்பட்டது.

மொனபிசைற் பேதத்தினை கல்சடன் சங்கம் கண்டித்த அதன் ஆதரவாளராயி ருந்த அந்தியோக்கியாவின் பிதாப்பிதாபீடம் நம்பிக்கை இழந்தது. இதனால் இவர்கள் யாக்கோபைற் சீரியத் திருச்சபை என அழைக்கப்பட்டனர். மாறாக திருச்சங்கத் துக்கு கீழ்ப்படிந்தோர், மெல்க்கைற்ஸ் (Melkites) என அழைக்கப்பட்டனர்.

702ஆம் ஆண்டு தொட்டு 742 வரை அந்தியோக்கியாவின் ஆயர் பதவி, வெற்றிட மாகியிருந்தது. இன்றைய லெபனானின் தீர் நகர ஆயரின் ஆளுகையின் கீழ் வந்தது. இக் காலகட்டத்தில் புனித மாறோவின் துறவற மடத்திற்குச் சார்ந்த துறவிகளும் அருகேயிருந்த ஆயர்களும், மாறோனைற் பிதாக்கள் பீடத்தை உருவாக்கினர். இதனால் பலம் இழந்த அந்தியோக்கிய திருச்சபை சிலுவைப் போர்களின் போது அரை மில்லியன் விசுவாசிகளையே உள்ளடக்கியிருந்தது. 969ஆம் ஆண்டில் பைசாந்திய பேரரசு, அந்தியோக்கியாவை திரும்பவும் அரபுக்களிடமிருந்து கைப்பற்றிய பொழுது ஏழாம் நூற்றாண்டு தொட்டிருந்த அவர்கள் பிடி நீங்கிற்று. 1098இல் திரும்பவும் சிலுவைப் போரில் லத்தீன் கிறிஸ்தவர்கள் ஆளுகைக்குள் வந்ததும் அந்தியோக்கிய பேராயர் கொன்சாந்தி நோப்பிகளுக்குச் சென்று வாழலானார். இதனால் மெல்கைற் கிறிஸ்தவர்கள் படிப்படியாக பைசாந்திய வழிபாட்டு முறைகளைப் பின்பற்றி 1203ஆம் ஆண்டில் முழுமையாக பைசைந்தான் முறைக்கு மாறினர். இவர்களுடன் ஜெருசலேம் அலெக் சாந்திரிய சபைகளும் அவ் வழிபாட்டு முறைக்கு மாறின. இதன், இன்னும்

மோசமான விளைவுகள் 1098 - 1268 ஆம் ஆண்டுக்குமிடையில் நிகழ்ந்த பிரிவினையில் பைசன்ரைன் திருச்சபையுடன் சேர்ந்து கொண்டனர்.

1268இல் அந்தியோக்கிய பிதாக்கள் வீடு திரும்பினர். சீரியாவை ஆண்ட எகிப்திய முஸ்லிம் சுல்தான்கள், அவர்கள் மேற்கத்திய நாடுகளுடனான தொடர்புகளை கடுமையாகத் தடைசெய்தனர். 16ஆம் நூற்றாண்டுக்கும் 18ஆம் நூற்றாண்டுக்குமிடையே கிறிஸ்தவ ஐக்கியத்திற்கான பல முயற்சிகள் நடைபெற்றன.[26]

## அந்தியோக்கியாவின் இறையியல்

3ஆம் - 5ஆம் நூற்றாண்டுகளுக்கிடையே விவிலியக் கருத்துக்கள் பற்றிய தாக்கங்கள் அந்தியோக்கிய இறையியல் கல்லூரிகளில் நிலவியது. இவ்விறையியல் மரபை 290இல் ஆரம்பித்தவர்கள் குருக்களும் வேதசாட்சிகளுமான, லூசியானும் டொறத்தேயுசும் ஆவர். கிழக்கில் இவர்கள் சிந்தனை பரவி, ஆதிக்கம் செலுத்தியது. இவர்களில் பிரபல்யமானவர் நெஸ்தோரியஸ். இவரின் பேதங்கள் 431ஆம் ஆண்டில் எபேசஸ் சங்கத்தில் நிராகரிக்கப்பட்டது. கிரேக்க மெய்யியலாளர் அரிஸ்ரோட்டலை பின்பற்றி, விவிலியத்தை வரலாற்று மொழியியல் ரீதியாக அணுகி அர்த்தம் கொடுத்தனர். இதனால் இயேசுவின் மனித சுபாவத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து மனித சித்தத்தின் சுதந்திரத்தை மிகைப்படுத்தினர்.

இவர்களின் எதிர் இறையியல் தலைமையகம் அலெக்சாந்திரியாவில் அமைந்திருந்தது. மகா அலெக்சாந்தர் காலம் தொட்டு, சிந்தனைச் சிற்பிகளுக்கும் மெய்யியல் வல்லுநர்களுக்கும் கல்வி பயிற்றுவித்த இடம் இது. ஒறிஜன் என்ற மூன்றாம் நூற்றாண்டு இறையியலாளா கிறிஸ்துவின் இறைத்தன்மையையும் இறைவனின் உன்னத கடப்பு நிலையையும் வற்புறுத்தினர்.

திருச்சபையில் பல பிரபுல்ய பெயர்கள் அந்தியோக்கிய இறையியல் சிந்தனை வட்டங்களில் இருந்து பிறந்தன. புனித ஜெருசலேமின் சிறில் தார்சுஸ்சின் டியோடோரஸ், அவரின் இரு மாணவர்கள் மொபுசுவெத்தாவின் தியடோர், புனித யோண் கிறிஸ்சோஸ்ரம். பேதங்களுக்கு வித்திட்ட ஏரியஸ், நெஸ்ரோரியன், அந்தியோக்காவின் லூசியன், நிக்கோமேடியாவின் எயுசேபியுஸ், தங்கள் சூழலில் இருந்த கிறிஸ்தவர் அல்லாத சிந்தனையாளர் மரபின்படி ஸ்தேவோக்கிய சிந்தனை வாதத்தின்படி கிறிஸ்தவத்தை ஒரு ஒழுக்க சீலமாக கருதினரேயன்றி இரட்சணிய பாதையாக நோக்கவில்லை. கிறிஸ்துவை தாம் பின்பற்றக்கூடிய ஒரு குணசீலராகவே கருதினர். அருள் சுரக்கும் தேவனாக பார்க்கத் தவறினர். எனவேதான் ஜென்ம பாவம், மீட்பு பற்றிய தளர்வு இளக்க நிலை, அந்தியோக்கிய இறையியலிலும் காணப்பட்டது.[27]

## சீரியாக் மொழி

அந்தியோக்கியாவின் கிழக்கே உள்ள பகுதிகளில் கிறிஸ்தவ எழுத்தாளர்களால் பாவிக்கப்பட்ட மொழியே இது. பாரசீக சாம்பிராச்சியத்தின் கிறிஸ்தவர்களையும் இது உள்ளடக்கும். எடெசா (Edessa) நாடு இரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிகளில் கிறிஸ்தவத்தின் மையமாகிற்று. அதன் மொழி அரமெயிக். இதுவே சீரியாக் மொழி ஆகும். 216ஆம் ஆண்டில் எடெசா, அம்மண்ணின் மைந்தன் ஒருவனால் ஆளப்பட்டது. எனவே கிறிஸ்தவம் இங்கு புதிதாகப் புகுத்தப்பட்ட பொழுது சீரியாக் (அரமெய்க்) மொழியே, கிரேக்க, லத்தீனிய மொழிகளுக்குப் பதிலாகப் பாவிக்கப்பட்டு வந்தது. நான்காம்

நூற்றாண்டில் மட்டும் உரோம சாம்ராச்சியத்தில் லத்தீனும் கிரேக்க மொழியுமே கிரேக்கர்களால் உத்தியோகபூர்வமாகப் பாவிக்கப்பட்டது இங்கு குறிப்பிடத்தக்கது. ஆயின் எடெசாவில் கிறிஸ்தவ வழிபாட்டு செபங்களும், விவிலியமும் அரமெயிக் (சீரியாக்) மொழியிலேயே மொழிபெயர்க்கப்பட்டு பாவிக்கப்பட்டன. இதுவே கிழக்கில் கிறிஸ்தவ மொழியாகக் கருதப்பட்டது.

ஐந்தாம் நூற்றாண்டில் எழுந்த இறையியல் கருத்து மோதல்களுக்குப் பின் இத் திருச்சபை இரண்டாகப் பிரிந்தது. நெஸ்தோரிய கிறிஸ்தவர்கள் (கிழக்கு சீரியர்) யாக்கோபைற் (மேற்கு சீரியர்) இவர்களிடையே மொழி, பேச்சு, உச்சரிப்பு நடையில் வித்தியாசங்கள் உருவாயின. பின்னையது மரோனைற் பிரிவின் மொழியாக மாறிற்று. இவர்கள் லெபனானில் வாழ்ந்து உரோமா புரியுடன் ஐக்கியமானவர்கள். மேற்கு சீரியர் அல்லது யாக்கோபைற்சும் இவர்களுள் ஒன்றே.

சீரியாக், எபிரேய மொழிபோன்று 22 எழுத்துக்களையே கொண்டுள்ளது. பழைய எபிரேயம், பினீசிய எழுத்து வடிவங்களைப் பின்பற்றி எழுந்தது. 4ஆம் 5ஆம் நூற்றாண்டுகளில் அழகாக எழுதப்பட்ட பிரதிகள் இன்னும் கிடைக்கின்றன.[28]

## சீரியாக் இலக்கியம்

ரோமையர்கள் தம் ஆதிக்கத்தில் சீரியாக் மொழிக்குப் பதிலாக கிரேக்க மொழியையே உத்தியோகபூர்வமாகப் பாவித்தனர். இதனை முஸ்லிம் படையெடுப்பின் பின் கலிப்வாலிட் (705 - 715) கிறிஸ்தவத்தின் மேலிருந்த வெறுப்பினால் கிரேக்கத்துக்குப் பதில் அரபு மொழியை உத்தியோக மொழியாக டமஸ்குவில் ஆக்கினான். இருந்தும் சீரியாக் இலக்கியம் 3ஆம் நூற்றாண்டு தொட்டு 14ஆம் நூற்றாண்டு மட்டும் கிறிஸ்தவர்களினால் பாவிக்கப்பட்டு வந்தது. அதன் பின்பே அரபு மொழியின் ஆதிக்கத்தினால் அது அழிந்துவிட்டது.

சீரியாக் மொழி கிறிஸ்தவர்களிடையே உரைநடையிலும் கவிதைகளிலும் - மறையுரைகள், மறைவிளக்கங்கள், பாடல்கள்,வழிபாட்டு ஏடுகள் விவிலியத்துக்கு அப்பாற்பட்ட நாட்டார் கதைகள், வரலாற்று இன்பவியல் காப்பியங்கள், புனிதர் வரலாறுகள், வேதசாட்சிகள் வரலாறுகள், துறவற ஆச்சிரமங்களின் வரலாறுகள், சுயசரிதைகள், பொது வரலாறுகள், திருமறைக் கொள்கைகளின் திரட்டு, மெய்யியல் - விஞ்ஞான, திருமறைச் சட்ட நூல்களாகக் காணக்கிடைக்கின்றன.

இவற்றில் இரு பிரிவுகள் குறிப்பிடத்தக்கன. தோமையாரின் நடபடிகளில் காணப்படும் ''ஆன்மாவின் கீதம்'' இலக்கிய ரசனையைப் பொறுத்த மட்டில் நல்லவொரு உதாரணம். அடுத்தது ஆறாம் நூற்றாண்டின் ரோமை நகரப் போர் வரலாறு. யோசுவா எழுதுவினைஞர் அல்லது யூலியனின் காதல்: முக்கிய ஆன்மீகவாதிகள், புனிதர் வரலாறு அந்தியோக்கியாவின் இசாக், பில்லோகசேனஸ் முதலியோரின் மறையுரைகள் உயிர்த்த இலக்கியத்தரம் பெற்றவை எனக் கருதலாம்.

பார்டெய்சான் (Bar Daisan) சமகாலத்தவன், கிறிஸ்தவனாய் எடேசா அரண்மனையில் நுழைந்தவன். கி.பி. 202இல் அரசன் ரோமாபுரி சென்றபோது

கிறிஸ்தவர்களின் முன்மாதிரிகையையும், இரத்த சாட்சியத்தையும் கண்ணுற்றமை அவனது மனந்திரும்புதலுக்குக் காரணமாயிற்று.

ஆனால் அங்கு கிறிஸ்தவம் கி.பி. 135லிருந்தே காணப்பட்டதற்கான சான்றுகள் உள்ளன. சீரியாக் விவிலியம் (Peshitta) பெசிற்றா என்ற 9ஆம் நூற்றாண்டு பழைய ஏற்பாட்டு நூல்களையும், புதிய ஏற்பாட்டின் 2 பேதுரு -2,3 யோவான் - யூட் - காட்சியாகமம் (திருவெளிப்பாடு) தவிர்ந்த ஏனைய புத்தகங்களையும் கொண்டிருந்தது. இது அந்தியோக்கியாவின் கி.பி 200ஆம் ஆண்டின் விவிலியத்தை ஒத்திருந்தது. 5ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் (423க்கும் 435க்குமிடையில்) எடேசாவின் ஆயராகவிருந்த றபுல்லாவின் கீழ் புதிய ஒரு சீரியாக் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டது. கி.பி 400இல் அந்தியோக்கியாவில் பாவிக்கப்பட்ட விவிலியத்தை இம் மொழிபெயர்ப்பு ஒத்ததாகவிருந்தது.

வேதாகம நூல்களில் முக்கியமானது "யூடாஸ் தொமஸ்" நடபடிக்கை, இது அப்போஸ்தலர் நடவடிக்கை (திருத்தூதர் பணி) என்னும் நூலில் காணப்படுகிறது.

'புனிதர்கள் வரலாறு' பல வேதசாட்சிகள் பற்றிய குறிப்புகளை உள்ளடக்கியுள்ளது. சக்கரவர்த்தி திராஜனின் ஆட்சியில் சார்பேல் பார்ஸ்சமியா வேதசாட்சி முடிபெற்றார். குரியாவும் (Gurya), சார்மொனாவும் (Sarmona), தியாக்கோன் கபிபிப் (Habbibh) என்போர் தியோகிளேசியன் லிசினுசியசின் கீழ் இரத்தசாட்சிகள் ஆயினர். சமோசற்றா, புனித அசாசாயேல் (St.Azazail) முதலியோரின் விசுவாச சாட்சிகளாகக் குறிக்கப்பட்டுள்ளனர்.

கொன்ஸ்ரன்ரைனின் மனமாற்றம், பாரசீக கிறிஸ்தவர்களுக்கு நன்மையாக அமையவில்லை. குறிப்பாக கி.பி 337இல் இரண்டாம் சம்போர் (Sapor II) மன்னன் ரோமைக்கு எதிராகப் போர்தொடுத்தபோது, சுதேச கிறிஸ்தவர்களுக்கு எதிராக ஓர் குரூர 40 வருட வேதகலாபனையைத் தொடங்கினான். இது சீரியாக் மொழியில் எழுதப்பட்ட 'பாரசீக வேதசாட்சிகளின் நடவடிக்கை' என்ற நூலில் பதியப்பட்டுள்ளது.

நெருப்பு வழிபாட்டுக்காரரான பாரசீக செராஸ்திரிய குருக்கள், கிறிஸ்தவர்களுக்கு எதிராக 'தேசத்துரோகிகள்' என்னும் பட்டத்தைச் சூட்டி, தம் அரசர்களை அவர்களுக்கெதிராகத் தூண்டிவிட்டனர். இரண்டாம் சப்போரின் வேதகலாபனை 40 ஆண்டுகள் நீடித்தது. செர்சொமான் என்ற வரலாற்று ஆசிரியர் 16,000 வேதசாட்சிகளின் பெயரைக் குறிப்பிட்டுள்ளார்.

சப்போர் அரசனின் மரணத்தின் பின் கலாபனை ஓய்ந்தது. ஆனால் திரும்பவும் இரண்டாம் பகராம் (Bakaram II) (420 - 438) காலத்தில் ஆரம்பமாகி, அவன் மரணத்துடன் ஓய்ந்தது. பத்து வருடங்களின் பின் 448இல் தொடங்கிய வேதகலாபனையில் 10 ஆயர்களும்; 1,53,000 விசுவாசிகளும் கொல்லப்பட்டு வேதசாட்சி முடிபெற்றனர்.

நாலாம் நூற்றாண்டின் சீரிய எழுத்தாளரில் அபிறற்ஸ் (Aphiraates) எபிராயிம் (Ephraim) என்பவர்கள் முக்கியமானவர்கள். இவர்களுள் எபிராயிம் சீரிய கத்தோலிக்க மறை உண்மைகளுக்கு விடாப்பிடியான பிரமாணிக்கத்தை எண்பிக்கிறவர்.

ஐந்தாம் நூற்றாண்டு மெசேப்பத்தோமிய, பாரசீகத் திருச்சபையிலும், கிறிஸ்தவ உலகின் பல்வேறு பகுதிகளிலும் சர்ச்சைகள் நிறைந்த காலகட்ட

மாயிற்று. அல் பென்ஸியுஸ் இறைவார்த்தையாகிய கிறிஸ்துவானவர் மனித சிந்தனை செய்யும் ஆன்மாவில் குடிகொள்ள, உண்மை மானுடம் வெளியேற்றப் பட்டு விட்டதா? என்ற பாணத்தைத் தொடுத்தார்.

இதற்கு எதிரொலியான விடைகள் பல சமேசற்றாவின் பவுல், தார்சுசின் டியடோர், மொப்பு எஸ்ரியாவின் தியடோர் கொன்ஸ்தாந்தி நோப்பிளின் நெஸ் தோரியஸ் முதலியோரிடமிருந்து எழுந்தது. ஒட்டுமொத்தமாக கிறிஸ்துவில் நிரந்தரமாக இருந்த இரு சுபாவங்களின் ஒன்றிப்பையே அறைகூவின.

இருந்தும் தேவசுபாவத்தின் குணாம்சங்கள் எப்படி மனித சுபாவத்தின் குணாம்சங்களுடன் பொருந்துகின்றன என்பதில் சர்ச்சை எழும்பியது. மரியாள் இறைவனின் தாய் - தியேட்டகோஸ் (Theatokos) என்ற பதத்தை நெஸ்ரோறியஸ் ஏற்க மறுத்ததினால் எபேசுஸ் சங்கம் 431இல் அவரைக் கண்டித்தது.

'கற்பின்' என்ற நூலில் கிழக்கில் துறவற மடங்களை அமைத்த பல புனிதர் களின் வாழ்க்கை வரலாறுகள் உள்ளன.

மூன்றாம் யபகலாக (Yabhalaha III) (1281-1317) ஆயர் பற்றிய வாழ்க்கை வரலாற்றில் மொங்கோலிய அரசர்களுக்கும் திருச்சபைத் தலைவர்களுக்கும் இடையே நிலவிய தொடர்புகளும், பதின்மூன்றாம் நூற்றாண்டு நெஸ்தோரிய சீனத் திருச்சபை பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன.

அல்பேனியா மூன்றாம் நூற்றாண்டில் கிரகோரியரால் கிறிஸ்தவ நாடாக் கப்பட்டு இற்றைவரைக்கும் பல இன்னல்கள் மத்தியில் பிரமாணிக்கமாய் இருந்து வருகிறது.

எத்தியோப்பியா பூறுமொன்ரியஸ் என்ற தீர்நாட்டு இளைஞன் மந்தி யாவில் இருந்து வீடு திரும்பும் வழியில் பிடிபட்டு அரண்மனைக்கு அடிமை யாகக் கொண்டு வரப்பட்டபொழுது அரசனையும் குடிகளையும் கிறிஸ்தவ விசுவாசிகளாக மாற்றினான்.

மேற்கூறப்பட்ட இரு நாடுகளும் ஆசியாவுக்குள் வராதபடியால் இவை பற்றிப் பேசவில்லை.

பாரசீக அரசின் கீழ் இருந்த கிறிஸ்தவர்கள் இவ்வேதகலாபனைகள் கார ணமாக இந்தியத் துறைமுகப் பகுதிகளுக்கு இடம்பெயர்ந்த முதல் கிறிஸ்தவர் களாயிருக்க வேண்டும். இவர்களின் சிலுவை வடிவங்கள், சீரிய - எடெஸ்சா சிலுவை வடிவங்களுக்கு ஒத்தவை. அவை கேரளா மாநில கிறிஸ்தவ கோவில் களிலும், பின் அனுராதபுரத்திலும் காணப்பட்டன.

கிறிஸ்தவர்களை துன்புறுத்தியோர் இஸ்லாமிய படையெடுப்பின் பொழுது இந்தியாவுக்கு ஓடிவந்து தஞ்சம் புகுந்தனர். இவர்களை பாசிகள் (Parsees) என்று அழைத்தனர்.[29]

## சீரியாக் கிறிஸ்தவ சபை இன்று

வடக்கில் துருக்கியும், கிழக்கிலும் தெற்கிலும் ஈராக்கும் ஜோர்தானும், மேற்கில் இஸ்ராயேல் - லெபனான் - மத்திய தரைக்கடலும் உள்ளன. இன்று இங்கு கத்தோலிக்கர் 5 சதவீதமும், இஸ்லாமியர் 85 சதவீதமும், ஓதடக்ஸ் சபையினர் 5 சதவீதமும், ஆர்மேனியன் சபையினர் 2 சதவீதமும் உள்ளன.

(இது 1970களின் கணக்கெடுப்பு)

புதிய ஏற்பாட்டின் லாவோடேக்கியா இங்குள்ளது. அரமேயிக் மொழியே பண்டைய சீரியாவில் பேசப்பட்டது. மகா அலெக்சாந்தர் அதைத் தன் ஆளு கைக்குள் கொண்டு வந்தான்.

அங்கு கிறிஸ்தவர்களுள் 6 வகை வழிபாட்டுப் பிரிவுகள் இருந்தன. (தமஸ் கஸ்சில் உமையாட் பள்ளிவாசல் உள்ளே திருமுழுக்கு அருளப்பரின் சமாதி காணப்படுகிறது). அந்தியோக்கியாவின் வழிபாடு - பைசாந்தியா, ஆர்மேனியா, கல்தேயன் வழிபாடுகளுக்கு அடிகோலியது.

மொனபிசைற் பேதத்தின் பின் இரு பிரிவுகளாகப் பிரிந்தனர். தாய்த் திருச்சபையுடன் இணைந்திருப்போர், இல்லாதோர் (திருச்சபையில் இருந்து பிரிந்தவர்கள்), இணைந்து தலைமையை ஏற்றுக்கொண்டவர்கள். மேற்கத்திய சீரியக் கத்தோலிக்கர் மரோனைற் கிறிஸ்தவர்கள் - பண்டைய அந்தியோக்கிய வழிபாட்டு சம்பிரதாயத்தை பின்பற்றுகின்றனர்.

மெல்கைற் - கிரேக்க பைசாந்திய முறைகளை பின்பற்றுகின்றனர். சீரியாக் வழிபாட்டின் மொழி கிரேக்கம். பின் கொன்சாந்தி நோப்பிளுக்கு எதிரான தேசிய உணர்வுகள் மேலோங்க சீரிய மொழியையே பாவிக்கத் தொடங்கினர். இவர்களது மொழி இயேசு பாவித்த அரமேய மொழியை ஒத்தது. இதை மரோனைற்ஸ், மெல்கைற் சபைகள் பாவிக்கின்றன.

புனித பேதுரு இச்சபையை நிறுவினார். 70ஆம் ஆண்டின் ஜெருசலேம் அழிவின் பின் இது முக்கியமடைந்தது. அதன் ஆசிரியம் கிழக்கின் முக்கிய கத்தோலிக்க மையம் ஆக்கி; பினிசியா, அராபியா, பலஸ்தீன், சிசிலியா, சைப்பிரஸ், மெசப்பத்தேமியாவுக்கு தாய்த்திருச்சபையாகி, 325ஆம் ஆண்டின் நிசேயா சங்கத்தின் மிக முக்கிய திருச்சபைகளில் ஒன்றாக இடம்பெற்று, ரோம் அலெக்சாந்திரியாவுக்கு அடுத்ததாகப் பெயர் பெற்று விளங்கியது.[30]

முதல் நூற்றாண்டுகளின் பட்டியலில், முதலில் பலஸ்தீன ஜெருசலேம் திருச்சபை, பின் அந்தியோக்கிய திருச்சபை, எடேசா (Edessa), ஆசிய திருச்சபைகளின் மையமாகியது.



ஆசியக் கிறிஸ்தவன்

# பாலைவனத்துத் திருச்சபைகள்

கி.பி. 3ஆம் நூற்றாண்டுகளிலேயே பரவசத்தியான தபசு வாழ்வை நாடி கிறிஸ்தவர்கள் பலஸ்தீன, எகிப்திய, சீரிய வனாந்தரங்களுக்குச் சென்றனர். முதல் 3 நூற்றாண்டுகளில் வேதகலாபனைகளின் மத்தியில் யேசுவுக்காக உயிரைக் கொடுப்பதிலே ஒரு கவர்ச்சி இருந்தது. இருந்தும் நல்லறிஞர் பலர் அமைதியை விரும்பி வனாந்தரங்களுக்குள் சென்றனர். ஒரிஜன் ( கி.பி. 185 - 254) என்னும் கிறிஸ்தவ இறையியலாளர் -அறிவும், கடவுள் வாக்கும், வாழும் உலகும் வேறு; இருள் ஆட்சிபுரியும் உலகு வேறு; இவை இரண்டும் ஒன்றுடனொன்று சமர் புரிபவை என்கிறார்.

"ஆன்மாவின் கணவன் இறைவன் ஒருவனே: எனவே வாய்ச்செபம் படிப் படியாக உள்ளத்தின் ஆழத்திலே இருக்க வேண்டும் அதனால் மோன நிலை மன்றாட்டாக அமரும் இந்த நிலைதான் கடவுளோடு ஐக்கியமாகும் நிலை" இந்த மோன நிலையின் மேன்மையை உணர்ந்தே உரோமை நகர் தொட்டு ஆசிய ஆபிரிக்காவில் பலவிடங்களிலும் கிறிஸ்தவர்களைப் பிடித்து வதைக்கும் படலம் தொடங்கிய பொழுது சிலர் இதுவே கிறிஸ்துவோடு ஒன்றிக்க சிறந்த வாய்ப்பெனக் களிகூர, வேறு சிலர் அமைதி நாடி ஒதுங்கலாயினர்.

மன்னன் கொன்சன்ரைன் காலத்தில் இத்தகைய வனாந்தரத் துறவு வாழ்க் கைக்கு அவசியமேற்பட்டது. வேதகலாபனை நிறுத்தப்பட்டுவிடினும், அரசும் திருச்சபையும் அமைதியாக வாழ்வதென்று ஏற்றுக்கொண்டாலும் திருச் சபையின் உலகியல் நாட்டம் முடிதொட்டு அடிமட்டும் பரவத்தொடங்க, பெரிய கோயில்களைக் கட்டுவதும், ஆரவாரமான வழிபாட்டுச் சடங்கு முறைகளை உருவாக்குவதுமாயிருந்தனர். உண்மையாக கிறிஸ்துவைப் போன்று வாழ விரும்பிய துறவிகள் கடுந்துறவு பூண்டு அமைதியாய் ஞான வாழ்க்கை வாழ்வதெனத் தலைப்பட்டனர். இதற்கு முன் மாதிரியாக பழைய ஏற்பாட்டில் எலியாவும் அவர் கார்மேல் மலை துறவியர் பயிற்சி சாலையும், பின் வந்த சாக்கடல் எஸ்சீனிய துறவிகளைப் பின்பற்றி வாழ்ந்த ஸ்நாபகர் யோவானின் முன் உதாரணமும் உதவியது. [31]

## வனத்துச் சின்னப்பர்

இவர்களுள் முதலாவதாகக் கருதப்படுபவர் வனத்துச் சின்னப்பர். இவர் கி.பி. 3ஆம் நூற்றாண்டில் எகிப்தின் தென்பகுதியில் வளர்ந்தவர். 250இல் பாலைவனம் சென்றார்.

இவர் வனத்துக்கு புறப்பட்ட காலத்தில் பிறந்தவர் தான் வனத்து அந்தோனியார். இவர் பிறந்த ஊர் எகிப்தின் நைல்நதிக்கும் செங்கடலுக்கும் இடையே இருந்தது. வனத்துச் சின்னப்பரின் தொடர்பால் இவர் துறவியானார். *341*இல் சின்னப்பர் இறக்கும் பொழுது தன் போர்வையை அந்தோனியாருக்கு ஈந்தார். மரண வேதனையில் குரு இருக்கையில் தண்ணீர் கொண்டுவரச் சென்ற இவர் திரும்பிவரும் முன் அவர் உயிர் பிரிந்துவிட்டது. அலகைகளோடு சமர் செய்து புரையறம் தெளிந்து சோதனைகளை வென்றவர் அந்தோனி. பாலை வனத்தில் ஒருவந்திகளாய்த் தவவாழ்க்கை மேற்கொண்டிருந்த பலரையும் நேரில் சென்று கண்டு தக்க அறிவுரைகள் கூறித் தேற்றினார்.

எகிப்திய வனாந்தர துறவறத்தின் மூன்று தந்தையர்கள் அந்தோனி, பக்கோமியுஸ், அமுன் (Amoun). இவர் *295*இல் பிறந்து திருமணமாகி இருவரும் *18* வருடங்கள் தபவாழ்வு வாழ்ந்தனர்.

## கலேசியஸ்

ஐந்தாம் நூற்றாண்டின் மத்திய காலத்து துறவிகளுள் பிரசித்தி பெற்றவர் மடாதிபதி கலேசியஸ். அவர் சிறந்த கல்விமான், அக்காலத்தின் மிகக் கடுமை யான துறவற விதிகளை மிக இலகுவாகக் கடைப்பிடித்தவர். ஆச்சிரம சட்டங் களில் கைதேர்ந்தவர். துறவற அரசியலும் கிறிஸ்தவ மத நுணுக்கங்களும் அவருக்கு கைவந்த கலை. இளைஞர் ஒழுக்க விவகாரங்களை சாமர்த்தியமாக - திறமை யாக கையாண்டவர். எனவே எல்லாவித பிரச்சினைகளையும், மாறுபட்ட விவகாரங்களையும் அவரிடம் கொண்டு வந்து நல்முறையில் தீர்த்து வைக்க துறவிகளும் பொதுநிலையினரும் விரும்பி வருவர்.

மடாதிபதி கலேசியசிடம் ஒரு சிறந்த தோலினால் உருவான விவிலிய நூல் இருந்தது. பதினெட்டு வெள்ளிக் காசுகளுக்கு, அது விலை மதிக்கப்பட்டது. பழைய, புதிய ஏற்பாட்டு நூல்கள் அனைத்தும் அதில் அடங்கியிருந்தன. ஆலயத்தில் துறவிகளும் மற்றும் வருகைதரும் பொதுநிலையினரும் மிக அரிய இந்த வேதாகம நூலை வாசித்து தியானிப்பது வழக்கம்.

ஒரு நாள் வேறொரு ஆச்சிரமத்தைச் சேர்ந்த ஒரு துறவி இந்த ஆலயத்துக்கு வந்தார். இந்த வேதாகம நூலில் ஆசை கொண்டார். போகும்போது இரகசி யமாக அந்த நூலை கவர்ந்து சென்றார். வயோதிபரான மடாதிபதி இதனை அறிந்தும் வெளிக்காட்டவில்லை. விவிலியத்தை கடத்திச் சென்றவர் பதின் மூன்று வெள்ளிக் காசுகளுக்கு விலைபேசினார். வாங்க விரும்பியவர் அந்த விவிலியத்தை பரிசோதிப்பதற்காக ஒருநாள் தவணை கூறி தம்முடன் எடுத்துச் சென்றார். அவர் நேரே மடாதிபதி கலேசியசிடம் சென்று வெகு பணிவுடன் தாம் கொடுக்கப்போகும் பணத்துக்கு பெறுமதியுடையதா அந்நூல் எனக் கேட்டார்.

மடாதிபதி புன்சிரிப்புடன் ''இவ்விவிலிய நூல் அழகானது. சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டது, நீடித்த பாவனைக்குரிய கட்டுக்கோப்பு வாய்ந்தது. நீ கூறிய விலைக்கு மேல் பெறுமதியுள்ளது'' என்றார். அந்த மனிதர் விற்க வந்த துறவியிடம் சென்று "நான் இதை மடாதிபதி கலேசியசிடம் காட்டி னேன், அவர் அது நல்ல நூல்தான், ஆயின் உன்னிடம் கேட்கும் விலையிலும் பார்க்க பெறுமதி கூடியது'' எனச் சொல்கிறார் என்றார். இதைக் கேட்டதும் வேதாகமத்தைக் களவெடுத்து விற்க வந்தவர் மடாதிபதியின் பெருந்தன்மை

யையும் தீர்க்கதரிசன நோக்கையும் நன்குணர்ந்தார். வேதாகமத்துடன் மடாதிபதியிடம் சென்று கால்களில் விழுந்து மன்னிப்புக்கோரினார். வேதாகமத்தை திருப்பிக் கொடுத்தார். தமக்குத் தண்டனை தருமாறு அழுது குளறினார். வயோதிப மடாதிபதியின் கீழ் செபத்திலும் தபத்திலும் தம் இறுதிக் காலத்தைச் செலவிட்டார்.

## சிமியோன்

பாட்டாகுஸ் என்பவன் ஒரு கிறிஸ்தவன். ஆயினும் அநியாயமாக கலேசியஸ் துறவிக்குச் சொந்தமான நிலம் ஒன்றை அபகரிக்க நினைத்தான். இதற்காக பல திட்டங்களுடன் அவன் பயணம் செய்து கொண்டிருக்கையில் ஆசாரத்திற்குரிய துறவி சிமியோன் (உயரமான ஓரிடத்திலிருந்தவர்) அவனைக் கண்டார். ''நீ எங்கிருந்து வருகிறாய்? எங்கே போகிறாய்? எக்காரணத்துடன் செல்கிறாய்'' எனக் கேள்விகளை அடுக்கினார்.

''பல காரணங்களுடன் என் பயணம் அமைந்துள்ளது. பரிசுத்தரான உங்கள் செபங்களுக்காக நன்றி கூறி உங்களை வணங்கி ஆசிபெற வேண்டும்'' என அவன் பதிலளித்தான். ''தீயவனே இறைவனின் அடியேனுக்கெதிராக நடவடிக்கை எடுக்க வல்லவா செல்கிறாய்? ஆயினும் உனது பாதை மாறிவிட்டது, நீ மீண்டும் உனது வீட்டைப் பார்க்க மாட்டாய். ஆகவே நீ புத்திசாலியாய் நடக்க எண்ணினால் அவரிடம் சென்று மன்னிப்புக்கேள்.'' என்றார்.

பாட்டாகுஸ் உடனேயே காய்ச்சலால் வருந்தினான். அவனுடன் சென்றவர்கள் அவனைத் தூக்கிக் கொண்டு மாடதிபதி கலேசியசிடம் கொண்டு சென்றனர். எனினும் பெல்ரூட்டுக்கு அவன் வந்தபோது தன் வீட்டுக்குச் செல்ல முன்பே அவன் இறந்துவிட்டான். அவனது புதல்வனே இச் சம்பவத்துக்குச் சாட்சி.

## தானியேல்

ஆர்சீனியஸ் என்ற வணக்கத்துக்குரிய புனிதரின் சீடனே தானியேல். அப் பெரியாரின் உடுமானங்களையும் காலணிகளையும் அணியத் தகுதியில்லாதவன் என்று தாழ்ச்சியோடு கூறியவர். எனினும் அவற்றை அணிந்தால் தானும் பேறு பெற்றவனாகலாம் என நம்பிக்கை கொண்டிருந்தார்.

கொடுங்கோலரான மிலேச்சர்கள் செற்ரிஸ் நகரை சுற்றி வளைத்த போது அங்கிருந்த பிதாப்பிதாக்கள் தப்பியோடினர். இறைவன் என்பேரில் அக்கறை காட்டாவிடில் நான் உயிர் வாழ்வதில் என்ன பயன்? என்று கூறிய தானியேல் கொடுங்கோலரின் பாதுகாப்பரணுக்கூடாக பயமின்றி நடந்து சென்றார். எதிரிகள் அவரைக் காணாது விட்டதால் இறைவனருளால் அவர் காப்பாற்றப்பட்டார்.

''எனக்கு ஒரு கட்டளையிடுங்கள் அதன்படி நான் நடக்க முயற்சிப்பேன்'' என ஒரு சகோதர துறவி அவரிடம் கேட்டார். ''ஒரு பெண்ணின் உணவுத் தட்டில் கை வைக்காதே. அவளோடு உணவருந்தாதே இதனால் பலவித பயங்கர விளைவுகளிலிருந்து நீ பாதுகாக்கப்படுவாய்'' என்றார் ஆசாரத்துக்குரிய தானியேல்.

பாபிலோனில் ஒரு பெண் அசுத்த ஆவியால் பெரிதும் அலைக்கழிக்கப்பட்டாள். எந்தவித முயற்சியாலும் பயன் கிடைக்கவில்லை. எனவே தானியேல் அழைக்கப்பட்டார். புனிதர் அவளது வீட்டில் காலடி எடுத்து வைத்ததும் ஆக்ரோஷம்

கொண்ட அலகையால் உந்தப்பட்டவள் அவரது கன்னத்தில் பளாரென அறைந்தாள். ஆயின் அவர் ஆண்டவர் இயேசுவின் திருவாக்கை அனுசரித்து மறு கன்னத்தைக் காட்டினார்.

''உங்களை வலக்கன்னத்தில் அறைபவருக்கு மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டுங்கள்'' *(மத் 5:39)*

அலகை இதனால் அவமானம் அடைந்தது. ''இது ஒரு புதுவித பழி வாங்குதல் இயேசுவின் கட்டளை என்னை ஆட்கொண்டுவிட்டது'' எனக் கூக் குரலிட்டபடியே அகன்றோடியது. பிதாப்பிதாக்கள் இறைவனுக்கு நன்றி கூறி அகமகிழ்ந்தனர். ''அலகையின் ஆங்காரமும் மமதையும் ஆண்டவர் இயேசுவின் தாழ்ச்சி, பணிவு என்ற புண்ணியங்களால் கட்டளைகளால் அடித்து நொறுக்கப் பட்டது'' எனப் புகழ்ந்தனர்.

## புனித எப்ரேயிம்

ஒரு கூட்டம் சம்மனசுக்கள் ஒருவரோடு ஒருவர் இந்த ஏட்டை யாருக்குக் கொடுப்பதென சர்ச்சைகொண்டபின் எப்ரேயிமிற்கென தீர்மானித்து அவருக்கு கொடுத்ததும் அவர் வாயில் இருந்து அருள் நீர் பெருக்கெடுத்து ஆவியின் அருட் பொழிவால் எப்ரேயிமின் உதடுகள் அர்ச்சிக்கப்பட்டு காணப்பட்டது.

ஒரு தினம் எப்ரேயிம் நகரின் பிரதான வீதி வழியாகச் செல்லும் போது ஒரு விபச்சாரி அவரை எதிர்கொண்டாள். அவளது மயக்கு மொழிகளால் மட்டுமல்ல சிற்றின்ப சாகசங்களாலும் மயங்காதார் எவருமில்லை. அவள் அவரை சிற்றின்ப உடலுறவுக்கு அழைத்தாள். அவர் சம்மதித்து அவளுடன் சென்றார். ''இந்தப் புனிதரும் அவ் விபச்சாரியின் சாகஸ செயல்களால் மயங்கி விட்டார்'' என வீதியில் சென்றோர் அனைவரும் தம்முள் உரையாடினர்.

மிகக் கடுமையான போக்குவரத்து நிறைந்த ஒரு சந்திக்கு அவர்கள் வந்ததும் ''இந்த இடத்தில் உனது ஆசையை நிறைவேற்றுவோம்'' என்றார் எப்ரேயிம் "இவ்வளவு சனத்திரள் பார்த்துக்கொண்டிருக்க வெட்கப்படாமல், அவமானப்படாமல் சிற்றின்பம் அனுசரிக்கலாமா" என அந்த விபச்சாரி கேட்டாள். ''மனிதருக்கு முன்னே அவமானமும் வெட்கமும் அடையக்கூடிய ஒரு நிகழ்ச்சியை, செய்ய விரும்பாத நீ இருளில் நடப்பதை ஆண்டவர் அறிவார் என்பதையும் அவர் முன்னிலையிலும் நாம் அவமானத்துக்கும் வெட்கத்துக்குமுரியதுமான செயல்களைச் செய்வது தகாது என்பதையும் உணராதது ஏன்?" என்று கடுமையாக உரைத்தார் எப்ரேயிம். அந்த விபச்சாரி தலை குனிவுடன் ஓடி மறைந்தாள்.

## செனோ

சீயன்னாவின் புகழ் பூத்த மடாதிபதி சில்வானுஸ் அவர்களது சீடனே செனோ என்பவர். கிறிஸ்து சகாப்தத்தைத் தொடர்ந்து எகிப்து, சீரியா, பலஸ் தீனாவில் மிகக்கடுமையான செபதப வாழ்வு அனுசரித்த துறவிகள் வரிசையைச் சேர்ந்தவர். இறுதிக் காலத்தில் (451) காஸாவில் ஒரு கோபுரத்தினுச்சியில் உண்ணா நோன்பும் செபதபமும் மேற்கொண்டு இறைவனுடன் சங்கமமானவர்.

''பிரசித்தி பெற்ற நகரங்களில் வசிக்காதே, புகழ் பூத்த மனிதர்களுக்கு கிட்டே வசிக்காதே'' என்பது இவரது பொன்னுரை.

எவரிடமும் எதையும் யாசிக்க (வாங்க) இவர் ஆசைப்பட்டதேயில்லை. அவருக்கு எப்பொருளையாவது ஆசையுடன் அன்பளிப்புச் செய்ய வந்தவர்கள் அவர் அவற்றை ஏற்காததால் அவமானத்துடன் திரும்பினர். இந்த வணக்கத்துக்குரிய பிதாவிடமிருந்து எதையாவது (அவரது நினைவாக வைத்திருக்க) எதிர்பார்த்து வந்தோரும் அவமானப்பட்டுச் சென்றனர்.

எவரையும் தனக்காக எதையும் செய்வித்து அல்லது எவரிடமும் அன்பளிப்புக்களை வாங்கிய பின் அவர்களுக்கு நன்றிக் கடனாக நேர்மை, நீதி, உண்மை என்பவற்றுக்கு மாறாக செல்லவோ, அல்லது நடவடிக்கை எடுக்கவோ அவர் ஒரு போதும் விரும்பவில்லை.

சில துறவிகள் அவரிடம் சென்று யோபு ஆகமத்தின் 15:15 "வானங்களும் அவர்தம் கண்முன் தூயவையல்ல" என்ற வார்த்தைகளுக்கு விளக்கம் கேட்டனர். "சில சகோதரத்துறவிகள் தங்கள் குற்றங்களை அசட்டை செய்து பரலோகத்துக்கு விளக்கம் கேட்கின்றனர். இந்த வார்த்தைகளின் விளக்கம் இதுதான்: கடவுள் ஒருவரே புனிதர். மாசுமறு அற்றவர். ஏனையவை அனைத்தும் தூய்மையானவை அல்ல"

## தியோடோரா

வனத்துப் பெண் தபசிகளில் இவரும் பிரசித்தி பெற்றவர். பேராயர் தியோ பிளஸ் ஆண்டகையின் ஆலோசனைகளும் வழிகாட்டுகையும் தியோடோராவை அறநெறி வழியில் நடத்தின. பல தபசிகளும் துறவிகளும் ஆன்மீக ஆலோசனைகளுக்கும் வழிகாட்டுகைக்கும் இவரை நாடி வந்தனர்.

தியோடோரா சீமாட்டி புனித பவுலின் திருமடலில் (கொலோ 4:5) "காலத்தை நன்கு பயன்படுத்துங்கள்" என்ற வார்த்தைகளுக்கு விளக்கம் தருமாறு பேராயர் தியோபிளஸ் ஆண்டகையிடம் கேட்டாள். "காலம் விலையேறப்பெற்றது. எமக்கு வாய்ப்பு மிகுந்த, புகழ்மிக்க காலங்களில் தாழ்மை, எளிமை கையாளப்படல் வேண்டும். அவமானமும் நட்டமும் மிகுந்த காலங்களில் அக் கருமங்களில் அதிக அக்கறைகாட்டி மனவேதனை அடையாது சமாளித்து மனதைத் திடப்படுத்த வேண்டும். எனவே எமக்கு எதிராக எழும் காலங்களில் எம்மால் முடிந்த அளவு அவற்றை எமக்குச் சாதகமாக்கும் வழிவகைகளை கையாளுதல் தகுந்த பலன் தரும்" எனப் பதில் கிடைத்தது.

"ஒடுக்கமான பாதையே பரலோக பாதை. அகலமான சொகுசான பாதை அல்ல" என அம்மா தியாடோரா அடிக்கடி வற்புறுத்துவாள்.

## யோண் பேர்சியன்

மாசற்றவரும் அறநெறி வழி பிசகாது நடப்பவருமான யோண் பேர்சியனின் புண்ணிய நெறிகள், நாடெங்கும் பரவத் தொடங்கின. எகிப்தின் அராபியாவில் அவர் வசித்தார். ஒருநாள் அவர் ஒரு துறவியிடம் சிறிது பணம் கடன் பெற்று கொஞ்சம் சணல்நார் வாங்கி வந்தார். தமது அலுவல்களுக்காக அவற்றைப் பயன்படுத்த எண்ணியிருந்தார். அப்போது ஒரு துறவி அவரிடம் வந்து தமது அலுவல்களுக்காக சிறிது சணல்நார் தரும்படி கேட்க அவரும் மனம் கோணாது கொடுத்தார். பின் இன்னொரு துறவி வேறொரு தேவைக்காக சிறிது நார் கேட்க அதையும் கொடுத்தார். இவ்விதமே வேறு சில துறவிகளும் நார் கடன்கேட்க

அவரும் நல்மனத்துடன் கொடுத்தார். இறுதியாக பணத்தை திருப்பிக் கொடுக்க வேண்டிய நாள் நெருங்கியது.

எனவே அவர் தியாக்கோனான துறவி யேம்சிடம் சென்று பணம் கேட்க விரும்பினார். வழியில் தரையில் ஒரு நாணயத்தைக் கண்டார். எனினும் அதை எடுக்கவில்லை. சிறிது செபித்து விட்டு தமது இருப்பிடம் சென்றார். பணம் கடன் கொடுத்தவர் திரும்பிவந்து கேட்டார். எனவே மீண்டும் செபித்துவிட்டு வெளியே சென்ற போது அந்த நாணயம் அதே இடத்தில் கிடப்பதைக் கண்டார். எனினும் எடுக்கவில்லை. பணம் கொடுத்தவர் வற்புறுத்திக் கேட்டார். விரைவில் கட்டாயமாகத் தருவேன் என்று வாக்களித்த துறவி மீண்டும் செபித்த வண்ணம் வெளியே செல்ல அதே நாணயம் அதே இடத்தில் காணப்பட்டது. எனவே துறவி யேம்ஸிடம் சென்று அந் நாணயம் பற்றிக் கூறி அவர் அதை ஏனையோருக்குத் தெரிவித்து தொலைத்தவர்கள் துறவி யோண் பேர்சியனிடம் சென்று பெற்றுக் கொள்ளுமாறு அறிவித்தார். எவரும் வரவில்லை. எனவே அவர் அதை உபயோகிக்குமாறு கூறப்பட்டது. அவரோ தாம் பெற்ற கடனுக்காக அதைக் கொடுப்பதாக பணிவுடன் தெரிவித்தார்.

எவ்வளவு கண்ணியமான கட்டுப்பாடுமிக்க துறவி.

## இசிரியன்

ஆசாரத்துக்குரிய துறவிகள் தியானமும் கலந்துரையாடலும் நடத்தினர். அவர்களது உரையாடலின் மையப்பொருள் "கடைசிச் சந்ததி" பற்றியது. இறுதியில் ஒரு மூத்த துறவி கேட்டார். "நல்லது நாங்கள் சாதித்தது என்ன?" ஆசாரத்துக்குரிய இசிரியன் பதிலளித்ததாவது: "நாங்கள் இறைவனின் கட்டளைகளைக் கடைப் பிடித்தோம்"

மீண்டும் ஒருவர் கேட்டார் "எங்களுக்குப் பின் வாழ்பவர்கள் எதைச் சாதிப்பர்?" "அவர்கள் நாம் சாதித்தவற்றில் பாதிப் பகுதியையாவது நடத்தப் பாடுபடுவர்" மற்றையோர் மீண்டும் வினாவினர்: "அவர்களுக்குப் பின் வாழப்போகும் சந்ததியின் நிலையாது?" "அதற்கடுத்த தலைமுறை எதையுமே சாதிக்காதவாறு சோதனைகளும் வேதனைகளும் அவர்களை ஆட்கொள்ளும். இப்போராட்டத்தில் வெல்பவர்கள் எங்களையோ அல்லது எங்கள் பிதாக்களையோ விட மிகப்பெரியவர்களாக விளங்குவர்"

## காசியான்

***360-435*** களில் வாழ்ந்த காசியான் இளம் பருத்திலேயே துறவு பூண்டார். பெத்லகேமில் பயிற்சி பெற்ற பின் தனது நண்பன் ஜெர்மானுசுடன் துறவற மடாலய வாழ்க்கை நெறியில் பயிற்சி பெற, எகிப்து, சீரிய நாடுகளுக்குச் சென்றார். இப் பயிற்சிகளில் அவர் பெற்ற விரிந்த அறிவும் பரந்த அனுபவங்களும் இரு சிறந்த நூல்களை (1. நிறுவனங்கள் 2. கலந்துரையாடலும் கருத்தரங்கும்) உருவாக்க உதவின. மார் செயில்ஸ்சில் இரு மடாலயங்களையும் நிறுவினார்.

வணக்கத்துக்குரிய துறவி காசியானின் கூற்றுக்கள்:

1. பரிசுத்த பிதா ஜெர்மானுசுடன் எகிப்தில் ஒரு வயோதிபரிடம் சென்றிருந்தேன். "நாங்கள் பலஸ்தீனாவில் சகோதர துறவிகளை சந்திக்கச்

செல்லும் போது உண்ணா நோன்பு அனுசரிப்பது வழக்கம். நீங்கள் ஏன் அப்படிச் செய்வதில்லை?" என்று கேட்டேன். அவர் கூறியது "நோன்பு முறையை எப்போதும் அனுசரிக்கலாம். ஆயின் உங்களை இன்று சந்திப்பது போல் என்றும் சந்திக்க முடியாது. அத்துடன் உண்ணாநோன்பு உடலையும் உள்ளத்தையும் ஆண்டவனுடன் ஒன்றிக்க வைக்கும் அரிய சாதனம். தருமச் செயல்களுக்கு அது ஒரு உந்து சக்தி. எனவே உங்களை வரவேற்று உபசரிக்கும் போது நான் உங்களில் கிறிஸ்துவையே காண வேண்டும். உங்களை உபசரித்து அனுப்பிய பின் மீண்டும் உபவாசத்திலும் செபத்தி லும் ஆண்டவனுடன் ஐக்கியமாவேன்.''

''மணமகன் தங்களோடு இருக்கும்வரை மணவிருந்தினர்கள் நோன்பிருக்க முடியுமா?... ஆனால் மணமகன் அவர்களை விட்டுப் பிரியவேண்டிய காலம் வரும். அப்போது அவர்களும் நோன்பு இருப்பார்கள்'' (மாற்கு **2: 19-20**)

2. புண்ணிய நெறியில் ஒழுகிய முதியவரின் வீட்டு அலுவல்களை ஒரு கன்னிப் பெண் கண்ணியமாக கவனித்து வந்தாள். அந்த முதியவரின் கற்புநெறியை களங்கப்படுத்தக் கதைகள் பரவின. அக்கதைகள் அவரது காதுக்கும் எட்டின. அவரது மரணப்படுக்கையில் தம்மைச் சந்திக்க வந்த சில குருக்களுக்கு "நான் இறந்து அடக்கம் செய்யப்பட்டபின் புதைகுழியின் மீது எனது கைப்பிரம்பை நட்டுவிடுங்கள். அது பூத்துக் குலுங்கினால் என்னைப்பராமரித்த கன்னியுடன் நான் கண்ணியமாகவே வாழ்ந்தேன் என்றும் அது பட்டதடியாகவே காணப்படின் நான் கற்புநெறி தவறிய கடும்பாவி என்றும் அறிவீர்கள்" எனக்கூறி மரித்தார்.

அவரது கல்லறையில் அவரது கைப்பிரம்பு நடப்பட்டது. மூன்றாம் நாள் அழகிய மலர்களும் தொடர்ந்து கண்கவர் கனிகளும் அப்பிரம்பில் காணப்பட்டன. அக் குருக்கள் பகிரங்கமாக இறைவனைப் போற்றிப் புகழ்ந்தனர்.

3. ஒரு வயோதிபர் எங்களைத் தம்முடன் உணவருந்த அழைத்தார். நாம் திருப்தியாக உணவருந்தினோம். ஆயின் அவரோ மேலும் உண்ணுமாறு வற்புறுத்தினார். நானோ மறுத்தேன். வயிறார உண்டேன். இனிமேல் உண்ண முடியாது என்று கண்டிப்பாக மொழிந்தேன். அவர் கூறினார். ''ஆறாவது தடவையாக துறவிகளுடன் விருந்துண்ணுகிறேன். இன்னும் என் பசி அடங்கவில்லை. ஆயின் ஒரு தடவை மட்டுமே நீர் புசித்து வயிறு நிரம்பிவிட்டது எனக்கூறுவது அதிசயம்தான்.''

4. இதே குரவர் மேலும் கூறுகிறார்: ஒரு பெரிய மடாதிபதியான யோண், நாற்பது வருடங்களாக வனாந்தரத்தில் (வெகு தொலைவில்) உபவாச செப முயற்சிகளில் மூழ்கியிருந்த துறவி பசியசைச் சந்திக்கச் சென்றார். அவர்கள் சரளமாக கலந்துரையாடியபோது, ''இவ்வளவு காலம் இவ்வரிய செபதப முயற்சிகளை இடையீடு இல்லாது மேற்கொள்கிறீர்களே. இவைகளைக் குழப்பியடிக்க எவரும் முயற்சிக்க வில்லையா?'' என்று கேட்டார்.
பதில் இதுதான்: ''மிக்க தனிமையில் நான் வசிப்பதால் நான் உண்பதை சூரியனே காணமாட்டான். நரன் கோபம் கொண்டதையும் அவன் அறியான்."

5. இப் பரிசுத்த துறவி மரணப்படுக்கையாகக் கிடந்தார். இறைவனைச் சந்திக்கப் போகும் மகிழ்ச்சி து முகத்தில் தெரிந்தது. சக துறவிகள் அவரைச் சுற்றி நின்று கவலையுடன் செபித்தனர். அவரது அரிய போதனையை இறுதியாக கேட்கவும் அவ்வழியே புண்ணி நெறியில் நடக்கவும் விரும்பிய துறவிகள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

''எனது சொந்த விருப்பு வெறுப்புக்களின்படி நான் நடக்கவில்லை. என்னால் செய்ய முடியாதது ஒன்றை நான் பிறருக்குப் போதிக்கவுமில்லை" என்றார் இறக்குமுன்.

## லூசியஸ்

சிலிசியாவைச் சேர்ந்த லோங்கினுசின் நண்பன் லூசியஸ் சீரியாவில் துறவியாகவும் பின்னர் இனேற்றனில் மடாதிபதியாகவும் பணிபுரிந்தார்.

இயூசிற்றிஸ் துறவிகள் சிலர் மடாதிபதி லூசியசை சந்திக்க இனேற்றனுக்குச் சென்றனர். அவர் ''உங்கள் சாதாரண,(அலுவல்கள்) பணிகள் யாவை?'' என்று வினாவினார். ''நாங்கள் பணி செய்வதில்லை, ஆயின் அப்போஸ்தலரைப் பின் பற்றி இடைவிடாது செபிக்கிறோம்'' என அவர்கள் பதிலளித்தனர். ''நீங்கள் உணவருந்துவதில்லையா'' எனமீண்டும் வினவினார். 'உணவருந்துகிறோம்' எனப்பதில் வந்தது. ''அப்படியாயின் நீங்கள் உணவருந்தும்போது உங்களுக் காகச் செபிப்பது யார்?'' பதில் இல்லை.

மீண்டும் கேட்டார் ''நீங்கள் நித்திரை கொள்வதில்லையா?'' ''நித்திரை செய்கிறோம்'' ''அவ்வேளை உங்களுக்காக செபிப்பது யார்?'' என்று கேட்டார். அவர்களால் பதிலளிக்க முடியவில்லை. "என்னை மன்னியுங்கள். உங்கள் சொல் வேறு. செயல் வேறு. செபமும் நாளாந்த பணிகளும் இணைந்து செல்ல வேண்டும். எனது அன்றாட கடமைகளை செய்து கொண்டே செபிக்கிறேன்.'' 'தேவனே உமது மாபெரும் இரக்கத்தால் என்னையும் எனது பணிகளையும் ஆசீர்வதித்தருளும் உமது நன்மைகளால் அடியேனை நிரப்பி உமது ஆவியால் என்னை வழிநடத்தியருளும்' என வேண்டுகிறேன். ''இது செபமில்லையா'' என வினாவினார். ''செபம்தான்'' எனப் பதில் வந்தது.

''இவ்விதமே செபத்துடன் எனது பணிகளை செய்து, ஒரு நாளில் ஏறத் தாழ 13 காசுகளை சம்பாதிக்கிறேன். எனது கதவுக்கு வெளியே இரு காசு களைப் போடுகிறேன். மிகுதிப் பணம் எனது அன்றாட உணவுக்காக செலவிடப் படுகின்றது. நான் வெளியே போடும் காசுகளை எடுத்து தம் தேவைகளுக்காக உபயோகிப்பவர்கள், நான் உண்ணும் போதும் உறங்கும் போதும் எனக்காக செபிப்பார்கள். எனவே செபமும் பணியும் இணைந்து செயல்படுகின்றன.''

## மார்க்

மடாதிபதி சில்வானுசின் சீடன் இவர். ஒரு நாள் அவரது அன்னை அவரைச் சந்திக்க வந்தார். மடாதிபதி அவரைக் கண்டபோது. ''வணக்கத்துக்குரியவரே எனது மகனைப் பார்க்க விரும்புகிறேன்'' எனப்பணிவுடன் விண்ணப்பித்தார், மடாதிபதி உள்ளே சென்று, மார்க் இடம் ''உனது அம்மா உன்னைப் பார்க்க வந்து வெளியே காத்திருக்கிறார் போய் உரையாடு'' என்றார்.

மார்க் கிழிந்த உடைகளுடன் வேலை செய்து கொண்டிருந்தவர், மடாதி பதியின் கட்டளைக்கிணங்க உடனடியாக வெளியே வந்தார். அடுக்களையில் இருந்து வந்தபடியால் முகம், கை,கால்களில் தூசி, வியர்வை, அழுக்கு படிந் திருந்தது. கண்களை சரியாகத் திறக்கவே முடியவில்லை. வெட்கத்துடன் ''வணக்கம், நல் வாழ்த்துக்கள், இறைவன் உங்களை ஆசீர்வதிப்பாராக'' என்றார்.

தன் புதல்வனை அடையாளம் காணாத தாய், மீண்டும் மடாதிபதியிடம் ''என் புதல்வனைக் காணவேண்டும்'' என விண்ணப்பித்தாள். உள்ளே சென்று "உன்னுடைய அம்மாவைப் போய்ப் பார்க்கவில்லையா? என்று வினாவினார். தந்தையே உங்கள் கட்டளைப்படி சென்றேன். ஆயின் அவள் என்னை அடையாளம் காணவில்லை உள்நோக்கத்தை இப்போது உணர்ந்த தாங்கள் மீண்டும் என்னை அனுப்பாதீர்கள்'' என்று தாழ்மையுடன் கூறினார்.

மடாதிபதி வெளியே வந்து அன்னையிடம் உம் மகன் உம்மிடம் வந்தார். உம் எதிர்பார்ப்பு வேறு. அதற்கு இங்கு இடமில்லை என அனுப்பிவிட்டார்.

மடாதிபதி சில்வானுஸ், சீரியாவுக்குப் போக விரும்பினார். அவரது சீடன் மார்க், அவரிடம் தந்தையே நீங்கள் இங்கிருந்து வெளியேறுவதை நான் விரும்பவில்லை. மூன்று நாட்களாவது என்னுடனிருங்கள் எனக் கெஞ்சினார். மடாதிபதியும் சம்மதித்தார். மூன்றாம் நாளில் மார்க் இறைவனடி சேர்ந்தார்.

## சில்வானுஸ்

பலஸ்தீனாவில் பிறந்தவர். செக்ரிஸ் என்னுமிடத்தில் 12 சீடருடன் ஒரு மடாலயத்தை நிர்வகித்தார். மார்க் அவரது சீடர்களுள் முதன்மையானவர்.

ஒரு நாள் தம் சீடருடன் அமர்ந்து ஆன்மீக கலந்துரையாடலில் ஈடுபட்டவரின் முகம் திடீரென மாறியது. அதிர்ச்சியும் திகைப்பும் அவரது முகத்தில் பிரதிபலித்தன. தலையைத் தாழ்த்தி ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்தார். திடீரென விம்மி விம்மி அழுதார்.

துணைவர்கள் என்ன நடந்ததென இடைவிடாதுகேட்டுக்கொண்டதன் பேரில் கூறினார். "இறைவனின் நீதித்தீர்ப்பைக் காணும் பேறு பெற்றேன். பொது நிலையினர் பலர் பரலோகம் செல்வதையும் துறவறத்தோர் பலர் தண்டனை அனுபவிப்பதையும் கண்டு துறவறத்தோரின் அறநெறிப்பாதையில் எவ்வளவு குறுக்கீடுகள் உண்டு என்பதை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை" என்றார்.

ஒரு துறவி சீனாய் மலைக்குச் சென்று மடாதிபதியை சந்தித்தார். துறவிகள் மிகக் கடுமையாக பல்வேறு பணிகளில் ஈடுபட்டிருப்பதைக் கண்டபின் மடாதிபதி சில்வானுசிடம் சென்றார்.[32]

#  ந்திய, மத்திய ஆசிய, சீன திருச்சபைகள்.

மிகத் தெளிவான வரலாற்றுச் சான்றுகள் கிடைக்காவிடினும் கிறிஸ்தவ ஆரம்ப சகாப்தத்தின் யூத, சீரிய, கிரேக்க, உரோம வர்த்தகக் குழுமங்களினூடாக கடல் மார்க்கமாகவும் பட்டு வியாபார வீதி என்று அழைக்கப்பட்ட மேற்காசியாவிலிருந்து ஆரம்பமாகி சீனாவின் பெரும் நிலப்பரப்பு வரை ஊடுருவிய தரைப் பாதையினூடாக கிறிஸ்தவ மிசனரிகள் கிறிஸ்தவ நற்செய்தியைக் கொண்டு சென்றனர். இவர்களுள் சிறப்பாக அப்போஸ்தலரான தோமா, கி.பி. முதலாம் நூற்றாண்டின் நடுப்பகுதி அளவில் (கி.பி 52 - கி.பி 72 வரை) தமிழகத்தில் நற்செய்திப் பணியாற்றி மயிலாப்பூரில் கொலையுண்டார் என்பது, ஐரோப்பியர் வருகைக்கு முன் இந்தியாவில் வழிவழியாக வாழ்ந்து வந்த 'நசரேனியர்' எனப்பட்ட சீரியக் கிறிஸ்தவர்களின் பாரம்பரிய நம்பிக்கையாகும்.

'வின்சன்ற்ஸ்மித்' என்ற வரலாற்றுப் பேராசிரியரின் குறிப்பின்படி சொக்கோத்திராத்தீவு பழமை வாய்ந்த கிறிஸ்தவ சமூகமாக இருந்து வருகின்றது. எனவே சொக்கோத்திராவின் ஊடாக புனித தோமையார் இந்தியா வந்தடைந்தமைக்கு எதுவித தடையோ தடங்கலோ ஏற்பட்டிருக்கக் காரணங்கள் இருந்திட சாத்தியமில்லை. அத்தோடு மட்டுமல்லாமல் தென்னிந்தியாவில் புனித தோமையார் வேதசாட்சியாக மரித்தார் என்பது ஓர் அசைக்க முடியாத சான்று.

புனித தோமா சேரநாட்டில் பல புதுமைகள் செய்து நம்பூதிரிப் பிரிவு பிராமணர் உட்பட பல்லாயிரக் கணக்கானோரை கிறிஸ்தவர்கள் ஆக்கினார். இவர்கள் வழி வந்தவர்களே இன்றைய கேரளாவின் ஏறக்குறைய 50 வீதத்தினராகி தங்களைப் புனித தோமையாரின் கிறிஸ்தவர்களென்று தோமையார் எடேசாகாவிலிருந்து புறப்பட்ட பொழுது கொணர்ந்த சீரிய மொழியை வழிபாட்டில் பாவித்து வரும் சீரியக் கிறிஸ்தவர்களாகும். பாண்டிய நாட்டிலுள்ள மயிலாப்பூரில் (சென்னை) நாலரை மாதங்கள் கிறிஸ்துவின் நற்செய்தியைப் போதித்தார். பின்னர் சீனாவிற்குள் பிரவேசித்து நற்செய்தியை அறிவித்தார். அங்கிருந்து மயிலாப்பூர் வந்து கடல் வழியாக கேரளத்திலுள்ள கிரங்கனூர் சேர்ந்தார்.

மூன்றாம் நூற்றாண்டு வரை கிறிஸ்தவ வரலாற்று ஏடுகளில் தோமையார் பற்றிய குறிப்புக்கள் காணப்படாவிடினும் அண்மையில் ஏற்பட்ட புதை பொருளாராய்ச்சிகளின் முடிவுகளிலிருந்து தோமையார் மனந்திருப்பிய 'கொண்டோபரஸ்' என்ற அரசன் முதலாம் நூற்றாண்டில் இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் வாழ்ந்தான் என்பது அங்கு 1857இல் கண்டுபிடிக்கப்பட்ட அவனுடைய தங்க நாணயங்களிலிருந்து தெளிவாகின்றது. மயிலாப்பூர் தோமையார் கல்லறை அகழ்வாராய்ச்சிகளிலிருந்தும் அவர் அங்கு கொல்லப்பட்டார் என்பது தெளிவாகின்றது.

இத்தகவல்களின் பின்னணியிலே டாக்டர். எஸ். ராதாகிருஸ்ணன் தன்னுடைய ஈஸ்ட் வெஸ்ற் இன் றிலிஜன் (East West in Religion) என்ற நூலில்; பேதுருவும் பவுலும் மேற்கத்திய நாடுகளில் நிலைநாட்டிய கிறிஸ்தவத்தைவிட இந்தியாவிலே தோமாவால் ஏற்படுத்தப்பட்ட கிறிஸ்தவம் தனித்தன்மை வாய்ந்தது என்பதும் கிறிஸ்தவத்தின் தொடக்க காலமுதலே இந்தியாவின் மேற்குக்கரையில் பரவிய கிறிஸ்தவம் இந்தியர்களால் சிறந்த முறையில் நடத்தப்பட்டு உள்ளது என்பதும் இந்திய அரசர்கள் கிறிஸ்தவக் கோயில்களைக் கட்டிக் கொடுத்திருக்கின்றார்கள் என்பதும் இராதா கிருஸ்ணனின் கருத்து.

விவிலியத்தின் புதிய ஏற்பாட்டுப் பகுதிகள் எழுதப்படுவதற்கு முன்னரே தோமா தமிழகத்திற்கு வந்து இயேசு பெருமானின் நற்செய்தியை அறிவித்தார். அதாவது திருக்குறளும் தமிழில் தோன்றிய சைவ, வைணவ சமய இலக்கியங்களும் எழுந்த இயற்கைநெறிக் காலங்களில் வாழ்ந்து கொண்டிருந்த தமிழ் மக்களுக்கு தோமா நற்செய்தியை அறிவித்தார். இதன் பின்னணியில் ஐரோப்பிய நாடுகளுக்கு கிறிஸ்தவம் சென்று பரவுவதற்கு முன்னரே தோமா இந்தியாவிற்கு வந்து கிறிஸ்தவத்தை பரப்பினார் என்பதும் ஐரோப்பிய நாடுகளைவிட இந்தியா நீண்ட கிறிஸ்தவ வரலாற்றையும் உயர்ந்த கிறிஸ்தவ பாரம்பரியத்தையும் கொண்டதாக அமைந்திருப்பது இந்தியர்களுக்குப் பெருமைதரத்தக்கது என்பதும் இஜேந்திரப் பிரசாத்தின் கருத்து.

கி.பி. 250இல் சீரியாக் மொழியில் எழுதப்பட்ட ஏடு 'அப்போஸ்தலர் படிப்பினை' (The Doctrine of the Apostles) என்ற நூலாகும். அதில் இந்தியாவும் அதனை அடுத்த நாடுகளும், தூர கடல் பரப்புக்களும் அப்போஸ்தலரின் குருத்துவ கருத்தினை 'யுடாஸ் தோமசிடம்' இருந்து பெற்றனர் என்றுள்ளது. 3ஆம் நூற்றாண்டில் 'புனித தோமையாரின் செயல்கள்' என்ற நூலில் வட இந்தியாவின் அரசனான கொண்ட பொரஸ் குறிப்பிடப்படுகின்றான். இம் மன்னன் புனித தோமையாரால் கிறிஸ்தவனாக்கப்பட்டான். இம் மன்னனுடைய முத்திரை பொறிக்கப்பட்ட பொன் நாணயங்கள் கி.பி. 1857இல் கண்டுபிடிக்கப்பட்டமையும் இம்மன்னனின் காலம் கி.பி. முதலாம் நூற்றாண்டு என்பதனையும் பேராசிரியர் பீள்ட் குறிப்பிடுகின்றார்.

இந் நூல்களில் காணப்படுகின்ற தகவல்களில், அராபியக் கடலில் ஆபிரிக்காவின் வடகிழக்குக் கரையோரமாக அமைந்துள்ள சொக்கோத்திரா தீவைத் தரிசித்த தோமா அங்கிருந்து புறப்பட்டு இன்றைய கொச்சினின் வடக்கேயுள்ள கிறங்கனூர் (கோடன் கல்லூறு) கி.பி. 52ஆம் ஆண்டில் வந்திறங்கி அங்குள்ள யூத குடியேற்றத்தில் தங்கியிருந்து அவர்கள் மத்தியிலும் அவர்கள் அயலூர்களிலும் நற்செய்தி அறிவித்து, கிறிஸ்தவர்களை உருவாக்கினார். தெற்குக் கரையோரமாக அவர் பிரயாணம் செய்து ஏழு கோயில்களை உருவாக்கினார்: மலியன்காரா, பாழையூர், பாரூர், கோக்கமங்களம், நிராணம், சாயல், குலோன் என்பவற்றில் நான்கில் இன்றும் சீரியக் கிறிஸ்தவ சபைகள் இருக்கின்றன. அங்கு சங்கராபுரி, பாக்கலோமத்தம், கள்ளி, கலியன்கார்ல் என்ற நான்கு பிராமணக் குடும்பங்களிலிருந்து சிலரைத் தெரிந்தெடுத்து குருக்களாக அபிசேகம் செய்தார். அங்கிருந்து புறப்பட்டு தென்னிந்தியாவின் கிழக்குக் கரையோரமாக வந்து அங்கிருந்து மலாக்காவுக்கும் சீனாவுக்கும் சென்று மயிலாப்பூர் திரும்பினார். இங்கே அவர் நற்செய்தி அறிவித்தபோது பிராமணர்களுடைய எதிர்ப்பைச் சந்தித்தார். அவர்கள் எழுப்பிய கலவரத்தில் அவர் ஈட்டியினால் குத்திக் கொல்லப்பட்டு

கி.பி. 72ஆம் ஆண்டில் வேத சாட்சியானார்.

பிதா.கெராஸ் முதலியோர், இரு பயணங்களை தோமா மேற்கொண்டிருக்க லாம் எனக் கருதினார். ஒன்று தரைமார்க்கமாக பலஸ்தீனத்திலிருந்து புறப்பட்டு மொசப்பத்தேமியா ஊடாக பாரசீகம், பாகிஸ்தானுக்குள் பஞ்சாப், பார்த்தியா (கலையான் மட்டும் என்கிறார் கெராஸ் அடிகள்) இங்கு கொண்டபொரஸ் அரசனின் ஆட்சி இறுதிக்கட்டம். அங்கு திருச்சபையை ஊன்றிய காலகட்டத்தில் குசாகனியர் படையெடுப்பினால் எல்லாம் அழிக்கப்பட்டுவிடுகிறது. இந்தியாவை விட்டு கடல் மார்க்கமாக சொக்கோத்திரா தீவு வந்தடைந்து ஊழியம் செய்கிறார். (E.N. பிலிப்பு, K.N. டானியேல் பலஸ்தீனத்திற்கு, எகிப்து, எத்தியோப்பியாவி னூடாக திரும்பி சொக்கோத்திரா தீவு வந்தடைகிறார் என அபிப்பிராயப்படு கின்றனர்) சொக்கோத்திரா தீவிலிருந்து கடல் மார்க்கமாக இந்தியா வந்தடைந்து கேரளத்தில் நற்செய்திப் பணியாற்றினார்.[33]

வத்திக்கானின் "றோம அவதானி" யூபிலி ஆண்டு ஆயத்தக் கட்டுரைகளில் பாரம்பரிய வரலாறுகளுக்கிணங்க, அப்போஸ்தலர்களான பார்த்தலோமியுவும் தோமாவும் முதலில் மெசப்பத்தேமியாவையும் பாபிலோனியாவையும் கிறிஸ் துவின் பக்கமாகத் திருப்பினர். பின்பு பாபிலோனியாவிலிருந்து பார்த்தலோமியு தரை மார்க்கமாக வடமேற்கு இந்தியாவை அடைந்து இயேசு நற்செய்தியைப் போதிக்க; அப்போஸ்தலர் தோமா, கடல் மார்க்கமாக தென்னிந்தியாவுக்கு வந்து கி.பி 50ஆம் ஆண்டளவில் மலபார் கரையோரமாக திருச்சபையை நிறுவினா ரெனத் தெரியவருகிறது.[34]

4ஆம் நூற்றாண்டில் திருச்சபையின் பிதாப்பிதாக்கள் 'புனித தோமையாரை' 'இந்தியாவின் அப்போஸ்தலர்' எனக் குறிப்பிடுகின்றனர். அது மட்டுமன்றி பல வேத சாட்சிகளின் பட்டியல்கள் புனித தோமையார் இந்தியாவில் மரித்தார் என ஐயத்துக்கிடமின்றி எடுத்துரைக்கின்றன. இவர்களில் புனிதர் எபிரேயிம் நசியான்சன், கிறகோரியார், அம்புறோசியார், ஜெறோம் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

''திருத்தூதர் பர்த்தலோமியு பற்றிய மரபுக் கதைகளைவிட திருத்தூதர் தோமா மலபார் கரையோரங்களில் திருச்சபையை நிறுவியமை பற்றிய சான்று கள் கூடியளவு ஆதாரங்களைக் கொண்டுள்ளன. முழுமையான வரலாற்றுச் சான்றுகளைக் கண்டு பிடிப்பது கடினமெனினும் முதலாம் நூற்றாண்டின் முடிவிலே அங்கு ஓர் கிறிஸ்தவ திருச்சபை காணப்பட்டது என்ற உண்மை முன்னைய வரலாற்றின் தன்மைக்குச் சாதகமாயுள்ளது. மேலும் அவர்களது வழிபாட்டு மொழி, திருச்சபை அமைப்பு, இறையியல், ஆன்மீகம் முதலியன பெரும்பாலும் சீரிய திருச்சபையின் வழிவந்ததாகவே கருதப்படலாம்''

(இலங்கைக்கும் தோமாவுக்கும் உள்ள தொடர்பை அறிய விரும்பினால் எமது வெளியீடான 'யாழ்ப்பாணத் திருச்சபை வரலாறு' என்ற நூலைப் பார்க்கவும்.)[35]

புனித தோமையார் வருகையின் பின் திருச்சபை வாழ்வில் இரு வரலாற்று முக்கியத்துவம் நிறைந்த சம்பவங்கள் நடைபெற்றன. ஒன்று 345ஆம் ஆண்டிலும் இரண்டாவது 823ஆம் ஆண்டிலும் இடம்பெற்றன.

345ஆம் ஆண்டில் நாநூறு கிறிஸ்தவ குடும்பங்கள், பெண்கள் குழந்தை களோடு சில குருக்களுடன் கானாவின் தோமா என்றவரின் வழிநடத்துதலில்

இந்தியாவின் தென்மேற்குக்கரை ஓரம் ஓர் மிசனரி குழுவாக வந்தடைந்தனர். இது பற்றி இரு மரபுக்கதைகள் உண்டு. ஒன்று 1721இல் 4ஆம் யக்கோபைற்மார் தோமா எழுதிய குறிப்பேட்டில் காணக்கிடக்கிறது.

"புனித தோமாவின் மரணத்தின் பின் சிறிது சிறிதாக எம் விசுவாசிகளின் கூட்டம் குறையத் தொடங்கியது. அப்பொழுது எடெசா நாட்டின் பேராயருக்கு காட்சியில் தோமையார் தோன்றி இந்தியாவுக்கும் நீ உதவமாட்டாயா" என வினவினார். அதே சமயம் எடெசாவின் அரசன் அக்பாருக்குத் தோன்றினார். அவர் ஆட்சிக்கு கீழே சீரிய நாடும் இருந்தது. அரசன் ஓர் ஆயரையும் முன்னூற்றி முப்பத்தாறு குடும்பங்களையும், (இவற்றுள் வளர்ந்தோர், குருக்கள், ஆண்கள், பெண்கள் அடங்குவர்.) கனேய தோமஸின் தலைமையில் கானான் என அழைக்கப்பெற்ற ஜெருசலேமில் இருந்து புறப்பட உதவினார். கடல் மார்க்கமாக வந்து நம் நாடாகிய கொரிங்கலூரை அடைந்தனர். இங்கிருந்த அரசன் சிரமான் பெருமாள் உத்தரவின் கீழ் இங்கு குடியேறினர். இது கி.பி. 345இல் நடந்தேறியது. அன்று தொட்டு திருச்சபை பல திசைகளிலும் பரவி எழுபத்திரண்டு கோவில்களை அமைத்தது.

அதே காலகட்ட இரண்டாவது மரபுக்கதையும் இதை ஒத்ததே. அது பேராயர் காட்சிகண்டு ஜெருசலேம் தோமா என்ற வியாபாரியை மலாபாருக்கு அனுப்பி, நிலைமைகளை அவதானித்து வீடு திரும்பியபின், அம்மிசனரி குழுவை இந்தியா அழைத்துச் சென்றார் என்பதாகும்.

கிரங்கனூரின் கிறிஸ்தவ பகுதி மகாதேவர பட்டணம் என்று அழைக்கப்பட்டது. இவர்களிடையே இரு பிரிவுகள் உள்ளன. பட்டணத்தின் வடபுலத்தார் - வடகும்பர், பட்டணத்தின் தென்புலத்தார் - தேகும்பகர். வடபகுதியினர் இந்தியர்களுடன் கலப்பு மணம் முடித்ததினால், தென்பகுதியினர், தூய சீரிய குலத்தினர் அவர்களுடன் மணஉறவு கொள்வதில்லை.

இரண்டாவது மிசனரி அலை கி.பி. 823ஆம் ஆண்டில் நடைபெற்றது. பாரசீகத்தில் இருந்து இரு ஆயர்களுடன் புறப்பட்டு வந்த இக் குழுவினர் திருவனந்த புரத்தின் கிலோன்னில் குடியேறினர். அதிலிருந்து ஆளுனரிடம் இருந்து சலுகைகளையும், நிலபுலன்களையும் பெற்றனர். முன்னைய மரபுக் கதைகளின்படி, "823ஆம் ஆண்டில் மார்சப்போர் மார் பாரூ (Paut) பெயர் போன சாபிரிசோவுடன் இந்தியா வந்து குல்லம் என்ற இடத்தில் குடியேறினர். சாகர் பிரித்தி அரசனிடம் நிலம் வாங்கி தமக்கென ஓர் கோவிலும், நகரமும் கட்டினர். அவர் அவர்கள் விரும்பிய அளவு நிலத்தைக் கொடுத்து குல்லம் குறிச்சியில் நகரும், கோவிலும் கட்டி சீரியாவில் இருந்து ஆயர்களும், பேராயர்களும் வந்து தங்கிப்போக பாரசீக கத்தோலிக்க பேராயர் கட்டளையிட்டபடி உதவினார்.

'மார்', 'மாறன்' என்ற சொற்பதங்கள் சீரியக் திருச்சபையில் ஆயர்களுக்கு பாவிக்கப்படுகின்றன. இவ்விரண்டாம் குழுவின் வருகைக்கு வரலாற்றுச் சான்றுகள் ஐந்து செப்பு தகடுகளில் காணப்படுகின்றன. இவற்றில் மூன்று கோட்டையத்தில் உள்ள யக்கோபைற் குருமடத்தில் இருக்கின்றன. ஏனைய இரண்டும் திருவல்லாவிலுள்ள மார்தோமா ஆலயத்தில் உள்ளன.

இவை தமிழ், மலையாள எழுத்துக்களாலும், இரு பக்கங்கள் மத்திய பாரசீக (பகலாவி) எழுத்துக்களாலும், அரபு எழுத்துக்களினாலும் ஆனவை. நான்கு எபிரேய எழுத்துக்களில் சாட்சிகளின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

''வேன்நாடு ஐயன் அடிகளால், ஒரு ஆளுனன், அரசன் ஸ்ரானுறவி குப்தாவின் அனுசரணையுடன் தாரிசா கோவில் பற்றுக்கு குவேலன் இசோடாத்தா வீரைக்கு அளிக்கப்பட்ட நிலபுலன்கள்''.

மேற்குறிப்பிட்ட அரசன் றவிகுப்தா சேரமான் பெருமாளாக இருக்கலாம். மருவான் சப்பீர இசே ஆலயச் சேவைகளுக்கென சாதிகளுக்கு ஏற்ப இனாமாக கொடுக்கப்பட்டுள்ளன. 9ஆம் நூற்றாண்டு பாரசீக கிறிஸ்தவர்களின் வருகைக்கு முன்னரே இங்கு கிறிஸ்தவ குழுமங்கள் வாழ்ந்து வந்தன. இவர் களின் வருகையால் அவை வலுவடைந்தன என ஊகிக்க இடமுண்டு. இவ் இரு குழுக்களும் கிரங்கனூர் வந்தோரும் அங்கு முன்பு வாழ்ந்த கிறிஸ்தவக் குழுக்களை உள் வாங்கிக் கொண்டனர். எல்லோரும் சீரிய கிறிஸ்தவர்கள் என்றே தம்மை அழைத்துக்கொண்டனர். சீரிய கிறிஸ்தவர்கள் வணிகத்தில் தலை சிறந்தவர்கள் ஆகையால் வேறுபல அலைகளும் வந்து குடியேறியிருக்க இடமுண்டு. 4ஆம், 5ஆம் நூற்றாண்டுகளில் பாரசீக மன்னர்களின் (சசானிய) கிழ் எழுந்த வேதகலாபனைகளின் போதும், 7ஆம் நூற்றாண்டில் மொகமதிய மன்னர்களால் பாரசீகத்தில் ஏற்பட்ட வேதகலாபனைகள் நிமித்தம் வெளியேறியவர்களும் இங்கு வந்தடைந்த பாசி மதத்தினருடனும் வந்து குடியேறினர்.

இவ்வரலாற்றுக் கட்டத்திற்கு சேர்ந்த **143 3/4** அங்குலம் **4** அங்கும் அளவுள்ள செப்பேடும் தமிழில் காணப்படுகிறது. வீரறாகவ சக்கரவர்த்தி மகா தேவார பட்டண இராவி கோட்டன் என்பவருக்கு கொடுத்த மணிகிராமம் என்ற பட்டத்தை குறிப்பிடுகிறது. கிரங்கனூர் கிறிஸ்தவ வணிகர் சங்கத் தலைவர் என்று அர்த்தம் பெறும். திகதி கோள்களின் நிலைகளைக் கொண்டு வானசாஸ்திர குறியீடுகளின்படி கணிக்கப்பட்டுள்ளது. இதன்படி இது **270**ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்க வேண்டும். அதாவது கி.பி. **345** கானா தோமாவின் வருகைக்கு முன்னேயே கிறிஸ்தவ சமூகம் இங்கு இருந்திருப்பது ஆச்சரியமூட்டலாம். இச் செப்பேடு கோட்டையம் பழைய குருமடத்தில் காணப்படுகிறது.

இவற்றைத் தவிர ஐந்து கற்களில் பொறிக்கப்பட்ட சிலுவைகளும் உள்ளன. தென் இந்தியாவில் உள்ள மைலாப்பூர் தோமையார் மலையில் முதலாவது காணப்படுகிறது. ஏனையவை கோட்டையத்திலும், கேரளத்தின் வேறுசில இடங் களிலும் காணக்கிடக்கின்றன. கருங்கற் பலகைகளில் ஒரே வடிவமைப்பில் செதுக்கப்பட்ட சிலுவைகள், ஒரு அடித்தளத்தில் நடப்பட்டவையாக, கீழ் இறங்கும் புறா வடிவமைப்பின் மேல், பகலவி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட மேல் வளைவின் கீழ் காணப்படுகின்றன. ஒன்றில் மாத்திரம் சீரியக் மொழியில் கலாத் **6:14** பொறிக்கப்பட்டுள்ளது.

''நானோ நம் ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் சிலுவையை அன்றி, வேறு எதைப் பற்றியும் ஒரு போதும் பெருமை பாராட்டமாட்டேன்.''

ஏனையவற்றில் மெய்யெழுத்துக்கள் மாத்திரம் வரையப்பட்டுள்ளதால் இவற்றைப் படிப்பது கடினம். இருந்தும் என் ''ஆண்டவராகிய கிறிஸ்துவே சக்கிர பூத்தின் மகன் அபிராஸ் (இதை வரைந்தவன்) மேல் இரக்கமாயிரும்.'' இச் சிலுவைகள் 7ஆம், 8ஆம் நூற்றாண்டில் மைலாப்பூரிலும், மலபாரிலும் கிறிஸ்தவ சபைகள் வாழ்ந்திருந்தன என்பதற்கு அசையாத சான்றாகும்.[36]

## மத்தியகால இந்தியத் திருச்சபை

7ஆம் நூற்றாண்டு தொட்டு எழுந்த இஸ்லாத்தின் அடக்கு முறைகள் கீழைத் தேய கிறிஸ்தவ சபைகளை பெரும் துன்பங்களுக்கு உள்ளாக்கின. இதன்பின் 11ஆம் நூற்றாண்டு தொட்டு 14ஆம் நூற்றாண்டுவரை எழுந்த துருக்கிய மொங் கோலிய படைஎடுப்புக்களும் கீழைத்தேய கிறிஸ்தவ சபைகளை அழித்துப் பெலவீனப்படுத்தின. இருந்தும் சிறுபான்மையினராகவே இருந்த கீழைத்தேய கிறிஸ்தவசபைகள் வலுவோடு இயங்கினும் 14ஆம், 15ஆம் நூற்றாண்டில் சீரியக் தலைமைப்பீடத்தின் பேராயர் இல்லாததினால் இந்திய கிறிஸ்தவ சபைகளிலும் ஆயர்கள் இல்லாமற் போயினர். இந்தியாவைப் பொறுத்தமட்டில் 9ஆம், 15ஆம் நூற்றாண்டுகளுக்கிடையில் தென்இந்திய சீரிய மலையாள கிறிஸ்தவர்கள் முன்பை விட ஓர் அளவு சுதந்திரத்தை இந்து ராஜாக்களின் ஆளுமை விலக (இஸ்லாமிய போர்களினால்) அனுபவித்தனர். இதனால் உடையம் பேரூரை தலைநகராக்கி விலியார்வதம் என்ற கிறிஸ்தவ அரசன் அரசாண்டான். நீண்ட காலத்தின் பின் அரச குடும்பத்தினரின் வாரிசுகள் இன்றிப் போக கொச்சின் அரசனிடம் ஆளுகை சென்றது.

கிறிஸ்து சகாப்தத்தின் முதல் நூற்றாண்டுகளிலேயே உரோமை சாம்ராஜ்ஜி யத்திற்கும் சீன சாம்ராஜ்ஜியத்திற்கும் வியாபாரத் தொடர்புகள் ஏற்பட்டன. இந்திய நாகரிகத்தினூடாக மேற்கத்திய சாம்ராஜ்ஜிய வியாபாரத் தொடர்புகள் கடல் வழியாக வருடத்திற்கு 120 கிரேக்க கப்பல்கள் செங்கடல் துறைமுகங் களுக்கும் இருந்தனவென்றால், தரைமார்க்கமாக கி.பி. 3ஆம் நூற்றாண்டி லேயே 2500 மைல் ''பட்டுப் பாதை வீதி'' (Silk Road), சீரியாவில் இருந்து தரீம் ஆறுவரை சென்று சீனாவிற்குள் நுழைந்தது.

பாரசீக அரசின் பரவலாக்கம் 5ஆம், 6ஆம் நூற்றாண்டில் மத்திய ஆசியாவின் பட்டுப் பாதை நகர்களையும் மக்களையும் கிறிஸ்தவ மிசனரிகள் சென்றடைய வழிவகுத்தது. இஸ்லாத்தின் 7ஆம் நூற்றாண்டு எழுச்சி வரை பாரசீகம் தன் ஆளுமையை நிலை நிறுத்தி பைசன்ரைன் (ரோம) ராஜ்ஜியத்துடன் போரிட்டுக் கொண்டே நின்றது. இதன் காலகட்டங்களிலேயே நெஸ்தோரிய கிறிஸ்தவ மிசனரிகள் மத்திய ஆசியாவின் பல பகுதிக்குள் கிறிஸ்துவின் நற்செய்தியை கொண்டு சென்று பல சபைகளை ஸ்தாபித் தனர். இவற்றுள் பெரும்பாலானவை அரபு, துருக்கிய, மொங்கோலிய படை யெடுப்புக்களின்போது குறிப்பாக ரிமூர் (ரம்புலின்) நாடோடி மன்னர்களின் படையெடுப்பின் போது தரைமட்டமாக்கப்பட்டன. 19ஆம் நூற்றாண்டில் துருக்கிய சாம்ராஜ்ஜியம் அழிந்தொழிந்த பிறகு தென்னாசியாவின் நாடுகள் ரூசிய சோவியத் குடியரசுகளின் கீழும் ரூசிய மன்னர்களின் ஆளுகையின் கீழும் வர ஆங்காங்கே கிறிஸ்தவ பிரசன்னம் காணக்கிடக்கிறது.

இக்கிறிஸ்தவ சபைகள் பற்றிய வரலாற்றுச் சான்றுகள் மிக அரிதாகவே காணக்கிடக்கின்றன. மேற்கு நாடுகளுக்கும், மேற்காசிய திருச்சபைகளுக்கும் மத்திய ஆசியாவுக்கும் சபைகளுக்கும் பாலமாக அமையும் ஓர் முக்கிய ஆதித் திருச்சபையே ஆர்மேனிய திருச்சபையாகும்.[37]

## கீழைத்தேச ஆர்மேனிய திருச்சபை

2ஆம் நூற்றாண்டு தொட்டே அங்கு கிறிஸ்துவின் நற்செய்தி சென்ற தாயினும் 250 ஆண்டு டோச்சியன் சக்கரவர்த்தியின் கால வேதகலாபனையில்

கிறிஸ்தவர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்பு தென்படுகிறது. 325ஆம் ஆண்டு நிசேயா சங்கத்தில் இரு ஆயர்கள் பங்கேற்றனர். கிரகோரி பிரகாசியார் காலத்தி லேயே திரிநாட்டஸ் என்ற அந்நாட்டு அரசன் 261ஆம் ஆண்டில் மனம்திரும்பி ஞானதீட்சை பெற்றார். ஆர்மேனிய மொழியிலேயே 325 - 335க்கும் இடையே எருசலேமின் ஆயர் மக்காறி யேசுக்கும் ஆர்மேனிய ஆயர் வேத்தானசுக்கும் இடையே பரிமாறப்பட்ட கடிதம் ஆர்மேனிய எருசலேம் சபைகளிடையே இருந்த உறவுகளை உறுதிப்படுத்துகின்றன.

9ஆம் நூற்றாண்டில் திருச்சபையின் திருநாட்கள் அட்டவணை ஒன்று ஆயத்தப்படுத்தப்பட்டு பாவிக்கப்பட்டது. இதன் பிரதி ஒன்று பரிஸ் நூல கத்தில் காணப்படுகின்றது. இது எருசலேம் திருச்சபையில் பாவிக்கப்பட்ட 4ஆம் நூற்றாண்டு திருவழிபாட்டு வருட பஞ்சாகமத்தை ஒத்திருப்பது குறிப்பிடத் தக்கது. இவைகள் போன்று ஜோஜிய திருச்சபைக்கும் எருசலேம் திருச் சபைக்கும் தொடர்பு இருந்திருக்க வேண்டும்.

எருசலேம் ஒலிவ் மலையிலே 5ஆம் நூற்றாண்டில் ஆர்மேனிய துறவற மடங்கள் இருந்ததாகப் புதைபொருள் சான்றுகள் எண்பிக்கின்றன. ஆர்மேனி யாவின் மனந்திரும்புதலிலே பெரும் இடையூறாக திகழ்ந்தது பண்டைய ஆர் மேனியாவின் மிருக பலி செலுத்தும் குருக்குலங்களே! கிரகோரியாரின் மந்திரும்புதலின் இயக்கம் அங்கு ஆரம்பித்தபொழுது அவர்கள் ஒன்றுதிரண்டு அரசனிடம் சென்று, கிரகோரியன் மிருகபலிகள் தேவையற்றதோர் சமயத்தை அறிவிக்கின்றான். மிருக பலிகளினால் வரும் வருமானத்தில் தங்கி வாழ்ந்த நம் கோவில்களும் நம் குடும்பங்களும் இனி எப்படி வாழ்வது என்று விண்ணப் பித்தனர். அரசன் கிரகோரியாரிடம் விண்ணப்பித்தார். கிரகோரியார் அதற்குப் பதிலாக "நீங்கள் கிறிஸ்தவர்களாக மாறினால் பலிகளும் தொடரும்; முன்னை யதை விட பெரும் ஆசீர்வாதங்களும் குவியும்" என்றார்.

இதனைக் கேள்வியுற்ற முழு குருக்கள் குடும்பங்களும் மனம்மாறி கிறிஸ்த வர்கள் ஆனார்கள். லேவியராகமத்தைப் பின்பற்றி கிரகோரியாரின் கிறிஸ்தவ கொண்டாட்டங்களின் பின் நடைபெறும் அன்பு விருந்துகளில் பரிமாறப் பட்ட உணவு வகைகள் இறைச்சியுட்பட இவர்களுக்குக் கொடுக்கப்பட்டது.

'வாகன்' என்ற ஆர்மேனியத் தெய்வத்தின் பெரும் கோவில் உள்ள இடத்திலேயே கிரகோரியார் முதல் கோவிலை நிறுவி சகாமி மாதத்தில் 7ஆம் நாளில் அத் தெய்வத்துக்கு எடுக்கப்பட்ட விழா தினத்தன்று புனித திருமுழுக்கு அருளப்பருக்கும், ஆர்மேனிய கிறிஸ்தவ கவிஞரும், ஆர்மேனிய முதல் வேத சாட்சியுமான அத்தனோர் ஜெனஸ் (Athenogenes) என்பவருக்கும் விழா எடுத்தனர்.

ஆர்மேனிய புதுவருட தினத்தன்று, 'வனாத்தூர்' என்ற தெய்வம் செயுஸ் என்ற கிரேக்க தெய்வத்திற்கு பதிலடி கொடுத்த 'பகவான்' என்ற யாத்திரைத் தலத்தில், புனித திருமுழுக்கு அருளப்பரின் புனித பண்டங்களை கொண்டு வந்து வைத்து புனிதரின் திருவிழா எடுத்தனர். இது போன்றுதான் அனகைற் என்ற பெண் தெய்வத்தின் (ஆர்மேனிய பெரும் ஆண் தெய்வம் Aramaz தின் மனைவி) விழாவை தேவதாயின் திருவிழாவாக மாற்றினர்.

பண்டைய மரவணக்கம், பெரும்கல் வணக்கங்கள், சிலுவைமலை வணக் கமாக, குருக்கள் அர்ச்சனை செய்து ஆசீர்வதித்து மாற்றினர். 4ஆம் நூற்றாண்டு வரையும் கிரகோரியாரின் வாரிசுகளே திருச்சபைத் தலைமைப்பீடத்தை

வைத்திருந்தனர். படிப்படியாக கிரேக்க திருச்சபையோடு இருந்த உறவுகளை துண்டித்தனர். 430இல் நெஸ்தோரியருக்கு எதிராக எபெசுஸ் பொதுச்சங்கத்தில் வாக்களித்தனர். கல்செடன் சங்கத்தில் வாக்களிக்கத் தவறினர்.

5ஆம் நூற்றாண்டில் பெரும் வீதிகளில் ஏற்படுத்தப்பட்ட கிறிஸ்தவ தங்கு மடங்கள் துறவற மடங்களாக மாறின. துறவிகள் பாவப்பரிகாரம் செய்யும் தபசிகள், தலையை மூடி மொட்டாக்கிட்டனர். திருச்சபை அதிகார ஆசிரியத்தில் பங்குபெற அனுமதிக்கப்படவில்லை.

கிரேக்க திருச்சபையுடனும் சீரியக் திருச்சபையுடனும் முறிந்த உறவுகளைச் சீர்செய்ய 9ஆம் நூற்றாண்டு தொட்டு எடுத்த பல முயற்சிகள் பலன் தரவில்லை. சிலுவைப் போர்கள் காலந்தொட்டு ரோமத் திருச்சபையோடு உறவுகள் சிறிது சிறிதாக வளரத் தொடங்கிற்று. முதலில் சிசிலியாவின் பிதாப்பிதா, பின் வேறுபலர் உறவுகளை சீர்ப்படுத்தி 1328இல் டொமினிக்கன் சபையினர் ஆர்மேனியா சென்றனர். வெனிஸ், வியன்னா, ரோம், துருக்கி முதலாம் இடங்களில் இருந்த பிதாக்கள் பாப்பரசரின் அதிகாரத்திற்கு பணிந்தாலும், தம் ஆர்மேனிய வழிபாட்டு முறைகளையே கடைப்பிடித்தனர். முரண்பாடின்றி. 1915 துருக்கி ஆர்மேனிய கிறிஸ்தவர்கள் 3,000,000 பேரை நாட்டைவிட்டு வெளியேற்றியது. பலர் கொல்லப்பட்டனர். வேறு சிலர் பட்டினியால் மாண்டனர். ஆனால் தம் விசுவாசத்தை உறுதியுடன் பற்றிக் கொண்டனர். 1921 ஆம்ஆண்டில் ஆர்மேனியன் எரிவான் (Erivan) குடியரசு ரூசிய சோவிற் சோசலிசக் குடியரசுகளின் ஐக்கியத்தில் சேர்ந்தது.

ஆர்மேனியர்கள் கிறிஸ்தவர்கள் ஆனதின் பின்பே அவர்கள் மொழி எழுத்துருவம் பெற்றது. விவிலிய, எஸ்நிக் (Eznik) ஆயரின் ஆக்கங்கள் முதலியன 19ஆம் நூற்றாண்டு மட்டும் வழிபாட்டு மொழியாகவும் நிலவிற்று. பேச்சு மொழி பிரதேச ரீதியாக வேறுபட்டுக் காணப்பட்டது. ஆர்மேனிய மொழிக் குடும்பம் ஆரிய மொழிக்கும் கிரேக்க மொழிக்கும் இடையே பாலம் போன்று தோன்றுகிறது. கால ஓட்டத்தில் வேறு பல மொழிக் குடும்பங்களில் பாதிப்பு இம்மொழியில் ஏற்படலாயிற்று. இவ்வாறு இரேனிய (பாரசீக) சொற்கள், சீரியக் கிரேக்க, பிரெஞ்சு சொற்களும் இன்று காணப்படுகின்றன.

கிறிஸ்தவம் வருமுன் இருந்த ஆர்மேனிய இலக்கியத்தில் இருபது வரிகளே எஞ்சியுள்ளன. கி.பி. 400 தொட்டே இன்றுள்ள ஆர்மேனிய இலக்கிய நூல்கள் காணக்கிடக்கின்றன. வரலாற்று நூல்கள், சமய நூல்கள், படையெடுப்புப் பற்றிய வரலாற்று நூல்கள், கடிதங்கள், வானசாஸ்திரம், வைத்தியம், மொழியியல் நூல்கள் இவற்றுள் அடங்கும். 16ஆம் நூற்றாண்டிலேயே முதலில் ஆர்மேனிய நூல்கள் அச்சேறின. 1836இல் மொழி அகராதி லத்தீன் கிரேக்க மொழிச் சொற்களில் ஒப்பியல் அகராதி வெளிவந்தது.

பட்டுப்பாதை தான் மிசனரிப் பாதையாக ஆசியாவின் பல நாகரிகங்களுக்கு மாறியது. பட்டுப்பாதை, பலவீதிகள் பிரிந்தும் சமமாகவும் சென்ற வணிகர்களின் பாதை. அது மூன்று முக்கிய திசைகளை நோக்கி பிரிந்து சென்றது. 1ஆம், 2ஆம் நூற்றாண்டில் இருபெரும் பிரிவுகளாக கிழக்கு துருக்கிஸ்தானில் இருந்து பிரிந்து சென்ற பாதை. 5ஆம், 7ஆம் நூற்றாண்டுக்கிடைகளில் காலநிலை மாற்றங்களாலும் அரசியல் மாற்றங்களாலும் மூன்றாகப் பிரிந்து வடக்கு வீதி இந்தியாவுக்கும், மத்திய வீதி சீனாவுக்கும் கிறிஸ்தவ மிசனரிகளை காவிச்

சென்றது. வழிவழியே வழிப்போக்கர்கள் தங்குவதற்கும், செபிப்பதற்கும் பாவித்த மலைக்குகைகள், மடங்கள், சோலை வனங்களில் - 10,000 கல் ஓவியங் களும், 17 மொழிகளிலும், 24 எழுத்து வடிவங்களிலும், 1500 கல்வெட்டுக் களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

வரலாற்றாசிரியர் எல். புறுனியின் கருத்துக்கிணங்க கிறிஸ்துவின் பிறப்பின் 200ஆம் ஆண்டளவில் ஒரு கிறிஸ்தவ போதகர் 'மேர்வ்' இல் இருந்திருக்கிறார். ஆயின் ஈரானில் அதற்கு முன்பே கிறிஸ்தவ போதகர்கள் பணியாற்றினர் என்பது வரலாறு கண்ட உண்மை.

பாதியன் சாம்ராஜ்ஜியத்தின் மேற்குப் பகுதிகளில் கிறிஸ்தவ குழுமங்கள் பரவியிருந்தன. இரண்டாவது நூற்றாண்டின் ஆரம்பம் முதல் இறுதி வரை இக் குழுமங்கள் தம் நிர்வாகக் குழுக்கள் மூலம் ஒற்றுமையும் தியாக உணர்வும் கொண்டிருந்தன. பாதிய ஆளுகையின் கீழ் கிறிஸ்தவர்களுட்பட, சிறுபான்மை மதத்தவர்கள் பல்வேறு துன்பங்களையும் சகித்துக்கொள்ள வேண்டிய நிலை உருவாகியிருந்தது.

அவர்களுள் பலர் கிழக்குப் புறமாக இடம் பெயரவும் தொடங்கினர். 224ஆம் ஆண்டின் சீரிய திருச்சபையின் ஆயர்களுள் கஸ்பியன் கடலின் தெற்கு மாகாணமொன்றான டெய்லம் மாவட்டமும் கிறிஸ்தவ ஆயரால் இயக்கப் பட்டது.

சாசானியன் காலப்பகுதியில் கிறிஸ்தவர் தொகை அதிகரிக்கத் தொடங்கி யது. எனினும் வேதகலாபனைகளும் தொடங்கி கிறிஸ்தவத்தை அடியோடு அழிக்க முனைந்தன. ஓதொடக்ஸ் சோரோயாஸ்ரிஸ மதப்பிரிவின் முடிசூடாத் தலைவனான மோபாட் கிர்டர் தலைமையில் வேதகலாபனைகள் உச்ச நிலையை அடைந்தன. இவரது அறிக்கைகளிலிருந்து 280ஆம் ஆண்டளவில் நசரேனி யர்க்கும் கிறிஸ்தவர்களுக்குமெதிராக இந்த வன்செயல்கள் உச்சநிலையை அடைந்தன.

உரோமையருக்கு எதிரான போரில் கிரேக்க சீரிய கிறிஸ்தவர்கள் பெருமளவில் கைதிகளாயினர். வெவ்வேறு மொழி பேசும் இக்குழுமங்கள் மிக்க செல்வாக்கையும் பெற்று விளங்கின. கீழைத்தேச திருச்சபைக்கு ஆயர் பசற்சிபன் தலைமை தாங்கினார். எனினும் ஏனைய ஆயர்கள் அவரது ஆதிக் கத்தை அங்கீகரிக்கவில்லை. 410 ஆம் ஆண்டின் சினொட் சங்கத்தில் அபார்ஷார் மாவட்ட ஆயர் முக்கியத்துவம் பெற்றார்.

334ஆம் ஆண்டில் 'மேர்வ்' விலும், 430இல் 'ஷெரத்' திலும், குரசானி லிருந்து பெருமளவில் இடம் பெயர்ந்துவந்த கிறிஸ்தவ குழுமங்கள் காணப் பட்டன. 'மேர்வி'லும் தென் துருக்கியிலும் மூன்றாவது நூற்றாண்டிலிருந்து ஆறாம் ஏழாம் நூற்றாண்டுகள் வரை கிறிஸ்தவ குழுமங்கள் காணப்பட்டன என்பதற்கு தொல்பொருளியல் சான்றுகள் உள்ளன. மேர்வ் பகுதியிலுள்ள நெக்ரோபோலிஸ் என்னுமிடத்தில் காணப்படும் கிறிஸ்தவ கோபுரங்கள் இதனை எண்பிக்கின்றன. ஒரு கிறிஸ்தவ மடாலயத்தின் இடிபாடுகளும் சில கிறிஸ்தவ கட்டிடங்களின் எச்சங்களும் இதனை ஆதாரப்படுத்துகின்றன.

ஜியோக்ரேப் என்னுமிடத்தில் அகழ்வாய்வுகளில் கிறிஸ்தவ சின்னங்க ளோடமைந்த தங்கப் பதக்கங்களும் தூபிகளும் நெஸ்தூரியன் சிலுவைச்

சின்னத்தோடு காணப்பட்ட வேறு விலைமதிக்கத்தச்க அகழ்வுப் பொருட் களும் கிறிஸ்தவம் தென் துருக்கியில் மிக உன்னத நிலையிலிருந்த காலப் பகுதியை குறிப்பிடுகின்றன.

சாசானியன் குரசான் சாம்ராச்சியங்களின் கிறிஸ்தவ வரலாறு மூன்று முக்கிய இடையீடுகளின் தாக்கங்களால் பல்வேறு பாதிப்புகளுக்குள்ளாயிற்று. இது கீழைத்தேச கிறிஸ்தவ சகாப்தத்தில் முக்கியம் வாய்ந்தது. 1) றோமானிய சக்கராதிபத்தியத்துக்கும் சாசானியர்களுக்குமிடையிலான உறவுகள் 2) சாசானிய உள்நாட்டு அரசியல் பிரச்சினைகள். 3) மத ஊடகங்களிடையே தோன்றிய பிரச்சினைகள். பொதுச் சங்கம் எபேசஸ் நகரில் 431லும் கால்ஸ்டொன் நகரில் 451லும் கூட்டப்பட்டபோது ஒரு பெரிய பிளவு உண்டாயிற்று. சங்கப் பிதாக் களில் ஒருவரான டைபோசைற் கிறிஸ்துவின் தெய்வீக மனுஷீக தன்மைகளை தேவையற்ற விதமாக விமர்சித்து விதண்டாவாதம் செய்தமையால் திருச்சங்கப் பிதாக்களின் வெறுப்புக்குள்ளானார். இவ்வித தப்பறைகள், அதை உருவாக்கிய நெஸ்றோறியஸ் என்பவரின் பெயரால் நெஸ்றோறானிசிம் பேதங்கள் என அழைக்கப்பட்டன.

இயேசுக்கிறிஸ்து தெய்வீகத் தன்மை மட்டுமே கொண்டவர் என வாதிப் போர் மொனோபைசைற்ஸ் என அழைக்கப்பட்டனர். இவர்கள் நெஸ்றோறியர் களுடன் அபிப்பிராய பேதம் கொண்டனர். இப்பேதங்கள் பிரச்சனைகளை உருவாக்க நெஸ்றோறியன்ஸ் கிழக்கை நோக்கி நகர்ந்து அங்கு கீழைத்தேய திருச்சபையை நிறுவினர்.

சாசானிய ஆரம்ப காலப்பகுதியில் கிறிஸ்தவர்கள் சாதாரண அறநெறி வாழ்வில் ஈடுபட்டிருந்தனர். சோறேஸ்த குருத்துவ நிலை புகுத்தப்பட்ட போது பிரச்சினைகள் தலைகாட்டின. பகராம் I, பகராம்II (273லிருந்து 276 வரை) வேதகலாபனைகளை கட்டவிழ்த்து விட்டபோது கிறிஸ்தவர்கள் நிம்மதியாக வாழ்ந்து மதத்தை அனுசரிக்க முடியாத நிலை தோன்றியது. எனினும் இந்நிலை ஷாபூர் II (309 - 379) ஆட்சிக் காலத்தில் முற்றாக மாறியது. ஏனெனில் ரோமானிய சாம்பிராச்சியம் முழுவதும் கிறிஸ்தவ சக்கரவர்த்தியான கொன் ஸ்ரன்ரைன் அவர்களின் கீழ் ஒருங்கிணைந்தது. கிறிஸ்தவம் அரச மதமாகப் பிரகடனப்படுத்தப்பட்டது எனினும் இதனால் சாசானியன் ஈரானில் நிலைமை கொந்தளிக்க 40 ஆண்டுகளாக வேதகலாபனையால் கிறிஸ்தவர்களின் இரத்தம் ஆறாய்ப் பெருக்கெடுத்தோடியது. சார்புII அரசனின் வாரீசுகள் அவனின் மதக் கொள்கையில் அதிக அக்கறை காட்டவில்லை. எனினும் யாஷ்ட்கிட் I (399 - 421) கிறிஸ்தவர்களுக்கு ஆதரவு காட்டினான்.

424இல் ஈரானிய திருச்சபையின் சுயநிர்ணய உரிமை மூன்றாவது சினொட் சங்கத்தில் வலியுறுத்தப்பட்டது. ஈரானிய திருச்சபையின் அங்கத்துவமும் பெரு கியது. சீமான்கள் பலரும் செல்வநிலையில் வாழ்ந்த அவர்களது குடும்பங்களும் ஈரானிய திருச்சபையில் இடம்பெற்றனர். எனினும் இத் திருச்சபையினுள் நெஸ்றோரிய மொனோபைசிற்ஸ் பேதங்கள் புகுந்து ஒன்றோடொன்று மோதத் தொடங்கின. ஈரானிய கிறிஸ்தவர்கள் சோறோஸ்ற்றினசத்திலிருந்து அண்மைக் காலத்திலேயே கிறிஸ்தவத்தைத் தழுவியதால் அவர்கள் நெஸ்றோரியக் கொள் கைகளையே அதிகமாகப் பின்பற்றினர். கிறிஸ்துவின் மனிதத் தன்மையில் அதிக ஈடுபாடும், மடாலய செபதப வாழ்க்கையில் வெறுப்பும் கொண்டனர். எனவே 484லும் 497லும் கூடிய சினொட் சங்கம் நெஸ்றோரியன்சையே ஈரானில்

கிறிஸ்தவ போதக ஆர்வலர்களாகத் தெரிவு செய்தது. ஆயின் இக் காரணி களால் மொனோபைசிற்றிசிம் கொள்கைகள் முற்றாக நாட்டை விட்டோடின என்பதல்ல. குசுரு II (591 - 628)வின் ஆளுகைக் காலத்தில் மொனோ பைசிற்றிசிம், சாகான் சாகாப்பின் இரு கிறிஸ்தவத் துணைவியரில் ஒருத்தியான சிறின் அவர்களதும் அரசாங்க மருத்துவ நிபுணரான மாறுற்றா அவர்களதும் வலுவான ஆதரவால் நிலைத்து நின்றது.

ஆட்சியாளர் குசுரு II கிறிஸ்தவர்களுக்கு நல்ல ஆதரவளித்தார். சிறின் அறிவாற்றல் மிக்கவளாகவும் உரையாற்றல் வல்லுநராகவுமிருந்ததால் அரச மாளிகையினர் அனைவருக்கும் நற்செய்தியை வாசித்து விளக்கமளித்தார். அவளுக்காக அரசர் குசுரு ஒரு தேவாலயத்தையும் ஒரு மடாலயத்தையும் அமைத்துக் கொடுத்தார். அரச சபையின் உயரதிகாரிகள் பலர் கிறிஸ்தவர்களாயிருந்தனர். வேதகலாபனைகளின் போது தகர்க்கப்பட்ட தேவாலயங்களை கிறிஸ்தவர்கள் மீண்டும் கட்டியெழுப்ப முழுச் சுதந்திரமும் வழங்கப்பட்டது.

கீழைத்தேய திருச்சபையின் வளர்ச்சிக்கு கைகொடுத்து உதவியவர்கள் பலர். அவருள் பேர்சியரான பிதாப்பிதா மார் அபா முன்னாள் சோறோஸ்ற்றி யனாயிருந்தவர். நிசிபிஸ் பல்கலைக்கழகத்திலும் பின்னர் அலக்சாந்திரியா, கொன்சாந்தி நோபிள் சர்வகலாசாலையிலும் வேறு கிறிஸ்தவ கலைக்கூடங் களிலும் விரிவுரைகள் ஆற்றியவர். 544இல் மார் அபா கூட்டிய சினொட் சங்கத்தில் ஈரானிய நெஸ்ற்ரோரியன் திருச்சபைபற்றி மிகச் சிறப்பாக ஆரா யப்பட்டு அங்கீகரிக்கப்பட்டது. அராபியரின் படையெடுப்பு சாசானிய ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தது. இறுதியாக சாகன் சாகப் ஆக கடமையாற்றிய யாஷ்ட் கிட் III(612-651) மேர்வ் நகரில் கொல்லப்பட்டார். மேர்வ் நகர் கிழக்கில் ஒரு கிறிஸ்தவ போதகப் பணியின் மையமாகவும் விளங்கியிருந்தது. மேர்வ் நகர ஆயரே யாஷ்ட்கிற் III அவர்களின் பூதவுடலுக்கு இறுதி மரியாதைகள் அளித்து நல்லடக்கம் செய்வித்தார்.

பாதியாவிலிருந்தே பாக்ட்ரியா (ரோக்கரிஸ்ற்றன்) வுக்கு கிறிஸ்தவம் கொண்டு வரப்பட்டது. அங்கிருந்த கிறிஸ்தவ சமூகம் பற்றி மிகக் குறைவா கவே அறியக்கூடிய தாகவுள்ளது. பால்க் நகரில் ஒரு நெஸ்ற்ரோறிய ஆயர் இருந்தாரா என்பதும் தெரியவராது. சீரிய நூலான ''நாடுகளும் அவற்றின் சட்டங்களும்'' (பாடெயிசான் கல்வியியற் கழக வெளியீடு) குசான் தேச கிறிஸ்தவ மங்கையர் பற்றி விபரமாகத் தெரிவிக்கிறது. ஐந்தாம் நூற்றாண்டின் ஆமீனிய நூலாசிரியர் எலிசேவடப்பெற கூறுவது ''குலங் என்ற நாட்டில் கிறிஸ்தவம் பரவியுள்ளது. அங்கிருந்து தெற்கே இந்தியாவை நோக்கி ஷாபர் II அரசனின் ஆட்சி நிலவுகிறது.''

கொஸ்மஸ் இன்டிகோபிளஸ்ரஸ் தனது ''கிறிஸ்ரியன் தொபக்கிரபி'' யில் கூறுகிறார்: ''பக்ரியன்ஸ்கள், கன்ஸ், பேர்சியன்ஸ் மற்றும் இந்தியர்களும் பல தேவாலயங்களைக் கொண்டிருந்தார்கள். 549இல் ஷெப்பாலிற் அவர்களது வேண்டுகோளுக்கிணங்க கத்தோலிக்கமார் அபே ஒரு ஆயரை அவர்களது இறை தேவைகளுக்காக நியமித்தார். மார்அபேயின் வரலாறு ஷெப்பாலிற் இனத்தாரின் அரசனும் பிரஜைகளும் கிறிஸ்தவர்களாயிருந்தனர் எனக் கூறுகிறது.

மத்திய ஆசியாவின் துருக்கியில் கிறிஸ்தவம் நன்கு பரவிற்று. 644இல் 'மேர்வ்' வின் பரிபாலகரான 'எலிஜா' வே அவர்களில் பெருந்தொகையினரை

மனமாற்றினார். துருக்கியின் அரசனும் அவனது படையணியினரும் இதில் அடங்குவர். 719இல் ரோக் காறிஸ்ரானிலிருந்து தூதுவர் குழுக்கள் (ரோக்காறிஸ்ரான் என்பது ஒக்சஸ் நதிக்கு அப்பால் உள்ள பகுதியாகும்.) நெஸ்ற்ரோறிசம், ரோக் காறிஸ்ரானில் இன்னுமே காணப்பட்டதென்றும், நெஸ்ற்ரோறியன் திருச்சபைக்கும் ஆட்சியாளருக்குமிடையே நெருங்கிய தொடர்பு நிலவியதென்றும் இத் தூதுக்குழு ஒன்று தெரிவிக்கிறது. 781ஆம் ஆண்டின் குறிப்பேடுகளுக்கிணங்க பால்க் என்னுமிடத்தின் குருவின் பெயர் மில்ஸ் என்பதாகும். சித்தாந்தங்களிலும் வழிபாட்டு முறைகளிலும் கீழைத்தேய நாடுகளிலும் மத்திய ஆசியாவிலும் வேறுபாடுகள் காணப்பட்டன என்பதும் ஆய்வாளர் ஒருவரின் கருத்து.

கிறிஸ்தவ போதகர்கள் பாக்ரியாவிலிருந்து சொக்டியானாவுக்கும் சீரிய நாடுகளுக்கும் **410-415** காலப் பகுதிகளில் சென்றனர் என்றும் 'சாமர்காந்த்' தில் ஒரு சபை நிறுவப்பட்டதென்றும் தெரியவருகிறது. இப்பகுதியில் ஏற்கனவே கிறிஸ்தவம் அறிமுகப்பட்டிருக்கலாம் என்பதும் ஒரு கருத்து. அராபிய புக்காரா பகுதியில் ஒரு கிறிஸ்தவ தேவாலயம் இருந்தது என நார்சாகக்கி கருதுகிறார். இப்னல் நாடிம், சொக்டியானாவில் நெஸ்ற்ரோறியன் கிறிஸ்தவர்களிடம் காணப்பட்டதாகக் கூறுகிறார். அகழ்வாய்வுக் கண்டுபிடிப்புகள் இதனை வலியுறுத்துகின்றன. உதாரணமாக, சீரியக் மொழியில் திருப்பாக்கள் (சங்கீதம்) வரையப்பட்ட ஒரு பாத்திரம் பன்ஜி கென்ற் என்னும் இடத்தில் எடுக்கப்பட்டது. மேலும் பாடசாலை நூல்களிலும் இவ்வுண்மைகள் பாடங்களாகக் கொடுக்கப்பட்டிருந்தன. இவைகள் எட்டாம் நூற்றாண்டின் முதற் காலப்பகுதிகளுக்கு, (740 ஆண்டுகளுக்கு முன்) சார்ந்தவை. 'பன்ஜி கென்ற்'றில் நெஸ்ற்ரோறிய கல்லறைகளும் காணப்பட்டன.'

கிறிஸ்தவ போதகக் குழுக்கள் சொக்டியானாவிலிருந்து செமிறெச்சிக்குச் சென்றதாக இவ்வாய்வுகள் மேலும் குறிப்பிடுகின்றன. அங்கும் கிறிஸ்தவம் நன்கு பரவிற்று. அக்-பெஸ்கிம் என்னுமிடத்தில் எடுக்கப்பட்ட சில பொருட்கள், ஏழாம் அல்லது எட்டாவது நூற்றாண்டுகளின் கிறிஸ்தவ திருச்சபைகளுக்குரியன என்றும் மேற்குறிப்பிட்ட ஆய்வுகளிலிருந்து தெரியவருகிறது. செமிரிச்சியிலும் இவ்வித கண்டுபிடிப்புகள் கிறிஸ்தவம் அங்கு அனுசரிக்கப்பட்டதை நிரூபிக்கின்றன. துருக்கிய இனத்தவர் செமிரிச்சிக்கு வந்தபோது கிறிஸ்தவர்கள் அங்கு வசிப்பதைக் கண்டறிந்தனர்.

நெஸ்ற்தூரிய கத்தோலிக்கரின் நற்செய்தி நூல்களில் (திருமடல்களில்) திமோத்தி I பகுதியில் குறிப்பிட்ட சில துருக்கிய இனத்தவர் (கார்லக் குழுவினராக இருக்கக் கூடும்) எட்டாம் அல்லது ஒன்பதாம் நூற்றாண்டு காலத்தைச் சேர்ந்தவராவர். சுப்காலிஸ்ஷோ என்பவர் நெஸ்ற்தூரிய திருச்சபையின் புகழ்மிக்க மிஷனரி ஆவர். இவர் மத்திய ஆசியாவில் திருப்பணியாற்றினார். இஸ்மாயில் சமனி 893இல் ரார்ஸ் நகரின் மீது படையெடுத்து முற்றுகையிட்டபோது, அங்கு ஏராளமான கிறிஸ்தவரைக்கொண்ட திருச்சபை இருந்தது.

கிறிஸ்தவம் மேலும் வளர்ந்து கிர்ஜிஸ் இனத்த்வரையும் மனம் மாற்றியது. 'சுட்ஜி'யில் இடிபாடுகளிலிருந்து கண்டெடுக்கப்பட்ட ஒரு தூபியில் கிர்ஜிஸ் இல் போதித்த போதகர்களின் பெயர்ப்பட்டியலைக் கண்டனர். இதில் காணப்பட்ட விசேடம் சிலுவைச் சின்னமாகும்.

ரேபான் அரசாங்கத்திலும் ( கிழக்கு துருக்கிஸ்தான்) கிறிஸ்தவம்

ஊடுருவியது. கிழக்கு துருக்கிஸ்தான் மத்திய ஆசியாவுடன் மிக நெருங்கிய தொடர்புடையதாயிருந்ததால், கிறிஸ்தவ போதகர்கள் 4ஆம், 5ஆம் நூற்றாண்டுகளிலேயே அங்கு மனமாற்ற முயற்சிகளில் ஈடுபட்டனர். மேலும் இவ் உத்வேகம் 4ஆம், 5ஆம் நூற்றாண்டுகளுக்கும் பரவியது.

மத்திய பேர்சியா, ஈரான், சொக்டியன் என்னுமிடங்களில் கிறிஸ்தவ போதகம் பற்றிய விரிவான அறிக்கையை மொழி பெயர்க்கும் பணி ஆரம்பிக்கப் பட்டது. கிழக்கு துருக்கிஸ்தானிலும் சிறப்பாக நெஸ்ற்தூரியன் இடிபாடுகளிலிருந்தும் சேகரிக்கப்பட்ட நூல்களும் மொழிபெயர்க்கப்படுகின்றன. ரேபானில் பேர்பெற்று விளங்கிய நெஸ்ற்தூரிய மடாலயத்தின் மிகப்பெரிய நூலகமும் அழிவுற்ற பல சிறந்த நூல்களுடன் காணப்பட்டுள்ளது. இந்நூல்கள் சீரிய மத்திய பேர்சிய, பாதிய கொட் டனிஸ்சாகா, சொக்டியன் மொழிகளில் இயற்றப் பட்டவையாகும். சொக்டிய மொழி மத்திய ஆசிய அரசகருமமொழி ஆகும்.

சிகின் ஷிப் என்ற நூலின்படி மா - சா - லிங் - ரிசா குடும்பம் லின்ராவு நகரில் 573இல் குடியேறியது. கிறிஸ்தவ போதகமும் கிழக்கு நோக்கி தீவிரித்தது. 635இல் ஆயர் அலோபென்ராங் சமஸ்தானத்தை அடைந்தார். புனித நூல்கள், உருவச்சிலைகள் பலவற்றையும் அவர் கொண்டு சென்றார். சக்கரவர்த்தி ஆயரை நன்கு வரவேற்று உபசரித்தான். ஒரு மடாலயமும் அமைக்கப்பட்டது. இவ் விதமே சீனாவிலும் கிறிஸ்துவின் திருமறை ஊடுருவியது.

மத்திய ஆசியா - இந்தியா, சீனா, சீரியா, பாரசீகம் முதலிய நாடுகளில் இருந்து பரவிய சமயக் கருத்துக்களை வரவேற்றதும் மத்திய ஆசியாவின் பட்டு வீதியில் காணப்பட்ட பல பாலைவெளிப் பசுஞ்சோலை நகர்ப்புறங்களின் சமூக, அரசியல், புவியியல் நிலைகளுக்குள் இவை தம்மை நிலைப்படுத்தின அங்கு முன்நிலவிய சுதேச சமயப்போக்குகளுக்குப் பதில் ஓர் சர்வதேசிய மனப் பக்குவமும், தனிமனித ஈடேற்றம் பற்றிய நம்பிக்கையும் மேலோங்கி வளர்ந்தது. பசுஞ்சோலைகளின் நீர் வளமும், புறம்பே இருந்த பாலைவெளியும் ஒன்றுக் கொன்று முரண்பட்ட புவியியல் நிலைகளை சித்திரித்தன. பாலை நிலத்தில் மரித்தோர் அடக்கம் பண்ணப்பட்டனர். அங்கு நீர் இல்லை.

இங்கு காணப்பட்ட கிறிஸ்தவ ஏடுகளில் தண்ணீருக்கும், வாழ்வுக்கும், இறைவனின் அருளுக்கும் நெருங்கிய உருவக உறவுகள் காணப்படுகின்றன. 'மார்சாக்கு' என்ற (இறப்பு கி.பி 300) கிறிஸ்தவப் பெரியார் பற்றிய குறிப்பிலே, ''ஜீவ சமுத்திரமே நீ வற்றிப் போனாயோ! ஆறுகளின் நீரோட்டம் தடைப் பட்டு விட்டதோ'' என்ற வரிகள் நீரின் உருவக முக்கியத்துவத்தை சுட்டிக் காட்டுகின்றன. மேலும் அப் பாலைவனச் சோலைகளில் பெரும் சமயத் தலைவர்கள் - பாலைவன வியாபாரக் குழுக்களின் தலைவர்களாகவே விபரிக்கப் பட்டனர். இயேசுவும் அங்கே அப்படித்தான் அழைக்கப்படுகிறார். பாலை வெளியும் அதன் ஆபத்துக்களும், அங்கு வாழ் மக்களுக்கு - அவர் வாழ்வின் வரையறுக்கப்பட்ட பலவீன நிலையை உணர்த்தின.

இதனால் இறை பராமரிப்பின் உதவியையும் தேவ உதவியாளர்களின் தேவையையும் உணர்ந்தனர். மத்திய ஆசியக் கிறிஸ்தவத்தில், புனித ஜோர்ஜ் ஒரு முக்கிய உதவியாளராகக் கணிக்கப்பட்டார். நாடோடிகள் மத்தியில் காணப் பட்ட மூதாதையர் வணக்கத்துக்குப் பதில் இவை இடம்பெற்றன. பட்டு வீதி நகர்களின் வாழ்க்கையில் மறுவாழ்வுக்கான வழி வகைகளைத் தேட- பாவ

மன்னிப்பின் அவசியத்தையும், பாவத்தை அறிக்கையிடுவதன் அவசியத்தையும், இறந்தபின் இதைச் செய்வது பலன் கொடாது என்பதையும் பல ஏடுகள் சுட்டிக் காட்டின.

தம் சொந்த நாடுகளை விட்டு, வியாபாரத்துக்கென இடம்பெயர்ந்து வந்து, பட்டு வீதி நகர்களில் குடியேறியவர்களிடையே தான் கிறிஸ்தவம் பரவி வேர் ஊன்றிற்று. 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பிதா முதலாம் திமோத்தி பல துறவிகளை வழிமுறைப்படுத்தி உருவாக்கி, மிசனரி தேவைகளுக்கு ஏற்ற மொழிகளைக் கற்பித்து, அனுப்பினார். தமது கடிதங்களில், துருக்கிய அரசனொருவன் கிறிஸ்தவனான சம்பவத்தையும், சீனர்களுக்குள்ளும், திபதேயர்களுக்குள்ளும் கிறிஸ்தவம் வளர்ந்தது பற்றியும் குறிப்பிடுகின்றார்.

சொகோடியா, ஏழு ஆறுகளின் நாடான செமிரேச் முதலியவற்றில் பாரிய கிறிஸ்தவ சேமக்காலைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றில் பல சிலுவையுடன் சீரியாக் மொழியிலும் சில துருக்கிய மொழியிலும் வரையப்பட்டுள்ளன. 9ஆம் நூற்றாண்டுவரை இஸ்லாத்தின் பரவலாக்கத்தின் மத்தியில்கூட இக்கிறிஸ்தவ சமூகங்கள் வாழ்ந்து வந்தன. 14ஆம் நூற்றாண்டின் முதல் பகுதியில் ஏற்பட்ட, மத்திய ஆசிய கொள்ளைநோய் இவற்றின் அழிவுக்கு ஒரு காரணமாக இருக்கலாம்.

கிழக்குத் துருக்கிஸ்தானில் இருந்த கிறிஸ்தவ கோவில்களின் சுவர்களில் காணப்பட்ட குருத்தோலை ஞாயிறு போன்ற துர்பான் ஓவியங்களும் (8ஆம் நூற்றாண்டு) புலாயிக் முதலிய இடங்களில் கண்டெடுக்கப்பட்ட துறவிகளின் நூலகங்களும் அங்கு நிலவிய கிறிஸ்தவத்தின் துடிப்பையும் வலுவையும் எடுத்துக் காட்டுகின்றன. இவை பழைய துருக்கி, சீரியாக், சொகொடியான் மொழிகளில் காணப்பட்ட மொழி பெயர்ப்புக்கள் மாத்திரமல்ல வழிபாட்டு செபங்கள், திருச்சபை வரலாறு, புனிதர்கள் பற்றிய குறிப்புகள், சீரிய கொப்ரிக் இலக்கியங்களின் தொகுப்புக்களும் காணப்பட்டன. தூர்பான், அக்சு, பாய், கமி முதலிய நகர்களிலும் கிறிஸ்தவர்கள் வாழ்ந்த அகழ்வாய்வுச் சான்றுகள் கிடைக்கப் பெற்றுள்ளன. டுன்குவாங்கில் சீன கிறிஸ்தவ இலக்கிய நூல்களும் காணப்பட்டன.[38]

## மங்கோலியத் திருச்சபை

உள் மங்கோலியாவின் கராகோட்டோவின் (Karokhoto) பண்டைய தலைநகர் ரங்குட்டிலும் 11ஆம் நூற்றாண்டு 13ஆம் நூற்றாண்டுகளிடையே நெஸ்ற்தோரிய கிறிஸ்தவர்கள் காணப்பட்டனர். அங்கு சென்ற இரு துருக்கிய நெஸ்ற்தோரியர்கள் ஜெருசலேமுக்கு யாத்திரை செய்யும் வழியில் இக்கிறிஸ்தவர்கள் பயபக்தி நிறைந்தவர்கள் என விபரித்துள்ளனர். இவர்களில் ஒருவர் துறவற சன்னியாசி மார்க், அடுத்தவர் அறிஞர் ரபான்சவுமா.

மங்கோலியாவின் ஒலோன்சுமே (Olonsume) என்ற இடத்தில் ஒரு கிறிஸ்தவ ஆலயம் கண்டுபிடிக்கப்பட்டது. இவை அதிகமாக துருக்கிய ஆதிவாசிகள். இரு துருக்கிய கெரயிற், நெய்மான் என்ற குழுக்கள் மொங்கோலியமயமாக்கப்பட்டு பெய்க்கால் என்ற ஏரிக்குத் தெற்கே வாழ்ந்து வந்தனர். கெரமயிற் மக்கள் 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் கிறிஸ்தவர்களானார்கள். நெய்மான் மக்கள் சற்றுப்பின், மனம்மாறி இவர்கள் மொங்கோலியர் மீது கிறிஸ்தவம் பாதிப்பை ஏற்படுத்த காலாயிருந்தவர்கள் மொங்கல் சாம்பிராச்சி

யத்தின் வரலாற்றில் கிறிஸ்தவர்கள் பங்கு மத்திய ஆசியாவிலும், பின் சீனாவிலும் கணிசமான அளவு நிலவியிருந்தது என அக்காலகட்ட மேற்கத்தைய பயணிகள் குறிக்கின்றனர் அவர்கள் குருக்களும் துறவிகளுமாக மாத்திரமல்ல, மதிப்புப்பெற்ற வைத்தியர்களாக, அரச ஊழியராக, கல்விமான்களாக, கலைஞராக, கட்டிட - சிற்ப - ஓவிய - கைத்தொழில் நிபுணர்களாகத் திகழ்ந்தனர். சில பிரசித்திபெற்ற மொங்கோலிய ஆட்சியாளர்களின் துணைவியராகவும் கிறிஸ்தவப் பெண்கள் இருந்தனர்.

## சீனாவில் கிறிஸ்தவம்

கிறிஸ்தவர்களின் பிரசன்னம் சீன வரலாற்றில் இரு காலகட்டங்களில் ராங் (Tang), யுஆன் (Yuan) அரசியல்தான் காணப்படுகிறது, 781 ஆம் ஆண்டு சியான்பூ (Sian Fu) சாசன கல்வெட்டின்படி சீன, சீரியாக் இரு மொழிகளிலும் ஆ லோ பென் (Aa - Lo - Pen) எனப்படும் முதல் சீரிய துறவி சீனாவில் 635ஆம் ஆண்டில் வந்து சேர்ந்தார்.

இவ்வரலாறுகளில் சீன மொழியில் எழுதப்பட்ட பகுதி 150 வருட நெஸ்தோரிய கிறிஸ்தவத்தின் வரலாற்றைக் குறிப்பிடுகிறது. (Tang) ராங் வம்சம் (618 - 907) கிறிஸ்தவம் பரவ உதவிற்று. ஓர் துறவற தன்மை கொண்ட கிறிஸ்தவமே பரவிக் காணப்பட்டது. மேற்கூறப்பட்ட சாசனம் வரையப்படுமுன் சீன கிறிஸ்தவ இலக்கியத்தைப் பொறுத்தவரை கிறிஸ்தவ ஏடுகள் (நற்செய்தி ஏடுகள் உட்பட) இக்கால கட்டத்திலேயே எழுந்தன என்பது டுன்குவாங் (Dunhuvang) தொல் பொருளாராய்வினூடாகப் புலனாகின்றது. இக்கிறிஸ்தவ முதல் வரலாற்றுக் கட்டம் 845ஆம் ஆண்டின் அரச கட்டளையுடன் முடிவுறுகிறது. இத் தடைக் கட்டளை பௌத்த மதத்தையே குறிவைத்ததெனினும் ஏனைய வெளிநாட்டு மதங்களும் பாதிப்புற்றன. இதனால் 10ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் ஈராக்கிய கத்தோலிக்க பிதாப் பிதா அனுப்பிய மிசனரிகள் அங்கு கிறிஸ்தவர்கள் காணப்படவில்லை எனக் குறிப்பிடுகின்றனர்.

மொங்கோலியரின் வருகையுடனே தான் கிறிஸ்தவத்தின் ஸ்திரமான பரவ லாக்கம், சீனாவில் தோன்றிற்று. மொங்கோலியர் முதலில் ஆட்கொண்ட பல சுதேச மக்கள் சாதியினர் கிறிஸ்தவ மக்களே. பிரபல்லிய துருக்கி இன மொழிக் கிறிஸ்தவர்கள் பெரும் தலைவர்களாக பல துறைகளில் கடமையாற்றினர். சீனாவின் முதல் மொங்கோலிய சக்கரவர்த்தி, குப்புலேய்கானின் (1260 - 1294) அரண்மனையில் பல செல்வாக்குமிகுந்த கிறிஸ்தவர்கள் கடமையாற்றினர். குப்புலேயின் சகோதரன் மொன்கேயின் தாய் ஒரு கிறிஸ்தவள். அரச அவையில் பல மத உரையாடல்களும் இடம்பெற்றன. அரசில் பல மதங்களும் பரவ சுதந்திரம் அளிக்கப்பட்டது. இவற்றுள் பௌத்த மணிக்கேய இஸ்லாமிய சமயங்களும் அடங்கும்.

டுன்குவாங்கில் கண்டெடுக்கப்பட்ட சுவடுகளில் இன்று பேசப்படுகின்ற கலாசார மயமாக்கல் போக்கினை அவதானிக்க முடிகிறது. அவற்றில் கிறிஸ்தவ உண்மைகள் பௌத்த, சீன தாவேஸ்த உருவகங்களில் சொற்பதங்களில் சித்திரிக்கப்படுவதை அவதானிக்க முடிகிறது. நெஸ்றதோரிய, மொங்கோலிய மத, 'சாமனிஸ்த' வழி முறைகளுடன் பின்னிப் பிணைவதைக் காண்கின்றோம்.

சீனாவின் மத்திய தெற்குப் பகுதிகளில் காணப்படும் சேமக்காலை புதைகுழி கல்வெட்டுக்களில் கிறிஸ்தவ பௌத்த தவோஸ்த குறியீடுகள்

ஒன்றிணைந்து காணப்படுகின்றன. திருச்சிலுவை - தாமரை, முகில்கள், கற் பாறைகள்மேல் வரையப்பட்டுள்ளது. கல்வெட்டுக்களில் துருக்கிய சீன மொழிகள் இரண்டும் காணப்படுகின்றன. வேறு பலவற்றில் துருக்கிய மொழி சீரிய உய்குர் (Uighur) எழுத்து சுவட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

இக்கால வரலாற்றின் முக்கிய சம்பவம் கீழைத்தேய நெஸ்றதோரிய திருச் சபைக்குச் சார்ந்த ஓர் இளம் துருக்கிய இனத்துறவி. றபான் சவுமா என்ற பிரபல்லிய கிறிஸ்தவத் துறவியிடம் பீக்கிங் நகர் கல்விக் கூடத்தில் பாடம் கற்றவர். பலஸ்தீனத்திற்கு யாத்திரை சென்ற போது திருச்சபையின் முதல்வராக 3ஆம் யபலுல்லா (Yaballah III) என்னும் பெயர் சூடி ஓர் கத்தோலிக்குஸ் பேராயராகத் தெரிவு செய்யப்பட்டார்.

1368இல் மொங்கோலிய பேரரசின் வீழ்ச்சியோடு சீனாவில் அன்றைய கிறிஸ்தவ சபைகள் வீழ்ச்சியுற்றன.

மோங்கோலிய கிறிஸ்தவர்கள் ஆதி சாமனிஸ்த நம்பிக்கைகளில் இருந்து கிறிஸ்து பெருமானை ஆண்டவராகவும் இரட்சகராகவும் ஏற்றுக்கொண்ட வர்களே. இங்கு துருக்கிய மொங்கோலிய சாமனிச மதம் பற்றிய ஒரு வார்த்தை சொல்வது பொருத்தமாகலாம். ''சாமன்ஸ்'' மொங்கோலிய பண்டைய குலக் குருக்கள், மனிதனுக்கும் ஆவி உலகிற்கும் இடையே நிற்கும் உறவுப் பாலங்கள். நன்மைக்கும் தீமைக்கும் அவர்களின் பரவச, உரு ஏறிய நிலைகள் வேறுபட்டா லும் அவர்கள் செயலாற்றம் ஒன்றே. காலநிலைகள் வருங்காலம் பற்றிய அறிவு மனித, மிருக வைத்தியர்களாகவும் செயல்பட்டனர். Ongons என்ற இயற்கை, மலை, காடு, அருவி, மரம், பறவை, மிருக உருவங்களை, தம் குலதெய்வ விக்கிர கங்களை முக்கிய வழிபாட்டு மையங்களாகக் கருதினர். ஆவிகள் எங்கும் குடி கொண்டிருந்தன. அவற்றிற்கு மிருக பலிகளையும், சில வேளைகளில் நரபலி யும் கொடுத்தனர். வாழ்வின் முக்கிய கட்டங்களில் பிறப்பு, திருமணம், மரணம், போர், வேட்டையாடுதல் முதலியவற்றின் முன்னும் பின்னும் இடம்பெற்றன.

அரச மதம் சாமனிசத்திலிருந்து வேறுபட்டு நின்றது. அது மூதாதையர் வழிபாடு. அவர்கள் தோற்றம் பற்றிய புராண இதிகாசக் கதைகளாகத் தொகுக் கப்பட்டு அதன் அடிப்படையில் நடைபெற்றது. மரித்தோர் இறந்தோர் சிலைகள் (Babas, Balbals) பாபா, பல்பால் என்று அழைக்கப்பட்டன. அரசர்களின் வெற்றி யையும், தோற்கடிக்கப்பட்ட எதிரிகளையும் இக் கொண்டாட்டங்கள் நினைவு கூர்ந்தன. மொங்கோலியர்களிடையே நிலவிய சின்கிஸ்கான் வழிபாடு இத்த கையதே. அரச மதம், (Tengri) ரென்கிறி என்ற வானுறை தெய்வத்தை மையப் படுத்திய ஒரு தெய்வக் கொள்கையாயிருந்தது.

14ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் நெஸ்றதோரிய மிசனரிகள் சீனாவில் புகுந்து 30,000 கிறிஸ்தவர்களைத் தோற்றுவித்தனர் என ஒரு பாரம் பரியம் சொல்கிறது. அதேவேளையில் மொங்கோலிய சக்கரவர்த்திகள் தாராளக் கொள்கையின் பின்னணியில் ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையை வர வேற்றனர். றோம் மொன்ரே கோர்வினோவின் யோணை சீனாவுக்கு அனுப்பியது. அவர் ஓர் பிரான்சீஸ்கான் மிசனரி. சீனாவுக்குள் 1294ஆம் ஆண்டு வந்தார். கம்புலுக்கு பகுதியில் பணியாற்றினார். அரசரின் ஆசீருடன் 6000 பேரை 1039இல் மனம் திருப்பினார். 1330இல் யோண் மரணித்த பொழுது கணிசமான அளவு கத்தோலிக்கர் சீனா தலைநகரிலும் வேறு இடங்களிலும் இருந்தனர். சீன

சாம்ராஜ்சியத்திற்கும் பாப்பரசருக்கும் நல்லுறவு நிலவிற்று. மொங்கோலிய பேரரசு சீனாவில் தோற்கடிக்கப்பட்ட பொழுது கிறிஸ்தவத்திற்கு இரண்டாவது முறையாக சாவுமணி அடிக்கப்பட்டது.[39]

இந்த மத்திய ஆசியத் திருச்சபை வரலாறு, அண்மையில் வெளிவந்த ரூசிய ஆய்வாளர்களின் நூல்களிலிருந்து பெறப்பட்டுள்ளது. **Religlons and Religions movement. H.J. Klimkeit, R. Merserve.**

வரலாற்றில் மறைந்து கிடந்த தகவல்களை வெளிக்கொணர்ந்து, கிறிஸ்து சகாப்தத்தின் முதல் மிலேனியத்தின் கீழைத்தேய மிசனரிகளாக சீரிய நெஸ்ற்தோரிய திருச்சபைகள் திகழ்ந்தது. மேற்கில் அயர்லாந்து, பின் ஆசீர்வாதப்பர் சபைகள் தோற்றுவித்த மிசனரி அலைகள் போன்று, புவியியல் ரீதியில் இன்னும் பாரிய பரந்த நிலப் பரப்பில் சீரிய நெஸ்ற்தோரிய துறவிகள் (சீரிய, பாரசீக, எடெஸ்ஸா, பபலோனியா) இயேசுவின் நற்செய்தியைக் கொண்டு சென்று முழங்கினர். ஐரோப்பாவிலும் பார்க்க ஆசிய கண்டம் பரந்த பல்லின மக்களையும், பல அரசியல் குழப்பங்களையும், படையெடுப்புக்களையும் எதிர்ப்பலைகளையும் தோற்றுவித்தது, இன்றும் தோற்றுவிக்கிறது.

ஆயிரம் ஆண்டுத் திருச்சபை வரலாறு முற்றுப்பெற்றது. ஆசியாவில் கிறிஸ்தவம் ஒரே ஒரு நாட்டில் தான் வெளிப்படையாகத் தழைத்து வளர்ந்தது (சேர நாட்டின் கேரள மலையாளப் பகுதிகளில்). எனவே அதன் வரலாற்றை 1500ஆம் ஆண்டு வரை மீளாய்வு செய்வது, போர்த்துக்கேய வருகைக்கு முன் இரண்டாம் மிலேனியத்தின் முதல் 500 வருடப் பகுதி வரை கிறிஸ்தவத்தின் நிலையை ஆசியாவில் தெளிவுபடுத்தும்.

ஆசியத் திருச்சபையின் நிலை நலிவடைந்து இருக்க ஐரோப்பிய திருச்சபை செழித்து வளர்ந்ததற்கான காரணிகள் யாவை? 6ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய மிலேச்சர் படையெடுப்புக்கள் தொடக்கத்தில் பேரழிவையும் அவர்கள் நிரந்தரக் குடியேற்றத்தின் பின் கிறிஸ்தவ வளர்ச்சிக்கு சாதகமாக ஒன்றுபட்ட பரிசுத்த உரோமன் சாம்பிராய்ச்சியமாகி லத்தீன் மொழி வழிபாடு, இறையியல் கல்வி கலாசாரம், துறவற இயக்கங்கள் முதலியவற்றால் 16ஆம் நூற்றாண்டின் சீர்திருத்தவாதிகள் வருகை மட்டும் நிலைத்து நின்றது. மாறாக ஆசியக் கிறிஸ்தவத்தின் பிரசவ வேதனை இன்றுமே தொடர்கதையாக உள்ளது.



# ரோப்பியர்கால சீன, இந்திய திருச்சபைகள்.

இரண்டாம் மிலேனியத்தின் முதல் அரைப் பகுதி, ஆசியக் கண்டத்தைப் பொறுத்தமட்டில் தென் இந்தியாவில் மாத்திரமே கிறிஸ்தவம் தழைத்து வளர்ந்தது. சீனாவில் 14ஆம் நூற்றாண்டில் துளிர்விட்டு மடிந்த கிறிஸ்தவத்தின் வரலாறு முதலில் சொல்லப்பட வேண்டும்.

## சீனப் பெருநிலப்பரப்பின் முதல் கத்தோலிக்க மிசனரி

இத்தாலியின் சவேர்னோவுக்கு அருகாமையில் பிறந்து 1247இல் பிரான் சீஸ்கன் துறவியானார் யோண். முதலில் பேர்சியாவிலும் பின் சீனாவிலும் நற் செய்தி அறிவிப்புப் பணி செய்தார். இவருக்கு 42 வயதாகும்பொழுது பாப்பிறை 4ஆம் நீக்கிலஸ் சீனச்சக்கரவத்தி குப்பிளாய்கானின் மங்கோலிய அரச அரண் மனைக்குச் சென்ற மிசனரிக் குழுவின் தலைவராக நியமித்தார்.

இன்றைய பீங்கிங் அன்று கம்பலுக் என அழைக்கப்பட்டது. அதன் பேரா யராக யோண் நியமிக்கப்பட்டார். 1308இல் 6000 மங்கோலியர் கிறிஸ்துவில் விசுவாசம் கொண்டனர். இவருடன் டொமினிக்கன் சபைத் துறவி பிஸ்ரொய் யாவின் நீக்கிலாசும் சென்றார். அவர்களின் முதல் தரிப்பிடம் பேர்சியா. கப்பிரிஸில் லுக்கான்கோவின் பீற்றர் என்ற வர்த்தகரும் சேர்ந்து சீனா வரை சென்றார்.

பேர்சியாவிலிருந்து இந்தியாவுக்கு கடல் மார்க்கமாகப் பயணம் செய்து ஒரு வருடம் அங்கு தரித்து தம் சீன யாத்திரையின் இறுதிக் கட்டத்தை கடல் மார்க்கமாக ஆரம்பிக்குமுன் நீக்கிலஸ் இறைவனடி சேர்ந்தார். யோண் ரோமா புரியில் இருந்து புறப்பட்டு (1294) ஐந்து வருடங்களின் பின் சீனா வந்தடைந்தார்.

அவர் சீனாவுக்கு வந்த போது குப்பிளாய்கான் இறந்துவிட்டார். ரிம்மூர் பதில ரசனானான். அவன் கிறிஸ்தவனாகாவிடினும் யோணுக்கு உதவ முன்வந்தான். தலைநகரில் இரு கோவில்கள் கட்ட அனுமதி தரப்பட்டது. 1299இல் அரண் மனைக்கு அருகே ஒரு கோவிலும் 1305இல் நகரின் முக்கிய தலத்தில் மற்றொன்றும் கட்டப்பட்டன.

யோண் கம்பலுக் மொழியைப் பயின்று புதிய ஏற்பாட்டையும் (நற்செய்தி) திருப் பாடல்களையும் அம் மொழியில் பெயர்த்தார். 40 குழந்தைகளை ஒன்று சேர்த்து சிறு பராயம் முதல் நற்செய்தி, திருப்பாடல்களிலும் வழிபாட்டு முறைகள் கீதங்களிலும் சிறந்த பயிற்சி கொடுத்து கல்வியிலும் தராதரமளித்து தமக்கு உதவிதர முயற்சி செய்தார். யோணின் விடாமுயற்சியால் அன்றுதொட்டு சீனாவில் திருவழிபாட்டின் ஒரு பகுதியாக சங்கீதங்களை ஓதித் தியானிக்கும் வழக்கம் இருந்து வருகிறது.

யோணின் நற்செய்திப்பணியின் மகத்தான வெற்றி பற்றிய செய்தி ரோமைக்கு கிடைத்ததும் பாப்பிறை 5ஆம் கிளமேந்து, ஏழு பிரான்சிஸ்கன் சபைத் துறவிகளை, ஆயர்களாகத் திருநிலைப்படுத்தி அங்கு அனுப்பினார். இவர்களில் மூவர்தான் சீனாவை வந்தடைந்தனர். ஏனையோர் பயணத் துன்பங்களால் வழியிலே மரணமெய்தினர். 1308இல் யோண் பேராயராகத் திருநிலைப்படுத்தப்பட்டார்.

1362இல் மங்கோலிய அரசு தோற்கடிக்கப்பட செயூட்டுன் (ZAYTUN) கொலை செய்யப்பட்டார். 1369இல் அனைத்துக் கிறிஸ்தவர்களையும் நகருக்கு வெளியே துரத்திவிட்டனர்.[40]

## இந்தியத் திருச்சபை

தென்னிந்திய கேரளப் பகுதிகளில் அதன் 1000 - 1500 வருட வரலாற்றை ஆராய்வது நல்லது. அதற்கு கி.பி. 5ஆம் நூற்றாண்டுக்கே பின் நடந்து, பாரசீகத் திருச்சபை வரலாற்றை மீளாய்வு செய்தல் நலம்.

325ஆம் வருட நிச்சேயன் சங்கத்துக்கு பாரசீகத் திருச்சபை யோண் என்ற ஒரு வரை பிரதிநிதியாக அனுப்பியது. ரோமைச் சக்கரவர்த்தி கொன்ஸ்ரன்ரைன் இச் சங்கத்தைக் கூட்ட உதவி செய்தார். எனினும் பாரசீகம் ரோமைய ஆட்சியின் ஒரு பகுதியாக இருக்கவில்லை.

410ஆம் ஆண்டில் பாரசீகத் திருச்சபை செலுசியாவில் சங்கம் ஒன்றைக் கட்டியது. உரோமைத் திருச்சபையின் மரூத்தா ஆயரின் உதவியுடன் கெபுசாட் (410 -420) கத்தோலிக்குஸ் இதற்குத் தலைமை வகித்தார். இதற்கான முன் ஆயத்தங்கள் உரோமைய சக்கரவர்த்தி அவுரேலியஸ், பாரசீக சக்கரவர்த்தி யஸ்டேகாட்டின் (YAZDEGARD) முடிசூட்டு விழாவில் பங்கு கொள்ள மெசப்பத் தேமியாவின் ஆயர் மரூத்தாவை, தமது பிரதிநிதியாக அனுப்பிய போது தொடங்கின. இவரது முக்கிய நோக்கம் மேற்கத்திய, கீழைத்தேச சபைகளின் ஒப்புரவே. 410ஆம் ஆண்டு ஜனவரி 6ஆம் நாளில் தொடங்கிய இச்சங்கம் நிச்சேயாவின் விசுவாசப் பிரமாணத்தை அங்கீகரித்தது.

421ஆம் ஆண்டில் மார்டாடிஸ்சு, தமது எதிரிகளான சில ஆயர்களின் குற்றச் சாட்டுதல்களால் சிறைப்படுத்தப்பட்டார். பின் ரோமை பைசாந்திய பேரரசர் 2ஆம் தியடோசியாசின் தூதுவர்களின் பரிந்துரைகளால் விடுவிக்கப்பட்டார். 424ஆம் ஆண்டில் மார்குபாட் (Markubate) சங்கத்தில் ஆயர் 36 பேர் முன்னி லையில் உறுதி செய்யப்பட்டார். இப்பாரசீகத் திருச்சபையுடன் தான் இந்தி யாவின் தோமையாரின் திருச்சபை, தொன்றுதொட்டே நல்லெண்ண உறவுகளை வளர்த்து வந்தது.

3ஆம், 4ஆம், 5ஆம் நூற்றாண்டுகளில் பாரசீகத் திருச்சபைக்கு நன்மையும், தீமையும் கலந்து தோற்றின. உரோமை ராச்சிய வேதகலாபனைக்குப் பின் வந்த அகதிகளும் நெஸ்றோரிய கிறிஸ்தவர்களும் சபையை வளர்த்தனர். ஆயின் 339 - 438 வரை நடந்த வேதகலாபனையும், 5ஆம் நூற்றாண்டின் சபை உட் பிளவும், சபை வாழ்வை குன்றச் செய்தன.

பாரசீகத்தின் சாசனிட் அரசர்கள் தம்கீழ் வாழ்ந்த கிறிஸ்தவர்களை இரு கோணங்களில் இருந்து கணித்தனர். ஒன்று தம் அரச மதமாகிய சொராஸ்ரரின் கொள்கைகளுக்குப் புறம்பான வேறு மதப் படிப்பினைகளைக் கடைப் பிடித்தவர்கள். இரண்டு கிறிஸ்தவம் ரோம சாம்ராச்சியத்தின் மதமாகையால்,

தம் எதிரி அரசர்களுக்கு சார்பாகவும், படையெடுப்பு காலங்களில் அவர்களுக்கு உதவக்கூடிய உளவாளிகளும் எதிரிகளாகவும் மாறலாம். இதுவே கிறிஸ்தவர்களுக்கு எதிரான வேத கலாபனை ஆரம்பிக்கக் காலாயிருந்தது. 16,000 கிறிஸ்தவர்கள் கொல்லப்பட்டனர். ரோமை வேதகலாபனையையும் விட பன்மடங்கு குரூரமானதாக இது அமைந்தது.

நெஸ்ற்தோரிய கிறிஸ்தவத்தின் வருகையுடன், நிலைமை மாறத் தொடங்கிற்று. எபசுஸ் திருச்சங்கத்தின் பின் நெஸ்ற்தோரியர்கள் ரோமை சாம்ராச்சியத்திலிருந்து விரட்டியடிக்கப்பட்டமையால், அவர்கள் பாரசீகத்தினுள் வந்து தஞ்சமடைந்தனர். பிரோஸ் மன்னன் 457 - 487 புதுக்க ஓடி வந்தவர்கள் ரோம சக்கரவர்த்தியின் எதிரிகள் என கேள்வியுற்று, அவர்களை வரவேற்று புகலிடம் கொடுத்தான். நெஸ்ற்தோரியர் அல்லாத கிறிஸ்தவர்கள் துன்புறுத்தப்பட்டனர்.

வைதீக கிறிஸ்தவ ஆயர் பபோய கத்தோலிக்கோஸ் கொல்லப்பட்டதும், நெஸ்ற்தோரிய ஆயர் பார் சவுமோ 484ஆம் ஆண்டு பேத் லப்பார் சங்கத்தை ஒன்று கூட்டி முழு பாரசீகத் திருச்சபையும் நெஸ்ற்தோரிய விசுவாசத்தையே கைக்கொள்ளுகிறது என பிரகடனம் செய்தார். 486ஆம் ஆண்டில் அக்காசியுஸ் 485-498 பெத் அட்றேயில் கூடிய சங்கம் நெஸ்ற்தோரியசை ஒரு திருச்சபை பிதாவாகவும் நெஸ்தோரிய விசுவாச கொள்கையை பிரகடனம் செய்து, மேற்கத்தைய திருச்சபையுடன் இருந்த எல்லா உறவுகளையும் முறிக்கக் காரணமாயிற்று.

முதலாம் மிலேனியத்தில் ஆசியா பரந்த நற்செய்தி அறிவிப்பை சீரிய நெஸ்ற்தோரிய மிசனரிகளின் மூலம் பெறலாயிற்று. 6ஆம் நூற்றாண்டில் எழுந்த இஸ்லாத்தின் பரவலாக்கம் சீரிய கிறிஸ்தவத்தை வலு இழக்கச் செய்தது. அது ஏற்படுத்திய கிறிஸ்தவ சபைகளை அழித்தது. இருந்தும் அதன் வேர்கள் அங்கும் இங்கும் தளைத்து நின்றன. குறிப்பாக இந்தியாவில் அதன் ஆதிக்கம் போர்த்துக்கேயர் வருகை மட்டும் அங்கு தளைத்து கிளை பரப்பிய ஓர் சுதேச மண்மயமாக்கப்பட்ட சீரிய - பாரசீக திருச்சபையைத் தோற்றுவித்தது. அதன் கதையையே நாம் பார்த்தோம்.

ஏழு ஆண்டுகள் ஞானதிட்சை பெறாத சுமார் 10,000 குழந்தைகளுக்கும், இன்னும் சில பெரியோருக்கும் ஞானதீட்சை வழங்கினார். ஊர்கள் தோறும் ''ஓலையால் வேய்ந்த ஆலயங்களை எழுப்பினார். சிறுவர்களுக்கு பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தினார்'' ஆலயங்களில் செப வழிபாடு நடத்தவும் மறைக் கல்வி போதிக்கவும் (வேதியர்களை) கணக்குப்பிள்ளை நியமித்தார்.

இக்காலம்தொட்டு பாரசீக திருச்சபை இரண்டாகப் பிளவுபட்டே நின்றது. சுதேச திருச்சபையும் பாரசீகத்திற்கு வெளியே இருந்த சீரியத் திருச்சபையுடன் உறவுகளைக் கொண்ட மாபிரனேற் பிரிவும் 559இல் யாக்கோப் பூர்டானாவுடன் தொடங்கிய பின்னைய பிரிவு சீரியத் திருச்சபையை இரு பகுதிகளாக்கிற்று. அந்தியோக்கியாவின் பிதாப்பிதா, தைகிரிஸ்சில் மாபிரனேற் கத்தோலிக்கோஸ்.

869ஆம் ஆண்டில் (Kaphthurtha) காப்புத்துர்த்தாவில் இவ்விரு பகுதிகளுக்குள்ளும் ஒப்புரவு ஏற்பட்டு ஒப்பந்தம் எழுதப்பட்டது.[41]

## இஸ்லாத்தின் வருகை

632இல் அராபியாவில் இருந்தெழுந்த இஸ்லாம் 633இல் பாரசீக ராச்சியத்தை ஆக்கிரமிக்கத் தொடங்கிற்று. 20 ஆண்டுகள் நீடித்த போரில்

638இல் செலுச்சியா அவர்கள் வசம் ஆயிற்று. 652இல் 3ஆம் யசடேகார்ட் கொல்லப்பட்டதும் முஸ்லிம் கலிபாக்களின் ஆட்சி ஆரம்பமாயிற்று. பல அடக்கு முறைகள் நடைமுறைப்படுத்தப்பட்டன. சிலுவைகள் வெளியே தெரியக் கூடாது, கேளிக்கைக் கொண்டாட்டங்கள், புதிய கோவில்கள் கட்டப்படக் கூடாது, மணிகள், ஒலிபெருக்கிகள் போன்றவை பாவிக்கப்படக்கூடாது போன்ற சட்டங்கள் படிப்படியாக அமுல்ப்படுத்தப்பட்டன. இருந்தும் திருச்சபை வாழ்ந்து வளர்ந்தது.

1258 பக்தாத் குலகுக்கானின் படைகளிடம் வீழ்ந்ததும் பாரசீகத் திருச் சபையின் முடிவு நெருங்கிற்று. மொங்கோலிய தலைவன் கசால்கான் இஸ்லாத் துக்கு மாறியதும் முழு ராணுவமும் மக்களும் இஸ்லாத்தை ஏற்கும்படி நிர்ப் பந்திக்கப்பட்டனர். 1400 ரிமூர் பாரசீகத்திற்குள் நுழைந்தபொழுது கிறிஸ் தவர்கள் ஆயிரக் கணக்கில் கொன்று குவிக்கப்பட்டனர். இஸ்லாத்துக்கு மாற கட்டாயப்படுத்தப்பட்டனர்.

## இந்தியாவும் பாரசீகமும்

தென் இந்திய திருச்சபையை பாரசீக கிறிஸ்தவர்களின் தலைவர்கள் பல தடவைகள் சந்தித்து உறவு கொண்டாடியுள்ளனர். இவர்களில் முதல்வர் மார் டேவிட் 295 - 300, அதன்பின் 345 எடெசாவில் இருந்து வந்து குடியேறிய கானா தொமாஸா மார் யேசப்; பின் 390இல் பக்தாத்தில் இருந்து வந்த மார் யோனன், 600இல் வந்த மார் மரூத்தா முதலியோர் இவ்வுறவுகள். 7ஆம் 8ஆம் நூற்றாண்டில் மலங்காரவில் காணப்பட்ட நான்கு திருச்சிலுவை கல் சிற்பங்களும் பகலாவி மொழி வரையப்பட்ட எழுத்துக்களும், இவை போன்ற சிலுவைகள் 7ஆம் நூற்றாண்டு பாரசீகத்திலும், சென்னை மைலாப்பூரிலும், அனுராதபுரத்திலும் காணப்படுகின்றன.

1498 மே 20இல் இந்தியாவுக்கான கடற்பாதையை வஸ்கொடகாமா கண்டு பிடித்தான். 1510இல் அல்பர் கேக் கோவாவைக் கைப்பற்ற போர்த்துக்கான் காலனித்துவ சாம்ராச்சியத்தின் தலைநகராக்கினான். பழ செங்கடலிலும் பாரசீகுடா பாதையையும் சொக்கோத்தரா ஓர் முஸ்முதலாய கோட்டை களைக் கொண்டு முடக்கினான். 1511இல் மலாக்கா அவர்கள் வசமாயிற்று. 1517இல் தொமஸ் பிராஸ் யப்பான் நாட்டை வந்தடைந்தான். லிஸ்பன் தொட்டு நாகசாக்கி வரை தொடர்பு சங்கிலி இடையிடையே பல கோட்டைகள் இருந்தன. இனி லிஸ்பன் துறை முகத்தினூடாக முழு ஐரோப்பாவுக்கும் கீழ் நாடுகளுக்கும் பாதை திறக்கும்.

## தமிழ் நாட்டில் நற்செய்திப் பணி

1542இல் பிரான்சிஸ் சவேரியார் மனப்பாட்டில் கால் பதித்ததும் தூத்துக் குடிக்கு நடந்து செல்லத் தீர்மானித்தார். 1544ஆம் ஆண்டு வரை இக்கரை ஓரங்களில் பணி செய்தார். இக் கிராமங்களை அவர் தரிசித்த பொழுது அங்கு இருந்த கிறிஸ்தவர்கள் 6, 7 வருடங்களுக்கு முன் ஞானதீட்சையின் பொழுது ஒரு கிறிஸ்தவப் பெயரும் ஒரு போர்த்துக்கேயப் பெயரும் சூட்டப்பட்டனர். இதைத் தவிர கைவி டப்பட்ட ஒரு கூட்டமாகவே அவர்கள் காணப்பட்டனர். "அவர்களுக்கு கோவில்கள் இல்லை, திருப்பலி ஒப்புக்கொடுக்க விசுவாச மந்திரம், அருள் நிறை மரியே, பரலோக மந்திரம், 10 கற்பனைகளைச் சொல்லிக் கொடுக்க

ஒருவரும் இல்லை, அவர்களுக்கும் வேறு மதத்தவர்களுக்கும் வித்தியாசம் கிடையாது'' என்று புனித பிரான்சிஸ் சவேரியார் தன் மடலில் ரோமைக்கு எழுதினார். 1536க்கும் 1537க்கும் இடையில் பிறந்த எல்லாக் குழந்தைகளுக்கும் ஞானதீட்சை கொடுத்தார். சிறுவர் வளர்ந்து அவரிடம் செபம் சொல்லித்தரக் கேட்டனர். அடுத்து வந்த 4 மாதங்கள் தூத்துக்குடியில் செலவிட்டார். முதல் 3 மாதங்களும் சின்னக்குறிப்பிடத்தின் முக்கிய பகுதிகளை தமிழில் மொழி பெயர்க்க கோவாவில் இருந்து தன்னுடன் வந்த மூன்று குரு மாணவர்கள் உதவியுடன் செய்து முடித்தார்.[42]

## தமிழ் நாட்டில் கிறிஸ்தவ விதைப்பு

ஞாயிறு வாரங்களில் அவர் (பிரான்சிஸ் சவேரியார் அடிகள்) கிறிஸ்தவர் களை ஒன்றுகூட்டி, செபங்களை மனனம் செய்விப்பார். முதலில் சிலுவை அடையாளம் வரையச் செய்து மூவொரு கடவுளின் கருத்தைப் பிரதிபலிக்கும் அச்செபத்தின் மூலம் அவர்களது ஆரம்ப விசுவாசத்தை ஆய்ந்து உணரச் செய் வார். பின் விசுவாச மந்திரத்தை ஒவ்வொரு வசனமாக அவர் சொல்லிக் கொடுக்க அவர்களும் சொல்வர். இதன் பின் ஒவ்வொரு வசனத்தையும் விளக்கி கிறிஸ் தவர்கள் அவற்றை எந்தவித ஐயப்பாடுமின்றி ஆழ்ந்து விசுவசிக்க வேண்டும் என்பதை வலியுறுத்துவார். இவையனைத்தும் மொழிபெயர்ப்பாளரினுதவி யுடன் நடைபெறும். பின்னர் சவேரியார் அடிகள், இப்பன்னிரு சத்தியங்களை யும் உண்மையாகவே விசுவசிக்கிறீர்களா? என்று வினாவ, அக்கிறிஸ்தவர்கள் தங்கள் கைகளை நெஞ்சில் குவித்த வண்ணம் தாங்கள் முழுமனத்துடன் விசு வசிப்பதாகக் கூறினர். இதைத் தொடர்ந்து பரலோக மந்திரத்தைச் செபிக்கப் பண்ணி, அவர்களது விசுவாசத்துக்கு இரட்சகர் இயேசுவின் அருளையும் ஆசியையும் வேண்டுவார். இதன் பின் அருள்நிறை மரியே மந்திரத்தை ஓதச் செய்து கிறிஸ்தவர்களின் பாதுகாவலி மரியாளின் அடைக்கலத்தையும் பெறச் செய்வார்.

தொடர்ந்து 'பத்துக்கட்டளைகள்' செபத்தைக் கற்பித்து நல்ல கிறிஸ்தவ னாக வாழ, இக்கட்டளைகளின் வழி நடத்தல் அவசியம் என்பதை வற்புறுத்து வார். ஒவ்வொரு கட்டளைகளையும் விபரமாக எடுத்துக் கூறியபின் அவை அப்புதிய கிறிஸ்தவர்களின் நெஞ்சில் ஆழமாகப் பதியவைக்க ஒரு பரலோக மந்திரமும், ஒரு அருள்நிறை மந்திரமும் சொல்லப்படும். விசுவாச மந்திரமும் பத்துக்கட்டளைகளும் இறைவன் மேல் அவர்களது விசுவாசத்தை ஆழமாகப் பதித்து, அவர்கள் நல்ல கிறிஸ்தவர்களாக வாழ அவை நன்கு துணை செய்யும் என்பதை வற்புறுத்துவார்.

அவர்கள் தங்களது குற்றங்களை உணரவும் அவற்றுக்காக மனம் வருந்த வும் அடிக்கடி பாவசங்கீர்த்தன மந்திரத்தைச் செபிக்கச் செய்வார். இச்செப வேண்டுதல்கள் 'கிருபைதயாபரர்' செபத்துடன் முடிவடையும்.

புனித சவேரியாரின் மறைபரப்பு நடவடிக்கைகளில் சிறுவர்களுக்கு முக்கிய இடமளிப்பார். சிறுவர்கள் மந்திரங்களை இலகுவில் பாடமாக்குவதி லும் அவற்றைப் பெரியோர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதிலும் ஆர்வம் காட்டினர். வீடுகளில் கிறிஸ்தவ வழிபாட்டுக்கும் வாழ்வுக்கும் எதிரான நட வடிக்கைகளை அகற்றவும், குருட்டுப் பக்திகளை களையவும், சகுனம் சாஸ்திரம் முதலிய பொய்த் தேவ நிகழ்வுகளை அறவே ஒழிக்கவும் சிறுவரும் இளைஞரும்

புனிதருக்கு ஒத்துழைப்பு வழங்கினர்.

*1543*, மார்ச், ஏப்பிரல் மாதங்களில் முத்துக்குளிப்பு இடம்பெற்றது. தொடர்ந்து செப்ரெம்பர் வரை தூத்துக்குடியில் தாம் செய்தது போல தந்தை சவேரியார், கிராமம் கிராமமாகச் சென்று சில நாட்கள் ஒவ்வொரு பகுதியிலும் மக்களோடு தங்கி உறவாடி உரையாடி கிறிஸ்தவத்தின் ஆழ்ந்த கருத்துக்களை அவர்களது உள்ளங்களில் பதிப்பார். காலையிலும் மாலையிலும் சிறுவர்களை யும் வேலைக்குச் செல்லாத இளைஞர் பெரியோரையும் மறைக்கல்வி வகுப்பு களுக்கு அழைப்பார். பொழுது சாய்ந்த பின் கிராமத்தின் ஒவ்வொரு பகுதியிலும் ஒரு வீட்டைத் தெரிந்து முற்றத் திலோ அல்லது விறாந்தையிலோ ஞான உபதேச வகுப்புகளுக்காக மக்களை ஒன்று கூட்டுவார். சனிக் கிழமைகளில் பெண்களையும் ஞாயி றுகளில் ஆண்களையும் வளர்ந் தோர், முதியோரையும் திருச்சடங் குகளுக்கும் வழிபாடுகளுக்கும் அழைப்பார்.




தொடர்ந்து விவிலிய வகுப்புக்கள் மூலம் கிறிஸ்தவத்தை அவர்களிடம் நன்கு உறுதிப்படுத்து வார். மதுபோதை, ஒழுக்கவீனம், கூடாநட்பு, விதண்டா வாதம் என்ற பிரச்சனைகளால் அல்லலுறு வோரை அல்லது இத் துர்ப்பழக் கங்களில் ஊறியவர்கள், விடுபட முடியாமல் தவிப்போரை அன்போடு அணுகி, நாளும் பொழுதும் ஆதரவு டன் அப்பழக்கங்களால் ஏற்படக்கூடிய பேராபத் துக்களை உணர்த்தி சிறுகச் சிறுக இத்தீய நடவடிக்கைகளிலிருந்து விடுபடச் செய்வார். வரி வசூலிப்போர், மணியகாரர்கள் செய்யும் அடாவடித்தனங்களை யும் அட்டூழியங்களையும் வன்மையாகக் கண்டித்து இப்பாதகங்களுக்காக நரக நெருப்பில் அவர்கள் அனுபவிக்கப்போகும் கொடுந்தண்டனையை எடுத்துக் காட்டுவார்.

ஒரு கிராமத்தில் தனது மறைக்கல்வித் திட்டம் நிறைவேறியதும் அடுத்த கிராமம் செல்வதற்கு முன் நன்கு எழுதத் தெரிந்தவர்களைக் கொண்டு செபங்கள் அனைத்தையும் பிரதி பண்ணச் செய்து எல்லா மக்களுக்கும் விநியோகித்து தினசரி அவற்றைச் செபிக்கச் செய்வார். ஒவ்வொரு கிராமத்திலும் மக்களை ஒன்று கூட்டி மறைக்கல்வி வகுப்புக்கள் நடத்தவும் சனி, ஞாயிறு சிறு வழி பாடுகளை ஒழுங்கு செய்யவும் தக்க குழுமங்களையும் தலைவர்களையும் நியமிப் பார். குழந்தைகளினதும், சிறுவர்களினதும் ஆன்ம நலம் பாதுகாக்கும் தலைவர் களும் நியமிக்கப்படுவர்.

பாரத குலத்தவர்கள், ஞான முழுக்குப் பெறுவதற்கு முன்பு பல்வேறு அநாகரிக சமயச் சடங்குகளில் ஊறிப் போயிருந்தனர். திருமுழுக்குப் பெற்ற பின்னரும் இத் துர்ப்பழக்க வழக்கங்களை விட்டொழிக்க அவர்கள் விரும்ப வில்லை. புனித சவேரியார் வெகு கண்டிப்பாகக் கிறிஸ்தவ அறநெறிக்கு

விரோதமான அனைத்துக் கேளிக்கைகள், குருட்டாட்டங்கள், அநாகரிக ஆடம்பரங்களை கைவிடச் செய்தார். இக் குற்றங்களுக்கு கடுந்தண்டனை வழங்குமாறு கிராமத் தலைவர்களையும் மணியகாரரையும் வற்புறுத்தினார்.

ஒரு முறை ஒரு கிறிஸ்தவ இல்லத்தில் இவ்வித பொய்த்தேவர் வழிபாடு நடத்தப்பட்டதாகக் கேள்வியுற்ற புனித சவேரியார் அவ்வீட்டைக் கொழுத்தி எரிக்குமாறு கட்டளையிட்டார். குற்றங்களுக்கு கடுந்தண்டனை வழங்கினாலும் குற்றவாளிகளை மன்னிக்கவும், மனிதாபிமான ரீதியில் அவர்களுக்கு உதவி செய்யவும் அவர் பின் நிற்கவில்லை. குடிபோதையில் குற்றமிழைப்போரும் அவரது கடுந்தண்டனைகளுக்குத் தப்பவில்லை.

பாரத குலத்தவர் மத்தியில் புனித சவேரியார் மறைபரப்புப் பணியை ஆரம்பித்த போது தூத்துக்குடியில் மட்டும் ஒரு சிறு கோவில் இருந்தது. இங்கு போர்த்துக்கேய தளபதியும் படையினரும் தங்கள் ஆன்மீகக் குருவால் அருட்சாதனங்களும் வழிபாடுகளும் வழங்கப்பட்டன. ஆயினும் சவேரியாரின் ஆலோசனையில் கிராமந்தோறும் சிற்றாலயங்கள் ஓலைக்கொட்டில்களாகத் தொடங்கப்பட்டன. பாரத கிறிஸ்தவர்களின் விசுவாசவேட்கை இச்சிற்றாலயங்களை வெகு விரைவில் அழகான சிறந்த சிற்றாலயங்களாகக் கட்டுவித்தன. இக்காலத்தில் வேறு பல கிராமங்களுக்கும் சவேரியாரின் உழைப்பினால் கிறிஸ்தவம் பரவிப்பலுகியது.

புனித சவேரியாரின் முத்துக்குளிப்புத்துறையின் மேய்ப்புப் பணி பற்றித் தெரிந்து கொள்ள அக்கால கட்டத்தில் தமிழ் நாட்டின் இறுதித் தெற்குப் பகுதியின் அரசியல் இராணுவ வரலாற்றுச் சுருக்கத்தையாவது அறிந்திருக்க வேண்டும். 1541 ஜனவரி தொடக்கம் உன்னிக்கேரளா திருவேதி என்றழைக்கப்படும் ராமவர்மா, திரு வாங்கூரின் வடபகுதி (குயிலோன்வரை) யையும் நாஞ்சிநாடு, தெற்குத் திருநெல் வேலியையும் ஆட்சி செய்தான். அவனது சகோதரன் மார்த்தாண்டன் 1544 ஜனவரி முதல் திருவாங்கூரின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். ஒரு பாண்டிய இளவரசனான வெட்டும்பெருமாள், கயத்தாறு (தென்காசி) பகுதியையும் 1543இல் இருந்து குன்சேகர பராக்கிரமன் பாண்டிய இராச்சியத்தையும் அரசாண்டனர். தூத்துக்குடியும் சுற்றியுள்ள கிராமங்களும் வெட்டும் பெருமாளின் ஆட்சிக்குட்பட்டிருந்தன. இவ்வாட்சியாளர்களுக்கிடையே பிரச்சினைகளிருக்கவில்லை. எனினும் தங்களுக்கிடையே போர் மூண்டால் போர்த்துக்கேயரின் இராணுவ உதவியைப் புனித சவேரியார் மூலம் பெறலாம் என்ற நம்பிக்கை இவர்களிடையே நிலவியது.

வண.ஸ்குருகமர் கூற்றுப்படி, வெட்டும் பெருமாள், உன்னிக்கேரளா திருவேதியின் நாடுகள் மீது படையெடுத்தான். உன்னிக்கேரளா திருவேதி விஜய நகர் அரசன் ராமராவின் உதவியை நாடினான். வித்தாகலா, அவனது சகோதரர் சின்னதிம்மன் ஆகியோரின் தலைமையில் ஒரு படை அனுப்பப்பட்டது. இப்படையின் அதிரடிப்படையணியான படகர்கள் கொமோரின்குடாவரை படையெடுத்து கிறிஸ்தவ கிராமவாசிகளைப் பல்வேறு வழிகளில் துன்புறுத்தினர். ஏனெனில் இக்கிராமத்தினர் போர்த்துக்கேயரால் திருமுழுக்குக் காட்டப்பட்டு கிறிஸ்தவத்தை அனுசரிக்கத் தொடங்கியிருந்தனர். கலாநிதி ஏ.கிருஷ்ணசுவாமி அவர்களது ஆய்வுகள் "விஜய நகரிலிருந்த படையணி தெற்கே தென்காசியின் பாண்டிய அரசனுக்கு உதவுமுகமாகவும், வெட்டும் பெருமாள், திருவேதி ஆகியோருக்கு எதிராகவும் அனுப்பப் பட்டன" எனத் தெரிவிக்கின்றன. படகர்

படையணி கிறிஸ்தவ பரத குலத்தவர்களை கொமோரின் குடாவுக்கண்மையில் தாக்கி ஏராளமானோரை சிறை பிடித்துச் சென்றமைக்கு பல ஆதாரங்கள் உண்டு. தப்பிய கிறிஸ்தவர்கள் தங்கள் கட்டு மரங்களில் குன்றுகளடர்ந்த குட்டித்தீவு களுக்கு ஓடினர். எனினும் பசியாலும் தாகத்தாலும் வருந்தி ஒருவர் பின் ஒருவராக பரனுலகெய்தினர். (1544 யூன் முற்பகுதி)

இது பற்றி புனித சவேரியார் அறிந்ததும் உடனடியாக மணப்பாடு சென்று அகதிகளுக்குத் தேவையான உணவு, குடி நீர் முதலியவற்றை சில படகுகளில் அனுப்பி வைத்தார். எனினும் இத் தீவிர நடவடிக்கையை வடமேற்கு பருவக் காற்று பலமாக வீசத் தொடங்கியதால் ஒரு வாரத்தின் பின் கைவிட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. எனவே வேறு வழியின்றி உணவுப் பொருட்களைத் தம் தோளில் சுமந்த வண்ணம் சவேரியார் கால்கடுக்க நடந்தே சென்று அகதி களைப் பராமரித்தார். ஒரு மாத காலமாக அகதிகளுடன் தங்கியிருந்து அவர்களது தேவைகளுக்காக நாள்தோறும் செல்வந்தர்களிடம் சென்று யாசித்து வருவார். மனிதாபிமானமிக்க இப் பணியில்அவர் சில இடையூறுகளையும் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. ஒரு முறை படகர்கள் கொமோரின் முனைக்கு எதிர்ப்புற மாக ஆயுதபாணிகளாகச் சென்று கிறிஸ்தவர்களைத் தாக்குவதாகச் செய்தி கிடைத்தது. உடனடியாக சவேரியார் அவ்விடத்துக்கு விரைந்து சென்றார். அஞ்சா நெஞ்சுடன் அக் கொடியவர்கள் முன் சென்று அவர்தம் பயங்கரவாதத்தைப் பலமாகக் கண்டித்தார். அப்புனிதரின் அஞ்சாநெஞ்சமும் கண்டன மொழிகளும் ஆயுதபாணிகளைப் புறமுதுகிட்டோடச் செய்தன. தொடர்ந்து அங்கிருந்த கிறிஸ்தவர்களையும் அவர் தம் உடமைகளையும் பாதுகாப்பான இடங்களுக்கு கொண்டுபோய்ச் சேர்த்த பின்னரே சவேரியார் இளைப்பாறினார்.

எனினும் இவ்வித தாக்குதல்கள் தொடர்ந்தும் எதிர்பார்க்கப்பட்ட படியால் புனித சவேரியார் அவைகளை எதிர்கொள்ள முன்கூட்டியே நட வடிக்கைகள் எடுத்தார். மணப்பாட்டின் வடபகுதியிலிருந்த பரதகுலக் கிராமங் களில் வதிவோர் தென் பகுதியிலுள்ள தம் சகோதர குடும்பங்களுக்கு அவசிய மேற்பட்டவுடன் உதவும்படி படகுகள், உணவு, ஆயுதங்களையும் போர் வீரர் களையும் தொண்டர்களையும் எந்நேரமும் தயார் நிலையில் வைத்திருக்க வழிவகுத்தார். தூத்துக்குடியிலுள்ள போர்த்துக்கேய தளபதிக்கு விண்ணப்பித்து அகதிகளைப் பாதுகாக்க ஒரு படகு நிறைந்த போர் வீரரைப் பெற்றுக் கொண் டார். போர்த்துக்கேய தளபதி தனது நண்பனான திரிவேதியுடன் தொடர்பு கொண்டு இப்பிரச்சினைக்கு ஒரு சுமுகமான முடிவை நல்கினார். (ஆகஸ்ட் 1544)

உன்னிக்கேரளா திரிவேதிக்கும் சவேரியாருக்குமிடையே நல்லுறவு ஏற் பட்டது கண்டு ஆத்திரங்கொண்ட வெட்டும் பெருமாள் தனது அதிரடிப் படை யணியை தூத்துக்குடிக் கிறிஸ்தவர் மேல் ஏவிவிட்டான். செப்டம்பர் 5இல் இப் பயங்கர செய்தி சவேரியாருக்குக் கிடைத்தது. போர்த்துக்கேய தளபதி, வீரருட் பட கிறிஸ்தவரும் பாதுகாப்பை நாடி தூத்துக்குடிக்கு அண்மையிலுள்ள சிறு தீவுகளுக்கு அடைக்கலந்தேடி ஓடி ஒளிந்தனர். ஆகவே உணவு, குடிதண்ணீர் முதலியன அவசரமாக பெருமளவில் தேவைப்பட்டது. சவேரியார் புன்னைக் காயம், கோம்புத்துறை, வேம்பாறு என்னுமூர்களிலுள்ள கிறிஸ்தவர்களின் உதவியால் படகுகளில் அத்தியாவசியப் பொருட்களைக் கொண்டு சென்றார். வேறு பல சில்லறைப் பிரச்சினைகள் தலையெடுத்தபோதும் சவேரியார் சாமர்த்தியமாக அவைகளைச் சமாளித்தார்.

இம் மீனவக் குடியேற்றங்களில் தமது மேய்ப்புப்பணி, நற்செய்திப் பணி களை நிறைவு செய்து வெளியேறும் போது சவேரியார் தம் பணிகளைத் தொடர்ந்து ஆற்றுவதற்குத் தகுதியான ஆட்களை நியமித்தார். பிரான்சீஸ் கொயெல்கோ, மனுவல், கஸ்பார் என்ற மூன்று சுதேசிக் குருக்களிடம் இப் பணிகளின் மேற்பார்வையை ஒப்படைத்தார். மன்சில்கள் என்ற யேசுசபைக் குருவும் யுவான் டி லிஸானோ என்ற ஸ்பானிய குருவும் அவர்களுக்கு உதவ வந்து சேர்ந்தனர். போர்த்துக்கல் அரசுக்கு பாரத குலத்தவர்கள் வருடந் தோறும் திறையாக வழங்கும் **4000** தங்கப் பவுண்கள் இனிமேல் மறைபரப்புப் பணியாளர்களின் செலவீனங்களுக்காகத் தரப்பட வேண்டும் எனவும் அரசுக்கும் சவேரியாருக்குமிடையே உடன்பாடு காணப்பட்டது.

இனி சவேரியாரின் நற்செய்திப் பரப்பு முறையை ஆராய்வது தகுந்தது. தனிப்படவும், குழுக்களாகவும் இயேசுவையும் அவர் போதனைகளையும் திருச் சபையின் விதி முறைகளையும் சவேரியார் போதிப்பார். பின் அனைவருக்கும் திருமுழுக்குக் காட்டுதல் சடங்கை நிறைவேற்றுவார். திருச்சபையில் அங்கம் வகிக்க இவ்வருட் சாதனத்தின் அவசியத்தை வற்புறுத்துவார். புதுக் கிறிஸ்த வர்கள் ஆரம்ப செபங்களையும் விசேடமாக விசுவாச மந்திரத்தையும் பத்துக் கட்டளைகளையும் நன்கு மனப்பாடம் செய்யவும் அடிக்கடி பக்தி உணர்வுடன் அச் செபங்களை ஓதவும் தூண்டுவார். சில தடவைகளில் அவர் ஏக காலத்தில் பலநூறு மக்களுக்கே (சலிக்காது, களைக்காது) திருமுழுக்குக் காட்டியுள்ளார்.

முக்குவர் என்ற இனத்தவரிடையில் அவரது மறைபரப்புப் பணியில் மிக அதிக ஆன்மாக்களைத் திருச்சபைக்குத் தேடித்தந்தார். **1544**இல் நவம்பர், டிசம்பர் மாதங்களில் பத்தாயிரத்துக்கும் அதிகமான முக்குவ இனத்தவர் இயே சுவின் சீடராகினர். சவேரியார் இவ்விதம் தீவிரமாக மறைபரப்புப் பணியை நடத்தி திரளான பேர்களை ஒரே நேரத்தில் ஞான முழுக்காட்டியமைக்குக் காரணிகளைக் குறிப்பிடுகின்றார்.

1. இஸ்லாமிய மதம் அக்கால கட்டத்தில் இந்தியாவெங்கும் வேகமாகப் பரப்பப் பட்டது.
2. ''விசுவாசித்து திருமுழுக்குப் பெறுபவன் இரட்சிக்கப்படுவான்'' என்ற நற் செய்தி வாசகத்தில் புனித சவேரியார் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார்.

மீனவ குலத்தவர்களை கிறிஸ்தவர்களாக்கியமை வேகமான செயலாக மட்டு மல்ல பின்னர் திருச்சபைக்கு ஆழமான அடித்தளமாகவும் விளங்கியது. மன்னாரில் பலநூறு கிறிஸ்தவர்கள் யாழ்ப்பாண மன்னனால் இயேசுவின் இரத்த சாட்சிகளாக்கப்பட்டமை சவேரியாரின் அல்லது அவரது சீடரின் காத்திரமிக்க போதனைகளின் அறுவடையல்லவா? சக கிறிஸ்தவர்களை மட்டு மல்ல கோவில்களையும் அவற்றின் உடமைகளையும் காப்பதற்காக இரவும் பகலும் ஆயுத பாணிகளாக காவல் காத்தும், போர் நேர்ந்தால் வீராவேசத் துடன் மோதியும் இயேசுவுக்கு சாட்சி பகர்ந்தவர்களல்லவா இச் சவேரி யாரின் உருவாக்கங்கள்.

**1551**இன் இறுதியில் படகர் போர்வீரர்கள் போல் தோவேல் என்ற குருவைச் சிறைப்பிடித்துச் சென்ற போது பரவ குலவீரர்கள் ஆயுத பாணிகளாக கோட்டையைத் திடீரெனத் தாக்கி, அதிரடிப்போர் நடத்தி குருவைச் சிறை மீட்டு வந்தனர்.

புனித சவேரியாரின் மறை பரப்புகை மிக வேகமானதாயிருந்தது. 1544 நவம் பர், டிசம்பர் மாதங்களில் கரையோரப் பகுதியிலுள்ள முக்குவப் பகுதியில் ஏறத்தாழ பத்தாயிரம் ஆன்மாக்கள் திருமுழுக்குப் பெற்றனர். இவரது வேகர மான மறை பரப்புதலுக்கு முக்கியதோர் காரணம்; அக்காலத்தில் இக்கரை யோரப் பகுதிகளில் இஸ்லாமிய மதம் முழு மூச்சுடன் பரப்பப்பட்டது. எனவே கிராமம் கிராமமாகச் சென்று பெருந்திரளானோரை அவர்களது ஓய்வு நேரங்களில் ஒன்று கூட்டி போதித்து திருமுழுக்குக் காட்டிய பின் தமது உதவியாளர்களான குருக்கள், போதகர்கள், உப தேசிமாரிடம் அம் மக்களுக்கான ஆன்மீக மேற் பார்வையை ஒப்படைத்து பின் அடுத்த கிராமம் செல்வார்.

அவரது அயராத வேத போதகத்தில் பரவ குலத்தவரின் மனந்திரும்புகை ஒரு முக்கிய கட்டமாகும். மன்னாரில் கத்தோலிக்கத்துக்கு மாறிய மீனவர் களின் பெரும் கூட்டத்தை யாழ்ப்பாண மன்னன் ஈவிரக்கமின்றி வாளுக்கிரை யாக்கினான் என்ற பயங்கரச் செய்தி கேட்டு இப்பரத குலத்தோர் அஞ்சவில்லை, திடுக்கிடவில்லை. தமது புதிய விசுவாசத்துக்கு இடையூறு நேரிடுமானால் இரட்சகர் இயேசுவுக்கு பிரமாணிக்கமாக உயிர் கொடுக்கவும் தயாரென ஒரு வாய்ப்பட மொழிந்தது புனித சவேரியாருக்கு மகிழ்ச்சியையும் மனநிறை வையும் கொடுத்தது. தங்கள் குலத்தவர் மீதோ அல்லது புதிதாக அமைக்கப் பட்ட ஆலயங்கள் மீதோ எதிரிகளால் நள்ளிரவு வேளைகளில் தாக்குதல் நடத்தப்படினும் தயாராயிருக்க வாள் முதலிய படைக்கலங்களை தலை யணைக்குள் வைத்துக் கொண்டு நித்திரை செய்தனர். முறை போட்டுச் சாமக் காவல் காத்தனர். தம் குருக்களுக்காகப் போராடவும் பரத குல மக்கள் தயங்க வில்லை. (உ+ம்) 1551ஆம் ஆண்டின் இறுதியில் படகர் படையணியினர் போல் தே வேல் என்ற குருவைக் கைது செய்து காவலில் வைத்தபோது தெரிந் தெடுக்கப்பட்ட வீரர்களைக் கொண்ட ஒரு பரதகுலப் படையணி, ஆயுதபாணிகளாகச் சென்று அஞ்சா நெஞ்சுடன் போராடிக் குருவைச் சிறை மீட்டு வந்தது.[43]

புனித சவேரியாரின் இவ் வேகரமான மறை பரப்புப்பணிக்கு அவர் முன் னோடி விருது வாக்கியமாகத் தெரிந்து கொண்ட விவிலிய வாக்கு "நம்பிக்கை கொண்டு திருமுழுக்குப் பெறுவோர் மீட்புப் பெறுவர்." (மாற்கு 16:16)

## கென்றிக்குஸ் அடிகளின் மறை பரப்புகை

பதினாறாம் நூற்றாண்டின் இறுதிக் கால கட்டத்தில் வலிக்ஞானோ என்ற யேசு சபைத் தரிசகர் இந்தியாவின் தென்கீழ் பகுதிகளுக்கும் கத்தோலிக்க கணக் காய்வு செய்யச் சென்றார். முத்துக்குளிப்புத் துறைகள் எனச் சிறப்புப் பெயரால் அழைக்கப்படும் இப்பகுதியில் மணப்பாடு முதல் வேம்பார்வரை வாழ்ந்த மக்களின் கத்தோலிக்க மக்களின் விசுவாசம் அனைத்து இந்திய கத்தோலிக் கரிடையிலும் தனித்துவம் வாய்ந்ததென தமது ஆய்வறிக்கையில் குறிப்பிட்டுள் ளார். அயராமலும் சலிப்பின்றியும் ஐம்பதாண்டுகளுக்கு மேலாக இப்பணியிலு ழைத்த கென்றி கென்றிக்குஸ் அடிகளே இதற்கு மூலகாரணர்.

புனித பிரான்சிஸ் சவேரியார் இங்கு தனது விசுவாச வித்துகளை விதைத்து அவை பல்லாயிரம் முளைகளாக அரும்பத் தொடங்கும் போது மலாக்காவுக் குச் செல்லுமாறு பணிக்கப்பட்டார். எனவே தாம் தொடங்கிய பாரிய பணியை அந்தனி கிரிமினலி என்ற வேத போதகரிடம் ஒப்படைத்தார். கிரிமினலியே

தமிழ் மொழியையே பேசவும் எழுதவும் கற்றுக்கொண்ட முதல் மிசனரிக் குரு. ஓராண்டின் பின் கென்றி கென்றிக்குஸ் அடிகளும் வேறு சில குருக்களும் அவரது பணியின் பொறுப்புக்களில் பங்கு கொண்டனர். **1548** ஜனவரி, பெப்ரவரி மாதங்களில் புனித சவேரியார் இப்பகுதிகளின் வேதபோத அலுவல் களை ஆய்வு செய்ய வந்திருந்தார். அவர் கிரிமினலி அடிகளை இப்பகுதியின் குரு முகாமையாளராக நியமித்தார்.

அக்காலத்தில் குருக்களுக்கு உதவியாகக் கையாளப்பட்ட லத்தீன் - கிரீக் இலக்கண நூலுக்கு ஒத்ததாக ஒரு தமிழ் இலக்கண நூலை ஆக்குமாறும் புனித சவேரியார் கென்றிக்குஸ் அடிகளைப் பணித்தார். அடிகளார் ஓராண்டு காலத்தில் தமிழ் மொழியை ஐயந்திரிபறக் கற்று வெகு சிறப்பாக பேசவும் எழுதவும் வல்லவரானார். **1549**இல் படக துருப்புகளுக்கும் போர்த்துக்கீசருக்கு மிடையே நடந்த கடுஞ் சமரில் கிரிமினலி அடிகள் கொல்லப்பட கென்றிக்குஸ் அடிகள் சக குருக்களால் குருமுதல்வராகத் தெரியப்பட்டார். புனித சவேரிய ரால் இத் தெரிவு உறுதிப்படுத்தப்பட்டது.

கென்றிக்குஸ் அடிகளாரிடம் தொடக்கத்திலிருந்தே தூத்துக்குடி, புன்னைக்காயல் மறை மாவட்டங்கள் ஒப்படைக்கப்பட்டிருந்தன. தொடர்ந்து கொம்புத்துடறையும் அவர் பொறுப்புக்குள் விடப்பட்டது. முறையே ஒன்பது நாட்களுக் கொருமுறை இப் பகுதிகளைத் தரிசிப்பார். ஆரோக்கிய வசதிகளற்ற இப் பகுதிகளில் போதிய பராமரிப்பின்மையால் சிசுக்கள் திருமுழுக்கின்றியே மரணமடைவது மிகக் கூடுதலாகவிருந்தது. மேலும் கென்றிக்குஸ் அடிகளைப் போல் அவரது துணைக் குருக்களோ உபதேசிமார்களோ முதலுதவிச் சிகிச்சை களில் கைதேர்ந்தவர்கலல்லர். எனவே தான் இப்பகுதிகளுக்கு ஒன்பது நாட்களுக்கொருமுறையாவது செல்ல வேண்டியது அவசியமாயிற்று.

தொடர்ந்து வலிப்பார் வேம்பார் பகுதிகளும் அவரது மேற்பார்வையில் அடங்கின. பின்னர் சுதேச குருக்கள் அவரது பாரிய மறை போதக பணிகளில் கை கொடுத்துதவினர். (எனினும் சிலர் அமைச்சலீனமும் காட்டினர்.)

புனித சவேரியாரின் அயராத மறையலுவல்களை கென்றிக்குஸ் அடி களும் பின்பற்றினார். மாலையில் சிறுவருக்கும் காலையில் சிறுமியருக்கும் மறைக் கல்வி வகுப்புக்களை நடத்தினார். வளர்ந்தோருக்காக சனிக்கிழமைகளில் பெண்களுக்கும், ஞாயிறுகளில் ஆண்களுக்கும் ஞான உபதேசம் அளிக்கப் பட்டது. இதற்கான துணை நூல்களை புனித சவேரியார் மலாக்காவிலிருந்த போது தயாரித்திருந்தார். அவை தமிழில் தயாரித்தவர் வண. பிரான்சீஸ் கொனல்கோ புதுக் கிறிஸ்தவர்கள் வழிபாடுகளுக்கும் மறைக்கல்வி வகுப்புக் களுக்கும் ஒழுங்காகச் செல்வது கவனிக்கப்பட்டது. ஞாயிறு கடன் திருநாட் களின் அனுசரணை கண்டிப்பாகக் கவனிக்கப்பட்டது.

**1549**களிலேயே முத்துக்குளிப்புத் துறைகளின் கிறிஸ்தவர்கள் பாவசங் கீர்த்தன அருட்சாதனத்தைப் பெறத் தொடங்கினர். ஏனெனில் அதற்கு முன்னர் பணியாற்றிய குருக்கள் தமிழில் சரளமாகத் தொடர்பு கொள்ளும் அறிவற்றவர் கள். கென்றிக்குஸ் அடிகளிலிருந்தே பச்சாத்தாப வழிபாடும் பாவசங்கீர்த்தனம் செய்தலும் அமுலுக்கு வந்தன. தூத்துக்குடியிலே முதலில் ஆரம்பமாகியது. கிறிஸ்தவர்கள் வெகு ஆவலோடு (தூத்துக்குடியிலே) பாவசங்கீர்த்தனம் செய்யச் சென்றனர். ஏனைய கிராமத்தவர்கள் தங்களுக்கும் இவ்வருட்சா தனத்தை வழங்குமாறு முறையிட்டனர்.

கென்றிக்குஸ் அடிகள் மற்றொரு அத்தியாவசிய பணியிலும் தலையிட வேண்டியதாயிற்று. புனித சவேரியாரும் அவரது துணையாளரும் ஆரம்பத்தில் தமிழில் வெளியிட்ட செபங்களில் பல இலக்கண வழுக்கள் காணப்பட்டன. கென்றிக் குஸ் அடிகள் அவைகளைத் திருத்தி அழகு தமிழில் அமைத்தார்.

1551இல் கரையோரமாக 30 ஆலயங்கள் இருந்தன. அவை பார்ப்பதற்கு எளிமையானவை. இடவசதி தாராளமாக இருந்தது; ஓலைகளால் வேயப்பட்டி ருந்தன; களிமண்ணும் மரத்தடிகளுமே சுவர்கள். இருபத்தைந்து ஆண்டுகளுக் குப் பின் வந்த அறிக்கைகளிலும் ஒரு சிறுமாற்றமே தெரிந்தது. அவ்வாலயங் கள் மிகத் தூய்மையுடையவையாகப் பாதுகாக்கப்பட்டிருந்தன. சுரூபங்களுக்கு நகைகள் போடப்பட்டிருந்தன.

1571இல் கற்களால் ஆலயங்களை அமைக்கத் தொடங்கினர். அதுவும் மன்னாரில்தான் 1581இல் மணப்பாட்டில் ஒரு அழகான தேவாலயம் கற்க ளால் கட்டப்பட்டது. கிறிஸ்தவரல்லாதாரும் இவ்வாலய கட்டுநிதிக்கு தாராளமாக நிதியுதவி வழங்கினரென்றும் ஆயிரம் பரடோஸ் செலவாகிய தென்றும் அறிக்கைகள் தெரிவிக்கின்றன.

பதினாறாம் நூற்றாண்டின் நடுப்பகுதியளவில் எல்லா மீனவக் கிராமங் களும் கிறிஸ்தவத்தைத் தழுவிக்கொண்டன. எனினும் வயது வந்தவர்களின் (வயோதிபர்) மதமாற்றம் மெதுவாக சென்றது (பழமை தழுவும் விடாப்பிடி யான கொள்கை காரணமாகலாம்) கிறிஸ்தவர்களின் வீடுகளில் இருந்த அடிமை கள் அனைவரும் மதமாற்றம் செய்யப்பட்டனர். இந்த மதமாற்றங்களுள் மிக முக்கியமாக குறிக்கப்படுவது புன்னைக்காயலில் 1550இல் கென்றிக்குஸ் அடி களால் திருமுழுக்காட்டப்பட்ட ஒரு இந்துமத 'யோகியாகும்'. இவர் வேம் பார் கிராமத்தவர். நன்கு கற்றவர். இந்துக்களால் நன்கு மதிக்கப்பட்டவர். சிலை வழிபாடுகளையும் குருட்டு நம்பிக்கைகளையும் வெறுப்பவர். 1548 தொடக்கம் கென்றிக்குஸ் அடிகள் இந்த யோகியுடன் தொடர்பு கொண்டிருந்தார். அவரது மதமாற்றம் இந்துக்களைப் பெரும் தடுமாற்றத்துக்குள்ளாக்கியது. தூய ஆவியின் திருநாளன்று கோலாகலமாக நடைபெற்ற திரு முழுக்கின் போது போர்த்துக்கேய தளபதியே ஞானத் தந்தையாக இருந்தார்.

1549 லிருந்து இல்லறத் தொண்டர்கள் முறையை கென்றிக்குஸ் அடிகளார் நடைமுறைக்கு கொண்டுவந்தார். இவர்கள் நல்ல கத்தோலிக்கர்களாகவும், திருச்சபைத் தலைவர்களுக்கு பிரமாணிக்கமுள்ளவர்களாகவும் விளங்க வேண்டும். குருக்களுக்குப் பதிலாக - அவர்களுக்கு உதவியாக இயேசுவின் நற்செய்தியைப் போதித்தும் கிறிஸ்தவர்களை வழிநடத்தியும் மறைக்கல்வியை போதித்தும் அருட்சாதனங்களை பெறுவதற்கு கிறிஸ்தவர்களை ஆயத்தப் படுத்தியும் உதவுவார்கள். இவர்களுக்கு வேதனமளிக்கப்படமாட்டாது (இன்று மறையாசிரியர்கள் இல்லறத் தொண்டர்கள் என்ற பதவிகளில் இயங்குபவர் போல) நோயாளிகளான குழந்தைகளுக்கும் இறக்கும் சந்தர்ப்பத்தில் கிறிஸ்த வத்தில் சேரவிரும்புவோருக்கும் திரு முழுக்காட்டவும், கிறிஸ்தவ குடும் பங்களுக்கிடையேயும் சிறு சிறு பிரச்சனைகளுக்கு தீர்வுகாணவும், சிறு சிறு குற்றங்களுக்கு மன்னிப்பு வழங்கவும் இவர்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. 1550 இவ்வித அதிகாரங்கொண்ட 10 தொண்டர்கள் பணியாற்றினர். தங்களது கௌரவ நடத்தையாலும் நற்பண்புகளாலும் பிரமாணிக்க ஊழியத்தாலும் இவர்கள் நன்மதிப்புப் பெற்றதுடன் கிறிஸ்தவர்களுக்கு நல்ல முன்மாதிரி

யாளர்களாகவும் விளங்கினர். திருச்சபை அதிகாரிகளின் கட்டளை எதுவாயி ருப்பினும் நிறைவேற்ற ஆயத்தமாயிருந்ததுடன் கிறிஸ்துவுக்காகத் தமதுயிரை முதலாய்க் கொடுப்பதற்கும் தயாராயிருந்தனர். சில தடவைகளில் வேதபோத கர்கள்கூட இத்தொண்டர்களின் அப்பழுக்கற்ற சேவையையும் அவர்களில் விளங்கிய புண்ணியசாங்கோபாங்க அறநெறி வாழ்வு முறைகளையும் கண்டு பாவித்தனர் எனக் கூறப்படுகிறது. கத்தோலிக்க மத வாழ்வில் ஒரு புரட்சிகர மாற்றத்துக்கு இவர்கள் காரணிகளாயிருந்தனர். 1552 களிலிருந்து சிறிது காலத்துக்கு மீனவக் கரையோரக் குழுமங்களில் இரண்டே இரண்டு கத்தோலிக்க குருக்களே பணி யாற்ற வேண்டியிருந்த போதும் திருச்சபை எவ்விதமும் பாதிக்கப்படாதபடி இவ் இல்லறத் தொண்டர்கள் வியத்தகு முறையில் பணியாற்றினர். இத் தொண்டர் கள் இவ்வளவு தூரம் நற்பணியாற்றியமைக்கு இவர்களது தேர்விலும் பயிற்சியி லும் மிகக் கடுமையாக செயலாற்றிய கென்றிக்குஸ் அடிகளே மூல காரணியாவார்.

எனினும் ஏனைய எல்லாக் கிராமங்களுக்கும் மறைக்கல்வி போதிக்க இத் தொண்டர்களால் இயலாதாகையால், விசேட பயிற்சி பெற்ற இளம் வாலிபர்கள் இத்தொண்டை நிறைவேற்ற அனுப்பப்பட்டனர். இவ்வாலிபர்கள் நற்பண்பு களையுடையராதலால் கிராம மக்களிடையே உறவாடி நற்செய்தியை உரை யாடுவது நற்பயனையளித்தது. வயது வந்த சில கிராமவாசிகளுக்கு இந்த இளை ஞர்களைக் கண்காணிக்கும் பொறுப்பு வழங்கப்பட்டது.

1550களில் மரியாள் தூய ஆவியால் இரட்சகரைக் கருத்தரித்தாள் என்ற உண்மையை கென்றிக்குஸ் அடிகள் வெகு தெளிவாக மக்களை கிராமந்தோறும் சென்று சந்தித்து விளக்கினார். தொடர்ந்து அடுத்த வருடம் மூவொரு கடவுளின் ஒற்றுமையும் செயல்பாடும் விளக்கப்பட்டது. 1858களில் பரத மீனவ குலத்த வர்கள் இவ்விரு விசுவாச சத்தியங்களில் நன்கு பரிச்சயமுடையோர் ஆகினர்.

கென்றிக்குஸ் அடிகளின் விளக்கவுரைகளுடன் உலக படைப்பு, தூதர் நியமனம் மற்றும் முக்கிய கத்தோலிக்க உண்மைகள் அடங்கிய நூல்கள் வெளி யாயின. கிறிஸ்துவின் பிறப்பு, வாழ்வு, போதனை, சாதனை, இறப்புப்பற்றிய நூல் தொடர்ந்து வெளியிடப்பட்டது. இதனை மக்கள் மனதில் நன்கு பதிக்குமுக மாக கிறிஸ்துவின் வாழ்வு, பாடுகளில் பல காட்சிகள் கன்வஸ் துணிகளில் வரையப்பட்டு கிராமங்களில் பிரதான பகுதிகளில் தொங்கவிடப்பட்டன.

1552 களில் கென்றிக்குஸ் அடிகளார், புனித இக்னேசியஸ் லெயலாவுக்கு (இயேசு சபை நிறுவனர்) எழுதிய திருமடல் ஒன்றில் தென்னிந்தியாவின் கரை யோரப் பகுதிகளில் வதியும் மீனவக் கிறிஸ்தவர்கள், தங்கள் விசுவாசத்தை ஆழ மாக மனதில் பதித்து கிறிஸ்தவத்தை நன்கு வாழ்ந்து வருகிறார்கள். குருக் களுக்கு உதவியாளரான சகலவகைத் தொண்டர்களும் பிரமாணிக்கமாகப் பணியாற்றி அர்ப்பண வாழ்வை அனுசரிக்கிறார்கள். இவ்விருபகுதியினரும் இரட்சகர் இயேசுவுக்காக சகல துன்பங்களையும், மரணத்தையும் ஏற்றுக் கொள்ள ஆயத்தமாயிருக்கிறார்கள். இவர்களை பாதுகாக்கவோ உதவி வழங்கவோ இனிமேலும் போர்த்துக்கேய படைகளுக்கு கடமை இல்லை என உறுதியுடன் தெரிவித்தார். கென்றிக்குஸ் அடிகளின் கணக்காய்வுக்கிணங்க, மீனவக் கத் தோலிக்கரின் எண்ணிக்கை நாற்பதினாயிரத்துக்கும் அதிகமாகும்.

இக்கிறிஸ்தவர்கள் தமிழில் பரவலாக அருள்நிறை விசுவாச மந்திரங்களை நன்கு மனனம் செய்தவுடன் பிழையின்றி உச்சரிக்கவும் அவை கூறும் சத்திய

உண்மைகளை தியானித்து செபிக்கவும் அறிந்திருந்தார்கள். இவர்களில் பலர் ஏனைய செபங்களை அறியவும், கற்கவும் ஆர்வம் காட்டினார்கள். இக் குடும்பங்களிலிருந்து திறன் மிக்க சிறுவர்கள் உயர்கல்விக்காக, கோவா அல்லது குயிலன் நகர்களுக்கு அனுப்பப்பட்டனர். நல்வாழ்வின் இலக்கணத்தையும், இலட்சியத்தையும், பொறுப்புணர்வையும் நன்கு அறிந்தவுடன் உயர்கல்வியை யும் பெற்ற இப் பையன்கள் வளர்ந்து, நற்பண்பியல்புகள் நிறைந்த தலைவர் களாக தங்கள் கிராமங்களுக்குத் திரும்பி, பத்தாம் பசலிக் கொள்கைகளை தம் மக்களிடமிருந்து அகற்றி கிராமோதய எழுச்சிக்கும் ஒற்றுமை வாழ்வுக்கும் குழும வளர்ச்சிக்கும் உறுதுணையாயிருந்தனர்.

மிக நெருங்கிய உறவினருடன் திருமணம் செய்வது மீனவக் குடும்பங் களில் தொன்றுதொட்டு நிலவிவந்த ஒரு பழக்கம். ஆயர்களின் அனுமதியை மீறியே இவை இடம்பெற்றன. கென்றிக்குஸ் அடிகள் மீனவரின் வாழ்க்கை முறைகளை பொறுமையுடன் ஆய்வு செய்தார். முதலாவது இரத்த உறவில் திருமணம் செய்தலை மட்டும் கண்டிப்பாக தடுக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார். மூன்றாம், நான்காம் இரத்த உறவுத் திருமணங்களுக்கு ஆயரின் அனுமதி அவசியமற்றது. இரண்டாவது இரத்த உறவுக்கே தகுந்த காரணங் களுடன் அனுமதி வழங்கப்படுமென விதி செய்தார். புது வேதக் கிறிஸ்த வர்கள் மீது அளவுக்கு மீறிய சட்ட திட்டங்களைச் சுமத்தக் கூடாதென்பது அடிகளார் கருத்து.

ஏனைய பிரச்சினைகள், நடைமுறைககளிலும் கடும் விதிமுறைகளைத் திணிக்க அடிகளார் விரும்பவில்லை. உதாரணமாக ஆண்டுக்கு ஒரு முறை யேனும் நல்ல பாவசங்கீர்த்தனம் செய்ய வேண்டும் என்ற திருச்சபைக் கட்ட ளையை குருமார் மிகக் குறைவாயிருந்த காரணத்தால் அதிகமாக அமுல்படுத்த வில்லை. சட்டவிரோத திரும்ணங்களுக்கு மிக இலகுவான தண்டனைகளே தரப்பட்டன. கடன் திருநாட்கள் மிகக் குறைவு. குழந்தைகளுக்கு வீடுகளிலேயே திருமுழுக்கு அளிக்கப்பட்டது.

***1553*** தொடக்கம் ஏறத்தாழ பன்னிரண்டு ஆண்டுகள் மீனவர் வாழ்ந்த கரையோரக் கிராமங்களுக்கு நெருக்கடி மிகுந்த காலம். வெளியிலிருந்து வந்த படையெடுப்புகள் எதிர்ப்புகளுடன் பரதகுலத்தவர் தங்களுக்குள்ளேயே, ஏற்றத்தாழ்வும் குழுமங்களுக்கிடையே பிரிவினைகளும் அதிகமாய் எழுந்தன. பல குடும்பங்கள் மன்னார்தீவுக்கு இடம் பெயர்ந்தன.

***1553*** ஏப்ரலில் ஒரு துருக்கிய கடற்படை, மலபார் முஸ்லிம் மாலுமி களுடைய துணையுடன் முத்துக்குளித் துறையைத் தாக்கி 17 படகுகளைக் கைப்பற்றியது. மதுரையின் விஜய நகரிலிருந்த வித்தால என்ற இராசப்பிரதிநிதி இம் முஸ்லிம்களின் நண்பர். புன்னைக்காயலிலிருந்த சிறிய தொகையினரைக் கொண்ட போர்த்துக்கேய படையணி கடலிலும் தலையிலுமிருந்து ஏக காலத்தில் ஏவப்பட்ட எதிர்ப்பைச் சமாளிக்கமுடியாது திண்டாடியது. போர்த்துக்கேய தளபதி மனோயெலும் அவனது குடும்பத்தினரும் 50 போர்த்துக்கேய வீரரும் கென்றிக்குஸ் அடிகளும் வித்தாலவினால் கைது செய்யப்பட்டனர். புன்னைக் காயலிலிருந்த ஆலயத்துக்கும் மருத்துவ மனைக்கும் முஸ்லிம்கள் தீ மூட்டினர். கிறிஸ்தவர்களின் நிலை பரிதாபமும் பயங்கரமும் நிறைந்ததாகக் காணப்பட்டது. ஆயினும் கொச்சினிலிருந்து ஜில் பெர்னாண்டஸ் தளபதியின் கீழ் வந்த போர்த்துக்கேய கடற்படையணி முஸ்லிம்

படையணியை முற்றாக நிர்மூலமாக்கி கிறிஸ்தவர்களைக் காப்பாற்றியது. வித்தாலாவுடனும் விஜயநகர் ராமராஜாவுடனும் போர் நிறுத்த உடன்படிக்கை செய்யப்பட்டு சிறையானோர் மீட்கப்பட்டனர்.

தொடர்ந்து வேறுவித இன்னல்கள் எதிர்நோக்கின. 1553 - 1555 வரை போர்த்துக்கேய தளபதியாயிருந்தவனின் தவறான நடவடிக்கைகளால் கிறிஸ்தவர்களுக்கிடையே பிளவு ஏற்பட்டு இரு வேறு குழுக்களாகப் பிரிந்து ஒரு குழுவினர் மற்றைய குழுவினருடன் மோதிக் கொண்டனர். உள்நாட்டுப் போர் ஆறு வருடங்கள் நீடித்தது. ஆறு பேர் மாண்டனர். அடிதடியால் காயமுற்றோர் பலர். சில கிறிஸ்தவர்கள் கென்றிக்குஸ் அடிகள் மேல் அநியாயமாகக் குற்றம் சுமத்தினர். அவரை பகைக்கவும் தொடங்கினர். இதன் காரணமாக இந்த விவகாரங்களிலிருந்தும் கரையோரப் பகுதிகளிலிருந்தும் தற்காலிகமாக ஈராண்டுகளுக்கு அடிகளார் ஒதுங்கியிருந்தார். வெகு சிரமங்களின் பின்னரே சமரசம் தோன்றியது. உடன்படிக்கையொன்று செய்யப்பட்டது.

1560இல் போர்த்துக்கேயரின் இந்திய இராசப்பிரதிநிதியான (Viceroy) கொன்ஸ்ரன்ரைன் பிரகன்சா மன்னாரில் எழுநூறுக்கும் அதிகமான கிறிஸ்தவர்களை (1544இல்) படுகொலை செய்த சங்கிலி மன்னனுக்கெதிராக ஓர் படையணியுடன் யாழ்ப்பாணம் சென்றான். ஆரம்பத்தில் இம்முற்றுகை வெற்றிகரமானதாகக் காணப்படினும் பின்னர் அரைக்கரவாசியே வெற்றி பெற்றதாகக் கணிக்கப்பட்டது. யாழ் நகரை நிரந்தரமாக அடிமைப்படுத்த முடியாத நிலை தோன்றியது. சங்கிலிக்குப் பின் அரசுரிமை பெற்றவன் பெருந்தொகைப் பணத்தைக் கப்பமாகச் செலுத்த உடன் பட்டான். போர்த்துக்கேய இராசப் பிரதிநிதி யாழ் நகரை அடிமைப்படுத்தி தென்னிந்திய கரையோர கிறிஸ்தவர்களை (விஜய நகரில் துன்புறுபவர்கள்) அங்கு குடியேற்றத் திட்டமிட்டிருந்தான். யாழ் நகர் கைப்பற்றப்படாததால் இக் கிறிஸ்தவர்கள் மன்னாரில் குடியேற்றப் பட்டனர். 1560இல் படகர்கள், மதுரையின் ஆளுநன் நாயக்க விஸ்வநாதாவின் தலைமையில் முத்துக்குளித்துறையின் புன்னைக்காயல் மேல் படையெடுத்து சூறையாடியமையால் மேற்படி கிறிஸ்தவர்கள் மன்னாரில் குடியேற முன் வந்தனர். எனினும் எல்லாக் கிறிஸ்தவர்களும் இடப் பெயர்வை விரும்ப வில்லை. மணப்பாட்டில் தெற்குப் பகுதிகளில் பல கிராமவாசிகள் அங்கேயே வாழ முடிவு செய்தனர். மன்னாருக்குச் சென்றவர்களும் தங்கள் குடும்பங்களின் ஆரோக்கிய நிலைக்கு மன்னார் உகந்ததல்ல என்பதை உணர்ந்து படிப்படியாக தென்னிந்தியா திரும்பினர். 1563இல் மன்னாரில் பரவிய 'பிளேக்' எனப்படும் கொள்ளை நோய் நாலாயிரத்துக்குமதிகமான கிறிஸ்தர்களைப் பலியெடுத்தது. இதைத் தொடர்ந்து 1564இல் மேலும் பல குடும்பங்கள் தென்னிந்தியாவுக்குச் சென்றன. இவ்விதம் ஏராளமானோர் இடப்பெயர்வுகளால் திரும்பி வந்ததால் கரையோர மீனவப் பகுதியினர் பொருளாதார நிலை குன்றி பஞ்சம், பசி, பட்டினியால் அல்லலுற்றனர்.

1565இல் ஆறு யேசுசபைக் குருக்களும் மூன்று சந்நியாசிகளும் மீனவக் கிராமங்களுக்கு அனுப்பப்பட்டனர். இவர்களில் பலர் தமிழில் தொடர்பு கொள்ள முடியாதவர்கள். எனவே மறைபரப்புப் பணியிலும், மேய்ப்புச் செயல்களிலும் பின்னடைவு காணப்பட்டது. 1566இல் ஆயர் யோர்ச் ரெமூடே, (கொச்சின்) முதல் தடவையாக இப்பகுதிக்கு வருகை தந்தார். முதல் தடவையாக உறுதிபூசுதலும் வழங்கப்பட்டது.

கிறிஸ்தவர்களின் ஆன்மீக வளர்ச்சி கருதி கென்றிக்குஸ் அடிகள் மூன்று திட்டங்களை செயலாக்கினார். முதலாவது - அடிக்கடி நல்ல ஆன்மீக உரைகளால் கிறிஸ்தவத்தில் தங்களை முற்றாக அர்ப்பணித்தவர்களின் விசுவாசம் தளர்ச்சி யுறாது கவனித்தார். பின்னர் இக்கிறிஸ்தவர்கள் தரும சபைகளை ஆரம்பித்து சகோதர மக்களின் உடல், உள ஆன்மீக தேவைகளில் உற்சாகமுடன் உதவினர். மிசனரி அலுவல்களை அயராது கவனித்து பங்குத் தந்தையர்க்கும் போதக குருக்களுக்கும் தோள் கொடுத்து உதவியவர்கள் இரண்டாவது தரத்தினர். மூன்றாவது அலுவலாக கென்றிக்குஸ் அடிகள் கிறிஸ்தவர்கள் அனைவரும் விசுவாசத்தில் நிலை நிற்கவும் கிறிஸ்துவுக்கு பிரமாணிக்கமாக இருக்கவும் அடிக்கடி பாவ சங்கீர்த்தன அருட் சாதனத்தைப் பெறுமாறு பார்த்துக் கொண்டார். இதனால் தமது மேய்ப்புப் பணியில் பலத்த வெற்றி கிடைப்பதை அடிகள் அவதானித்தார். எனினும் (1566இல்) இவ் வருட்சாதனத்தை அனைத்துக் கிறிஸ்தவர்களுக்கும் அடிக்கடி வழங்குவதற்கு குருக்கள் பற்றாக்குறை முக்கிய காரணியாக இருந்தது.

இந்தியாவில் யேசுசபையின் தரிசகராக வருகை தந்த (1579 - 1580) வலிஞானோ அடிகள் முத்துக்குளிப்புத் துறையில் முப்பது கிறிஸ்தவ கிராமங்களும் அக் கிறிஸ்தவர்களின் ஆன்மீக தேவைகளுக்கு வசதியாக போதியளவு ஆலயங்களுமிருந்ததாகக் குறிப்பிடுகிறார். கிறிஸ்தவரின் தொகை நாற்பதினாயிரத்துக்கும் அதிகம் என்றும் அவரது அறிக்கை கூறுகிறது.

ஐந்து அல்லது ஆறு குருமனைகளில் குருக்கள் தங்கியிருந்தனர். ஏனைய பகுதிகளிலும் பார்க்க இப் பகுதிகளில் ஆலயங்கள் அழகும் தூய்மையும் விளங்கியிருந்ததெனவும் வெகு சிறப்பாக பராமரிக்கப்பட்டதாகவும் எழுதுகிறார். அதிகமான கிறிஸ்தவர்கள் தியான யோக கூட்டுவாழ்வு நடத்துகின்றனர். இந்தியாவில் யேசு சபையினரின் மேய்ப்புப் பணியில் இயங்கும் கத்தோலிக்க பகுதிகளில் இப்பகுதியே மிகமிகச் சிறப்பாகக் காணப்படுகிறது. ஏறத்தாழ பதினைந்து குருக்கள் ஆன்மீகப் பணிகளில் அயராது உழைக்கின்றனர். இக் குருக்களின் போஷிப்பு முதல் அவசிய தேவைகள் அனைத்தும் இக் கிறிஸ்தவர்களாலேயே செலவிடப்படுகிறது என்று மேலும் அவ்வறிக்கை கூறுகிறது.

யேசுசபைக் குருக்களின் பங்குப் பணிமனைகள் - வேம்பார், தூத்துக்குடி, புன்னைக்காயல், திருச்செந்தூர், மனப்பார் ஆகிய இடங்களில் அமைந்திருந்தன.

1575இல் கோவாவிலிருந்து கிடைத்த அறிக்கையில் ''கரையோர மீனவக் கிராமங்களில் வதியும் கிறிஸ்தவர்கள் பாவ சங்கீர்த்தன அருட்சாதனத்தில் நல்ல பற்றும் நம்பிக்கையும் கொண்டிருந்தனர். ஒரு முறை பாவசங்கீர்த்தனம் செய்தால் சில காலமாவது கனமான பாவங்களில் சிக்கிக்கொள்ளாதிருப்பதில் மிகுந்த அக்கறை காட்டினர். கரையோர மீனவக் கிராமத்தவர்களின் பிள்ளைகள், ஐரோப்பாவிலுள்ள பிள்ளைகளைவிட மறைக்கல்வியில் நல்ல அறிவும் ஆற்றலும் கொண்டிருந்தனர்'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

1579இல் கொச்சினிலிருந்து தலைமையகத்துக்குக் கிடைத்த அறிக்கையில் மீனவக் கிராமத்தோர் அனைவரும் (சிறப்பாக பரவர், கரையார்) கிறிஸ்தவ பரம்பரையாயிருப்பினும் ஆண்டொன்றுக்கு ஆயிரத்துக்குமதிகமானோர் திரு முழுக்குப் பெற்று திருச்சபையின் பிள்ளைகளாயினர் என்று கூறப்படுகிறது. இவர்கள் பின்பு தமது பொருளாதார இடர்பாடுகள் காரணமாக மன்னாருக்கு இடம்பெயர்ந்தனர்.

கரையோர மீனவக் கிராமங்களில் கோவில் திருவிழாக்கள் மிக ஆடம்பரமாகவும் உற்சாகத்துடனும் கொண்டாடப்பட்டன. கோவிற் சங்கீதங்கள் பல்வேறு வாத்தியக்கருவிகளுடன் இசைக்கப்பட்டன. ஆலயங்கள் அழகுற அலங்கரிக்கப்பட்டு ஒளி விளக்குகள் இரவைப் பகலாக்கின. ஊர்வலங்கள், வாண வேடிக்கைகளுடனும், வாத்தியங்களின் முழக்கங்களுடனும் அலங்கரிக்கப்பட்ட வீதிகளூடாகச் சென்றன.

திருவிழா முடிவில் கத்தோலிக்க நாடகங்கள், கூத்துக்கள் மேடையேற்றப்பட்டன. இம்மேடையேற்றுகைகளில் பரவ இனத்தவருக்கே முதலிடம் அளிக்க வேண்டும். நாடகம், டிறாமா, கூத்துக்களை கலையம்சம் தவறாது சிறப்புடன் அரங்கேற்றுவதில் பரவ இனத்தவர்கள் தனிச்சிறப்பு வாய்ந்தவர்கள். இவர்களிடையே ஒற்றுமையை வளர்ப்பதிலும் ஐக்கியத்தைக் கட்டிக் காப்பதிலும், பாவசங்கீர்த்தனம், நற்கருணை என்ற அருட்சாதனங்கள் பெரிதும் உதவின. திவ்விய நற்கருணைத் திருவிழா மட்டும் குறிப்பிட்ட தினத்தில் நடத்தப்படாது வெவ்வேறு தினங்களில் இடம் பெற்றது. காரணம் ஏனைய பங்குக் குருக்களும் நற்கருணைத் திருவிழாவில் பங்கு பற்றி உதவியளிப்பதற்காகவே.

*1579*ஆம் ஆண்டளவில் எல்லாக் குருக்களும் தமிழ் மொழியில் தேர்ச்சி பெற்றிருந்தனர். ஆகவே விசுவாசிகளுடன் தாராளமாக உரையாடி அவர்களது குறைகளைப் போக்கவும் பாவசங்கீர்த்தனம் மூலம் எல்லோரதும் தனிப்பட்ட குறை குற்றங்களை நீக்க நல்லாலோசனை அளிக்கவும் குருக்களால் முடிந்தது.

*1582*இல் ஆயிரத்து இருநூற்றைம்பது பேர் பகிரங்கமாகப் பொதுப் பாவ சங்கீர்த்தனம் செய்தமை ஒரு முக்கிய நிகழ்வு. தருமசபை அங்கத்தவர்கள் இந்நிகழ்வு வெற்றிபெற கடுமையாக உழைத்தனர். இப்பகிரங்க பாவ அறிக்கையின் பயனாக கரையோர மீனவக் கிராமங்களில் இலைமறை காயாக இருந்து வந்த பல தீய செயல்கள் அம்பலத்துக்கு வந்தன. ஆண்கள் இவ்விதம் தங்கள் அந்தரங்க குற்றங்களைப் பகிரங்கமாக அறிக்கையிடுவதற்கு பெண்களே ஊக்கமும் உந்துதலும் அளித்தனர். தவறான வழிகளில் பொருள், பணம், நிலம் சேர்த்தல் 7ஆம் 9ஆம் கட்டளைகளுக்கு விரோதமான எல்லாவித தீய செயல்கள் மற்றும் பொறாமை, ஆங்காரம், சினம் என்பற்றின் தீய விளைவுகளை இவ் ஆண்கள் பயம் கூச்சமின்றி பகிரங்கமாக வெளிப்படுத்தி இறைவனிடமும் அயலாரிடமும் மன்னிப்புக் கோரினர். நேர்மைக்கு மாறாக அபகரிக்கப்பட்ட அனைத்தும் பணிவோடு கையளிக்கப்பட்டு பாதிக்கப்பட்டோருக்கு வழங்கப்பட்டமை இந்நிகழ்வின் மிகச் சிறப்பம்சம்.

கோவில்களை தயாரிப்பதில் இக் கிறிஸ்தவர்கள் அதிக அக்கறை காட்டினர். அடிக்கடி தம் கிராம ஆலயங்களுக்குச் சென்று வேண்டுதல் செய்வதுடன் அயற் கிராமங்கள் தூரமான பகுதிகளிலுள்ள தேவாலயங்களுக்கும் திருநாட் காலங்களிலும் விசேட தினங்களிலும் சென்று பிரார்த்தனை செய்து மகிழ்ச்சியோடு திரும்புவர். டிணப்பாட்டிலுள்ள கல்லாலான கோவிலும் தூத்துக்குடியிலுள்ள இரக்கத்தின் நாயகி கோவிலும் மக்களின் உபசரிப்புகளாலேயே கட்டி எழுப்பப்பட்டன.

*1589*இல் ஒரு பிரச்சனையைத் தொடர்ந்து பரத குலத்தவருக்கும் சாணார்களுக்குமிடையே குழப்பநிலை உருவாகியது. இதைத் தொடர்ந்து சாணார்கள் பெருங் குழுவாகத் திரண்டு ஆயுதபாணிகளாகச் சென்று பரவர்களின் கோவில்

களுக்குத் தீ மூட்டி பரவ குடியிருப்புகளுக்கும் பெருஞ் சேதம் விளைவித்தனர். பரவ மக்கள் அகதிகளாக மணப்பாட்டுக்குச் சென்றடைந்தனர். ஆத்திரங் கொண்ட சில பரவர்கள் சாணார்களின் இந்து சமய கோவிலொன்றுக்குத் தீ மூட்டினர். இவ்விதம் விபரீதங்கள் கட்டுக்கடங்காது செல்வது கண்டு மதுரை நாயக்கர் தலையிட்டு சமரச முயற்சிகளை மேற்கொண்டார். கிறிஸ்தவர்கள் தங்கள் கோவில்களை கல், சுண்ணம் என்பவைகளுடன் உறுதியான கட்டடங் களாக அமைப்பதற்கும் அவர் உதவி புரிந்தார்.

கென்றிக்குஸ் அடிகளின் இறுதிக் கால கட்டம் இது. அடிகளால் உருவாக்கப்பட்ட தருமசபை இயக்கம் பற்றியும் சுருக்கமாக குறிப்பிடுதல் நலம். கிறிஸ்தவர்கள் மன்னாருக்கு இடம்பெயர்வதற்கு (1560) முன்னால் அடிகளார் புன்னைக்காயலில் பணியாற்றிய போது விசுவாச அறிவில் ஆர்வ முள்ளோர் பணிவிடை செய்யும் ஆற்றலுள்ளோராகிய ஆண்களை வெள்ளிக் கிழமைகளில் அல்லது அவர்களுக்கு வசதியான வேறொரு கிழமை நாட்களில் ஒருங்கு கூட்டுவார். பெண்களும் இத்தகைய பணியில் ஆர்வம் காட்டியதால் பின்னர் அவர்களும் அனுமதிக்கப்பட்டனர். இக் குழுமங்களுக்கு கென்றிக்குஸ் அடிகளும் ஏனைய குருக்களும் விசுவாச சத்தியங்கள், திருச்சபையின் கட்டளை கள் நல்ல கிறிஸ்தவர்களாக வாழ்வதற்கான அறிவுரைகள் கொண்ட ஆழமான விளக்க உரைகளை வழங்குவார். இத் தொண்டர்கள் தமது அயலில், தம் கிராமங்களில் தேவையால் அயற் கிராமங்களுக்கும் சென்று தாம் பெற்ற விசுவாச வித்துக்களை விதைப்பர். மீனவக் கிராமங்களில் இறை அரசு நன்கு பரவி நல்ல அறுவடை பெற்றமைக்கு இத் தொண்டர்களின் அயரா உழைப்பே முக்கிய காரணி. மன்னாரிலிருந்து கிறிஸ்தவர்கள் இடம் பெயர்ந்து வந்ததும் கென்றிக்குஸ் அடிகள் இவ்வித விசுவாச அறிவாற்றல் அனுபவம் கொண்ட வர்களை "தருமசபை இயக்கமாக" ஒருங்கே சேர்த்தார். ஆண்டவனையும் அயலவனையும் அன்பு செய்வதே இப் பேரணியின் குறிக்கோள். திருமண மானவர்களுக்கான ஒரு பக்திச் சபையாகவும் இது விளங்கியது.

1578இல் கென்றிக்குஸ் அடிகள் இச்சபைக்கான விதிமுறைகளை வகுத்தார். அதன்படி இத்தரும சபையின் அங்கத்தவர் நல்ல முன்மாதிரியான கிறிஸ்தவ வாழ்க்கை முறையைக் கடைப்பித்து தனக்கென வாழாது பிறர்நலம் பேணு வதையே இலட்சியமாகக் கொள்ள வேண்டும். ஆதரவற்றவர்கள், அடக்கி ஒடுக் கப்பட்டோருக்கு அன்புக் கரம் நீட்டுதல், நோயால் பீடிக்கப்பட்ட ஏழைகளைப் பராமரித்தல், குடும்பங்களிலும் அயலிலும் கிராமங்களிலும் நோயாளிகளைப் பராமரிக்க சிறு மருத்துவமனைகளை நடாத்துதல் முதலிய மனிதாபிமானப் பணிகளில் உற்சாகமுடன் உழைத்தனர்.

1600இல் கென்றிக்குஸ் அடிகள் புன்னைக்காயலில் பரமபதமடைந்தார். (6-2-1600) ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக அவர் கரையோரமாக கடினமாக உழைத்து கிறிஸ்துவின் அரசைப் பரப்பினார். அத்துடன் தமிழை நன்கு கற்று ஒரு இலக்கண நூலை இயற்றியதுமின்றி அகராதி ஒன்றையும் ஆக்கியளித் தார். பல கிறிஸ்தவ நூல்களையும் உருவாக்கினார். அவற்றுள் பல அவர் காலத்திலேயே அச்சிடப்பட்டன. அவரது மரணத்தின் பின்னும் வேறு சில நூல்கள் பதிப்பிக்கப்பட்டன. கரையோரப்பகுதிக் கிறிஸ்தவர்கள் "வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு புனிதராகவே" அவரை மதித்து பயபக்தியோடு அவரது கட்டளைகளுக்கு அடிபணிந்தனர். சூழவர வாழ்ந்த இந்துக்களும் இஸ்லாமியர்

களும் கூட அவரை ஒரு தெய்வப்பிறவியாகவே போற்றிப் பேணியது இங்கு குறிப்பிடத்தக்கது.

கென்றிக்குஸ் அடிகள் இறந்த போது காயல் பட்டணத்திலும் சூழவுள்ள கிராமங்களிலும் வாழ்ந்த முஸ்லிம்கள் ஒரு தினமும், இந்துக்கள் இரு நாட்களும் நோன்பு நோற்று துக்கம் அனுசரித்தும் சிறு கடைகள் முதல் வர்த்தக நிறுவனங்கள் வரை கடையடைப்புச் செய்தமையும் அவ்விரு வேற்றுமத இனத்தவர்கள் அடிகள் மீது கொண்ட மதிப்பை வெளிக்காட்டுவதாக அமைந்தது.

*1600*இல் கிடைத்த அறிக்கை கூறுவது: "மீனவக் கரையோர கிராமங்களில் கற்களால் கட்டப்பட்டு ஓடுகளால் வேயப்பட்ட அழகிய தேவாலயங்கள் காணப்படுகின்றன. வேம்பாரில் உள்ள கோவிலே மிகப் பெரியதும் அழகுமிக்கதுமாகும். இவ்வூரின் தொழில்வல்லுநர்களே இதனைத் திட்டமிட்டு அமைத்துள்ளனர். பரவர்களின் சாதித்துவேஷம் காரணமாக மணப்பாட்டில் *1600*இல் பலயர் இனத்தவர்களுக்காக புனித சந்தியோகுமையர் ஆலயம் நிறுவப்பட்டது. தங்கள் ஆலயங்களும் அங்கு பாவிக்கப்படும் உபகரணங்களும், உடுமாணங்களும் சிறப்பானதாக இருப்பதில் பரத குலத்தவர் மிகுந்த அக்கறை காட்டினர். தூத்துக்குடியில் ஆகஸ்ட் 5இல் கொண்டாடப்பட்ட வியாகுல அன்னையின் திருவிழாவே அவ்வினத்தவரின் மிகப் பெரிய திருவிழா ஆகும். இப்போது கரையோரப்பகுதியில் இயேசுவின் திராட்சைத் தோட்டத்தில் 17 குருக்களும், 2 துறவிகளும், 1 குரு மாணவரும் பணி புரிக்கின்றனர். இவர்களின் ஆளுகையில் 22 தேவாலயங்கள் (கரையோரங்களில் 16, உட்கிராமங்களிலும் மன்னாரிலும் 6) உண்டு. கொச்சினில் தூத்துக்குடி ஆயரின் குருமுதல்வரும் அவரது இரு உதவியாளர்களும் இவர்களை மேற்பார்வை செய்து வழி நடத்துகின்றனர். ஞாயிறு திருப்பலிகளில் ஆண்களுக்கும் சனி திருப்பலிகளில் பெண்களுக்கும் விசேட மறையுரை வகுப்புகள் உண்டு. மாணவர்களுக்கு காலையிலும் மாணவிகளுக்கு மாலையிலும் மறைக்கல்விப் போதனைகள் நடத்தப்படுகின்றன. 1587லிருந்து தூத்துக்குடியில் இயேசுசபையார் நடாத்தும் கல்லூரியுடன் குருமடமும் இணைக்கப்பட்டுள்ளது. இங்கு போர்த்துக்கீசிய, தமிழ், லத்தீன் மொழிகளும் இறையியல் வழிபாட்டிசையும் கற்பிக்கப்படுகின்றன."

*1600*க்கு ஒரு சில ஆண்டுகள் முன்பு யேசுசபை மாகாண அதிபதியின் கட்டளைக்கிணங்க அலந்தலை, தாலம்புளி, திருச்செந்தூர் பகுதிகளில் வசித்த கிறிஸ்தவர்கள் வீரபாண்டிய பட்டணத்துக்கு இடம்பெயர்ந்தனர்.

வெவ்வேறு பகுதிகளில் பரவலாக வாழும் கிறிஸ்தவர்கள் திடீர்த்தாக்குதல்களால் சிதறடிக்கப்பட்டு உயிர்களுக்கும் உடமைகளுக்கும் பலத்த சேதமடைவதை தடுப்பதற்கு இத்திட்டம் வழிகோலியது. 1597க்குப்பின் கொமோரின் குடாவிலிருந்து மணப்பாடு வரையிலான பன்னிரு கரையோரக் கிராமத்தவர்கள் அப்பகுதியின் மேலதிகாரி ஒருவரது அநீதி ஆட்சியின் கொடுமையால் இடம்பெயர்ந்து மணப்பாட்டிலேயே வசித்து வந்தனர்.

*1601*இல் திருச்சபை அதிகாரிகள் கரையோர மக்களனைவரும் (ஒருவர் கூட தப்பாது) தங்கள் பாவ அறிக்கையை வெளியிட ஒரு திட்டத்தைச் செயற்படுத்தினர். 15 நாட்களில் இப்பாவசங்கீர்த்தன முறை பூரண வெற்றியளித்தது. ஒரு போதுமே பாவசங்கீர்த்தனத் தொட்டியை அறியாத பலரும் தேடி வந்து நல்ல மனஸ்தாபத்தோடு பாவமன்னிப்புப் பெற்றனர்.

கிறிஸ்தவம் முத்துக்குளிப்புக் கரையோரங்களில் நன்கு உறுதிபெற்றதோடு உள்ளூர்களிலும் அதன் வித்துக்கள் தூவப்பட்டன. மாரவா கடற்கரைக் கிராமங்களிலும் இயேசுவின் நற்செய்திகள் போதிக்கப்பட்டன. **1602** அளவில் உள்ளூர்ப் பகுதிகளில் **2400** கிறிஸ்தவர்களும் **5** தேவாலயங்களும் இருந்ததாகக் காணக்காய்வுகள் தெரிவிக்கின்றன.[44]

## பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் முத்துக்குளிப்புத் துறையின் இடர்பாடுகள்.

முன்பு நாம் அறிந்தவற்றிலிருந்து முத்துக்குளிப்புத்துறைக் கரையோரப் பகுதியில் பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பம் ஒரு நல்ல நம்பிக்கைக்குரியதாக எதிர்பார்க்கப்பட்டது. எனினும் அமைதியையும் முன்னேற்றத்தையும் குலைக்கவல்ல பிரச்சனைகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தலைதூக்கின. இவற்றுள் முதன்மையானது கொச்சின் மறைமாவட்ட ஆயர். மேதகு அண்ட்று தே மரியா ஆண்டகைக்கும் யேசு சபையாருக்குமிடையில், நீதி, நிர்வாக சம்பந்தமாக தலைதூக்கிய பிரச்சனைகள் ஆகும்.

யேசு சபையாரின் வாதாட்டமாவது: ''மீனவக்கரையோரக் கிராமங்களின் ஆன்மீக மேற்பார்வை, நீதி, நிர்வாகம் என்பவை போர்த்துக்கல் அரசரால் தமது சபையினர்க்கே பரிசுத்த பாப்பரசரின் அங்கீகாரத்துடன் அளிக்கப்பட்டுள்ளன. எனவே கொச்சின் ஆயர் இவைகளில் தம் அதிகாரத்தைப் பிரயோகிப்பது முறையற்றது.'' அண்ட்று ஆண்டகை, இந்த வாதாட்டத்தை நிராகரித்து, கத்தோலிக்க ஆயர் என்ற முறையில் தமது ஆளுகைக்குட்பட்ட துறவறத்தினர், பொது நிலையினர், குருக்கள் அனைவரும் தமது நிர்வாகத்துக்கும் அதிகாரங்களுக்கும் உட்பட்டவர்களே என அறிக்கை வெளியிட்டார்.

இப்பிரச்சனை, அங்கு நடைபெற்ற பிரதான விடயங்கள் ஒவ்வொன்றிலும், தலைதூக்கியது. இப்பிரச்சனையோடு சம்பந்தப்பட்ட வேறு சில நிகழ்வுகளையும் நாம் ஆய்வு செய்தல் நல்லது. விஜயபதியின் ஆளுநரான ஆரிய பெருமாள் ஒரு சர்வாதிகாரி, கொமோரின் குடாவிலிருந்து மணப்பாடு வரை, வசித்த கிறிஸ்தவர்கள் அனைவரையும், மணப்பாட்டுக்கு இடம் பெயருமாறு உத்தரவிட்டான். ஒவரி கிராமத்தை முற்றுகையிட்டு, ஆலயத்தை அவசங்கைப் படுத்தி அழித்தொழித்து, அப்பகுதியிலிருந்த பெண்களையும் பெரும் இம்சைக்குள்ளாக்கினான். எனவே ஏனைய கிராமங்களில் வசித்த கிறிஸ்தவர்கள் அச்சமிகுதியால் இரவோடிரவாக இடம் பெயர்ந்தனர். ஆரிய பெருமாள் இவ் வெற்றி நிகழ்வோடு திருப்தியடையவில்லை. **1600**இல் மணப்பாட்டில் வேத போதகராகப் பணியாற்றிய மறையாசிரியரொருவர், சில கிறிஸ்தவர்களுடன் விஜயபதிக்கூடாகச் செல்லும் போது ஆரியபெருமாளின் ஆட்கள் அவர்களைக் கைது செய்து, பகிரங்கமாக கசையடியளித்து கடுஞ் சித்திரவதைப்படுத்தினர். பின்னர் இதே நடவடிக்கை கத்தோலிக்கர் அனைவருக்கும் சிறப்பாக குருக்களுக்கும் அளிக்கப்படும் என்ற எச்சரிக்கையோடு திருப்பி அனுப்பப்பட்டனர்.

இக்குரூர நடவடிக்கையால் மணப்பாட்டு இளைஞர்கள் கொதித்தெழுந்தனர். முந்நூறுக்கும் மேற்பட்ட இளைஞர்கள் எவரும் எதிர்பாராத வகையில் ஒரு நள்ளிரவில் விஜயபதி துறைமுகத்தைத் தாக்கினர். ஆரியபெருமாளையும் அவனது உறவினர் நண்பர்களையும், வாளுக்கிரையாக்கி துறைமுகத்தையும் கைப்பற்றினர். இதனால் முத்துக்குளிப்புத்துறைக் கிறிஸ்தவரனைவரும்

மனநிறைவடைந்தனர். ஆயின் மதுரையின் நாயக்க ஆளுநன் கிறிஸ்தவர்களுக்கு தண்டனையாக மிகப் பெருந்தொகைப் பணத்தை அபராதமாகச் செலுத்தும்படி கட்டளையிட்டான். அவர்களும் எதிர்ப்பின்றிச் செலுத்தினர். பேராசைபிடித்த நாயக்கன், திருப்தியடையவில்லை அடுத்த ஆண்டில் (1602) மிகக் கூடுதலான தொகையை அபராதமாகச் செலுத்த உத்தரவிட்டதோடு, அபராதம் செலுத்தாதவர்களைக் கடுமையாகத் தண்டிக்க, அதிரடிப் படையணி ஒன்றையுமனுப்பினான். இம்முறை அபராதம் செலுத்தினால் அடுத்த ஆண்டில் மிக அதிக தொகை கேட்கப்படலாமென உணர்ந்த கிறிஸ்தவர்கள் வரிசெலுத்த மறுத்தனர். ஆத்திரமடைந்த நாயக்கன் கிறிஸ்தவர்களை இரக்கமின்றித் தாக்குமாறு உத்தரவிட்டான். தூத்துக்குடி மக்கள் மீது பெருந்தாக்குதல் ஆரம்பிக்கப்பட்டது. அதிஷ்டவசமாக அத்தருணத்தில் மன்னாரின் போர்த்துக்கேய தளபதி அங்குவந்து சேர்ந்தான். நிலமை விபரீதமடைவதை உணர்ந்து, கிறிஸ்தவர்களுக்கு எதிரான தாக்குதல்கள் உடனடியாக நிறுத்தப்படாவிடில், அங்கிருந்த இந்துமதக் கோவில் தரைமட்டமாக்கப்படுமென அறிவித்தான். இதனைத் தொடர்ந்து நாயக்க தலைவன் முன்வந்து சமரசம் செய்துகொண்டான்.

அடுத்த ஆண்டில் முத்துக்குளிப்பில் எதிர்பாராத நஷ்டமேற்பட்டது. தூத்துக்குடியின் மேலதிகாரியான கயத்தார் பகுதியின் ஆளுநன், இதை மதியாது கூடுதலான தொகையைச் செலுத்துமாறு ஆணையிட்டான். தூத்துக்குடி மீது பெரும் படையணி ஏவப்பட்டது. ஆலயங்கள் அழிக்கப்பட்டன. வீடுகள் சூறையடிக்கப்பட்டன, கிறிஸ்தவர்கள் மிக மோசமாகத் தாக்கப்பட்டனர். ஒரு யேசு சபைக்குரு, பணயமாக இழுத்துச்செல்லப்பட்டார். குருவை மீட்டெடுக்க கிறிஸ்தவர்கள் நாலாயிரம் பொற்காசுகளைச் செலுத்த வேண்டி இருந்தது.

அடிக்கடி நாயக்க படையணியும், கயத்தார் அரச படைகளும் தூத்துக்குடியின் மேல் ஏவி விடப்படுவதைத் தொடர்ந்து, யேசு சபையார் தங்களது கல்லூரியை 'அரச தீவு' என்ற கிராமப்பகுதிக்கு மாற்றினர். அப்பகுதி இப்போது 'பெரிய முயல் தீவு' என அழைக்கப்படுகிறது. அங்கு ஒரு சிறுநகர் உருவாக்கப்பட்டது. யேசு சபையின் பெருந்தலைவரும் இந்தியாவில் போர்த்துக்கேய பிரதம தளபதியும் இதற்கு அனுமதியும் முழு ஆதரவும் அளித்தனர். 1604இல் இருந்து யேசு சபைக் குருக்களும் தூத்துக்குடியில் வாழ்ந்த கிறிஸ்தவர்களுள் பெருந்தொகையினரும் இப்புதிய இடத்தில் குடியேறத் தொடங்கினர். எனினும் கொச்சின் மறைமாவட்ட ஆயர் இதனை விரும்பவில்லை. தனது நீதி, நிர்வாக ஆளுகையிலிருந்து கிறிஸ்தவர்களை அப்புறப்படுத்துவதற்கு யேசு சபையார் செய்யும் ஒரு சதிச் செயல் என ஆயர் சந்தேகம் கொண்டார். ஆகவே கிறிஸ்தவர்கள் அனைவரும் தத்தம் இடங்களுக்குத் திரும்பிச் செல்ல வேண்டும் என அவர் உத்தரவிட்டார்.

பதன்கட்டிஸ் பிரிவினர் இதனை ஆட்சேபித்தனர். தத்தம் இடங்களுக்குத் திரும்பிச் செல்வது தங்களுக்கு ஆபத்தானது என அவர்கள் ஆயருக்கு விளக்கமளித்தனர். ஆயின் ஆயர் தமது நிலைப்பாட்டிலிருந்து இம்மியும் விலகவில்லை. மக்களும் தமது நிலையில் உறுதியாயிருந்தனர். தங்களது சொந்த விவகாரங்களில் தலையிட ஆயருக்கு உரிமையில்லை என உறுதியாகக் கூறினர். இது யேசுசபையாரின் திருவிளையாடல் என சந்தேகித்த ஆயர், முத்துக்குளிப்புத்துறைக் கரையோரத் திருச்சபையின் நிர்வாகத்தை யேசு சபையாரிடமிருந்து நீக்கிவிட முடிவு செய்தார். அரச தீவில் வசிப்பவர்கள் திருச்சபைக்குப் புறம்

பாக்கப்படுவர் எனப் பிரகடனம் செய்தார். யேசு சபையார் இப்பிரகடனம் செல்லுபடியாகாதென பகிரங்க அறிவிப்பு விடுத்தனர். அத்துடன் ஆயரின் பிரகடனத்துக்கெதிராக, மேலிடத் திருச்சபைக்கு விண்ணப்பித்தனர். ஆயரோ போர்க்கோலம் பூண்டார். ஒரு சிறு படையணியை அனுப்பி அரசதீவை ஆக்கிர மித்தார். தீவின் எல்லாக் கட்டடங்களும் தரைமட்டமாக்கப்பட்டன. கிறிஸ் தவர்களும் அக்கட்டடங்களின் இடிபாடுகளுடன் சேர்ந்து அழிந்தனர். பின்னர் ஆயர் ஏனைய கிராமங்களுக்கும் சென்று ஆலயங்களின் திறவு கோல்களை கையளிக்குமாறு யேசு சபையாரை வற்புறுத்தினார் கையளிக்காத குருக்கள் கைதுசெய்யப்பட்டனர். ஆயரின் தூண்டுகையால் பரவ குலத் தலை வனும், ஜாதித்தலைவனும், மற்றும் சில பரவ பிரமுகர்களும் யேசு சபையாருக்கு விரோதமாக எழுந்தனர். யேசு சபைக்குருக்களின் நிலை தர்மசங் கடத்துக்குரிய தாயிற்று. எனவே யேசு சபை மாகாணாதிபதி, அதிவண.லயர்சியோ அடிகள், கொச்சின் மறைமாவட்டத்தின் ஆலய நிர்வாகங்களிலிருந்து யேசு சபையார் விலகிக் கொள்வதாக அறிவிப்பு ஒன்றை விடுத்தார். ஆயர் உடனடியாக விலகிய யேசுசபைக் குருக்களின் பங்குகளுக்கு மறைவட்டக் குருக்களை அனுப்பி நிலமையை சமாளித்தார். எனினும் வைப்பர், வேம்பார் பகுதி மக்கள் இம் மாறுதல்களை ஏற்றுக்கொள்ள மறுத்து அதிருப்தி தெரிவித்தனர். 1614 பெப்ரவரியில் போர்த்துக்கல் அரசன், முத்தக்குளிப்புத் துறையிலுள்ள எல்லாக் கிறிஸ்தவ தேவாலயங்களும் யேசுசபையினரிடம் கையளிக்கப்படவேண்டுமென அறிவிப்புச் செய்தான்.

கொச்சின் மறைவட்ட ஆயருக்கும் யேசு சபையினருக்குமிடையே ஏற்பட்ட இழுபறி நிலையும் பின்னர் மறைவட்டக் குருக்கள் பொறுப் பேற்றமையும் அம் மறைவட்டக் கிறிஸ்தவர்களின் ஆன்மீக முன்னேற்றத்தில் பெரும் மாறுதல்களை உருவாக்கின. ஆயரையும் அவரது மறைவட்டக் குருக்களை ஆதரிப்போர் ஒரு கட்சியாகத் திரள, யேசு சபையாரின் மேல் அபிமான முள்ளோர் எதிர்க் கட்சியாக அணிதிரண்டனர். ஒவ்வொரு பங்குகளிலும் இப் பிளவு ஊடுருவியது. பல கிறிஸ்தவர்கள் விரக்தியுற்றனர். வசதியுள்ளோர் நாகபட்டணத்துக்கோ அல்லது மன்னாருக்கோ இடம்பெயர்ந்தனர். பலர் உள்ளூர்க் கிராமங்களுக்குச் சென்று இந்துக்கள் மத்தியில் வாழ்ந்தனர். இதனால் இவர்கள் கத்தோலிக்க திருச்சபையுடனான ஆன்மீக உறவு துண்டிக் கப்பட்ட நிலையில் மெல்ல மெல்ல விசுவாச பெலத்தை இழக்கும் நிலையை அடைந்தனர்.

மாவட்டக் குருக்களது நிர்வாகத்தில் கத்தோலிக்கத்தின் ஆன்மீக ஆணிவேர் அறுந்தது. மறைக்கல்விப் போதனை அலட்சியம் செய்யப்பட்ட தால் வேத விசுவாசம் ஈடாடத் தொடங்கியது. நீதி நிர்வாகத்தின் சீர்கேட்டால் பிளவுகளும் பிரிவினைகளும் தொடங்கின. பல பங்குகளில் நிர்வாகக் குருக்களுக் கெதிரான செயல்கள் தலைதூக்கின. பரவகுலத்தினரின் கத்தோலிக்க விசுவாசமும் இன ஒற்றுமையும் திருச்சபை அதிகாரிகள் மட்டில் பிரமாணிக் கமும் கட்டுக்கோப்பும் சின்னாபின்னமாகத் தொடங்கியது. தொடர்ந்து சில ஆண்டுகள் முத்துக்குளிப்பில் நஷ்டமேற்பட்டதால் பரதமக்களின் பொருளா தாரத்தில் பின்னடைவு ஏற்பட வறுமையும், பஞ்சம் பசி பட்டினியும் தலைதூக்கின.

1621இல் யேசுசபையினர் மீண்டும் திரும்பி வந்து கரையோரத் திருச்

சபையைப் பொறுப்பேற்றனர். எனினும் கரையோரத்தில் உடனடியாக அமைதி நிலை உருவாகவில்லை. போர்த்துக்கேய அதிகாரிகளினதும் பதன்கட்டிஸ் போன்ற உயர் குலத்தவர்களும் சர்வாதிகார நிலையிலிருந்து மாறவில்லை. யேசுசபையார் பொது மக்களைத் தமக்கெதிராகத் தூண்டி விடுவதாகவே அவர்கள் கருதினர். மக்களின் உரிமைகளை அடக்கி தங்கள் சுயநலத்துக் காகவே அவர்கள் செயலாற்றினர். மாவட்டக் குருக்களோ தங்களுக்கு இலாபம் தரக்கூடிய பங்கு நிர்வாகத்தை யேசு சபையாரிடம் விட்டுக்கொடுக்க விரும்ப வில்லை. இக்காரணிகளால் யேசு சபையாருக்கு பொதுவாகக் கரையோர மக்களிடையே நல்ல செல்வாக்கிருந்த போதிலும் அவர்களில் சிலரது தனிப்பட்ட தவறுகளும் சபையினருக்கு அவமானத்தைத் தேடித்தந்தன என்பதையும் இங்கு குறிப்பிடுதல் அவசியம்.

1623 இருந்து 1625 வரை பரவ குலத்தினருக்கிடையில் உள்நாட்டுப் போர் ஒன்று நடைபெற்றது. தூத்துக்குடியின் முதல்வரான அன்ட்று பீரிஸ் அடிகளார் ஜாதித் தலைவனாக (பிரதான பதன்கட்டி) கென்றி தா குரூஸ் என்பவனை நியமித்தார். யேசுசபையினருக்குப் பிரமாணிக்கமாகப் பணியாற்றி வந்ததற்காகவே இந்த நியமனம் வழங்கப்பட்டது. எனினும் இந் நியமனத் துக்குத் தகுதியற்றவன் இவன். அதிகாரத்தைப் பயன்படுத்தி தனது எதிரிகள் பலரைக் கொன்றழித்தான். ஒரு கொலைகாரனுக்குச் சலுகை காட்டி நியமனம் வழங்கியதாக மக்கள் யேசுசபையார் மீது குற்றஞ்சுமத்தினர். எனவே சபை முதல்வர் அவனைப் பகிரங்கமாகக் கண்டித்து அவனுக்குக் கொடுத்த அதிகா ரங்களை வாபஸ் பெறப்போவதாக எச்சரித்தார். தனது அதிகாரங்கள் பறிக்கப் படுமெனப் பயந்த கென்றிகுரூஸ் யேசுசபையார் மீது குற்றங்களைச் சாட்டி, அவர்களுக்கெதிராக குழுப்பங்களை ஏவி விட்டான். 1623 செப்ரம்பரில் நாக பட்டணத்தின் முன்னாள் போர்த்துக்கேய தளபதி இக்குழப்பங்களுக்கு மூல கர்த்தா கென்றி குரூஸ் என்பதையறிந்து அவனுக்கு மரணதண்டனை விதித்தான். இதனால் ஆத்திரமடைந்த அவனது ஆட்கள் யேசுசபையாரே அவனது மரணத் துக்குக் காரணம் எனக் குற்றம் சாட்டி அவர்கள் மீது போர் தொடுத்து யேசு சபையினரை தூத்துக்குடியிலிருந்து வெளியேற்றினர் எனினும் 1625இல் மீண்டும் அமைதி நிலவியது.

அடுத்த ஆண்டில் கடும் பஞ்சத்தால் இப்பகுதி மக்கள் (ஏறத்தாழ 10 மாதங்கள்) அவஸ்தைப்பட்டனர். தூத்துக்குடியில் மட்டும் 1500 பேரை பட்டினி பலியெடுத்தது. பலர் உணவுக்காகத் தங்களையே அடிமைகளாக விற்றதாகவும் கூறப்படுகிறது. குழந்தைகளும் உணவுப் பொருட்களுக்காக விற்கப்பட்டனர். யேசுசபையார் இத்தருணத்தில் செய்த உதவிகளோ சொல்லுந்தரமன்று. எல்லா மக்களும் தினசரி ஒரு வேளையாவது உணவைப் பெற்றுக்கொள்ளச் செய்வதில் அயராதுழைத்தனர். இக் காருண்ய செயல்களால் 1626இல் நாலாயிரம் பேர் திருமுழுக்குப் பெற்று கத்தோலிக்கராயினர். தூத்துக்குடிச் சபை முதல்வர் அன்ரனி றுபினோ அடிகள், மதுரையின் ஆளுநன் திருமலை நாயக்கிடம் சென்று பரவ குலத்தவரின் பரிதாப நிலையைக் கூறி வரிச்சலுகை செய்யுமாறு வேண்டினர். ஒரு பரவ குலத்தவன் ஆண்டொன்றிற்கு 800 பதகாஸ் வரி செலுத்த வேண்டும். குரு முதல்வரின் வேண்டுகோளை ஏற்ற நாயக் மூன்று வருடங்கள் வரிசெலுத்த வேண்டியதில்லை எனவும், பின்னர் ஆண்டொன்றுக்கு 500 பதகாஸ் மட்டும் செலுத்தினால் போதுமானது எனவும் சலுகை செய்தார்.

மீண்டும் கரையோரப் பகுதிகளில் (1620 - 1630) அமைதி கொடுக்கும் நிகழ்வு இடம்பெற்றது. கோவாவின் புதிய இராச பிரதிநிதியான கவுண் தே லிண்கார்ஸ் யேசு சபையினரை விரும்பவில்லை. தூத்துக்குடிக்கு அவரால் நியமிக்கப்பட்ட புதிய தளபதி பரவர்களை வருத்தியது கண்டு யேசுசபையினர் பலமாக ஆட்சேபம் தெரிவித்தனர். கொச்சின் பேராலய குருமுதல்வர், தூத்துக்குடி குரு முதல்வர் ஆகியோரின் ஆதரவுடன் 1630 பெப்ரவரியில் யேசுசபையினரை தூத்துக் குடியிலிருந்து வெளியேற்றினர். இந்நிலையில் யேசு சபையினர் ஏனைய கரை யோர மாகாணங்கள் அனைத்திலுமிருந்து தாமாகவே வெளியேறினர். மறை மாவட்டக் குருக்கள் உடனடியாக இவ்வெற்றிடங்களை நிரப்ப அனுப்பப்பட்டனர். எனினும் ஸ்பெயின் போர்த்துக்கால் மன்னருக்கு யேசுசபையாரின் வெளியேறு கையால் கரையோர மாவட்டங்களில் ஏற்பட்ட ஆன்மீகப் பின்னடைவு தெரிவிக்கப் பட்டது. எனவே யேசுசபையார் இது வரை மேற்பார்வை செய்த எல்லாத் தேவாலயங்களினதும் நீதி நிர்வாக செயற்பாடுகள் அவர்களிடமே மீளளிப்புச் செய்ய வேண்டுமென அரச கட்டளை பிறந்தது. 1633இல் யேசுசபையினர் மீள வருகை தந்து பன்னிரு பங்குகளையும் 20,000 கிறிஸ்தவர்களையும் பொறுப் பேற்றனர். ஆயினும் தளம்பிக்கொண்டிருந்த அமைதியையும், சீரற்றுக் கிடந்த ஆன்மீக அலுவல்களையும், ஊசலாடிக்கொண்டிருந்த நீதி நிர்வாக நிலையை யும் உடனடியாக அல்லது சிறிது காலத்துள் செய்வதென்பது இலகுவாயிருக்க வில்லை.

1634, 35களில் மதுரையின் திருமலை நாயக்கன் தூத்துக்குடியின் போர்த் துக்கேய தளபதியை சிறையிலிட்டான். போர்த்துக்கேய தளபதியின் மீது சுமத்தப் பட்ட குற்றச்செயல்களே காரணம் எனவும் தெரிவித்தான். யேசுசபையினரே இக்குற்றச் சாட்டுக்களை அறிவித்தனர் எனவும் கூறப்பட்டது. மதுரை நாயக் கனைத் தண்டிப்பதற்காக பன்னிரு பெரிய படகுகளில் படையணியினர் கோவா வின் இராசப் பிரதிநிதியால் (வைசிராய்) அனுப்பப்பட்டனர். தூத்துக்குடியும் ஏனைய கரையோரக் குடியிருப்புக்களும் பலத்த தாக்குதல்களுக்குள்ளாகின. இத் தாக்குதல்களால் கிறிஸ்தவ குடும்பங்களே மிக அதிகமாகப் பாதிக்கப்பட்டன.

1638ஆம் ஆண்டு முத்துக்குளித்தலில் மிக விசேட வருடமாகக் கருதப் பட்டது. 33 வருடங்கள் முத்துக்குளிப்பு மந்த நிலையிலேயே இருந்து வந்தது. சில மாதங்களின் பின் கொச்சின் மறைமாவட்ட ஆயர் மிக்கேல் றங்கல் ஆண்டகை கரையோரப் பகுதிகளுக்கு உத்தியோகபூர்வ தரிசனையை மேற்கொண்டார். தமது சுற்றுலாவின் பின் யேசுசபையினரின் சிறப்பான ஆன்மீகப் பணியையும் இறைய ரசைப் பரப்ப அவர்கள் மேற்கொண்ட தியாகங்களையும் பட்ட சோதனை வேதனை களையும் ஆயர் பகிரங்கமாகப் பாராட்டினார்.

1644இல் அன்ட்று லோப்பஸ் அடிகளின் அறிக்கையிலிருந்து சில பகுதிகள்: "முத்துக்குளிப்புத்துறைக் கரையோரக் கிராமங்களில் கிறிஸ்தவத்தின் நிலைமை பற்றி நான் மிகவும் திருப்தியடைந்தேன். பன்னிரு யேசுசபைக் குருக்கள் இங்கு பணியாற்றுகின்றனர். ஏனைய கிறிஸ்தவ மாவட்டங்களுடன் ஒப்பிடுகையில் இங்குள்ள குருக்கள் தொகை விசுவாசிகளுக்கு போதுமானதல்ல. எனினும் குருக்களின் பணி வெகு திருப்தியானது. இம் மாவட்டக் கிறிஸ்தவர் தொகை 26,218. எழுபது ஆண்டுகளுக்கு முன்னைய கணக்கு 50,000 க்குமதிகமாகும். கிறிஸ் தவர் தொகையின் வீழ்ச்சிக்கு வேறு வேலைகளைத் தேடி பலர் இடம்பெயர்ந் தது முக்கிய காரணி. (1604க்குப் பின் முத்துக்குளிப்பில் கணிசமான இலாபம்

கிடைப்பது அரிதாகி விட்டது) அடிக்கடி கலகங்கள் இடம்பெற்றமையும் மற்றோர் காரணி. எனினும் கிறிஸ்தவர்கள் தம் விசுவாச உறுதியில் தளரவில்லை.

அவர்களது ஆலயங்கள் அழகாக, உறுதியாக கற்களால் அமைக்கப் பட்டவை. அங்கு பாவிக்கப்பட்ட உடுமானங்கள், பாத்திரங்கள் விலையேறப் பெற்றவை. கிறிஸ்தவர்கள் தங்கள் ஆலயங்களுக்காகவோ அல்லது உடுமானங்கள், பாத்திரங்களுக்காகவோ, அல்லது திருநாட்களைச் சிறப்பாகக் கொண்டா டவோ எவ்வளவு பணமும் செலவழிக்கத் தயாராயிருக்கின்றனர். தினசரி திருப்பலிகளுக்கே பெண்கள் பெருந்தொகையாக வருகை தருவர். ஒவ்வொரு நாளும் திருப்பலி வேளைகளில் ஆலயங்கள் (ஞாயிறுபோல்) மக்கள் கூட்டத் தால் நிரம்பி வழியும். ஆண்களும் மிக நல்லவர்கள். ஆயினும் நாள் பூசைக்கு ஆண்கள் அதிகம் வருவதில்லை. ஞானோபதேச வகுப்புக்கள் தினசரி நடைபெறு கின்றன. பிரியத்தலை, மணப்பாட்டு, அலந்தலை, வீரபாண்டிய பட்டணம், புன்னைக்காயல், தூத்துக்குடி, வல்பர், வேம்பார் ஆகிய இடங்களில் தமிழ்ப் பாடசாலைகள் நடத்தப்பட்டன. தூத்துக்குடியில் போர்த்துக்கேய மொழிக் கல்லூரி ஒன்றும் இயங்கியது.

1648இல் யேசுசபையின் மாகாண அதிபதி இக்னேசியஸ் புறுனோ அடிகள் தூத்துக்குடியில் மாதாவின் பக்திச் சபையை ஆரம்பித்தார். பதன்கட்டிகளே முதலில் அங்கத்துவம் பெற்றனர். பின்னர் இச்சபை கரையோரப் பகுதிகளின் ஏனைய கிராமங்களுக்கும் அறிமுகப்படுத்தப்பட்டது. பனிமயமாதா திருநாள் அவ்வருடத்தில் ஆரம்பிக்கப்பட்டபோது பரத குலத்தவர்கள் ஒவ்வொரு நோவனையின் பின்னும் ஒரு கிறிஸ்தவ வரலாற்று நாடகத்தை மேடை யேற்றினர். கதாபாத்திரங்களையேற்று நடிப்பதில் பரத குலத்தவருக்கு நிகரான நடிகர் இவர். அடிக்கடி நற்கருணை பெறும் முறையும் அவர்களிடையே அறிமுகப்படுத்தப்பட்டது.

1649இல் முத்துக்குளிப்புத்துறை பெரியதொரு பயங்கரத்தை எதிர் நோக்கியது. ஒல்லாந்தர் அவர்களது கரையில் வந்திறங்கினர் (பெப்ரவரி 1649). முதலில் கரையோரக் கிராமங்களிலும் பின்னர் தூத்துக்குடியிலும் அவர் களது படையணி இடம் பிடித்தது. 40,000 பதகாஸ் நாணயங்கள் தருமாறு ஒல்லாந்தர் அச்சுறுத்தினர். பின் மீனவர் விடுத்த வேண்டுதலால் இத்தொகை 15,000 ஆக குறைக்கப்பட்டது. அதுவும் தரப்படாததால் ஆத்திரமடைந்த ஒல்லாந்தர் நகரின் ஒரு பகுதிக்குத் தீ மூட்டினர். வீடுகளனைத்தும் கொள்ளை யடிக்கப்பட்டன.[45]

அத்தியாயம் ஆறு



# ஒல்லாந்தர், ஆங்கிலேயர்கால தமிழ்நாட்டில் திருச்சபைகள்.

*1658இல் தூத்துக்குடியிலிருந்தும், முத்துக்குளிப்புத்துறையிலிருந்தும் போர்த்துக்கேயர் ஒல்லாந்தரால் துரத்தப்பட்டனர். ஒல்லாந்தர் மதுரை நாயக் கனுக்குத் தூண்டுதலளித்து யேசுசபைக் குருக்களைக் கரையோரப் பகுதிகளிலி ருந்து வெளியேற்றினர். எனினும் பரவர்களின் முயற்சியினால் மீண்டும் யேசு சபையார் அழைக்கப்பட்டனர்.*

*1666இல் கரையோரக் குரு சிரேஷ்டர் அனுப்பிய அறிக்கையின்படி பத்துக் குருக்கள் மேற்படி பகுதியில் மேய்ப்புப்பணியில் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் குடியிருக்க ஆலயங்களின் பக்கத்தில் வசதியில்லாதபடியால் கரை யோரத்துக்கு வெகு தொலைவில் சிறு குடிசைகளில் வசித்தனர். யேசுசபையார் இந்த ஆலயங்களை பாவிப்பதைத் தடுப்பதற்காக ஒவ்வொரு தேவாலயத்திலும் இரு ஒல்லாந்த வீரர்கள் காவல் செய்தனர். எனினும் இம் முயற்சி பயனளிக்க வில்லை. முஸ்லிம்கள் போல் வேடமணிந்த யேசுசபைக் குருக்கள் கரையோரப் பகுதி வீடுகளுக்கு இரவு வேளைகளில் சென்று அருட்சாதனங்களை வழங்கினர். ஞாயிறு தினங்களில், பரவ மக்கள் கூட்டங் கூட்டமாக தூத்துக்குடியிலிருந்தும் ஏனைய ஒல்லாந்த ஆக்கிரமிப்புக் கிராமங்களிலிருந்தும் குருக்கள் தங்கியிருக்கும் பகுதிகளுக்குச் சென்று திருப்பலியில் பங்கு பற்றி அருட்சாதனங்களைப் பெற்று மீளுவர். குரு முதல்வர் இல்லம் ஏழு மைல் தொலைவில் அமைந்திருந்தது. தூத்துக்குடிக் கல்லூரி, கொக்குயின்ஸ் என்ற இடத்துக்கு மாற்றப்பட்டது. குருக் களும், கல்லூரிகளும் பரவகுல மக்களின் தாராள உபசரிப்புகளிலேயே தங்கியிருந்தனர்.*

*1685இல் ஒல்லாந்தர் கரையோர மாவட்டங்களில் இருந்த பெரிய தேவால யங்கள் அனைத்தையும் தங்களது பொருள்கள், உபகரணங்களை பத்திரப் படுத்தும் களஞ்சியங்களாகவும், குருமாரின் இல்லங்களை தங்கள் ஏஜண்டு களின் (பிரதி நிதிகள்) குடியிருப்புக்களாகவும் மாற்றினர். இவ்விதம் பரவ குலத்தவரின் விசுவாசத்தை நிர்மூலமாக்க ஒல்லாந்தர் பல்வேறு திட்டங்களை அமுலாக்கினர். எனினும் அவர்களது முயற்சிகள் கைகூடவில்லை.*

*1700இல் கமநாயக்கன் பட்டியிலிருந்து பீற்றர் மாட்டீன் எழுதிய கடிதம் இது: ''பத்தாவியாவிலிருந்து கரையோரக் கிறிஸ்தவர்களுக்கு புரொட்டஸ் தாந்த மார்க்கத்தைப் போதிப்பதற்காக விசேட போதகர் ஒருவர் வரவழைக்கப் பட்டார். பரவ குலத்தவர் தங்கள் ஜாதித் தலைவன் மூலம் அவருக்கு தெரி வித்தது என்னவெனில், 'எங்கள் அப்போஸ்தலரான புனித பிரான்சீஸ்*

சவேரியாரை விட அதிகமாகவும் சிறப்பு வாய்ந்ததாகவும் பெரிய புதுமை களைச் செய்து காட்டினால் நாங்கள் எங்கள் மதத்தைத் துறந்து உங்கள் மதத்தில் சேர்வோம்' எனவே ஒல்லாந்தர் பரவ மக்களை கட்டாயப்படுத்த முயற்சித்தனர். உடனடியாக ஜாதித்தலைவன் விடுத்த அறிக்கையில் 'புரொட் டஸ்தாந்த போதகரின் கூட்டங்களுக்குச் செல்லும் எந்தப் பரவனும் இறைவனின் விரோதியாகக் கருதப்பட்டு எமது பரவ குலத்திலிருந்து முற்றாக வெளி யேற்றப்படுவான்' எனக் கண்டிப்பாகத் தெரிவித்தான். ஒரே ஒரு பரவன் மட்டும் இச்சட்டத்தை மீறினான். காரணம் செல்வந்தனான அவனது வர்த்தக அலுவல்களுக்கு ஒல்லாந்தர் அரச உதவியும் பொருளுதவியும் தாராளமாக வழங்கியிருந்தனர். அவன் சாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டு திருச்சபையிலிருந்து வெளியேற்றப்பட்டு மரண தண்டனையும் பெற்றான்.

ஒல்லாந்தரிலிருந்து தருவிக்கப்பட்ட மிகத் திறமை வாய்ந்த புரொட் டஸ்தாந்த போதகர்களான பல்டேயஸ் **1661**லும், நியோகொவ் **1662**லும் தங்கள் தோல்வியை (பரத குலத்தவரின் கத்தோலிக்க விசுவாசத்தை சீர்குலைக்க முடியாதிருந்ததை) பகிரங்கமாக ஒப்புக்கொண்டனர்.

இதற்கு முக்கிய காரணி யேசுசபையினரின் தன்னலமற்ற அர்ப்பணிக்கப் பட்ட, உறுதிமிக்க, உண்மை நேர்மை தழுவிய மேய்ப்புப் பணியும் விசுவாச போதனைகளுமாகும். யேசு சபையார் கரையோரக் கிராமங்களிலிருந்து வெளி யேற்றப்பட்ட பின்பும், உள்ளூர்ப் பகுதிகளில் தங்கியிருந்து நற்செய்தியைப் போதித்து திருவருட் சாதனங்களை வழங்கி வந்தனர். மதுரை நாயக்கனிடம் யேசுசபையினரை உள்ளூர்ப் பகுதிகளிலிருந்து துரத்தி விடுமாறு ஒல்லாந்தர் பல தடவைகள் விண்ணப்பித்தும் பயன் இல்லை.

இந் நூற்றாண்டின் இறுதிக் கட்டத்தில் ஒல்லாந்தர் கிறிஸ்தவ குருக்கள் மட்டில் தாம் கொண்டிருந்த குரோத மனப்பான்மையையும் கண்டிப்பையும் தளர்த்தினர். கரையோர மாவட்டங்களுக்குச் செல்லவும், அருட்சாதனங்கள் வழங்கவும், கத்தோலிக்க குருக்கள் அனுமதிக்கப்பட்டனர். எனினும் குருக்கள் பற்றாக்குறையும் பரவ குலத்தின் பொருளாதார நலிவும் அதிக அறுவடைக்கு இடந்தரவில்லை.[46]

## கன்னியாகுமரி மாவட்டத்தில் கிறிஸ்தவம்

புனித பிரான்சிஸ் சவேரியாரின் அப்போஸ்தலப் பணியால் உருவாகிய இப்பகுதி, அக்காலத்தில் திருவாங்கூர்க் கரையோர மாவட்டமென அழைக்கப் பட்டது. திருவேதி அரசர்கள் (குயிலொன், நாஞ்சிநாடு, தென்பகுதித் திருநெல் வேலி அரசன் ராமவர்மா, திருவாங்கூர் அரசன் மார்தாண்ட வர்மா) பாண்டி யனுக்கு எதிராக **1544**இல் போர் தொடுத்தனர். திருநெல்வேலியின் புலாஸ் எனப்படும் பிரபுக்கள், பாண்டியனை ஆதரித்தனர். திருவேதியினரும் பிரபுக் களும் கோவாவின் போர்த்துக்கேய ஆளுநரான மாட்டீன் அல் பொன்சோ டீ சூசாவின் ஆதரவை நாடினர். மாட்டீன் அல்பொன்சோ சவேரியாரிடம் சென்று திருவேதியர்களைச் சந்தித்து போர்த்துக்கேயரின் ஆதரவு அவர் களுக்கே கிடைக்கும் என அறிவிக்குமாறு வேண்டினான். சவேரியார், ராம வர்மாவிடமும் சகோதரன் மார்த்தாண்டவர்மாவிடமும் சென்று இதைத் தெரிவித்தார். இந்த இரு இளவரசர்களும் தங்களுக்காக புனித பிரான்சிஸ் சவேரியார் எடுத்த முயற்சிகளுக்காக அவர் மட்டில் அக்கறை காட்டி

திருவாங்கூர் சமஸ்தானத்தில் அவர் இறையரசைப் போதிக்க சகல வசதிகளையும் செய்து கொடுத்தனர். ராமவர்மா சவேரியார் கோவில்களை அமைப்பதற்கென இரண்டாயிரம் பணமும் நன்கொடை செய்தான்.

தம்மட்டில் சுதேச ஆளுநர்கள் காட்டும் ஆதரவும் மரியாதையும் நிரந்தரமானதல்ல என்பதை சவேரியார் உணர்ந்தார். அவர் பணியாற்றிய முக்குவ குல மீனவர்கள் வசித்த 14 கிராமங்களில் 12 திருவாங்கூரைச் சேர்ந்தவை, இவை மார்த்தாண்டவர்மாவுக்குரியவை. அடுத்த இரண்டு கிராமங்களும் ராமவர்மாவுக்குரியவை. அவர்களது மொழி தமிழ், சாதித் துவேஷத்தால் அடக்கி ஒடுக்கப்பட்ட இக் கிராமங்களைச் சேர்ந்தவர்கள், திருமுழுக்குப் பெற்று போர்த்துக்கேயரிடம் பல்வேறு சலுகைகள் (தொழில் உட்பட) பெற்று ஆறுதலடைந்தனர். படகர்களால் வேறு கிறிஸ்தவ கிராமங்கள் தாக்கப்பட்ட போது புனித சவேரியார் தமது செல்வாக்கைப் பிரயோகித்து அக் கிறிஸ்தவர்களைக் காப்பாற்றியது போல தங்களையும் பாதுகாப்பார் என நம்பிக்கையும் கொண்டிருந்தனர். எனவே அவர்கள் சவேரியாருக்குத் தூது விடுத்தனர்.

சவேரியார் அவர்கள் அனைவருக்கும் உடனடியாகத் திருமுழுக்குக் கொடுத்து, சத்திய மறையில் சேர்த்துக்கொள்வதெனத் தீர்மானித்தார். ஆரம்ப அறிவை அளித்த பின் ஏக காலத்தில் அனைவருக்கும் திருமுழுக்கு அளிப்பதெனவும் பின்னர் மறைக்கல்வி வகுப்புகள் மூலம் அவர்களது ஞான அறிவை விருத்தியாக்குவதெனவும் திட்டமிட்டார். புதிதாகத் திருமுழுக்குப் பெற்ற அனைவரும் நல்ல விசுவாசத்துடன் கிறிஸ்தவ வாழ்வை அனுசரித்து, அருட்சாதனங்களை பக்தியுடன் அடிக்கடி பெற்று அறநெறி வாழ்வு வாழத் தவறினால், குருக்களின் கட்டுப்பாட்டில் இருந்து விலகினால் கடலில் மீன் பிடிக்கும் சலுகைகளை நிறுத்துதல் - அவர்களது கட்டுமரங்கள், படகுகளை அபகரித்தல் முதலிய கடுந்தண்டனைகளை வழங்க போர்த்துக்கேய தளபதி தயாராயிருந்தான்.

இவ்வித கட்டுப்பாட்டின் கீழ் வந்த கிராமங்கள் புவார், கோலான்கொட், வல்லாவிலை, தூதர், புதென்துறை, தங்கபட்டணம், எனாயம், மிதாளம், வன்னிய குடி, கோலாசெல், காடியபட்டணம், முத்தம், பள்ளம், மானக்குடி என்பவை. ஒரு கிராமத்திலிருந்து தங்களனைவரையும் திருமுழுக்குக் கொடுத்து சத்திய மறையில் சேர்க்குமாறு அழைப்பு விடுக்கப்பட்டால், அவர் முதலில் எல்லா ஆண்களையும் இளைஞர்களையும் ஒன்று சேர்ப்பார். முதலில் சிலுவை அடையாள மந்திரத்தைச் சொல்லிக்கொடுத்து மூன்று தடவை அச் செபத்தை உரக்க உச்சரிப்பதன் மூலம் மூவொரு கடவுளின் மேல் விசுவாசத்தையும் ஆழ்ந்த பக்தியையும் அவர்களிடம் உருவாக்குவார். தொடர்ந்து பரலோக, அருள்நிறை, பாவசங்கீர்த்தன, உத்தம மனஸ் தாப மந்திரங்களையும், பத்துக்கற்பனை, விசுவாசப் பிரமாணம், கிருபை தயாபர செபங்களையும் சொல்லிக் கொடுத்து நன்கு மனனம் செய்யவும் பிழையின்றி உச்சரிக்கவும் செய்விப்பார். விசுவாச மந்திரம், பத்துக்கட்டளைகளுக்கு விரிவான விளக்கமளிப்பார். பின்னர் அவர்கள் செய்த தவறுகளுக்காக ஆண்டவரிடம் மன்னிப்புக் கேட்குமாறு அறிவுரை கூறுவார். விசுவாச மந்திரத்தின் ஒவ்வொரு வசனங்களையும் அவர் உச்சரித்து அவர்கள் விசுவாசிக்கிறார்களா என வினாவுவார். சந்தேகங்களுக்கு நல்ல விளக்கம் தருவார். இறுதியாக அவர்கள் தங்கள் மார்பின் மீது கைகளைக் குவித்து பக்தியுடன் விசுவாச மந்திரத்தைச் செபித்தபின்

திருமுழுக்கு அளிப்பார். அவர்களது கத்தோலிக்கப் பெயர் பொறிக்கப்பட்ட ஓலைச் சட்டம் ஒன்றையும் கொடுப்பார். ஆண்கள் வீடு சென்று ஏனையோரை அனுப்புவர். அவர்களுக்கும் இவ்விதம் ஆரம்ப விசுவாச அறிவுரைகள் வழங்கப் பட்டு திருமுழுக்கும் பெறுவர். முழுக்கிராமமும் திருமுழுக்குப் பெற்றபின் அங்கு தற்காலிகமாக ஒரு சிறு கோவில் நிறுவப்படும். இவ்விதமே பதின்மூன்று முக்குவ கிராமங்களும் சத்திய மறையில் சேர்ந்தபின், மன்னாரிலிருந்து கிடைத்த அதிர்ச்சி தரும் செய்திகளைக் கேட்டவுடன் சவேரியார் கொச்சினுக்குப் போக வேண்டியதாயிற்று. எனவே எஞ்சிய மனாக்குடிக் கிராமத்தோர் மன்சில்தாஸ் அடிகளால் திருமுழுக்கு அளிக்கப்பட்டனர். கொச்சினில் இருந்து மன்சில்தாஸ் அடிகளுக்கு சவேரியார் எழுதிய திருமடலில் ஒவ்வொரு கிரா மத்திலும் ஒரு பாடசாலை நிறுவி மாணவரின் அறிவை வளர்க்குமாறு கேட்டுக் கொண்டார்.

1547இல் அரசியல் கொந்தளிப்பு நிலை உருவாகியது. திருவேதி அரசர்கள் விஜயநகர் மன்னனுடன் போர் தொடுத்தனர். படைப்பலம் மிக்க விஜயநகர் மன்னனை வீணாகப் பகைத்துக்கொள்ளப் போர்த்துக்கேயர் விரும்பவில்லை. எனவே திருவேதிக்கு உதவி வழங்க மறுத்தனர். இப்போரில் திருவேதியர் படுதோல்வி அடைந்தனர். எனவே அவர்கள் சரணாகதி அடைந்து விஜயநகர் மன்னனுக்கு அடிமைகளாயினர். இதனால் இறும்பூது எய்திய விஜயநகர் மன்னன், யேசுசபை முதல்வரான பிரான்சீஸ் கென்றிக்குஸ் அடிகளுக்கு, தனது இராச்சியத்தில் மதமாற்றம் செய்யக்கூடாது என ஆணையிட்டான். இதற்கு முஸ்லிம்களின் தூண்டுதலும் ஒரு காரணி. தொடர்ந்து கென்றிக்குஸ் அடிகளின் பக்கபலமாக மேய்ப்புப் பணியிலீடுபட்டிருந்த பல்தசார் நண்ஸ் என்ற யேசு சபைத்துறவியையும் வெளியேற்றினான்.

அடுத்து தென்கேரளாவைச் சேர்ந்த லத்தீனிய கிறிஸ்தவர்களின் பதினா றாம், பதினேழாம் நூற்றாண்டுகளின் விசுவாசத் தரத்தை ஆராயுமிடத்து குயிலன் தொடக்கம் கொமோரின் குடா வரையிலான மதபோதனை நல்ல தரமான அடித்தளத்தைக் கொண்டிருக்கவில்லை என்பது தெரிகிறது. இதற்குக் குருக்களின் பற்றாக்குறையே முக்கிய காரணி. 1546 க்குப் பின் பிரான்சீஸ் கென்றிக்குஸ் அடிகளே இப்பெரும் பகுதிக்கு தனியொரு குருவாக ஒரு தொண்டரின் துணையுடன் மட்டும் மேய்ப்புப் பணியில் ஈடுபடவேண்டிய தாயிற்று. 1553இல் கிறிஸ்தவர்கள் இஸ்லாமியத்தில் இணைய முற்பட்டனர். பொருளாதார நலிவே இதற்கும் முக்கிய காரணி. தொடர்ந்து தங்க பட்டணத்தில் பல கிறிஸ்தவ யுவதிகள், முஸ்லீம் இளைஞர்களை மணந்து கொண்டனர். இதனால் அந்த யுவதிகளும் பின்னர் குடும்பத்தினரும் முஸ்லிம் மார்க்கத்தைத் தழுவிக் கொண்டனர்.

கிறிஸ்தவ கிராமங்களில் புதிதாகக் கோவில்கள் கட்ட அனுமதி வழங்கப்பட வில்லை. அரசர்களுக்குப் பெறுமதிமிக்க அன்பளிப்புக்களை முஸ்லீம்கள் வழங்கியதே இதற்குக் காரணம். 1558இன் அறிக்கை; கரையோரங்களில் ஒரு சில தேவாலயங்கள் மட்டுமே காணப்பட்டன எனக் கூறுகிறது. முன் போலல்லாது கிறிஸ்தவர்களும் தங்கள் ஆலயங்களைப் பராமரிப்பதில் அதிக அக்கறை காட்டவில்லை.

1563இல் மறைக்கல்விப் போதனையின் நிலை: ஆலயங்கள் இருப்பின் அங்கேயே மறைக்கல்வி வகுப்புக்கள் நடத்தப்பட்டன. வகுப்புகளுக்கு

மாணவர் வரும்போது ஆசீநீரைத் தொட்டு, முழந்தாழிட்டு, சிலுவை அடையாளம் வரைந்தபின் ஒரு பரலோக மந்திரமும், ஒரு அருள்நிறை மந்திரமும் செபித்தபின் வகுப்பறையில் தமதிடத்தில் அமர்வர். ஆண்கள் ஒரு பக்கத்திலும் பெண்கள் மறுபக்கத்திலும் அமர்ந்திருப்பர். கணக்குப்பிள்ளை ஒருவரை எழுப்புவார். அம்மாணவர் (அல்லது மாணவி) வகுப்பின் முன்சென்று, நெஞ்சில் கரங்களைக் குவித்து இம் மந்திரங்களை லத்தீனில் ஒப்புவிப்பார். பின் ஏனைய மந்திரங்களை தமிழில் சொல்லுமாறு கேட்கப்படுவர். இவ்விதம் கணக்குப் பிள்ளை மூன்றுபேரை. அழைப்பர். இதே விதமாகவே திருமணமான பெண்களுக்கு சனிக்கிழமைகளிலும், ஆண்களுக்கு ஞாயிறுகளிலும் மறைக்கல்வி வகுப்புகள் நடைபெறும். தவறுகள் இருப்பின் கணக்குப்பிள்ளை அவைகளைச் சுட்டிக் காட்டித் திருத்தி, மீண்டும் ஒப்புவிக்கச் செய்வார். ஞாயிறு தினங்களில் மறை போதனையின் பின் திருப்பலி நடைபெறும். அக்கிராம மக்கள் அனைவரும் திருப்பலியில் பங்குபற்ற வேண்டும்.

1563 அளவில் இக்கிராமங்களில் பலர் பாவசங்கீர்த்தன அருட்சாதனம் பற்றி கணிசமான அறிவைக் கொண்டிருந்தனர். இவர்கள் அனேகமாக குயிலோன் கல்லூரியின் பழைய மாணவர். ஏனையோர் நல்ல விசுவாச அறிவை குருக்கள் அல்லது மறையாசிரியர் மூலம் பெற்றவர்கள். அரசனும் அவனது அதிகாரிகளும் அதிக கண்டிப்புக் காட்டியபோதும் பாவசங்கீர்த்தனம் செய்ய ஒரு வாய்ப்புக் கிடைக்கும் போது எல்லாம், கிறிஸ்தவர்கள் அவ்வருட்சாதனத்தைப் பெறத் தயங்கவில்லை. பிறர்நலம் பேணுவதிலும் அயலாருடன் சகோதர அன்புறவுடன் நடப்பதிலும் ஒழுக்க நெறியை அனுசரிப்பதிலும் அக்கறை காட்டினர். முன்னர் அடிக்கடியும் சிறுவிடயங்களிலும் சண்டை பிடித்து நியாயம் பேசியவர்கள் இப்போது அன்புறவுடன் விட்டுக்கொடுத்து அமைதி பேணினர்.

1568 அறிக்கையின்படி திருவாங்கூர்க் கரையில் 17 கோவில்களும் எண்ணாயிரம் கிறிஸ்தவர்களுமிருந்தனர். கோலன்கொற் வல்லவிலை, தூதர், புதென்துறை, தங்கபட்டணம், இனயம், மிதாளம், வன்னியகுடி, கொல்லாச் செல், தம்பிரான் கோவில், கடைப்பட்டணம், முத்தம், இராயக்கமங்கலம், பாலம், மனாக்குடி, கோவளம், கொமோரின்குடா, குமரி முற்றம் ஆகிய இடங்களில் கோவில்கள் இருந்தன. கப்பலாட்டுதல், மீன்பிடித்தல் என்பவையே மக்களின் பிரதான தொழில்கள். திருவாங்கூர் அரசன் ஆடித்தியவர்மா, மிஷனரிகளுடன் பகைமை பாராட்டுவதை நிறுத்தவில்லை. எனவே கிறிஸ்தவர்கள் பல துன்பங்களுக்குள்ளாகினர்.

எனினும் இவ்வருடப் பிற்பகுதியில் அரசனின் போக்கில் ஒரு மாறுதல் காணப்பட்டது. தனது படையணிக்குத் தேவையான குதிரைகளைப் பெறுவதற்கு யேசுசபையாரின் நட்புறவு தேவை என்பதை அவன் உணர்ந்தான். கோவாவின் போர்த்துக்கேய இராசப் பிரதிநிதி, ஏற்கனவே திருவாங்கூர் இராச்சியத்துக்கு எவரும் குதிரைகள் கொண்டு போகக்கூடாதென உத்தரவு பிறப்பித்திருந்தார். எனவே தனது இராச்சியத்தில் குருக்கள் கிறிஸ்தவத்தைப் போதிக்கத் தடையேதுமில்லை என அரசன் விசேட அனுமதி வழங்கினான். விரும்பியவர்கள் திருமுழுக்குப் பெறலாம்; தேவையை ஒட்டி, புதிய கோவில்கள் கட்டப்படலாம் எனவும் அனுமதித்ததுடன் தனது தலைநகரான கல்குளத்தில் ஒரு கோவிலும் குருமனையும் அமைப்பதற்கு மானியம் வழங்கினான்.

ஒவ்வொரு கிறிஸ்தவ கிராமத்துக்கும் குருக்கள் ஒரு நீதிபதியையும் ஒரு பொலிஸ்காரனையும் நியமித்தனர். முழுக் கரையோரங்களுக்குமாக ஒரு பிரதான நீதிபதியும் உண்டு. இந்த நீதிபதிகள் பிரமாணிக்கமாகவும், நேர்மை உண்மையுடனும் நீதி வழங்குவது திருச்சபைக் குருக்களால் கண்காணிக்கப் பட்டது. அநீதி, அதிக துஷ்பிரயோகம், லஞ்ச ஊழல்களுக்கு இலக்கான நீதி பதிகள் பதவி நீக்கம் செய்யப்பட்டனர்.

1572களில் கிறிஸ்தவர்களுக்கும் அவர்களது இந்து சமய அயலவர்களான சாணார்களுக்குமிடையே ஒரு பிரச்சனை உருவாகியது. கிறிஸ்தவர்களை சாணார் அவமதித்ததைத் தொடர்ந்து கிறிஸ்தவர்கள் சாணாரை பழிவாங்குவதெனத் தீர்மானித்தனர். யேசு சபையார் கிறிஸ்தவர்கள் அமைதி காக்கும்படி பலமுறை வேண்டுகோள் விடுத்தும் பயனளிக்கவில்லை. சாணார்கள் அரசனுக்கு அடிக்கடி மிகச் சிறந்த அன்பளிப்புகள் செய்ததால் அவன் அவர்கள் பக்கமே நின்று சகல உதவிகளும் வழங்கினான். இதன் காரணமாக சாணார் கிறிஸ்தவர்களை விரட்டிக் கலைத்து இருவரைக் கொன்றனர். ஆத்திமடைந்த கிறிஸ்தவர்கள் திரண் டெழுந்து பல சாணாரைக் கொன்றொழித்தனர். சாணாரும் கிறிஸ்தவ கிராமங் களின் மீது படையெடுத்து ஆலயங்களையும் வீடுகளையும் தீக்கிரையாக்கினர்.

நிலமை மோசமாவது கண்ட கோவாவின் போர்த்துக்கேய இராசப் பிரதிநிதி அன்ரனி தே நொறன்கா, திருவாங்கூர் அரசுடனும் மக்களுடனும் எவரும் வியாபார ஒப்பந்தங்கள் செய்யலாகாதென கடும் உத்தரவு பிறப்பித்தான். அரசனும் 1574இல் சமாதான உடன்படிக்கை செய்ய கிறிஸ்தவர்கள் தங்கள் ஆலயங்களை மீண்டும் கட்டி எழுப்பினர்.

இப்போர் காரணமாக, மிகப் பாதிக்கப்பட்ட நிலையில் கத்தோலிக்க கிராமங்கள் அவதியுற்றிருக்க, 1575இல் யேசுசபைத்தரிசகர் வலிக்ஞனோ அடிகள் வந்து சேர்ந்தார். கிராமங்களின் நிலை பரிதாபத்துக்குரியதாகவேயி ருந்தது. அவரது அவதானிப்பு வருமாறு: இக்கரையோரக் கிராமங்களின் ஆன்மீக நிலையோ மிகமிகக் கேவலமானதாகும். குருக்கள் பற்றாக்குறை, கலகங்கள் போர்கள் என்பனவே இதற்குரிய காரணிகள். கிறிஸ்தவர்கள் - அஞ்ஞானிகள் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டிருந்தனர். வலிக்ஞனோ அடிகள் நிலமையைச் சீர்திருத்த தம்மாலியன்ற முயற்சிகளில் தலையிட்டார். அவை கொலாச்சேவில் தமிழில் பாண்டியத்தியமுள்ள இரு குருக்கள் தங்கவேண்டும். அவர்களில் ஒருவர் கொமோரின் குடா வரை எல்லாக் கிராமங்களுக்கும் அடிக்கடி செல்லுதல் வேண்டும். மற்றையவர் கொலாச் செல்லுக்கும் சோவாரா பகுதிக்குமிடையில் மேய்ப்புப்பணியை நடத்த வேண்டும்.

அவர் ஒவ்வொரு கிராமங்களிலும் குருக்கள் தங்கியிருந்து பணியாற்று வதற்கு உதவியாக பத்து வீடுகள் அமைக்க ஆவனை செய்தார். மேலும் நிதி பற்றாக் குறையால் அரைகுறையாகக் கிடந்த ஆலயக் கட்டடங்களைப் பூர்த்தியாக்க வும் உதவி வழங்கினார். சிறப்பாகக் கூறுமிடத்து, தம்மாலியன்றவரை எல்லாக் கரையோரக் கிராமங்களையுமே அவர் தரிசித்து இறையரசைப் பரப்புவதற் குரிய சகல நடவடிக்கைகளையும் எடுத்தார்.

ஓராண்டின் பின் யேசு சபையைச் சேர்ந்த அன்ரனி மொன்செறேற் அடிகள் இங்கு வருகைதந்து, தமது நினைவலைகளை ஒரு அறிக்கையாக வெளியிட்டார். குயிலொன் கல்லூரியின் பழைய மாணவர்கள் மட்டுமே நல்ல

கத்தோலிக்க நெறியில் வாழ்பவர்கள் என்றும் அவர்கள் சிறு தொகையினர் என்றும் பெரும்பான்மைக் கிறிஸ்தவர்கள் தம் மனம்போன போக்கில் வாழ்ந் தனர் என்றும் அவர்களில் சிலர் குருக்களுக்கு அடிக்கடி தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தனர் என்றும் இவரது அறிக்கையில் காண்கிறோம். ஒரு சிறு உதாரணம்: அண்ட்று கெர்னாண்டஸ் அடிகள் ஒரு தேவாலயத்தின் முன்னால் மீனவர் சிலரால் பொய்த் தேவைகளுக்காக அமைக்கப்பட்ட சிறுகோவிலை அழிக்கும்படி கட்டளையிட்டார். இதைத் தொடர்ந்து அந்த மீனவர்கள் திரண்டு வந்து அவரைத் தடிகளால் அடித்து வதைத்தனர். மொன்சறேற் அடிகளும் ஒருமுறை கோபம் கொண்ட மீனவரிடமிருந்து தப்புவதற்காக ஓடி ஒளிக்க வேண்டியிருந்தது. இந்நிகழ்வில் அவர்களுக்கு பக்கபலமாக இருந்தது மது போதையே.

1578இல் எழுதப்பட்ட ஒரு மடலில் யேசு சபையினர் ஒவ்வொரு செவ் வாய்தோறும் மக்களை ஒன்றுதிரட்டி, பாவ சங்கீர்த்தனம் பற்றியும் ஏனைய அருட் சாதனங்கள் பற்றியும் விளக்கவுரை அளிக்கப்பட்டது. அதிஷ்டவசமாக நன்கு தமிழ் தெரிந்த ஒரு குரு வந்ததைத் தொடர்ந்து பாவசங்கீர்த்தனத்துக்கு வருவோர் தொகை கணிசமான அளவு அதிகரித்தது. இந்துக்களிடமிருந்து தங்கள் ஆலயங்களைக் காப்பாற்ற எவ்வித ஆபத்துக்களையும் எதிர்நோக்க அக்கிறிஸ்தவர்கள் தயாராயிருந்தமை, கத்தோலிக்கத்தில் அவர்கள் கொண்டிருந்த ஆழ்ந்த பக்தியை எடுத்துக் காட்டுகிறது.

அடுத்த ஆண்டில் திருவாங்கூர் அரசன் வீர உதய மார்த்தாண்ட வர்மாவி னால் ஒருசிறு வேதகலாபனை உருவாக்கப்பட்டது. களிமண் கற்களால் கட்டப் பட்டு ஓலைகளால் வேயப்பட்டிருந்த கத்தோலிக்க கோவில்கள் போர்த்துக் கேய வீரர்களின் முகாம்களாக இரகசியமாக திடீரென மாற்றப்பட்டு, இந்த நாட்டை அடிமைப்படுத்த போர்த்துக்கேய படைகளை நகர்த்தும் போது, வெகுதுணையாயிருக்குமென திருவாங்கூர் அரசனுக்கு யாரோ கோள் மூட்டி விட்டனர். இதை நம்பிய அரசன் கத்தோலிக்க ஆலயங்களை அழித்தொழிக் கும்படி உத்தரவிட்டான். மூன்று ஆலயங்கள் நிர்மூலமாக்கப்பட்டன. எனினும் தான் கேள்வியுற்றது தவறான செய்தி என்பது அரசனுக்குத் தெரிய வந்தது. அத்துடன் அரச கட்டளைப்படி இந்த ஆலயங்களுக்குத் தீமூட்டியவர் களுக்குக் கிடைத்த கடவுள் தண்டனையும் அரசனை அச்சமடையச் செய்திருக்கலாம். ஆகவே தொடர்ந்து கத்தோலிக்க ஆலயங்களில் கைவைக் காதிருக்குமாறும், நிர்மூலமாக்கப்பட்ட மூன்று தேவாலயங்களையும் அரச செலவில் கட்டிக் கொடுக்குமாறும் மீள் உத்தரவு பிறப்பித்தான்.

கரையோரக் கிராம மக்கள், காணி, நிலபுலன்கள் சொந்தமாக இல்லாத காரணத்தால் தாங்கள் வசிக்கும் கிராமங்களில் அல்லது நகர்ப்புறங்களில் தங்களது குடியுரிமைக்கு ஆபத்து ஏற்பட்டால் உடனடியாக தங்களது பொருட்களைக் கட்டிச் சுற்றியெடுத்துக்கொண்டு இன்னொரு இடத்துக்குப் போவது அவர்களுக்கு இலகுவாக இருந்தது. 1584இல் முத்தம் பகுதியிலிருந்த கிறிஸ்தவர்களுடன் முஸ்லிம்கள் போர் தொடுத்தனர். ஆலயம் தகர்க்கப் பட்டது. கிறிஸ்தவர் மீது காடைத்தனம் கட்டவிழ்த்து விடப்பட்டது. கிறிஸ்த வர்கள் ஒன்று திரண்டு முத்தம் பகுதியிலிருந்து மட்டுமல்ல காடிய பட்டணத் திலுமிருந்து வெளியேறினர். இதுபற்றி சமரச முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட போது கிறிஸ்தவர்கள் ஒரே குரலில் தங்கள் ஆலயத்துக்கு இழைக்கப்பட்ட

அநீதி, இறைவனுக்கே விடுக்கப்பட்ட அநீதியும் நிந்தையுமாதலால் தகுந்த பரிகாரம் செய்யப்படவேண்டும், என அழுங்குப்பிடி பிடித்தனர். திருவாங்கூர் அரசன் சமரச முயற்சிகளில் முன்னின்று உழைத்தான். கோவிலைத் திருத்துவதற்குச் சகல உதவிகளையும் வழங்கினான். ஆயின் பிரச்சனை தீர்ந்ததாயில்லை. கிராமத்தின் அழிவுகள் அனைத்தும் புனரமைப்புச் செய்யப்பட முஸ்லிம்கள் ஒரு பள்ளிவாசலை அமைத்தனர். கிறிஸ்தவர்கள் அதை அகற்றுவதற்கு முயற்சித்தனர். முஸ்லிம்கள் பள்ளிவாசலைப் பாதுகாத்ததுடன் அரசனின் மனதைத் தம்பாலிழுக்க, பெறுமதி வாய்ந்த பல பொருட்களை அன்பளிப்புச் செய்தனர். கிறிஸ்தவர்களோ தங்கள் எதிர்ப்பைப் பெருமளவில் தெரிவிக்க, சகலருமே கிராமத்தை விட்டு இடம் பெயர்ந்தனர். நிலமை விபரீதமாகச் செல்வதை உணர்ந்த அரசன் பள்ளிவாசலைத் தகர்த்து அதனுடன் சம்பந்தப்பட்ட பொருட்களையும் கடலில் வீசுமாறு கட்டளையிட்ட பின்னரே, மக்களனைவரும் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினர்.

*1601* களில் கரையோரப் பகுதிகளில் *23* ஆலயங்கள் இருந்தன. கொலாச்சேலில் தங்கியிருந்த இரு யேசுசபைக் குருக்கள், இக்கிறிஸ்தவர்களின் ஆன்மீக அலுவல்களைக் கவனித்தனர். இரு வருடங்களின் பின் மேலும் ஒரு குரு அனுப்பப்பட்டார். *1602*க்கும் *1603*க்குமிடையில் ஏறத்தாழ *550* வளர்ந்தோர், திருமுழுக்குப் பெற்றதாக அறிக்கைகள் கூறுகின்றன. இப் புதுக் கிறிஸ்தவர்களுள் சில முஸ்லிம்களும் சில உயர் வகுப்பினரும் அடங்குவர்.

*1603* களில் உள்ளூர்களில் ஏழு தேவாலயங்கள் அமைக்கப்பட்டன. இதற்கு அண்ட்று யுக்கரியோ அடிகளின் அயராத உழைப்பே காரணம். திருவாங்கூர் மன்னன் சிறீ வீர ரவிவர்மா ஆதரவும் அன்பளிப்பும் வழங்கியிருந்தான். கல்குளத்தில் அரசனின் கோட்டைப் பகுதியிலும், கோட்டைக்கு வெளியேயும் இரு ஆலயங்கள் நிறுவப்பட்டன. கோட்டாரில் அரசனால் அன்பளிப்புச் செய்யப்பட்ட அரச பூங்காவில் மூன்றாவது கோவில் அமைக்கப்பட்டது. அயற் கிறிஸ்தவ கிராமங்களான மானாக்குடி, பத்தம், பாரியபார், ராச்சிமாட மக்களும் இவ்வாலய அமைப்பில் ஒத்துழைப்பு வழங்கினர். ஆலயத் திறப்பு விழாவில், கிறிஸ்தவர்களால் அரங்கேற்றப்பட்ட விவிலிய நாடகம் (அறிவற்ற செல்வன் உவமை) இந்துக்களின் விடேச பாராட்டுதலைப் பெற்றது. கோட்டாரில் கட்டப்பட்ட தேவாலயம் மூவொரு கடவுளுக்கு அர்ப்பணிக்கப்பட்டது. எனினும் புக்கோரியோ அடிகள் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்ட மிசனரியான பிரான்சீஸ் சவேரியாரின் உருவப்பட மொன்றை ஆலயத்தில் பிரதிஷ்ட்டை செய்தார். இது அனைவரதும் பாராட்டுதலைப் பெற்றது. ஏனெனில் அக் கிறிஸ்தவர்களில் பலரும் அப் புனிதர் மூலமே இறைவனின் கொடைகளைப் பெற்றிருந்தனர்.

சிறிது காலத்துள் இந்த ஆலயம் ஒரு பெரிய யாத்திரைத் தலமாக மாறியது. இந்துக்களும் கூட்டம் கூட்டமாக அங்கு சென்று பிரார்த்தித்துத் தம் குறைகள் தீர்ந்து மகிழ்ச்சியோடு வீடு திரும்புவர். மாரவடலூர் என்னுமிடத்திலும் அதே வருடத்தில் ஒரு ஆலயம் அமைக்கப்பட்டது. இதற்கு அங்கிருந்த இந்துக்கள் பலத்த எதிர்ப்புத் தெரிவித்தும் அரசன் அவற்றை விடுத்துத் தன் அனுமதியை வழங்கினான். வராகம், அதாலிக் குறி என்னுமிடங்களிலும் ஆலயங்கள் அமைக்கப்பட்டன.

மீண்டும் இப்பகுதிக் கிறிஸ்தவர்களை, துன்பநிலை எதிர்நோக்கியது.

1604ல் வால்வெள்ளி ஒன்று வானில் தோன்றியது. இதனால் அச்சமடைந்த அரசன் வானசாஸ்திரிகள், சோதிடர்கள், பிராமணர்களை அழைத்து வால் வெள்ளியின் நன்மை தீமைகளை ஆராய்ந்தான். மிகப்பெரிய தீமைகள் அரசனை எதிர்நோக்கவிருப்பதால் அதற்குப் பரிகாரமாக சில கிராமங்களை எரித்தும் அங்குள்ள மக்களின் இரத்தப் பலிகளைச் செலுத்தியும் இத்தீங்கை வெற்றி கொள்ளலாமென அவர்கள் தெரிவித்தனர். இதற்கு கரையோரக் கிராமங் களையே எரித்து அங்குள்ள கிறிஸ்தவர்களையே இரத்த பலியாக்கலாம் என சூத்திரதாரிகள் மேலும் தெரிவித்தனர்.

யேசுசபையினருடன் நல்ல உறவையும் தொடர்புகளையும் கொண்டிருந்த அரசன் இந்த ஆலோசனையை அவ்வளவாக விரும்பவில்லை. இதற்கிடையே, கரையோரக் கிறிஸ்தவர்களில் ஒரு பகுதியினருக்கும் இந்துக்களான சாணார் களுக்குமிடையே ஒரு சிறு விடயமாகப் பிரச்சினை ஏற்பட்டது. கிறிஸ்தவர்கள் சாணாரைப் பலமாகத் தாக்கினர். எனவே சாணார் அரசனுக்கு பெறுமதி வாய்ந்த அன்பளிப்புக்களை அனுப்பி அவனது படையணி ஒன்றைப் பெற்றுக் கொண்டனர். படையணியின் உதவியுடன் தம்மைத் தாக்கிய கிராமத்தையும் பதினொரு அயற் கிறிஸ்தவ கிராமங்களையும் சூறையாடிய சாணார் ஆலயங் களையும் வீடுகளையும் தீக்கிரையாக்கினர். எனினும் தங்கபட்டணத்துக் கிறிஸ்தவர்கள் ஒன்று திரண்டு தங்கள் கிராமத்துக்குத் தீ வைக்க வந்தவர்களை தீவிரமாகத் தாக்கி திருப்பி அனுப்பினர். தாக்கப்பட்ட கிராமங்களின் கிறிஸ்த வர்கள் கொமோரின் குடாவுக்குத் தப்பியோடினர். அங்கு ஒரு பெரிய சிலுவையையும் மரியன்னையின் பெயரால் ஒரு ஆலயத்தையும் நிறுவினர்.

கொச்சின் ஆயர் அன்ட்று தே மரியா, போர்த்துக்கேயர்களை திருவாங் கூருடன் வியாபாரம் செய்யாது தடுத்தார். அரசன் வர்த்தகத்தில் பெரு நட்டம் உண்டானதை உணர்ந்தான். குயிலொன் கல்லூரி அதிபருடன் (நிக்கொலஸ் ஸ்பினோலா அடிகள்) சமரசப் பேச்சுக்களை நடத்தினான். கோவில்களை மீண்டும் அமைப்பதற்குத் தேவையான திராந்திகளுடன் 2000 பார்தோஸ் பொற்காசுகளும் கொடுத்தான். கிறிஸ்தவர்களுக்கு பல சலுகைகளுமளிக்கப் பட்டன.

அடுத்து ஒரு கவலைக்குரிய செய்தியையும் குறிப்பிட வேண்டும். கொச்சின் மறைமாவட்ட ஆயருக்கும் முத்துக்குளிப்புத் துறையில் பணியாற்றிய யேசுசபைக் குருக்களுக்குமிடையே பிளவுகள் உண்டாயின. உறவுகள் விரிச லடைந்தன. இதைத் தொடர்ந்து யேசுசபையார் இப்பகுதியிலிருந்து வெளி யேறினர். அவர்களிடமாக நியமனம் பெற்ற மாவட்டக் குருக்கள், ஆன்மீகப் பணியிலும், மறைபரப்புப் பணியி லும் யேசுசபையினரைப் போன்ற தீவிரமும் உறுதியும், ஆர்வமும் காட்டவில்லை. இதன் விளைவை ஒரு யேசுசபை வரலாற்றாசிரியரின் குறிப்புக்களிலிருந்து பார்ப்போம்.

''எமது குருக்கள் (யேசுசபை) வெளியேறியதும் இக் கிறிஸ்தவர்களின் நிலை பரிதாபத்துக்குரியதாயிற்று. அவர்களது அறநெறி வாழ்வு அஸ்தமித்து விட்டது. முறைகேடான விதத்தில் திருமணங்கள் இடம்பெற்றன. அத்திரு மணங்களும் கிராமத் தலைவன் முன்னிலையிலேயே நடைபெற்றன. விவாகப் பிரிவினை, சர்வசாதாரணம்''.

1626இல் இரு யேசுசபைக் குருக்கள் கரையோரப் பகுதிகளுக்கு அனுப்பப்

பட்டனர். 23 ஆலயங்களையும் பத்தாயிரம் கிறிஸ்தவர்களையும் இவ்விரு குருக் களும் நிர்வகிக்க வேண்டியிருந்தது. உள்ளூர்ப் பகுதிகளில் 3 குருக்கள் இரண் டாயிரம் கிறிஸ்தவர்களின் மேய்ப்புப்பணியைக் கவனித்தனர். 1644இன் அறிக்கையின் படி இக்கிறிஸ்தவர்கள் குருக்கள் மட்டில் அமைச்சலும் பிரமாணிக்கம் காட்டாதவர்களாகவும் தங்கள் சொந்தநலனுக்காகத் திருச் சபையைக் காட்டிக்கொடுப்பவர்களாகவுமிருந்தனர்.

17ஆம் நூற்றாண்டின் 50களிலும் 60களிலும் ஒல்லாந்தர் இப்பகுதிக் கிறிஸ்தவர்களை அதிகம் சுரண்டவில்லை. யேசு சபையினரே இப் பகுதியின் மேய்ப்புப் பணிக்குப் பொறுப்பாயிருந்தனர். ஆயினும் முந்தியது போன்ற நிலை யல்ல. கிறிஸ்தவ வாழ்வில் பல குருட்டாட்டங்கள் நிறைந்திருந்தன. குருக்களும் பொருளாதாரச் சீர்கேட்டினால் தங்கள் உணவு, உடை முதலிய அடிப்படைத் தேவைகளுக்கே அவலப்பட்டனர். 1667, 1681, 1708 அறிக்கைகளின்படி கிறிஸ் தவரின் தொகை சிறிது சிறிதாக அதிகரித்தது. எனினும் 1681இன் அறிக்கையின் படி மதமாற்றம் குறைவாகவே காணப்பட்டது.

இறுதியாக கன்னியாகுமரி மாவட்டம் பற்றியும் குறிப்பிட வேண்டும். இப் பகுதியில் நாடார் எனப்படும் சாணாரே மிகக் கூடுதலாகக் காணப்பட்டனர். பதினேழாம் நூற்றாண்டின் இறுதிவரை இவர்கள் இந்துமதத்தைச் சேர்ந்தவர் களாயிருந்தனர். இவர்களுக்கு ஆரம்பத்தில் திருமுழுக்களித்து, கிறிஸ்தவ திருச்சபைக்கு வரவேற்றவர் பீற்றர் மொறர்ரோ என்ற யேசுசபைக் குரவர். 1698களில் யேசுசபை மாகாண அதிபதி யோண் மேநாட் அடிகள் (கோட்டார் பகுதியும் இவர் பொறுப்பிலிருந்தது) நாடார் மத்தியில் இயேசுவை அறிமுகஞ் செய்யும் பணியைத் தொடங்கினார். இந்திய சந்நியாசியின் ஆடைகளை அணிந்து, இயேசுவின் நற்செய்தியைப் போதித்ததினால் மக்களது கவனத்தையும் கருத்துக் களையும் இவரால் அதிகம் பெறமுடிந்தது. இங்கு மற்றொரு பிரச்சனையையும் குறிப்பிட வேண்டும். இந்திய மக்களிடையே சாதி வெறி உச்ச நிலையிலிருந்த காலம் அது. உயர்ந்தவர் தங்களுடன் தாழ்ந்தவர்களை மத அனுசரணைகளில் சேர்த்துக்கொள்ள விரும்பவில்லை. கிறிஸ்தவம் எல்லா இனத்தவர்க்கும் எல்லாச் சாதியினருக்கும் பொதுவானது என்ற உண்மையை இம் மக்களால் ஏற்கமுடிய வில்லை. எனவே வேத போதக நலனுக்காக சில விடயங்களில் உயர்குலத்தவரை அனுசரித்து நடந்த மிஷனரிகளுக்கு எதிர்பாராத தொல்லைகளும் ஏற்பட்டன. 1699இல் பெர்னாட் தே சா என்ற குரவர் இங்கு பணியாற்றி நல்ல அனுபவம் பெற்றவர். வடக்கன் குளத்தில் தமது பணியைத் தொடங்கிய இக் குரவர் கோட்டாரிலிருந்து 5 மைல் தொலைவிலுள்ள மாருன்குர் என்னுமிடத்தில் ஒரு ஆலயத்தை அமைத்தார். இவரது பணி பின்னர் விரிவாக ஆராயப்படும்.

கரையோரப் பகுதிகளான தஞ்சாவூர், ஆர்கொட் மாவட்டங்களில் கிறிஸ் தவத்தின் நிலை

பதினாறாம் பதினேழாம் நூற்றாண்டுகளில், இப் பகுதிகளின் துறைமுக நகரங்களில் இங்குமங்குமாக சில கிறிஸ்தவ குழுமங்கள் காணப்பட்டன. இவை களில் மிகப் பழைய கிறிஸ்தவ கிராமம் நாகபட்டணம், ராங்குபார், கூடலூர், பாண்டிச் சேரிகளிலும் கிறிஸ்தவர்கள் வசித்தனர்.

## நாகபட்டணமும் சுற்றுப்புறமும்

இக் காலத்தில் தஞ்சாவூர் நாயக்கரின் ஆளுகைக்குட்பட்ட பிரதேசங்களில்

நாகபட்டணம் வர்த்தக, சுற்றுலாத் துறைகளில் சிறந்த ஒரு நகராகத் திகழ்ந்தது. கரையோர நகர்கள் அனைத்திலும் நாகபட்டணத் துறைமுகமே சுறுசுறுப்பு மிக்கதாகத் திகழ்ந்தது. இந்துக்கள் அதிகமாக வசித்த போதிலும் முஸ்லிம்கள், போர்த்துக்கேயரின் முக்கிய அலுவலகங்கள் இங்குதான் இயங்கின. 1513 - 1530 துக்கு இடைப்பட்ட காலத்தில் போர்த்துக்கேயர் இங்கு குடியேறியிருத்தல் வேண்டும். 1545இல் புனித பிரான்சீஸ் சவேரியார் இவ்விடத்தை தரிசித்த போது ஒரு போர்த்துக்கேய தளபதியின் தலைமையில் யாவும் மிக நன்கு இயங்கின எனத் தெரியவருகிறது. 1567இல் இங்கு வருகை தந்த சீசர் பெட்ரிசி என்ற இத்தாலியப் பெரியார் இக்கிராமத்தை ''நற்பண்பும் பிரபலமும் வாய்ந்த கண்ணியமிக்க கிறிஸ்தவர்களைக் கொண்ட பகுதி'' எனக் குறிப்பிட்டுள்ளார். பதினாறாம் நூற்றாண்டின் 40 களிலும் 50 களிலும் பிரான்சீஸ்கன் சபையினர் மேய்ப்புப் பணிக்குப் பொறுப்பாயிருந்தனர்.

விஜய நகரின் பகுதித் தலைவர்கள் போர்த்துக்கேயரை நாகபட்டணத்தில் குடியிருக்க அனுமதித்த போதிலும் இரு பகுதிகளுக்குமிடையில் சுமுகமான உறவுகள் இருக்கவில்லை.

விஜய நகர தலைவர்கள் போர்த்துக்கேய குடியிருப்புக்கள் மீது தமது படையணியை ஏவி, அதனை அழித்து விடுவதாக அச்சுறுத்தினர். தங்கள் ஆளுகைக்குட்பட்ட இடங்களில் கிறிஸ்தவ ஆலயங்கள் அமைக்கப்படுவதையும் நாயக்க அரசர்கள் விரும்பவில்லை. ஆகவே நாகபட்டணத்திலோ அல்லது அதன் சுற்றுப்புறங்களிலோ தங்கள் ஆன்மீகப் பணியை நடத்துவது கிறிஸ்தவ போதகர்களுக்கு இலகுவாக இருக்கவில்லை. 16ஆம் நூற்றாண்டு வரை பிரான்சீஸ்கன் சபையினர் மட்டுமே அங்கு பணியாற்றி வந்தனர். 1597இல் யேசுசபையினரும், 1604இல் டோமினிக்கன் சபையினரும், 1625இல் அகஸ்ரீனியன் சபையினரும் சென்றனர். ஆயின் நாகபட்டணத்தின் பிரதான தேவாலயம் ஒரு மறைவட்டக் குருவினாலேயே நிர்வகிக்கப்பட்டது.

1642இல் எழுதப்பட்ட ஒரு அறிக்கையின்படி நாகபட்டணத்தில் 78 வயதுக்கு மேற்பட்ட கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை 7000 நான்கு பங்குகளாக இவர்கள் பிரிக்கப்பட்டிருந்தனர். நான்கு துறவற இல்லங்களும் மேய்ப்புப் பணியில் உதவின. புனித ஆரோக்கிய அன்னை (வேளாங்கண்ணிமாதா) புனித் மிக்கேல் தேவாலயங்கள் நாகபட்டணத்துக்கு அன்றிலிருந்து இன்றுவரை திருப்பயணிகளை அழைக்கும் திருத்தலங்களாக விளங்குகின்றன.

ஒல்லாந்தர் 1659இல் நகரைக் கைப்பற்றினர். தஞ்சாவூர் நாயக்கனும் அவர்களோடு உடன்படிக்கை செய்ததுடன் 10 அயற்கிராமங்களையும் அவர்களுக்கு அன்பளிப்புச் செய்தான். நகரைக் கைப்பற்றியவுடன் ஒல்லாந்தர் செய்த முதல் அலுவல் எல்லாக் கத்தோலிக்க குருக்களையும், துறவறத்தோரையும் நகரை விட்டு வெளியேற்றியதே. எனினும் வேளாங்கண்ணி ஆலயத்திலிருந்து எவரையும் நிர்ப்பந்திக்கவில்லை.

தொடர்ந்து புரொட்டஸ்தாந்த மதத்தை போதிக்கவும் பரப்பவும் பகிரதப்பிரயத்தனம் செய்தனர். பிரபல போதகர் பல்டேயஸ் வரவழைக்கப் பட்டார். அவர் எழுதுகிறார் ''1660 யூலை 14இல், யாழ்ப்பாணப் பட்டணத்திலிருந்து நாக பட்டணத்துக்கு கடல்மார்க்கமாக புரட்சிகரமான புரொட்டஸ்தாந்து மதத்தைப் போதிக்கச் சென்று 18ஆம் திகதி எனது முதல் உரையை

ஒல்லாந்தர் போர்த்துக்கேய மொழிகளில் ஆற்றினேன் பல குழந்தைகளுக்கு திருமுழுக்களித்து 20 பேருக்கு தேவதிரவிய அனுமானங்களை வழங்கினேன். என்னுடன் பிரெட்ரிக் புறொன்ரி னுஸ் என்பவரும் பணியாற்றினார். தொடர்ந்து அயற்கிராமங்களிலும் சுவிசேஷப் பணியை நடாத்தினோம்.''

1670 களில் ஒல்லாந்தர் கத்தோலிக்கத்தின் மட்டில் தம் கடும்பிடியைத் தளர்த்தினர். நாகபட்டணத்திலுள்ள மாசற்ற இருதய அன்னை ஆலயத்தையும் அதற்குச் சேர்ந்த 8000 கத்தோலிக்கரையும் பராமரிக்க ஒரு பிரான்சீஸ்க குருவுக்கு அனுமதி தந்தனர்.[47]

## ராங்குபார்

இயேசு சபையினரின் 1602 ஆம் ஆண்டு அறிக்கை கூறுவது ''நாக பட்ட ணத்திலிருந்து, பரவ குலத்தவரான 5 பெரிய குழுக்கள் இடம்பெயர்ந்து வந்து சேர்ந்தனர். இந்த நகரில் ஒரு துறைமுகம் உண்டு. மன்னாரிலிருந்து மீன்பிடிக்க வரும் படகுகளும் சான்தோமாவிலிருந்து வரும் பரத குலத்தவரும் இத் துறையை பயன்படுத்துகின்றனர். சில ஆண்டுகளுக்குமுன் சுதேசி ஒருவரால் அமைக்கப்பட்ட தேவாலயம் அழிந்துவிட்டது. மீண்டும் அவரது முயற்சியால் இவ்வாலயம் அழகுற அமைக்கப்பட்டது. வருடத்தில் சில தடவைகள், ஒரு குரு அங்கு சென்று, கிறிஸ்தவர்களை ஒன்று சேர்த்து, ஞான உபதேசமளித்து திருப் பலியும் நிறைவேற்றுகிறார். கிறிஸ்தவர்களின் மேய்ப்புப்பணியைக் கவனிக் கவும், கத்தோலிக்கரல்லாதாருக்கு கிறிஸ்துவை அறிமுகம் செய்துவைக்கவும் ஒரு குரு, இங்கு நிரந்தரமாக இருப்பது மிகமிக அவசியமானது.''

1620 இல் டேன்ஸ், ஒரு தொழிற்சாலையை ராங்குபாரில் தொடங்கினார். இதற்கு முன்பிருந்தே, ஒரு யேசுசபைக் குரு, அங்கு நிரந்தரமாகப் பணியாற்றி வந்தார். 1620ஆம் ஆண்டு அறிக்கையில் இது தெரிவிக்கப்பட்டுள்ளது. ராங்கு பாரில் டேன்ஸ் காலடி வைத்தபோது, அங்கு பணியாற்றிய யேசுசபைக் குரு சில அலுவல்களுக்காக நாகபட்டிணம் சென்றிருந்தார். இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி கத்தோலிக்க மதத்துக்கு பெரும் தீங்கை விளைவிக்க விரும்பிய முஸ்லிம்கள், டேன்ஸ் இனத்தாரிடம் சென்று கத்தோலிக்க தேவாலயமும் குருமனையும் உபயோகிப்பாரின்றியிருப்பதால் அவைகளைத் தொழிற்சாலை களாக உபயோகிக்கலாம் எனக் கோள் மூட்டினர். அவர்களும் மகிழ்ச்சியோடு அவ்விதம் செய்ய ஆயத்தமாகையில் குரு வந்து சேர்ந்தார். நிலைமை விபரீத மாவதை உணர்ந்த குரு உடனடியாக கத்தோலிக்க தீவிரவாதிகள் சிலருடன் மாவட்ட ஆள்பதியிடம் சென்று மிகக் கடுமையான ஒரு விண்ணப்பத்தைக் கையளித்தார். இதன் பயனாக ஆலயமும் குருமனையும் காப்பாற்றப்பட்டன. ஆள்பதி பாவிக்கப்படாதிருந்த ஒரு பள்ளிவாசலை தொழிற்சாலை அமைப் பதற்கு உதவி நிலமையைச் சமாளித்தார்.

ராங்குபாரில் யேசுசபையார் வசித்த இல்லிடங்களே நாகபட்டிணத்தில் மிகப் பெரிய குருமனைகளாக விளங்கின. நாகபட்டிணத்தை ஒல்லாந்தர் கைப் பற்றியபோது யேசுசபையார் அங்கிருந்து துரத்தப்பட்டனர். பின்னர் அங்குள்ள (ராங்கு பார்) கிறிஸ்தவர்களின் ஆன்மீக நலன்களைக் கவனிப்பதற்காக மயிலாப்பூர் ஆயர், சில மாவட்டக் குருக்களை ஒழுங்கு செய்தார்.

1660இல் அங்கு தரிசகராகச் சென்ற பல்டேயஸ், ராங்குபார் இராணு

வத்தில் போர்த்துக்கேய மொழி பேசும் ''தொபாசி''களே அதிகமாயிருந்தனர் எனக் கூறுகிறார். பல டேனிஸ் வீரர்கள் கத்தோலிக்கப் பெண்களை விவாகம் செய்திருந்தனர். இவையனைத்தும் ராங்குபாரின் ஆட்சியாளர்கள், கத்தோலிக்க மதத்தை வெறுக்கக் காரணிகளாயின.[48]

## புனித தோமா கிறிஸ்தவக் குழுமம் (மயிலாப்பூர்)

*1538 களில் போர்த்துக்கேய மன்னனுக்கு போர்த்துக்கேய நிர்வாகிகள் அனுப்பிய அறிக்கையின்படி நகரில் அறுபது கத்தோலிக்க (போர்த்துக்கேய) குடும்பங்கள் இருக்கின்றன. புனித தோமையாரின் ஆலயப்பங்கு ஒரு குரு முதல்வரின் தலைமையில் நான்கு மாவட்டக் குருக்களால் நிர்வகிக்கப்படுகிறது. ஏறத்தாழ 1800 இந்தியர்கள் இக்காலகட்டத்தில் திருமுழுக்குப் பெற்றுள்ளனர். 1545களில் ஏறத்தாழ மூன்றுமாத காலமாக புனித சவேரியார் இந்நகரில் தங்கியிருந்து ஆன்மீக பணியில் முழு மூச்சாக உழைத்திருக்கிறார். இங்கு நூற்றுக்கு மேற்பட்ட போர்த்துக்கேயர் வசித்ததாகவும் புனிதரின் அறிக்கை கூறுகிறது.*

*1549களில் இங்கு வருகை தந்த அல்போன்சஸ் சிப்பிரியானோ அடிகள் (யேசுசபை) தமது இறப்பு வரை 1559 இங்கு பணியாற்றினார். பல்வேறு பிரச்சனைகள் மத்தியிலும் அவர் பிரமாணிக்கமாகவும் துணிகரமாகவும் இயேசுவின் இரட் சணிய அலுவல்களில் ஈடுபட்டார். பல பிற சமயத்தவரை மனமாற்றம் செய்வதில் இவர் சாதனை நிலைநாட்டியதுடன் போர்த்துக்கேய, இந்திய கிறிஸ்தவர்களின் ஒழுக்க நெறியிலும் மிகக் கண்டிப்புடனிருந்தார். அவரது அறிக்கைகளில் சில போர்த்துக்கேயரின் கேவலமான நடத்தைகளைக் கண்டிக்கவும் தயங்கவில்லை. போர்த்துக்கேயர் சிலரின் செயல்கள் பாதிப்பை ஏற்படுத்திய போதும் இந்திய கிறிஸ்தவரின் தொகை 1559களில் இரண்டாயிரமாக உயர்ந்தது. நான்கு ஆண்டுகளின் பின் நாலாயிரம் ஆகியது. எனினும் இப் பகுதியில் ஆன்மீகப்பணி இலகுவானதல்ல. விஜயநகர ஆளுநர்களும் அதிகாரிகளும் செல்வாக்குப் பெற்ற சைவ மதத்தவர்கள். அவர்கள் கத்தோலிக்க ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்துவதில் முனைந்து நின்றனர்.*

*பதினாறாம் நூற்றாண்டின் இறுதிக்கட்டத்தில் மயிலாப்பூரில் பிரான்சீஸ்கன் சபையினர் ஆன்மீகப் பணிகளில் அதிக தீவிரம் காட்டினர். அகஸ்தீனிய, டோமினிக் சபைகளும் அவர்களைத் தொடர்ந்தன.*

*1559இல் விஜயநகர ஆளுநர் ராமராஜா, மயிலாப்பூரை முற்றுகையிட்டான். இதற்கான காரணிகள் சரிவரத் தெரியவில்லை. எனினும் ஒரு பிரமுகரான மனோயல் நண்ஸ், இது பற்றி கோவாவிலிருந்து போர்த்துக்கல்லுக்கு அனுப்பிய மடலில் புனித தோமையாரின் ஆலயத்திலிருந்த குருக்கள் சிலர் இந்து தேவாலயங்களை அழித்துவிட எடுத்த நடவடிக்கைகளுக்கு பழிவாங்கும் முகமாகவே இம்முற்றுகை இடம்பெற்றிருக்கலாமெனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயின் மீர்ஸ்மன் அடிகள் இக்காரணியை ஏற்கவில்லை. ''ஆளுநர் ராமராஜாவுக்குப் பெருந்தொகைப் பணம் தேவைப்பட்டதனால், கத்தோலிக்க தேவாலயங்களையும், குருமனைகளையும் முற்றுகையிட்டது பணத்தைச் சூறையாடவே'' என அவர் கருதினார். ராமராஜாவின் இராணுவத்தில் அறுபதினாயிரம் துருப்புகளும் ஏராளமான பழக்கப்பட்ட போர்யானைகளும் இருந்தமையால் மைலாப்பூரினால் அவரை எதிர்த்து வெற்றிகாண முடியவில்லை. 25 மைலாப்பூர் வாசிகளைப் பணயக்கைதிகளாகவும் தோமையாரின் புனித*

சின்னங்களையும் தம்முடன் கொண்டு சென்றார். ஆயினும் தமது நகருக்குச் சென்றதும் மனமாற்றமடைந்து தோமையாரின் புனித சின்னங்களை மைலாப்பூருக்கு திருப்பி அனுப்பினார். கைதிகளை விடுவிக்க ஐம்பதாயிரம் பரடாவோஸ் நாணயங்கள் கொடுக்கப்பட்டன.

1559இல் சிப்பிரியானோ அடிகளார் இறைவனடி சேர்ந்தார். மயிலாப்பூரில் யேசுசபை குருக்களின் பணியில் தேக்கநிலை ஏற்பட்டது. 1561இல் மீண்டும் ஒரு யேசுசபைக் குரு பிரான்சீஸ் பைனா அடிகள் அனுப்பப்பட்டார். இந்தியக் கிறிஸ்தவர்களுக்கு திருமறையின் உண்மைகளை, விசுவாசக் கொள்கைகளை கற்பிப்பதே தமது பிரதான அலுவலாகக் கொண்டார். மாவட்டக் குருக்களும், பிரான்சீஸ்கன் சபையாரும் மயிலாப்பூரில் கடமையாற்றிய காலையிலும் இப்போதனை சரிவர மேற்கொள்ளப்படவில்லை. மயிலாப்பூருக்கு வந்து திருமறையைக் கற்றுத் திருமுழுக்குப் பெற்ற பல பிற சமயத்தவர்கள் மீண்டும் தங்களூர் சென்றதும் சிறிது சிறிதாக கத்தோலிக்க மத அனுசரிப்பை காற்றோடு பறக்க விட்டனர். இன்னும் பல கிறிஸ்தவர்கள் தங்கள் பிள்ளைகள் கிறிஸ்தவ நெறியில் வளர்க்கப்படுவதில் கருத்தாயிருந்தனர். இந்திய கிறிஸ்தவர்கள் யேசுசபையினரால் நிர்வகிக்கப்பட்ட திருமுழுக்கு அருளப்பர் ஆலய அங்கத்தவராக்கப்பட்டனர். 1556களில் கொச்சின் மறைமாவட்ட ஆயர் ஜோர்ஜ் தே ரெமூடா ஆண்டகை இந்த ஆலயத்தை யேசு சபையினருக்கு வழங்கியிருந்தார்.

''மிசெரிகோர்டியே'' நிறுவனத்தின் ஒரு நிலையம் மயிலாப்பூரில் அமைக்கப்பட்டது. வருடந்தோறும் அகதிப் பெண்கள் திருமணம் செய்து கொள்ள இந் நிறுவனம் நிதியுதவி அளித்தது. பைனா அடிகளால் மதமாற்றம் செய்யப்பட்ட ஏழைகளுக்கும் உதவி வழங்கப்பட்டது.

1556இல் ஜோர்ஜ் தே றொமுடா ஆண்டகை தனது முதல் மேற்றிராணித்துவ தரிசனைக்காக தோமையார் பங்குக்கு வருகை தந்தார். பகிரங்க பாவிகள், பயங்கரத் தண்டனை பெற்றனர். ஆலயக் கதவுகளண்டையில் அவர்கள் கந்தை உடுத்தப்பட்டு கயிறுகளால் பிணைக்கப்பட்டு அவர்களது பாவ அறிக்கை நெற்றியில் ஒட்டப்பட்டு கசையடி பெற்றனர். ஏறத்தாழ 1400 பர்டாவோஸ் தங்க நாணயங்கள் இவர்களிடமிருந்து அபராதமாகப் பெறப்பட்டன. இத் தொகையை ஆயர் அவர்கள் 'மிசெரிக் கோர்டியே' நிறுவனத்துக்கு அளித்தார். ஒரு மருத்துவமனை நிறுவவும் வேறு தரும அலுவல்களுக்கும் இத்தொகை செலவிடப்பட்டது.

யேசுசபைத் தரிசகர் வலிக்ஞானோ அடிகள் 1575இல் தோமையார் பங்குக்கு வருகை தந்தார். நகரில் ஏறத்தாழ 200 போர்த்துக்கேய குடும்பங்கள் வசித்தனர். மலாக்கா, பேர்மா, வங்காளத்துடன் வர்த்தகத் தொடர்புகள் கொண்டிருந்தமையால் நகரம் மிகுந்த செழிப்புடன் காணப்பட்டது. நகரின் பிரதான தேவாலயத்தில் ஒரு குரு முதல்வருடன் மூன்று குருக்கள் பணியாற்றினர். பிரான்சீஸ்கு சபையினரால் நிர்வகிக் கப்பட்ட புனித அந்தோனியார் பங்கு, பத்துக் குருக்களால் நிர்வகிக்கப்பட்டது. 2000 க்கும் அதிகமான மதம் மாறிய கிறிஸ்தவர்களின் நலன்கள் 3 யேசுசபைக் குருக்களால் கவனிக்கப்பட்டது. இவர்களுக்கென ஒரு ஆலயமில்லாதது பெரிய குறையென யேசு சபைத் தரிசகரின் அறிக்கை கூறுகிறது. போர்த்துக்கேயரின் ஆலயங்களுக்கே இவர்கள் சென்று வழிபட்டனர். எனவே இந்திய கிறிஸ்தவர்களுக்காக ஒரு கோவிலை அமைக்குமாறு தரிசகர் கட்டளையிட்டார். அத்துடன் ஒரு யேசு

சபைக் குருவின் எல்லா அலுவல்களையும் எடுத்துவிட்டு இந்திய கிறிஸ்தவரின் ஆன்மீக மேய்ப்புப் பணியில் அக் குரு தம்மை முற்றாக அர்ப்பணிக்க வேண்டு மென அவர் வலியுறுத்தினார். இவ்விதம் நியமிக்கப்பட்ட குருவுக்கு தமிழ் மொழியில் பரிச்சயமில்லாததால் மன்னாரிலிருந்து ஒரு சிறந்த மொழி பெயர்ப் பாளர் தருவிக்கப்பட்டார். குருவுக்கு மொழி பெயர்ப்பதுடன், அவருக்கும் தமிழ் கற்பித்தபின், மறைக் கல்வி வகுப்புக்களையும் திறம்பட நடத்தினார் இந்த மொழிபெயர்ப்பாளர்.

இங்கிருந்த (நகரில்) போர்த்துக்கேயரின் இடைவிடாத வேண்டுகோள்களுக் கிணங்க மேலும் 3 குருக்களைத் தருவிக்க தரிசகர் உடன்பட்டார். எழுத்து, வாசிப்பு கற்பிக்கவும் ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டனர். 1577இல் இப் பாட சாலையில் 200 மாணவர்கள் கற்றனர். இரு வருடங்களின் பின் மக்களது வேண்டு கோளின்படி லத்தீனிய மொழியும் இப்பாடசாலையில் கற்பிக்கப்பட்டது.

ஒரு தேவாலயத்தை இந்திய கிறிஸ்தவர்களுக்காக நகருக்கு வெளியே அமைக்கும் முயற்சி 1575இல் ஆரம்பிக்கப்பட்டது. தேவ அன்னைக்கு அர்ப் பணிக்கப்பட்ட இந்த ஆலயம் 1576இல் அன்னையின் பிறந்ததின விழாவில் ஆடம்பர வைபவங்களுடன் திறக்கப்பட்டது. 1200 கிறிஸ்தவர்கள் அப்போது ஆலய அங்கத்தவராயிருந்தனர். அனைவரும் மீனவ சமூகத்தினரே. பின்னர் வேறு சமூகத்தவரும் திருமுழுக்குப் பெற்று ஆலயத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். பாடசாலைப் பிள்ளைகளுக்கு தினசரி மறைக்கல்வி வகுப்புக்கள் நடத்தப் பட்டன. ஞாயிறு தினங்களிலும் திருநாட்களிலும் திருப்பலியின் போது மறை யுரைகள் நிகழ்த்தப்பட்டன. 1583இல் பெரியதொரு பஞ்சம் ஏற்பட்டபோது இவர்களில் பலர் தோமா பங்குக்கும், போர்த்துக் கேய காலணிகளுக்கும் சென்று, உணவுக்காக தங்களை விற்று அடிமைகளாயினர்.

1606இல் மயிலாப்பூர் ஒரு மறைமாவட்டமாகப் பிரகடனம் பெற்றது. அகஸ்தீனிய சபையினரான றொம் செபஸ்ரியன் பீட்ரோ ஆண்டகை முதலாவது ஆயர். ஒரு அகஸ்தீனிய குருமடம் நிறுவப்பட்டது. தோமை அப்போஸ்தலரின் கல்லறையும் ஆலயமும் நவீன மயமாக்கப்பட்டன.

ஒல்லாந்தரின் புலிகாற் பகுதிப் பிரவேசமும் (1609) ஆங்கிலேயரின் சென்னை அடிப்படுத்துகையும் (1640) மயிலாப்பூரின் வளர்ச்சியைப் பாதித்தன. பொகாரோ என்னும் எழுத்தாளர் 1635இல் நகரில் 120 போர்த்துக்கேய குடும் பங்களும், 200 இந்திய கிறிஸ்தவ குடும்பங்களும், நகருக்கு வெளியே 6000 இந்திய கிறிஸ்தவர்களும் வசித்ததாகக் குறிப்பிடுகிறார். 1640இல் இங்கிருந்து சென்னைக்குப் பல குடும்பங்கள் அழைத்துச் செல்லப்பட்டன.

இவை தவிர வளர்ந்தோர் (இந்துக்கள்) பலரும் அடிக்கடி திருமுழுக்குப் பெற்றுக் கிறிஸ்தவராயினர். 1644ஆம் ஆண்டு அறிக்கையின்படி நகரில் இருபது இந்துக்களாவது ஒவ்வொரு வருடமும் திருமுழுக்குப் பெற்றிருக் கின்றனர். நகருக்கு வெளியிலிருந்த தேவ அன்னை தேவாலயத்தில் 1700 கிறிஸ் தவர்கள் அங்கத்துவராயிருந்தனர். எனினும் கிறிஸ்தவர்கள் எதிர்நோக்கிய பிரச்சினைகள் பல.

பதினேழாம் நூற்றாண்டின் நடுப்பகுதியின் பின் புனித தோமையார் பகுதியைத் துன்பநிலை தழுவத் தொடங்கியது. 1644இல் மீர் ஜுமாலாவின் தலைமையில் வந்த கொல்கொண்டா படைகளின் தாக்குதல்கள் பலமாகின.

நகரப் படைகள் திடகாத்திரமாக எதிர்த்துத் துரத்திய போதும் 1652இல் மீண்டும் கெல் கொண்டா படைகளின் தாக்குதல்கள் இடம்பெற்றன. இம்முறை நகரைப் பிடித்து விட கொல் கொண்டா அணி திடசங்கற்பம் பூண்டு பலமாகத் தாக்கின. நகரின் பெரும்பாலான மக்கள் சென்னைக்கு இடம்பெயர்ந்தனர். 1672 தொட்டு 1674 வரை நகரம் பிரான்சியரின் ஆதிக்கத்திலிருந்தது. ஆயினும் கொல் கொண்டா அணி ஒல்லாந்தரின் உதவியுடன் பிரான்சியரிடமிருந்து நகரை மீட்டது. மீண்டும் பிரான்சியர் கைப்பற்றுவர் என்ற எண்ணத்தால் கோட்டை கொத்தளங்கள், மாட மாளிகைகள் அனைத்தும் அழிக்கப்பட்டன. யேசு சபையினர் தங்கள் கல்லூரியை சின்னமலைக்கு மாற்றினர். 1681இல் அங்கு (தோமா பங்கு) முஸ்லிம் ஆளுநரால் ஒரு அழகிய ஆலயம் அமைக்கப்பட்டது.

1685இல் லூயிஸ் தே பியாடேற் அடிகளார் தலைமையில் சென்ற போர்த் துக்கேய பிரமுகர் குழு கொல் கொண்டாவின் சுல்தானிய அரசனிடம் தோமா பங்கில் மீண்டும் குடியேற அனுமதி கோரியது. அனுமதி தரப்பட்ட போதிலும் சென்னைக்கு இடம்பெயர்ந்த திரளான மக்களில் ஒரு சிறு பகுதியினரே மீண்டும் குடியேறினர். அவர்கள் சென்னை புனித ஜோர்ஜ் கோட்டையிலேயே வசிக்க விரும்பினர். அங்கு வசதியும் வருவாயும் மிகுந்திருந்ததே காரணி. ஆயினும் பல குருக்களும் துறவறத்தினரும் மீண்டும் திரும்பி வந்து குடியேறினர். ஆயினும் நகருக்கு வெளியேயிருந்த ஆலயங்களில் மிகக் குறைந்த அளவினரே காணப்பட்டனர்.[49]

## சென்னைக் கிறிஸ்தவர்கள்

1639இல் விஜய நகர் நிர்வாகிகளிடம் சென்னையில் ஒரு கோட்டையைக் கட்டுவதற்காக ஆங்கிலேயர் அனுமதி பெற்றனர். இதுவே புனித ஜோர்ஜ் கோட்டையாகும். இங்கு முதலில் வசித்தோர் அங்கிளிக்கன் சபைக் கிறிஸ்த வர்கள். எனினும் இவர்களுக்கு வதிவிட மதகுரு எவருமில்லை. 1647இல் ஐசக்சன் சென்னைக்கு மாற்றப்பட்டார். ஒரு வருடத்தின் பின் அவர் தமது பழைய இடத்துக்குத் திருப்பியழைக்கப்பட்டார். இடையிடை சென்னைக்கும் சென்று அங்கிளிக்க வழிபாடுகளை நடத்தினார். காலத்துக்குக் காலம் சில மத போதகர்கள் வந்து செல்வதே வழக்கமாகி விட்டது. ஆங்கில கீழை நாட்டு வர்த்தகக் கம்பெனியில் போதியளவு மத போதகர்கள் இல்லாததே இதற்குக் காரணம்.

புனித ஜோர்ஜ் கோட்டையை தம் வசப்படுத்திய கம்பெனியார் கத்தோலிக்கம் சென்னையில் அதிகரிப்பதன் காரணிகளை ஆராய்ந்தனர். மொழியில் (தமிழில்) நன்கு தேர்ச்சி, சுதேச பழக்க வழக்கங்களை நன்கறிதல், தமிழ்ப் பண்பாட்டில் பழக்கப்படுதல், மக்களுடன் இரண்டறக் கலத்தல் என்ப வையே கத்தோலிக்க மதத்தையும் குருக்களையும் மக்கள் விரும்பி ஏற்றுக் கொண்டமை என்பதை அறியவந்தனர். அத்துடன் கத்தோலிக்க மக்கள் சுறு சுறுப்புடனும் பிரமாணிக்கத்துடனும் பணியாற்றுபவர்கள் என்ற உண்மை யையும் தெரிந்து கொண்டனர். எனவே புதுநகரைக் கட்டியெழுப்ப இவர் களின் துணையும் பக்கபலமும் அவசியம் என்பதை ஆங்கிலர் அறிந்தனர். ஆர்வமுள்ள சுதேசிகள் புதுநகரில் குடியேற பலவித சலுகைகளுடன் அழைக் கப்பட்டனர். இராணுவத்தில் சேர்பவர்களுக்கு நிலபுலன்களும் குடியிருக்க வீடுகளும் தரப்பட்டன. புதிய குடியேற்றக்காரார்கள் மனைவி மக்களையும்

அழைத்து வருமாறு கேட்கப்பட்டு பலவித வசதிகளும் தரப்பட்டன.

ஆங்கில அதிகாரிகள் சென்னை நகரிலுள்ள கத்தோலிக்க மக்கள், அவர்களது ஆன்மீக அலுவல்களுக்காக, புனித தோமையார் பங்குக்குச் செல்வதை விரும்பவில்லை. காலத்துக்குக் காலம் தோமையார் பங்கிலிருந்து குருக்கள், ஆங்கில ஆதிக்கப் பிரதேசங்களுக்குச் சென்று ஆன்மீகப் பணியாற்றுவதையே விரும்பினர். இப்ராகிம் நெவீர்ஸ் என்ற பிரான்சிய கப்புச்சின் குரு **1642**இல் பீகு செல்வதற்காக சென்னைக்கு வந்தபோது ஆங்கில அரசு மகிழ்ச்சியுற்றது. இக்குரு சென்னை நகரில் தங்கி கத்தோலிக்க மக்களின் மேய்ப்புப்பணி அலுவல்களைக் கவனிக்க, பூரண அனுமதி வழங்கப்பட்டது. கோட்டைக்குள் ஒரு கோவில் கட்டவும் இக்குரு அனும்தி பெற்றார். நகரில் கத்தோலிக்க குரு நிரந்தரமாக வசிப்பதுகண்டு தோமையார் பங்கிலிருந்தும் ஏனைய இடங்களிலிருந்தும் ஏராளமான கத்தோலிக்கர்கள் நகருக்குள் வந்து குடியேறுவதில் ஆர்வம் காட்டினர். சில வருடங்களில் நகர கத்தோலிக்க குருவின் விசுவாசிகள் தொகை ஐந்நூறு ஆகியது. ரவர்நியஸ் என்ற பிரமுகரின் கூற்றுப்படி இப்ராகிம் குருவுக்கு தங்கள் மந்தைகளிலிருந்து கணிசமானோர் ஆதரவு கொடுப்பதும், அவரது செல்வாக்கு அதிகரிப்பதும், மயிலாப்பூர் குருக்களுக்கு ஆத்திரத்தை ஊட்டியது. இப்ராகிம் குருவைத் தொலைத்துவிட எண்ணினார். மைலாப்பூருக்குச் செல்கையில் அவர் கைது செய்யப்பட்டார். விசாரணையில் குற்றவாளியாகக் காணப்பட்டார். இருவருடங்கள் சிறையிலிருந்தபின் விடுதலை செய்யப்பட்டார். ஏனெனில் கொல்கொண்டாவின் அரசர் இப்ராகிமுடன் நட்புக் கொண்டிருந்தமையால் அவர் வெகு சிரத்தையுடன் தொடர்ந்து வாதாடி விடுதலை பெற்றுக்கொடுத்தார். இப்ராகிம் விட்டுச்சென்ற பணியை செனன் அடிகள் தொடர்ந்தார்.

**1659**இல் நாம் முன்னர் குறிப்பிட்ட ஐசக்சன் ( அங்கிலிக்க மதபோதகர்) மீண்டும் சென்னைக்கு வந்து சேர்ந்தார். அவர் தோமஸ் சேம்பர் என்ற ஆங்கில உயர் அதிகாரியிடம், இரு கத்தோலிக்க குருக்களை, நகரிலிருந்து வெளியேற்றுமாறு வேண்டினார். இந்தக் குருக்களின் சிறந்த ஆன்மீகப் பணியால் இவர் கொண்ட ஆத்திரமே காரணி. இக்குருக்கள்...

1. நகரில் கத்தோலிக்க இறுதிச் சடங்குகளை (பிரத ஊர்வலங்கள்) ஆடம்பரமாய் நடத்தியமை.
2. நோயாளரான புரொட்டஸ்தாந்தர்களை அடிக்கடி சந்தித்து ஆறுதலளித்ததன் மூலம் அவர்களை மதமாற்றும் திட்டத்தை அமுல் செய்தமை.
3. புரொட்டஸ்தாந்த தந்தையர்க்கும் கத்தோலிக்க அன்னையர்க்கும் பிறந்த குழந்தைகளுக்குத் திருமுழுக்காட்ட முயற்சித்தமை.

எனக் குற்றஞ் சுமத்தப்பட்டனர். ஆயின் தோமஸ் சேம்பர், குருக்களை வெளியேற்ற மறுத்தார். போர்த்துக்கேய சிப்பாய்கள் ஓரணியாக, தமக்கெதிராகத் திரண்டெழுவர் எனப் பயந்தார். எனினும் பகிரங்கமாக ஊர்வலங்கள் நடத்த வேண்டாமென்றும் தங்கள் கத்தோலிக்க சூழலுக்குள் மட்டுப்படுத்தப்பட்ட வைபவங்களை நடத்தலாமெனவும் அக் குருக்களுக்குத் தெரிவித்தார். சிப்பாய்கள், ஆங்கில அதிகாரிகள், ஊழியர்களுடன் மதப் பிரசாரம் செய்யக்கூடாதெனக் கட்டளை பிறப்பித்ததுடன் அவர் திருப்தியடைந்தார்.

*வில்லியம் வைற்பீல்ட் என்ற மதபோதகர், கோட்டைக்குள் ஓர் நூல் நிலையத்தைத் தொடங்கினார். பாடசாலைச் சிறுவருக்கு வேத உபதேச நூல்கள் வழங்கப்பட்டன. தொழிற்சாலை மண்டபத்தில் தினசரி வழிபாடு நடத்தப் பட்டது. (காரணம் சென்னையில் அங்கிளிக்க ஆலயமோ, ஜெபக்கூடமோ இருக்கவில்லை.)*

*புனித ஜோர்ஜ் கோட்டைக்குள் முதல் ஆலயத்தை அமைத்த பெருமை கத்தோலிக்கருக்குரியது. கோட்டையினுள்ளே, வடபுறமாக அமைந்த இத் தேவாலயம் புனித அன்ட்றுவுக்கு அர்ப்பணிக்கப்பட்டது. 1675இல் இத் தேவாலயம் அபிஷேகிக்கப்பட்ட போது மரியாதை வேட்டுக்கள் தீர்க்கப் படுமாறு ஆங்கில ஆளுநர் உத்தரவிட்டார். ஜோர்ஜ் நகர் என அழைக்கப்படும் பகுதியில் ஒரு சிற்றாலயமும் நிறுவப்பட்டது.*

*புனித தோமா பகுதியிலிருந்தும், தென்னிந்தியாவில் ஒல்லாந்த ஆதிக்கத் திலிருந்த பகுதிகளிலிருந்தும் கத்தோலிக்கர்கள் திரள் திரளாக வந்து குடி யேறியதால் சென்னையில் கத்தோலிக்கரின் எண்ணிக்கை அதிகரித்தது. இங்கு கூடுதலாக மதவழிபாட்டுரிமை அளிக்கப்பட்டதே காரணி. (ஒல்லாந்தர் ஆதிக் கப்பகுதிகளில் கத்தோலிக்கருக்கு வழிபாட்டுச் சுதந்திரம் மட்டுப்படுத்தப் பட்டிருந்தது) கத்தோலிக்க குழந்தைகளும் மறைக்கல்வி வகுப்புகளுக்குச் செல்லவும் வழிபாடுகளில் பங்குபெறவும் அனுமதி வழங்கப்பட்டது.*

*பாவசங்கீர்த்தன அருட்சாதனத்தை வழங்க குருக்களுக்குத் தட்டுப்பா டேற்பட்டது. எனவே (மொர்ன்சிக்னோர்) அதிபூசிதபாலு அடிகள் (ரொன்கின் பிரதேச குருமுதல்வர்) அழைக்கப்பட்டார். 1603இல் வருகைதந்த அடிகளார் 3000க்கும் அதிகமானோர்க்கு பாவசங்கீர்த்தனம் வழங்கினார். இவ்வளவு தகமை கொண்ட ஒரு கத்தோலிக்க உயரதிகாரி எதற்காகச் சென்னைக்கு திடீர் வருகையை மேற்கொள்ள வேண்டுமென புரொட்டஸ்தாந்துகள் ஆத்திரமும் சினமும் அடைந்தனர்.*

*சென்னையிலிருந்த அங்கிளிக்க போதகர்கள் அங்கிருந்த ஆங்கிலே யருக்கும் அவர்களது குடும்பங்களுக்கும் மட்டுமே மத சேவைகளை ஆற்றினர். ஆங்கில கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனியில் பணிபுரிந்த இந்தியர்களுக்கு அவர்கள் கிறிஸ்தவத்தை அறிமுகப்படுத்தவில்லை. 1659இல் நோர்விக்கின் அனுசரணையாளர் எழுதுகிறார் ''...நற்செய்தியை சுதேசிகளுக்கு அறிமுகப் படுத்துவதில் கம்பெனியார் அதிக அக்கறை காட்டவில்லை. அது தங்கள் கடமை என்றும் கருதவில்லை''.*

*புரொட்டஸ்தாந்த தந்தையர்க்கும் கத்தோலிக்க அன்னையர்க்கும் பிறக்கும் குழந்தைகளுக்கு, கத்தோலிக்க குருக்களால் திருமுழுக்கு வழங்கக்கூடாது; கல்வி அளிக்கக்கூடாது என்பதில் மட்டும்தான் ஆங்கில அதிகாரிகள் மிகக் கண்டிப்பாயிருந்தனர். இளைஞர் யுவதிகள் சம்பந்தமாக (மத அனுசரணை களில்) கம்பனி அதிக அக்கறை காட்டவில்லை.*

*1687இல் தனது 85ஆவது வயதில் செனன் அடிகள் இறைபதமடைந்தார். கோட்டைக்குள்ளிருந்த புனித அன்ட்று தேவாலயத்தில் அவரது சடலம் நல்ல டக்கம் செய்யப்பட்டது. இப்ராகிம் அடிகள் 1693லும் சீவித்தாரெனினும் உடல் நலம் பாதிக்கப்பட்டிருந்தார். வயது மூப்புநிலை காரணமாக தனது உதவியாளர் மைக்கல் அடிகளால் தூக்கிச்செல்லப்பட்டு இயேசுவின் நற்செய்திப்*

பணியை ஆற்றினார். எனவே அவர்கள் ஆங்கில ஆளுநருக்கு, ஒரு குருவை உதவிக்கு அழைக்க அனுமதி தருமாறு விண்ணப்பித்தனர். நகரிலுள்ள போர்த் துக்கேய ஆலயத்தில் எட்டாயிரம் கிறிஸ்தவர்கள் அங்கத்துவம் வகித்ததால் ஆளுநர் அனுமதி வழங்கினார்.

இக்கால கட்டத்தில் புனித ஜோர்ஜ் கோட்டையிலிருந்த அரசு புனித தோமா பகுதி ஆயருடன் பிரச்சனைப்பட்டது. இப்ராகிம், செனன் ஆகிய குருக்களின் பின் நியமனங்கள் சம்பந்தமாக ஆயரின் அதிகார வரம்பு பேணப்படவேண்டும் என்பதே காரணி. வர்த்தக கம்பனியாரின் ஆளுகைக்குட்பட்ட பிரதேசங்களில் அரசு ஆதிக்கம் செலுத்த மறுத்துவிட்டது.[50]

இவ்வரலாற்றின் இறுதிக்கட்டமாக ஆர்மீனிய குழ்மம் பற்றியும் சிறிது கூற வேண்டும். சென்னையில் 1689 - 1690 காலப்பகுதிகளில் அவர்கள் முக்கியத்துவம் வகித்தனர். கம்பனியின் சார்பில் சேர்ஜோசியா சில்ட் அவர் களுக்கு தங்கள் பகுதிகளில் வசிப்பதற்கு பூரண உரிமை வழங்கினார். அவர்கள் ஆங்கிலேயருக்குரிய சகல அந்தஸ்துகளும் பெற்றிருந்தனர். தங்களுக்கென ஓர் ஆலயத்தை அமைப்பதற்கும் கம்பனி அவர்களுக்கு நிலம் வழங்கிற்று. ஒரு குருவை அங்கு பணியாற்ற அனுமதித்ததுடன் அவரது வருடாந்த தாபரிப்புக் கென 50 பவுண்களையும் வழங்கியது.

# மதுரை மிசன்: தத்துவபோதகர் றொபேட் தே நோபிலி

இத்தாலியிலிருந்து இந்தியாவுக்கு வந்து தமிழ் மொழியில் வித்தகராகி ஏராளமான ஆன்மாக்களை இரட்சகர் இயேசுவின் அடியார்களாக்கியவர் குரு றொபேட் தே நோபிலி தந்தையார், சிவிற்றெலா பகுதியின் கோமகன். அன்னை கிளாரிஸ் சியோலி. தந்தை கோமகன் பொறுப்பை ஏற்று இளவரசர் களுக்குரிய ஆனந்த வாழ்வு வாழ்வதைவிடுத்த மாமனார் கருதினால் றொபேட் டாவின் வழியே செல்ல, துறவறம் பூண்டார். 19ஆவது வயதில் யேசுசபையில் சேர்ந்தார். இவரைப்பற்றி யேசுசபையின் வரலாற்று ஆசிரியரும் குருகுலப் பயிற்சியாளருமான நிக்கொலஸ் ஓர்லண்டினி அடிகளார் "இம் மாணவர் இந்தி யாவில் யேசுவைப் போதிக்கும் பணியில் பெரும் சாதனைகள் படைப்பார்" எனக் கூறினார். இந்த அறிவிப்பிலிருந்து நோபிலியின் சிந்தனையில் இந்தியா ஒரு தனியிடத்தைப் பிடித்துக் கொண்டது.

1598இல் யப்பானிய நற்செய்திக்குழு ஆர்வலரான பெர்னான்டோ டி பொன்றி அடிகள், குருகுலப் பயிற்சியாளராக நியமனம் பெற்றார். நோபிலியின் சிறப்பாற்றல்களை நன்கு அவதானித்தபின், இவரை யப்பானிய நற்செய்திக் குழுவில் இணைப்பதில் பெரிதும் முயன்றார். ஆயின் யப்பான் நாட்டில் ஏற்பட்ட சில பின்னடைவுகள் நோபிலிக்கு இந்திய சேவையையே மீண்டும் மீண்டும் வலியுறுத்தின.

1599இல் நோபிலி தத்துவ இயலின் எல்லாத் துறைகளிலும் பயிற்சியை ஆரம்பித்தார். தத்துவ இயலில் இவர் பெற்ற ஆழமான பயிற்சி பின்பு இந்தி யாவில் பிராமண சித்தாந்த தத்துவ இயல் வல்லுநர்களுடன், கலந்துரையாடிச் செல்வாக்குப்பெற உதவியது. தத்துவ இயலுடன் இறையியலிலும் நோபிலி விரிவான, ஆழமான அறிவைப் பெற்றதால்; இறை இயேசுவை - அவரது நற் செய்தியை பின்னர் போதிக்கும்போது, இறையியல், தத்துவ இயல் வல்லுநர்க ளால் எழுப்பப்பட்ட ஆணித்தரமான எதிர்ப்புகளுக்கு, ஆதாரபூர்வ பதில்களை அளிக்க அவரால் முடிந்தது.

1603இல் நோபிலி, இறைவனின் குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்டார். 1606இல் இந்தியா சென்று மதுரையில் தம் இறைபணியைத் தொடங்கினார்.

முதலில் தாம் யார் மத்தியில் பணிபுரிகின்றாரோ அவர்களது கலை கலாசாரம், பண்பாடு, பொழுதுபோக்கு என்பவற்றுக்கேற்பத் தம்மை மாற்றியமைக்க எண்ணினார். குருத்துவ அங்கி, தம்மை இந்திய மக்களிடையே வேற்று நாட்டவன் அந்நிய மதத்தவன் என்ற பேதம் காட்டும் என்பதை

நன்குணர்ந்து, தமிழ் அல்லது இந்திய சந்நியாசியின் உடைகள், பண்பாடு களைத் தழுவிக் கொண்டார். தமிழ்மொழி வல்லோரிடமும் பாடம் கேட்டார். ஐயந்திரிபறத் தமிழை அறிந்தார்.[51]

## முதல் மனந்திரும்புகை

மதுரையில் ஒரு ஆசிரியர் எல்லோராலும் நன்கு மதிக்கப்பெற்றவர். தம் மதத்தில் நல்ல அறிவும், திடமான பற்றும் கொண்டிருந்தார். இவர் ஒரு சிறந்த கல்விமான். அத்துடன் மாணவராலும் பெற்றோராலும் 'குரு' ஆக மதிக்கப் பட்டவர். கத்தோலிக்க மதத்திலும் நல்ல மதிப்பு உண்டு. எம் திருவேதத்தை நன்கு அறிந்து கொள்ள ஆசைப்பட்டார். தலைமைக் குரு கொங்காலோ பெர்னாண்டஸ் அடிகள், விசுவாச மந்திரத்தை மொழி பெயர்க்கும் பணியை ஒப்படைத்தார். இதனைத் திறமையாகச் செய்தவருக்கு, கத்தோலிக்க மதத்தை ஆழமாகக் கற்கும் ஆவல் எழுந்தது. எனவே றொபேட் தே நோபிலியின் துணையை நாடினார்.



நோபிலி அடிகள் முன்யோசனையுடன் சூரிய கிரகண தினத்தன்று (பெப்ரவரி 25) இவரை அழைத்தார். இருவரும் தத்தம் மதக் கொள்கைகளை, கோட்பாடுகளை வெளிப்படுத்தவும் மற்றவரின் மதக் குறைபாடுகளைச் சுட்டிக் காட்டவும் தொடங்கினர். தினசரி ஐந்து மணித்தியாலங்களாக தர்க்கவாதம் 20-நாட்கள் நீடித்தது. இறுதியாக இப் பிறமதக் குரு தமக்குத் திருமுழுக்களித்து திருமறையில் சேர்க்குமாறு நோபிலியை வேண்டினார். அவர் அல்பேட் என்ற பெயரைப் பெற்றார். இதுவே நோபிலி அடிகளாரின் முதல் மதமாற்றம் ஆகும்.

தொடர்ந்து பிறசமய பிரமுகர்கள் பலர் நோபிலி அடிகளாரின் போதனைகளாலும் சாதனைகளாலும் ஆண்டவர் இயேசுவின் அடியவர்கள் ஆகினர். அடிகளின் ஆன்மீக வாஞ்சையாலும், இரவு பகல் என்று பாராத கடுமையான உழைப்பாலும் அறுவடை அதிகமாகவே காணப்பட்டது. துணை செய்வதற்கு குருக்கள் தேவைப்பட்டனர். எனவே திடமானதும் சுறுசுறுப்பும் இறை யேசுவுக்காக தன்னையே அர்ப்பணித்தவருமான ஒரு குருவை மேலதிகாரிகள் தேடினர். போர்த்துக்கேயக் குரு இம்மானுவல் லெயித்தாயோ, முன் வந்தார். பல்வேறு இன்னல்கள் நிறை பயணங்களை மேற்கொண்டு 1609 ஆகஸ்ட் 26இல் பாண்டியனின் தலைநகரான மதுரைக்கு வந்து சேர்ந்தார். அவர் நோபிலி அடிகளைச் சந்தித்த விபரம் அவரது கையேடுகளிலிருந்து தரப்படுகிறது. இதிலிருந்து நோபிலி எவ்வளவுக்கு இந்திய பண்பாடு, கலாசாரங்களைக் கடைப்பிடித்து இயேசுவுக்காக வாழ்ந்தாரென்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

## இம்மானுவல் லெயித்தாயோ கூற்று

'நோபிலி அடிகள் எனது வருகையை அறிந்தவுடன் தனது உதவியாளர்கள் விசுவாசம், அலெக்சிஸ் ஆகியோரை அனுப்பி இருந்தார். அவர்கள் மகிழ்ச்சி

யோடும் அன்போடும் என்னை வரவேற்று ஆலயத்துக்கு அழைத்துச் சென்றனர். நான் இந்திய முறைப்படி நெடுஞ்சாண் கிடையாக நிலத்தில் வீழ்ந்து இறைவனுக்கு நன்றி கூறினேன். ஆலயம் எளிமையும், வறுமையுமாகத் தோற்றம் அளித்தது. ஆயின் என் கண்களுக்கு இறைவனின் மாட மாளிகைகளுள் ஒன்றாகவே காணப்பட்டது. பின்பு என்னை நோபிலி அடிகளின் இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்றனர். அவரைக் கண்டதும் பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தேன். என்னை மகிழ்ச்சியுடன் வரவேற்ற பின் அனைவரையும் அறையைவிட்டு வெளியேறுமாறு பணித்து, கதவுகளையும் மூடுவித்தார். பின்னர் என்னை அன்புடன் கட்டியணைத்து சமாதான முத்தமளித்தார். எனது இந்திய பிராமண சந்நியாசியின் தோற்றமும் ஆடையலங்காரமும் அவருக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளித்தன. சிறிது நேரம் உரையாடிய பின் இரவுணவு அருந்த வருமாறு அழைத்தார். அவரது துணையாளர்கள் உணவை ஆயத்தம் செய்தனர். தரையில் வாழையிலைகள் விரிக்கப்பட்டன. இதுதான் உணவு மேசை, நாற்காலி, கரண்டிகள், கறிக்குவளைகள் எல்லாமேதான். நான் இலைக்கு முன் தரையில் உட்கார்ந்தேன். ஒரு பிராமண சமையலாள் எனக்கு உணவு படைத்தார். இதுவரை உணவருந்திய வழக்கத்துக்கு மாறாக (கரண்டி, கத்தி, முள்ளுகள் பாவியாது) எனது கைவிரல்களையே பாவித்து புதுமாதிரியான உணவுகளை விழுங்கித் தள்ளினேன். மூன்று நாட்கள் சிரமப்பட்டபின் (பசியும் தீரவில்லை) இந்திய முறையில் உணவு உட்கொள்ளப் பழகிவிட்டேன். இறை பணியில் எத்தனையோ பயங்கரங்களை எதிர்கொள்ள வேண்டிய நிலையிலிருந்த எனக்கு இது பெரிதாகத் தென்படவில்லை.

ஆயினும் தே நோபிலி அடிகளைப் போல் என்னால் ஒரு நாளைக்கு ஒரு தடவை மட்டும் உணவருந்துவதைச் செய்ய முடியவில்லை. எனது உடல் பெலவீனமானது. எனவே ஒரு நாளைக்கு இரு முறையோ அல்லது கூடுதலாகவோ உணவருந்த வேண்டியிருந்தது. இது தவிர மற்றெல்லா அலுவல்களிலும் நோபிலி அடிகளுக்கு மிகுந்த ஒத்துழைப்பு வழங்கினேன்.

## அந்திரே புக்காரியோ கூற்று

அடுத்து நோபிலியின் உதவியாளராகப் பணியாற்றியவர் அந்திரே புக்காரியோ அடிகள். இவர் தென்திருவாங்கூரில் 18 ஆண்டுகள் ஆன்மீகப் பணியில் அயராதுழைத்தவர். இவர் கூறுவது: தந்தை நோபிலி கட்டி எழுப்பிய கோவில் செங்கற்களாலானது. மூன்று மண்டபங்களின் சேர்க்கை ஆகும். பிரதான பீடத்துக்கு மேலாக இரட்சகரையும் அவருடைய சீடர்களையும் உள்ளடக்கிய பிரமாண்டமான ஓர் ஓவியம் அமைக்கப்பட்டிருந்தது. பீடமும் திருவழிபாட்டுச் சாதனங்களும் நல்ல, அழகிய வேலைப்பாடுகளுடன் அமைந்திருந்தன. வழிபாட்டுக்குரிய உயர்ரக அங்கிகளும் காத்திரமிக்க பெட்டிகளில் வைத்துக் காப்பாற்றப்பட்டன. பீடத்தில் பூசைப் புத்தகத்தைத் தாங்கி நிற்கும் மரத்தாங்கிக்குப் பதிலாக சிறுதலையணை (குஷன்) பாவிக்கப்பட்டது. சாதாரணமாகக் குருக்கள் திருநிலைப்படுத்தப்பட்டு பலவருடங்களின் பின் தாங்கள் கற்ற இறையியல் மெய்யியல் மற்றும் பல்வேறு சாஸ்திரங்களையும் தங்களது ஏராளமான அலுவல்களின் தொல்லைகளால் மறந்து விடுவர். தேவை ஏற்படும்போது மீண்டும் நூல்களைப் புரட்டிப்பார்ப்பது வழக்கம், எனினும் நோபிலி அடிகள் இதற்கு மாறுபட்டவர். எத்தருணத்திலும் எந்தவித ஆன்மீக லௌகீக பிரச்சனைகளுக்குமான ஆதாரபூர்வ பதிலை அவரால் கூறமுடியும். அத்துடன் தமிழ்,

தெலுங்கு, சமஸ்கிரு மொழிகளில் அவர் நிபுணத்துவம் பெற்றிருந்தார். இதனா லேயே சைவ, வைஸ்ணவ வேத வல்லுநர்களுடன் தர்க்கிக்க அவர் தயாராயி ருந்தார். இவையனைத்தும் இறைவன் அவர்மேல் பொழிந்த அருள் வளங்களின் உந்துதலே.

அவரது வீடு மண்சுவர்களால் எழுப்பப்பட்டு ஓலைகளால் வேயப்பட்டது. இந்திய மரபுக்கிணங்க சந்நியாசிகள் வசிக்கும் குடியிருப்பை 'ஐயரின்மடம்' என்றே அழைப்பர். தாம்பூலம் தரித்தல், புகைத்தல், மதுபாவித்தல் முதலிய பழக்கங்களுக்கு அங்கு இடம் இல்லை. இவை அலகையின் தீமைகளுக்கான காரணிகள் என இந்திய சந்நியாசிகள் வெறுத்தொதுக்குவர். அவரிடம் எழுத்துப் பீடங்களோ நாற்காலிகளோ கிடையாது. ஒரு பாயைத் தரையிலே விரித்து அதன்மேல் கால்களை மடித்த நிலையில் சப்பாணங்கொட்டி அமருவார்.

ஒரு பலகையின் மீது தாள்களை வைத்து எழுதுவார். அவரது ஆடையா பரணங்களும் இந்திய பாணியிலேயே அமைந்திருக்கும். இந்திய சந்நியாசிகள், தவயோகிகள் அணிவது போல காவிநிறப் பருத்தித் துணிகளால் தன்னை மூடிக் கொள்வார். கால்களில் மரத்தாலான மிதியடிகள். இவ்வித தோற்றமும் செயல் களும் மதுரை மாவட்ட இந்துக்களுக்கு யேசுவை அறிமுகம் செய்து வைக்கவும், இயேசுவின் நற்செய்தியை அறிக்கையிடவும் நோபிலுக்குப் பெரிதும் கை கொடுத்தன. நோபிலியால் மனந்திருப்பப்பட்டோர் ஆழ்ந்த விசுவாசம் கொண்டிருந்தனர். ஒரு வரையொருவர் சந்திக்கும் போது கைகளை மார்பின் மீது கூப்பி இயேசுவுக்கு மங்களம் என்று வாழ்த்துக் கூறுவர். சிலுவைச் சின்னங் கள், செபமாலைகளைக் கழுத்தில் அணிவர். வெள்ளி, சனிகளில் உண்ணா நோன்பு அனுசரிப்பர். அடிக்கடி பாவசங் கீர்த்தனம் செய்து திருவிருந்தருந்துவர்.[52]

## அலகையின் எதிர்ப்புகள்

பிராமணர்களும் பண்டாரங்களும் நோபிலி நடத்தும் தீவிர மதமாற்றங் களையும், இந்துக்கள் நூற்றுக்கணக்காக அடிக்கடி திருமுழுக்காட்டப்பட்டு, திருச்சபையில் இணைவதையும் கண்டு கொதித்தெழுந்தனர். எனவே 'கனியாரே' எனப்படும் சோக்காந்தா கோவில் நிர்வாகி அனைத்துப் பிரா மணரையும் ஒரு கலந்துரையாடலுக்கு அழைத்தான். பருவமழை பொழி யாமைக்கு தேவர்கள் கோபாக்கினி கொண்டிருப்பதே முக்கிய காரணி. நோபிலியின் சண்டமாருத மத மாற்றத்தால் தேவர்கள் ஆத்திரமடைந்துள் ளார்கள். இந்த மதமாற்ற பிரசாரங்களைத் தடுத்து நிறுத்தாவிடில் பசி, பட்டினி யால் தேவர்கள் இந்து சமூகத்தைத் தண்டிப்பர் என்பது மாநாட்டின் ஏகோபித்த முடிவு. ஆகவே மதுரையிலிருந்து நோபிலியை உடனடியாக வெளியேற்றத் திட்டமிடப்பட்டது. மதுரை நாயக்க மன்னனிடம் முக்கிய பிராமணர், இந்துப் பிரமுகர் குழு ஒன்று தூது சென்றது.

நோபிலியின் கடிதம் கூறுவது: எனது பிராமண சமையற்காரரான திருமலை, ஆனன் ஆகியோரை அவர்கள் பயமுறுத்தியதால் சமையல் நடைபெறவில்லை. எனது பாடசாலை ஆசிரியர் (அவரும் பிராமணரே) தனது வீட்டில் தயாரித்த உணவைக் கொண்டு வந்து எனது பசியைப் போக்கினார். எனது ஜோர்ஜ் என்ற உதவியாளரை இராமசெட்டி நாயக்கரிடம் அனுப்பினேன். அவன் பயத்தோடு திரும்பி வந்தான். அவனைப் பார்க்கவே பரிதாபகரமாயிருந்தது. போர்த்துக் கேயன் ஒருவனிடம் வேலை பார்ப்பது உனக்கு அவமானமாயில்லையா? என

அவனைக் கேவலமாகப் பேசியிருந்தனர். அவனை வேம்பாருக்கு அனுப்பி விட்டேன்.

அந்த இரவில் கொங்காலோ பெர்னாண்டஸ் அடிகள் என்னிடம் வந்து, என்னை எங்காவது போய் ஒளிந்து கொள்ளுமாறு வற்புறுத்தினார். அவர் அன்ரனி என்பவரை எனது விடயமாக அப்பிராமணரிடம் அனுப்பியிருந்தார். நான் அங்கு இருக்க விரும்பினால் முதலில் எனது காவி உடையைக்களைய வேண்டும், பூணுலையும் அதில் தொங்கும் சிலுவையையும் கழுத்தில் அணியக்கூடாது. நான் ஒரு துருக்கியன் என்பதே அவர்கள் கருத்து.

நானோ அவ்விடத்தை விட்டுப்போக விரும்பவில்லை. காரணிகள் பின் வருமாறு...[53]

1. துணிவோடு இயேசுவைப் போதித்த நான் துணிவிழந்து, பயந்து ஓடுபவனாகக் காட்ட விரும்பவில்லை.
2. என்மேல் ஆத்திரம் கொண்டுள்ள அவர்கள் நான் வீட்டை விட்டு விலகினால் வீட்டுக்கும் பொருட்களுக்கும் தீ மூட்டி எரித்து விடுவார்கள்.
3. நான் ஓடி ஒளிவது என்மேல் சாட்டப்படும் குற்றங்களை உண்மை என நிரூபிக்கும்.
4. நான் ஒரு துருக்கியன் அல்லேன் என்பதை அவர்களுக்கு நிரூபிக்க வேண்டும்.
5. நாயக்கரின் முன் நான் நிரபராதி என்று நிரூபிக்கப்பட எனது ஆண்டவர் அனைத்து உதவிகளையும் அளிப்பார்.
6. என்மேல் குற்றம் சுமத்தியவர்கள் இது மதவிரோதச் செயல் அல்ல வென்றும், பிராமணனை சேவைக்கு அமர்த்தியதையே தாங்கள் எதிர்பார்ப் பதாகவும் பூசி மெழுகப்பார்க்கிறார்கள். ஆயின் தங்கள் தெய்வங்களான பிரமா, விஷ்ணு, சோகாந்தா முதலியோரை நான் கடவுள்களாக ஏற்றுக் கொள்ளவில்லை என்பதே என்மேல் அவர்கள் கொண்ட ஆதங்கம். அனைவரையும் என் திறமையான பேச்சால் ஆண்டவர் இயேசு பக்கம் திருப்புகிறேன் என்பதே உண்மையில் என் மேல் கொண்ட ஆத்திரம்.

தே நோபிலி மீண்டும் கூறுகிறார். எனது விசுவாசத்தை உறுதிப்படுத்தும் பலப்பரீட்சை என்பதால் நான் ஒளிந்தோடவில்லை. எனவே நான் எனது உதவியாளன் அலெக்ஸ்ஸை இராமசெட்டியிடம் அனுப்பி, என் வீட்டை நன்கு பார்வையிட்டு என்னுடன் தாரளமாக உரையாட வரும்படி (இறை நம்பிக்கையுடன்) அழைப்பு விடுத்தேன். இறைவனின் கருணையே கருணை; அடுத்த நாள் நள்ளிரவில் அலெக்ஸ்சுடனும் பன்னிரு இராணுவ வீரருடனும் எனதில்லத்துக்கு வருகை தந்தார். முன்பு நடைபெற்ற துர்ப்பாக்கிய நிகழ்வுகளை மறந்து விடுவோம். இனிமேல் அவ்விதம் நடவாதிருக்க இரு பகுதியினரும் நடவடிக்கை எடுப்போம் எனப் பேச்சை ஆரம்பித்தார். அவரது பெருந்தன்மை என்னையாட் கொண்டது. 'உமது சமையலாளை ஏன் விட்டு விட்டீர்? என் காரணமாக ஒருவர் பட்டினி கிடப்பதை நான் ஒருபோதும் விரும்ப மாட்டேன்' என மேலும் குறிப்பிட்டார். பிராமணர்களால் என்மேல் ஏவி விடப்பட்ட துன்பியல் நிகழ்வுகளை விபரித்தேன். எனது பேச்சைப் பொறுமையுடன் கேட்டார். 'என்ன துன்பம் இடம்பெற்றிருந்தாலும் உமது உதவியாளர்களை அனுப்பியிருக்கக் கூடாது. மேலும் உங்களை இந்நிலையில் தனியே விட்டுப் போனது அவர்களது பெரும் தவறு. குழப்பங்களை உண்டுபண்ணியவர்கள் வந்து மன்னிப்புக் கேட்பார்கள்.

இனிமேல் பிராமணர்களிலிருந்து உதவியாளர்களை விட்டு ஓடிப்போகாதவர்களைத் தெரிவு செய்வது நல்லது. உங்களைக் காப்பாற்றுவது என் கடமை. எனதுயிரைக் கொடுத்தும் உங்களுயிரைக் காப்பேன். நீங்கள் பயப்படத் தேவையில்லை. பிராமணர்கள் உங்களுக்கெதிராக நாயக்க மன்னரிடம் முறையிட்டாலும் உங்கள் நிரபராதித்தனத்தை தகுந்த ஆதாரங்களுடன் எடுத்துக்காட்டி உங்களை விடுவிப்பேன். உங்களுக்கு இனிமேல் ஒரு துன்பமும் வராது' என உறுதியளித்துச் சென்றார். எதிர்பார்க்கப்பட்ட ஒரு பெரிய பூகம்பம் புஸ்வாணமாகியது.

## பிராமணர் மாநாடு

இன்னொரு முறை 800 பிராமணர்கள் கூடியதோர் மாநாட்டில் தே நோபிலி மீதான குற்றச்சாட்டுக்கள் ஆராயப்பட்டன. ஒரு பிராமணப் பிரமுகர் எழுந்தார், நோபிலியோடு மிகுந்த பகைமை பாராட்டிய இவர் கூறத்தொடங்கினார். "ஓ பிராமணப் பெரியார்களே, இந்நகரில் தன்னைச் சந்நியாசி என்றழைக்கும் அற்பமான ஒரு பறங்கி இருக்கிறான். ஒரு குழந்தை கூட அவனைக் கண்டவுடன் பறங்கி என்று கண்டுபிடித்துவிடும். ஏனெனில் பறங்கிகளுக்குரிய வெண்ணிறத் தோலே இவனுடையதாகும். இவனைப் பற்றிய தோற்ற விபரங்களை விட்டு விட்டு நான் கூறவிருக்கும் குற்றவியல்புகளை ஆய்வு செய்யுங்கள். எம்மேல் இப் பறங்கி சுமத்தும் குற்றச்சாட்டுக்கள் எனது கற்பனையில் உருவானவையல்ல. பலர் முன்னிலையில் சிறப்பாக இங்கேயுள்ள கல்விமான் பண்டித சிவதர்மர் முன்பாக இப்பறங்கியால் கூறப்பட்டவையாகும்.

1. பிராமணர்களின் விதிமுறைகள் அனைத்தும் நியாயத்துக்கும் உண்மைக்கும் அப்பாற்பட்டவை.
2. பிராமணர்களுக்குத் தானம் வழங்குவதால் விசேட புண்ணியம் எதுவும் கிடையாது.
3. கங்கையில் அல்லது ராமேசுவரத்தில் முழுகிக் குளிப்பதனால் பாவ விமோசனம் கிடைப்பதென்பது உண்மையல்ல.
4. பிராமணரே அரசர்களிலும் தரத்திலும் அந்தஸ்திலும் உயர்ந்தோர் என்ற எமது விதிமுறை தவறு. அரசர்களே உயர்ந்தோர்.
5. இத் தேசத்திலுள்ளோர் எவருக்காவது உண்மையான கடவுளை அறியும் அறிவாற்றல் இல்லை.

இந்த மனிதனின் பித்தலாட்டங்களை நீங்கள் நன்கு விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். இவன் மட்டும் தான் உண்மைக் கடவுளை அறிவானாம். எங்கள் மத்தியில் கல்வி கேள்விகளில் கரை கண்டவர்கள் இல்லையா? மருத்துவ நிபுணர்கள், விஞ்ஞான வல்லுநர்கள் இருக்கவில்லையா? இறைவழி செல்லும் அறவழியை எடுத்தோதிய ஞானிகள் இல்லையா? தம்மை முற்றாக ஆண்டவனுக்கே அர்ப்பணித்து, கந்த மூலாதிகளை உண்டு காலமெல்லாம் கடவுளர் புகழ்பாடும் தபோதனர்கள் இல்லையா? இவர்களுக்கு இரட்சணிய பாதை தெரியாதாம். தனக்கு மட்டுமே மீட்புப் பாதை, அல்லது பாவ விமோசனமார்க்கம் தெரியுமென்று கூறுவதை ஏற்றுக் கொள்ள முடிமா என்று பொரிந்து தள்ளினார்.

இதைத் தொடர்ந்து கல்விமான் சிவதர்மர் எழுந்தார். (தே நோபிலியிடம்

திருமுழுக்குப் பெற்றதுடன் அவருக்கு சமஸ்கிருத,தெலுங்கு மொழிகளையும் நான்கு வேதங்களையும் கற்பித்து கலந்துரையாடியவர் இவர்) இத்தேசத்தில் பல்வேறு வகையினர் உண்டு. இனவாரியாக, மொழிரீதியாக ஒருபுறம், உயர்ந் தோர், தாழ்ந்தோர், பண்டிதர், பாமரர், பிராமணர், வைசியர், சத்துருக்கர், சூத்திரர் என்ற பேதங்கள் உண்டு. ஒவ்வொரு மொழியிலும் இனத்திலும் சாதி யிலும் நிறத்திலும் பிரச்சினைகளும் பேதகங்களும் உண்டு. இதுபோல தே நோபிலியின் தோல் வெள்ளை என்பதற்காக அவரைப் பறங்கி என்று ஒதுக்குவது உண்மைக்கு ஒவ்வாதது எனக் கூறினார். இதனை எல்லோரும் ஏற்றுக் கொண்டனர். ஏனைய குற்றச்சாட்டுக்கும் அவர் (சிவதர்மர் பண்டிதர்) தகுந்த பதில்களைக் கூற அனைவரும் வாய்மூடி மௌனியாயினர்.[54]

## புதிய குடியிருப்புக்கள்

மனந்திரும்புவோர் தொகை அதிகமாகிக் கொண்டே வருவதால் அவர் களைக் குடியேற்றுவதற்காக நோபிலி, இராமசெட்டியிடம் காணி நிலமும் கோவிலைப் பெருப்பிக்க அனுமதியும் கோரினார். கோவிற் கட்டடம் சிறப் பாக எழுந்து கொண்டிருக்கையில் சோக்காந்தா கோயிற் குருக்கள் (பிராமணத் தலைவர்) ஆத்திரமடைந்து வீதிகளில் எதிர்ப்புக் கோஷம் எழுப்பினார். 'இந்த அற்பனான பறங்கி, எங்களது கடவுள்களை அவமதித்து எங்கள் சனங்களை மயக்கி, எங்கள் காணிகளை தந்திரமாக அபகரித்து வெளிநாட்டுக் கடவுளுக்கு, வணக்கத்தலம் அமைப்பதற்கு விட்டுவிடுவதா?' ஒரு வாரத்துக்கு மேலாக இந்தப் பொய்ப்பிரசாரம் நல்ல வேலை செய்தது. நோபிலி தகுந்தவர் ஒருவரை நிலமையை நன்கு அறிந்து வருமாறு அனுப்பினார். இப்பிரசாரம் பணத்தைக் குறியாக வைத்தே செயற்படுவதை தெரிந்து கொண்டார். எனவே நோபிலி காணியின் பெறுமதியை - பதினைந்து ஸ்குடி நோட்டுக்களை கொடுத்து காணியை சட்டபூர்வமாக தமதாக்கிக் கொண்டார். புலியாக பாய்ந்தவர் பணத் தைக் கண்டதும் பூனையாக மாறினார். தமது முழு ஒத்துழைப்பையும் நல்கினார். நான் எக்காலமும் உங்கள் நல்ல சகோதரன். எனது பாதுகாப்பில் உங்களுக்கு எதுவித தீமையும் நேராது. இவரது உதவியோடு தே நோபிலி சிறப்பாகக் கட்டி முடித்தார், 1609இல் கிறிஸ்மஸ் விழாவையும் திறம்படக் கொண்டாடினார்.

நோபிலிக்கு உயர் அதிகாரிகள் மத்தியிலிருந்த செல்வாக்கை, மற்றுமோர் நிகழ்வாலும் காட்டலாம். (மதுரையிலிருந்து 1617 ஆகஸ்ட் 31இல் வண.வைகோ அடிகளார் எழுதிய திருமடலிலிருந்து) பெரிய நாயக்க மன்னர், இராம செட்டியை அழைத்து, நகரில் ஒரு பகுதியை தமக்கு விட்டுத் தருமாறு கட்டளை யிட்டார். இராமசெட்டி, தமது பதிலில் 'எனது மூத்த சகோதரர் அப்பகுதியை பெரிய சந்நியாசிக்கு முன்பே வழங்கிவிட்டார். சந்நியாசி அங்கு வசிக்கிறார். தாங்கள் அவரிடம் கேட்டுப் பெற்றுக்கொள்ளுங்கள்' எனத் தெரிவித்தார். பெரிய நாயக்கரோ; 'பெரிய சந்நியாசிக்குத் தானமாய்த் தரப்பட்டதை அபகரிப்பது அழகல்ல' எனக் கூறி நோபிலியுடன் நட்புறவை பேணி வந்தார்.[55]

## புதுக்கிறிஸ்தவரிடையே குழப்பநிலை நீக்க சந்நியாச பிரகடனம்

நோபிலியால் மனமாற்றம் செய்யப்பட்டு, மதம் மாறிய புதுக்கிறிஸ்தவரி டையே, ஒரு பரவ கிறிஸ்தவன் கொடிய நஞ்சை விதைத்துவிட்டான். நோபிலி, திருமுழுக்கு அளிக்கும்போது அவர்களது வாயிலிடும் உப்பு, அவர்களைப்

பறங்கியராக மாற்றுகிறதென்றும், திருப்பலிப் பூசையில் அவர் வசீகரம் செய்யும் போது திராட்சை இரசத்துக்குப் பதிலாக சாராயத்தைப் பாவிக்கிறாரென்றும் கதைகட்டிவிட்டான். இவ்வவதூறு வார்த்தைகள் தீவிரமாகப் பரவி நோபிலியின் நற்பெயருக்கும் அவரது அளப்பரிய ஆன்மீகப் பணிக்குமே மிக மோசமான அவமானமாகவும் அச்சுறுத்தலாகவும் விளங்கியது. எனவே அவர் ஒரு அறிக்கையை ஓலையில் தயாரித்து, தமது அறை வாயிலில் தொங்கவிட்டார்.[56]

''உண்மை வேதத்தைப் போதிப்பவரும் அனுசரிப்பவருமான ராசசந்நியாசி, ஏனைய சந்நியாசிகளுக்கும் பொதுநிலையினருக்கும் எம்தேவனாகிய ஆண்டவரின் அருளாசியையும் அன்பையும் கூறித்தெரிவிப்பது: உண்மையைப் போதிக்கும் பணியை மேற்கொண்டு, சத்திய மரபுவழி தப்பாது நடப்பவர்கள் தங்கள் தார்மீக வாழ்க்கை விமர்சனத்துக்குள்ளாகும் போது, தக்க பதிலளிக்கக் கடமைப்பட்டுள்ளார்கள். நான் பறங்கி அல்லேன். பறங்கியர் சமூகத்தில் பிறக்கவுமில்லை. அச்சமூகத்தோடு எவ்வித தொடர்புமில்லை. இறைவனே எனது சாட்சி. உண்மைக்குப் புறம்பானவைகளை நான் கூறினால், பொய்யன் ஆவேன். பொய்களை பிரசாரம் செய்தால் நரகதண்டனைக்கு உரியவனாவேன்.

நான் உரோமை மாநகரிலிருந்து வருகிறேன். அந்த நாட்டின் ராஜ (உயரிய) பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என் குடும்பத்தினர். நான் இளைஞனாயிருக்கையில் என் வேதமுறைகளுக்கிணங்க, துறவறம் பூண்டு சந்நியாசி ஆனேன். வேதாகமங்களையும், ஞானாகமங்களையும், இறையியல் கல்வியையும் ஆழமாகக் கற்றுத் தேறினேன். அதன்பின் ஒரு திருப்பயணியாக பல நாடுகளையும் தாண்டி மதுரையை அடைந்தேன். மிக நீண்ட இப்பயணத்தை, ஒரு உல்லாசப் பயணியாக அல்ல, திருயாத்திரை செய்யும் ஒரு சந்நியாசியாகவே மேற்கொண்டேன். நாகசெட்டியாரின் அனுமதியுடன் அவரது மாவட்டத்தில் ஒரு வீட்டை அமைத்தேன். பின் இராமசெட்டியாரின் அனுமதியுடன் செங்கற்களாலான ஒரு கோவிலை எழுப்பினேன். இக்கட்டு வேலைகளின்போது பாவப் பரிகாரமாக எனது உடலையும் வருத்தி வேலை செய்தேன். என்னுடன் உரையாட வருபவர்களுடன் இரட்சணிய அலுவல்கள் பற்றியே பேசுவேன். அவர்களது ஆன்மாக்கள் பற்றி உரையாடுவதில் என்ன தவறு இருக்கிறது? இத்தருணங்களில் என்றும் வாழும் இறைவனையும், அவரது ஆளுமை, அதிகாரம், பண்பியல்புகளையும், இறைவன் ஒருவராக ஆள்வகையில் மூவராக விளங்கும் விசுவாச (மூவொரு கடவுள்) சத்தியங்களையும், உலகையும், அதில் வாழும் சீவராசிகளையும், மனிதரையும் படைத்த விபரங்களையும் பேசுவேன்.

இறுதியாக இவ்வளவு ஆற்றல், ஆளுமை படைத்த இறைவன் மனிதரை இரட்சிக்க எவ்விதம் மனிதனாக மாறினார் என்பதையும் எடுத்துக் கூறுவேன். மனிதனாக உருவெடுத்தவர் இரட்சகர் என்னும் பொருள்படும் இயேசு என்ற நாமம் தரித்ததையும் அவரே இறைவனும் மனிதனுமானவர். அருள் வளங்களையும் தெய்வீகக் கொடைகளையும் அள்ளித் தருபவர். எம்மைப் பாவச்சக்தியிலிருந்து மீட்டெடுப்பவர் அவரே. பாவமீட்புக்கான வழியைப் போதிப்பவரும் அவரே. இவ்வுலகில் எம்வாழ்வு முடிந்தபின் எமது வாழ்வின் தகுதிக்கேற்ப மீட்பையோ, தண்டனையோ தருபவரும் அவரே.

மகத்தான உண்மைகளை உள்ளடக்கிய, புனித ஆன்மீகமும் கலந்த கோட்பாடுகளை, நான் முன்வைக்கும்போது;அவரது பிறப்பு நிலையை உயர்த்தவோ

அல்லது தாழ்த்தவோ அல்லது அவரவர் இணைந்துள்ள இன, வர்க்க தராதரங்களை கூட்டவோ, குறைக்கவோ, மாற்றியமைக்கவோ அல்லது இல்லாதொழிக்கவோ என்னால் முடியாது. எவரது குடும்ப கௌரவத்தையாவது கெடுக்கவோ மாற்றியமைக்கவோ என்னால் இயலாது. நான் கூறுவதனைத்தும் உண்மை என்பதற்கு இறைவனே சாட்சி. நாயக்க மன்னர் இங்குள்ள காணி நிலமனைத்துக்கும் எங்களெல்லோருக்கும் பிராமணர் அனைவருக்கும் பெருந்தலைவரும் முகாமையாளருமாயிருப்பது போல இறைவனே அனைத்துலகுக்கும் சீவராசிகளுக்கும் மிகப்பெருந்தலைவராவார். அவரது புனித கட்டளைகளுக்குப் பணிந்து நடக்க அனைத்துலகும் கடமைப்பட்டுள்ளது.



**தத்துவ போதகர்**

நான் கற்பிக்கும் விதிமுறைகள் உண்மையான கடவுளால் விதிக்கப்பட்டவை. ஆதிகாலத்திலிருந்தே உண்மைக் கடவுளால் தம் மக்களுக்கு அருளப்பட்டு, பரம்பரை பரம்பரையாக அம் மக்களால் அனுசரிக்கப்பட்டு வருபவை. அவற்றை தோமையார், சவேரியார், முதலிய புனிதர்களும், சந்நியாசிகளும் அனைத்துலகுக்கும் போதித்து வருகின்றார்கள். ஆயின் எவராவது இவை பறங்கியுடைய கட்டளைகள் என வாதித்தால் அவர்கள் உண்மையிலேயே நியாயப் பிரமாணத்துக்கு அப்பாற்பட்டவர்கள். அவர்கள் உண்மையிலேயே பெரிய துரோகிகள். உண்மையான கடவுள் ஒரு இனத்துக்கோ அல்லது ஒரு சாதியத்துக்கோ உரியவரல்லர். ஆயின் எல்லா இனங்களுக்கும் சாதியங்களுக்கும் சமூகங்களுக்கும் உரியவர் மட்டுமல்லாது அனைவரது வணக்கமரியாதைகளுக்கும் உரியவர். எனவே இறுதியில் மோட்ச பாக்கியத்தை விரும்பும் எவனும் அவரது புனித கட்டளைகளுக்குச் செவிசாய்த்து, அவருக்கு விரோதமின்றி நடக்க கடமைப்பட்டவன். அவ்விதமின்றி அவருக்கு விரோதமாகச் செல்பவன் தண்டனையாக நரகாக்கினையே பெறுவான். என்னால் அன்பாக நேசிக்கப்படும் இந்நாட்டு மக்களுக்கு உண்மைக்குப் புறம்பானவைகளைக் கூறவோ அல்லது அவர்களை ஏமாற்றவோ நான் ஒரு போதும் விரும்பமாட்டேன்.''

இந்த நீண்ட அறிக்கை நல்ல வேலை செய்தது. தே நோபிலியின் மீது குற்றஞ் சாட்டியவர்களும் அவருக்கெதிரான விஷமப் பிரசாரங்களால் மனம் பேதலித்து விசுவாசத்தில் தத்தளித்தோரும் தமது தவறுகளை உணர்ந்து, ஆலயத்தில் ஒன்றுகூடி, தந்தை நோபிலியிடம் கண்ணீர் சிந்தி மன்னிப்புக் கோரினர். அவரிடம் நல்ல பாவசங்கீர்த்தனம் செய்து உத்தம கத்தோலிக்கராய் வாழ்ந்தனர்.[57]

## உள்வீட்டு எதிர்ப்புகள்

இதுவரை தே நோபிலி வெளியிலிருந்து வந்த எதிர்ப்புகளையே சந்தித்து இறைவனின் உதவியோடும், தளராத நம்பிக்கையோடும் அவற்றைச் சமாளித்து வந்தார். ஆயின் இப்போது அவரது சபைக் குருக்களிடையிருந்தே எதிர்ப்புக்கள் தோன்றத் தொடங்கின. கோவாவிலிருந்து வந்த யேசுசபைத் தரிசகர் அதிவண.

நீக்கிலஸ் பிமான்ரோ அடிகள் (இவர் மலபாருக்கும் தரிசகராகப் பணியாற்றி னார்.) மதுரை மிஷனின் நிர்வாகத்தில் குறைகூறத் தொடங்கினார். இதற்கு உதவியாயிருந்தவர் கொங்காலோ அடிகள். நீண்ட கடிதமாக அனுப்பப்பட்ட குற்றச்சாட்டுகளை இரு வகையினுள் அடக்கலாம்.

1. நற்செய்திப் போதனையில் கத்தோலிக்க பொதுநோக்கு அனுசரிக்கப்பட வேண்டுமே தவிர பறங்கிய முறையில் புகுத்தப்படல் கூடாது.

2. கொங்காலோ முதலியோர் நற்செய்தியை போதிக்கும் முறையை நோபிலி எதிர்க்கிறார்.

இக் குற்றங்களை கொங்காலோ அடிகள் விளக்குகையில், தே நோபிலி கத்தோலிக்க குருக்களின் அங்கிகளை விடுத்து, நடையுடை பாவனைகளை உதறித் தள்ளி இந்துசமய குருவைப்போல இயங்குகிறார். பிராமணர்கள் அணியும் பூனூலைத் தரிக்கிறார். பிராமணர் போல நீராடித் தன்னைச் சுத்தம் செய்த பின்பே திருப்பலி நிறைவேற்றுகிறார். கிறிஸ்தவர்களுக்கும் நூல்களை மந்திரித்துக் கொடுக்கின்றார். ஆசீர்வதிக்கப்பட்ட சந்தணப் பசையை தான் பூசிக்கொள்வது மன்றி தனது கிறிஸ்தவர்களுக்கும் கொடுக்கிறார். அவர் ஐயர் என்றே அழைக்கப் படுகிறார். அவரின் உதவியாளர்களும் ஐயரின் சீடர்கள் என்றே மக்களால் அழைக்கப்படுகின்றனர். தமக்கென்று தே நோபிலி ஒரு புறம்பான வீட்டையும் செபக் கூடத்தையும் அமைத் திருக்கிறார். அவர் தரையில் அமர்ந்தே உணவருந்து கிறார். எழுதுகிறார். படிக்கிறார். அவரது கோவிலுக்கு கொங்காலோ அடிகளையோ மற்றும் பிரமுகர்களையோ அவர் அழைப்பதில்லை. அவரது வேலையாளர்கள் அனைவரும் பிராமணரே. அவரது நண்பர்களும் அவர்களே. அவருக்கு உணவு தயாரிப்பதும் பிராமணரே. பிராமண உணவுகளையே அவர் விரும்பி உண்கின்றார். கொங்காலோ அடிகளின் திருப்பலிகளுக்கு தேநோபிலி தனது கிறிஸ்தவர்களை செல்ல அனுமதிப்பதில்லை. அவரது மறையுரைகளை யும் தே நோபிலி மதிப்பதில்லை. இதையெல்லாம் நோபிலி நடத்துவது தான் ஒரு தனிப்பட்ட பிரமுகர் எனவும், ஒரு ராசவம்சத்தவர் என்று காட்டிக் கொள்ளவுமே.

இக்குற்றச் சாட்டு அறிக்கையை கொங்காலோ அடிகள் கோவை இறை யியலாளர்களான அன்ரோனியோ பெர்னாண்டஸ் அடிகள், பிரான்சீஸ் வேர் கரா அடிகள் ஆகியோரிடம் கையளித்தார். அவர்கள் நோபிலி இயேசுவை போதிக்கும் முறைகள், மூடத்தனமானவை, தவறானவை, நகைப்புக்கிட மானவை எனத்தீர்ப்பளித்தனர். கத்தோலிக்க போதகத்திலும் நிர்வாகத்திலும் இப்புது முறைகள் குழப்பநிலையையே உருவாக்கும் என வற்புறுத்தினர். எனவே ஒரு விசேட சபை கூட்டப்பட்டு இந்நிலை ஆராயப்படல் வேண்டுமென யேசு சபை மேலிடத்துக்கு சிபார்சு செய்தது. பேராயர் தலைமையில் கூடிய விசார ணைச் சபை தே நோபிலியில் குற்றமெதையும் காணவில்லை.

ஆயினும் கார்டோசா, டொமினிக் பெரைரா, தியாகோ தாகுன்கா ஆகிய மூன்று குருக்களும் தே நோபிலி பூனூல் அணிவதை நிறுத்துவது பிரச்சனை களை உருவாக்காது தடுக்கும் என அபிப்பிராயப்பட்டனர். 1610 ஆகஸ்ட் 18இல் லயர்சியோ அடிகள் மதுரைக்குச் சென்று புக்காரியோ அடிகள் முன்னிலையில் தே நோபிலி அடிகளுக்கு விசாரணைச் சபை முடிவுகளை தெரிவித்தார். யேசு சபைத் தரிசகரை மதுரைக்குச் சென்று அனைத்து விடயங்களையும் நேரில்

கண்டறியுமாறு ஒரு வேண்டுகோள் விடப்பட்டது. எனினும் தரிசகர் விசார ணைச்சபை அறிக்கையால் திருப்தியுறவில்லை. இன்னொரு விசேட விசார ணைக்கு உத்தரவிட்டார். இந்த விசாரணையை நடத்துமாறு கொங்காலோ பெர்னாண்டஸ், புக்காரியோ ஆகிய குருமார் அழைக்கப்பட்டனர். மூன்று பிராமணர்கள், மூன்று படகாஸ், ஒரு இதான்கொவி, ஒரு கானி, இரு வேளாளர் ஆக பதின்மர் சாட்சியம் கூற அழைக்கப்பட்டனர். பதினைந்து வினாக்கள் வினாவப்பட்டன. இவ்வினாக்களுக்கு அளிக்கப்பட்ட விடைகள் நோபிலியின் போதக, சாதனை முறைகள் திருப்திகரமானவை என்றே நிரூபித்தன. இரு நாட்கள் விசாரணை நடந்ததைத் தொடர்ந்து பெர்னாண்டஸ் அடிகள் நோபிலியில் ஒரு குற்றமும் காணாததால் தொடர்ந்து விசாரணை அவசிய மில்லை என அபிப்பிராயப்பட்டார். எனினும் விசாரணை தொடர்ந்தது. இந்த விசாரணையின் அறிக்கை தம்மிடம் வந்து சேருவதற்கு முன்பே யேசுசபைத் தரிசகர் பிமேந்திரா, புனித பவுல் கல்லூரி அதிபரும் இறையியல் பேரசானு மாகியவரிடம் நோபிலியின் நடத்தை பற்றிய பெர்னாண்டஸ் அடிகளின் அறிக்கையை ஆதாரமாகக் கொண்டு தீர்ப்பிடுமாறு வற்புறுத்தினார். கிறிஸ்தவ பிராமணர்கள் அணியும் பூனூல் அதில் தொங்கும் சிறு சிலுவையால் பிரச்சனை களை சமாளிக்கும் ஆயின் நோபிலியும் கிறிஸ்தவ பிராமணர்களும் நடத்தும் குளிப்பு முழுக்குகள் குருட்டுப் பக்தியை கொண்டுவரக் கூடியவை. திருவழி பாட்டு வார்த்தைகளில் பெயர் மாற்றம் முதலிய ஏனைய குற்றச்சாட்டுகள், பயங்கர விளைவுகளைக் கொண்டு வரலாம். கொங்காலோ பெர்னாண்டஸ் அடிகளிடமி ருந்து பிரிந்து சென்றமை, வேதகலாபனையை உருவாக்கவல்லது. எனவே நோபிலியின் வேதபோதகம் உண்மைக்கு மாறானது. அவரால் மனமாற்றம் பெற்றோர் உண்மைக் கிறிஸ்தவர்கள் அல்ல. எனவே, மேலதிகாரிகள், மதுரை மிஷனை மேற்கொண்டும் அங்கீகரிக்க முடியாதென்பதை வருத்தத்துடன் கூறு கின்றனர். பிமான்ரோ அடிகளிடமிருந்து நோபிலிக்கு விசாரணை அறிக்கையின் ஒரு பிரதி அனுப்பப்பட்டது.[58]

## நோபிலியின் மன்னிப்பறிக்கை

இந்த அறிக்கை நோபிலியின் உள்ளத்தை வெகுவாக வருத்தியது. ஆயின் உடனடியாக - தரிசகரின் அறிக்கை, அடுத்த அஞ்சலில் பெருந்தலைவரிடம் சேர்வதற்கு முன் நடவடிக்கை எடுக்க வேண்டும். கோவாவில் தலைவருக்கு இவ்வஞ்சல் சேர 3 வாரங்கள் தேவை. இத்தருணத்தில் இறையருளால் நோபி லிக்கும் ஓர் உதவி கிடைத்தது. வைகோ அடிகள் மதுரை வந்து சேர்ந்தார் (செப்ரெம்பர் 15). - 34 வயதுடைய வைகோ உரோமில் நோபிலியுடன் கற்றவர். அங்கு தொடங்கிய நட்பு, இவர்களின் ஆயுள் வரை நீடித்தது. மதுரைக்கு வருமுன் வைகோ அடிகள் கொச்சினில் இறையியல் பேராசிரியராகப் பணி புரிந்தார். நோபிலியின் மனந்திருப்பு முறை சரியென இவர் பல ஆதாரங் களுடன் வாதாடினார். அவரது உதவியுடன் நோபிலி ஒரு நீண்ட அறிக்கையை உருவாக்கினார். இதுவே இன்று மன்னிப்பு அறிக்கை என அழைக்கப்படுகிறது.

இவ்வறிக்கையில் ஒரு முழு அத்தியாயத்தில் நோபிலி தன்மேல் பெர் னாண்டஸ் அடிகளால் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகளுக்கு ஆணித்தரமான பதில்களை அளிக்கிறார். குடுமி, நூல், சந்தனம், குளிப்பு முழுக்கு என்பவற்றின் பொருள் விளக்கங்களையும் கிறிஸ்தவர்களின் பாவனை பற்றியும் கூறுகிறார். இவை சமூகப் பழக்கவழக்கங்கள் என்பதனை ஆதாரங்களுடன் வற்புறுத்து

கிறார். 3ஆம் அத்தியாயத்தில் மதுரையில் பாவிக்கப்பட்ட மறைக்கல்வி நூலில், மொழி வழக்கில் பாவனையிலிருந்த சொற்களே மாற்றியமைக்கப்பட்டன என்றும், அடுத்த அத்தியாயத்தில் கிறிஸ்தவர் என்ற சொல்லுக்கும் பறங்கியரின் வேதம் என்பதற்குமிடையே உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளை விளக்குகிறார். இறுதியாக கோவாவிலிருந்து வந்த இறையியலாளர்கள் தம்மேல் விதித்த 'தணிக்கை'யை விமர்சித்துள்ளார்.[59]

## பிராமண சந்நியாசி

இக் காலத்திலே தே நோபிலி ஒரு பிராமண சந்நியாசியாகவே மாறிவிட்டார். இதுவரை அவர் ஒரு ராஜரிசி என்றே அழைக்கப்பட்டார். ஏனெனில் பிராமணர்கள் தம் சாதியைச் சேர்ந்த குருவைத் தவிர்ந்த வேறு குருவிடம் உபதேசம் கேட்பதில்லை. எனவே தாம் பிராமணக் குருவானால் பிராமணர் உட்பட அனைவருக்குமே இயேசுவின் நற்செய்தியை போதிக்கலாம் என்பதற்காக பிராமணர் என்ற பதத்தின் அடிவேர் (உட்கருத்து) கலாநிதி அல்லது கலாசான் ஆகும். ஆயின் பிறப்பால் மட்டுமே ஒருவர் பிராமணர் ஆகலாம் என்ற உண்மையையும் அவர் அறிவார். பூனூல் அணிவது உபநயனம் என்ற சடங்கின் பின்னரே என்பதும் நோபிலிக்குத் தெரியும். வேதங்களின் ஆழமான அறிவையும் பல்வகை கலைகளிலும் சாஸ்திரங்களிலும் பாண்டித்தியம் பெற்றதால் எவ்வித குழப்ப நிலைக்கும் இடம்தராது தம்மை, பிராமணராகவே அறிமுகப்படுத்தினார். இதே சமயம் தாம் ரோமை நகரில் உயர் குடும்பத்திலிருந்து வந்தவர் என்பதையும் அனைவருக்கும் தெரிவிக்க மறக்க மாட்டார். இந்தியாவில் சிறப்பாக தென்னாட்டில் வேத போதகர்களுக்கு மக்கள் கொடுத்த மதிப்பில் உயர் குடும்பத்தவர்களாயிருப்பதும் அத்தியாவசியமானதாலேயே நோபிலி இதை வலியுறுத்தி வந்தார்.

தே நோபிலி ஒருகையில் மூங்கில் தடியும் மறுகையில் கமண்டலமும் ஏந்தியவராக, பிராமண சந்நியாசியாக காவியுடை தரித்து, பிராமணராயிருந்து தம்மால் மனந்திருப்பப்பட்ட (தமது உதவியாளன்) பொனிபாசுடன் 1611 நவம்பரில் மதுரையிலிருந்து கொச்சினுக்கு வந்தார். மதுரையில் அவர் மத மாற்றம் சம்பந்தமாக எடுத்த முயற்சிகளுக்கும், செய்து முடித்த ஆன்மீகப் பணிகளுக்கும் அளவு கணக்கில்லை.

இந்த விடயத்தில் நோபிலி கண்ட மற்றொரு உண்மை, மாகாண அதிபதியின் கட்டளைகளுக்கு அமைந்தால் பெருந் தலைவரை மீறுவதாகும். எனவே கொச்சினுக்கு வரும்படி மாகாணாதிபதிக்கு அழைப்பு விடுத்தார். பெரோ பிரான்சிஸ்கோவின் கருத்தான, பேராயரும் மாகாண அதிபதியும் மாறுதல்கள் பற்றி நோபிலியுடன் கலந்துரையாடல் வேண்டும் என்ற அம்சத்தை இது ஒத்திருந்தது. மாகாண அதிபதியோ தம்மை இவ்வித கலந்துரையாடலில் கலந்து கொள்ளாதிருக்குமாறு தமது ஆலோசகர்கள் கூறியிருப்பதாகத் தெரிவித்தார். சந்நியாசி (பிராமண)களின் உடையிலன்றி, கத்தோலிக்கக் குருக்களின் அங்கிகளுடனேயே அவரைத் தாம் சந்திப்பது சிறந்தது என்றும் தெரிவித்தார். நோபிலி தமது இறுதி வார்த்தைப்பாடு எடுத்து இருவருடங்களின் பின் (1613 நவம்பர்) கொச்சினுக்கு இரு மனந்திரும்பிய பிராமணர்களுடன் சென்றார். பிராமண சந்நியாச கோலத்தில் அவர் வந்திருப்பதை அறிந்த பெரோ பிரான்சீஸ்கோ, கல்லூரிக்குள் அவர் நுழையக் கூடாதெனக் கட்டளையிட்

டார். பின்னர் பெருந்தலைவருக்கு, நோபிலி கந்தைத் துணியுடன் சந்நியாச கோலத்தில் வந்திருப்பதாக அறிவித்தார். குன்றுகளடர்ந்த பாதைகளூடாக, கஷ்டமான பயணத்தை மேற்கொண்டு வந்த நோபிலிக்கு பேராயர் றொஸ் அளித்த வரவேற்பு, வித்தியாசமானதாக இருந்தது. நோபிலியை கொச்சினுக்கு கொண்டு செல்ல, பேராயர் றொஸ் விரும்பினார். அவர் தம்முடன் கல்லூரியில் தங்குவதற்கும் நோபிலிக்கு அழைப்பு விடுத்தார். எனினும் பெரோ பிரான் சீஸ்கோ முதல் மூன்று நாட்களும் பேராயருடனும் நோபிலியுடனும் உரை யாடவில்லை. நான்காவது நாளில் பேராயர் மாகாண அதிபருக்கு, பெருந்தலை வரது வேண்டு கோளுக்கிணங்க, மதுரையிலுள்ள திருச்சபைபற்றி கலந்துரை யாடுவதற்குத் தாம் வருகை செய்திருப்பதாகத் தெரிவித்தார். ( பேராயர் என்ற பதவியின் கீழேயே மதுரை மிஷன் இயங்கிக் கெண்டிருந்தது.) போர்த்துக் கேயரான மாகாண அதிபதி, ஸ்பானியரான பேராயருடன் மரியாதையாகப் பேசவில்லை. வரவேற்று வார்த்தை கூட உரைக்கவில்லை. பேராயர் கரங்கனூ ருக்குத் திரும்பிச் செல்வதைத் தவிர, வேறொன்றும் செய்ய முடியவில்லை. தொடர்ந்து பெரோ பிரான்சிஸ்கோ, நோபிலிக்கு, பெருந்தலைவரின் திருமடலுக்கு உடனடியாக எழுத்து மூலம் பதில் தருமாறும், அப்பதிலை தமது தீர்ப்புடன் ரோமைக்கு அனுப்ப வேண்டுமெனவும் வற்புறுத்தினார். நோபிலியும் தனது பதிலைத் தயாரித்தார்.[60]

## நோபிலியின் விளக்க அறிக்கை.

முதலிரு வசனங்களில் அறிமுக உரையை அளித்த பின் நோபிலி எழுது கிறார்: கிறிஸ்தவர்களுக்கு கிறிஸ்துவின் திருவேதத்தைப் போதிப்பது எனது பணி. கிறிஸ்தவர்கள் என்ற வார்த்தையில் பிரபுக்கள், சீமாட்டிகள், புனிதமிக்க வர்களுடன் ஏழைகளும் அறிவற்றவர்களும் பறங்கியருமே அடங்குவர். இவர் கள் அனைவரும் இயேசுவின் பதிலாளியாக ரோமையிலுள்ள பாப்பரசரின் கீழ் ஒருங்கிணைவர்.

நான் உரோமிலிருந்து வந்தவன். இந்த நாட்டிலுள்ள சிற்றரசர்கள் போலவே உரோமையிலும் எனது குடும்பம் பிரபுத்துவ வம்சத்தைச் சேர்ந்தது. இளைஞ னாயிருக்கும் போதே நான் துறவறத்தில் இணைந்தேன். இந்த நாட்டு வழமைப் படி அதைச் சந்நியாசம் என்று கூறலாம். இறையியலை நன்கு கற்றுத் தேறியபின் ஆன்மீகக் கலையிலும் வல்லுநனாகினேன். பின்னர் என் நாட்டைத் துறந்து சந்நியாச கோலத்தில் பல நாடுகளிலும் சஞ்சரித்து மதுரைக்கு வந்து சேர்ந்தேன். மதுரையில் தவக்கோல வாழ்வை ஆரம்பித்தேன். நாகாசெட்டி என்ற பிரபல செல்வந்தரின் உதவியுடன் ஒரு துறவிகள் இல்லத்தைக் கட்டியெழுப்பினேன். பின்னர் எர்ணா செட்டி என்ற பிரமுகரின் ஆதரவுடன் செங்கற்களால் ஒரு ஆலயத்தையும் அழகுற அமைத்தேன். இன்றுவரை எனது மேய்ப்பு, மறை பரப்பும் பணிகள் திறம்பட நடப்பதற்கு இச் செட்டியின் மேன்மை தங்கிய ஆதரவும் உதவிகளுமே காரணிகள்.

என்னுடன் உரையாடி வருபவர்களுடன் அவர்களது ஆன்ம ஈடேற்றம் பற்றியே மிக முக்கியமாக பேசுகிறேன். இறைவனின் தன்மை, தோற்றம், தொடர்ந்து வரும் அவரது தெய்வீகம் பற்றிய உண்மைகள், இறைவனின் ஒருமையும் ஆள் வகையில் உண்மையும், உலகின் படைப்பு, மனித உரு வாக்கம், ஏனைய சிருட்டிப்புகள் என்பன பற்றிய விரிந்த, ஆழ்ந்த, கருத்துக்

குவியல்களை என்னுடன் தொடர்பு கொள்வோரின் சிந்தனைகளை என்னுடன் தொடர்பு கொள்வோரின் சிந்தனைக்கு விருந்தாக்குகிறேன். மேலும் இவ் விறைவன் ஏன் மனித உரு எடுத்தார், மனிதனை இரட்சிக்கவே என்ற மகத்தான உண்மையை அவர்கள் ஏற்றுக்கொண்டபின் அவ்விதம் மனிதனாகிய இறைவனே இயேசுகிறிஸ்து. அப் பெயரின் பொருள் இரட்சகர். இவர் உண்மையாகவே இறைவனும் மனிதனுமானவர். அருள் வளங்கள் நிரம்பியவர். என்ற உன்னத கொள்கைகளை கேட்போர் உள்ளங்களில் நன்கு விதைத்து விடுகிறேன். இந்த இரட்சகர் இயேசு மனிதரைப் பாவநிலையிருந்து மீட்கவே மனித உரு தாங்கி னார். மனிதரின் பாவங்களையே தம்மீது சுமந்து, தம்மையே பாவ மீட்புக் காகப் பணயம் வைத்தார். பாவமன்னிப்புக்கான வழியையும் காட்டினார் என்பவைகளை மனித உள்ளங்களில் நன்கு பதித்து விடுகிறேன். மேலும் இவ்வுலக வாழ்வின் பின் ஒவ்வொரு மனித உயிருக்கும் அவரவர் நன்மை, தீமைகளுக்கு ஏற்ப தீர்ப்பை இறைவன் வழங்குவார். இவ்விடயத்தில் படைக்கப்பட்ட மனித உயிர்களுக்கிடையே பாரபட்சமெதுவும் காட்டப்பட மாட்டாது என்ற மகத் தான உண்மையையும் அவர்கள் நன்குணரச் செய்வதே எனது மறைக் கல்விப் போதனையின் முழுமுதல் இலட்சியம்.

எனது மதபோதனை, எந்த ஒரு மொழி, இனம், கலை, கலாசாரத்துக்கும் விரோதமானது அல்ல. பரிசுத்தமும் ஆன்மீக திறனும் மிக்க எனது மதத்தின் உயரிய விழுமியங்களும் பொருள் பொதிந்த சித்தாந்தங்களும், தன்னை நாடும் எந்த ஒரு மனிதப் பிறவியையும் அவரது இனம், அந்தஸ்து, கௌரவம், குடும் பப் பெருமை என்பவற்றைத் துறக்கவோ, அல்லது இந்நாட்டின் பழம்பெருமை வாய்ந்த கலாசாரம், பண்பாடு, நாகரிகத்தைத் துறக்கவோ வற்புறுத்துவது கிடை யாது. ஆயினும் அவரது மதமாற்ற முறைகள் ரோமையில் அங்கீகரிக்கப்படா விடின், அவரது முயற்சிகள் அத்தனையும் வீணாகிவிடும்.[61]

## இறுதி வாக்குத்தத்தம்

உரோமிலிருந்து தமது ஆன்மீகப் பணிபற்றிய விசாரணையில் இறுதி முடிவுக்காகக் காத்திருந்த தே நோபிலி இயேசு சபையின் துறவற இறுதி வாக்குத்தத்தம் எடுப்பதற்கான ஆயத்த அலுவல்களிலும் ஈடுபட்டார். 1611 நவம்பர் 21இல் மாக் தே டேயுஸ் கல்லூரியில் அன்னை மரியாள் ஆலயத்தில் காணிக்கையாக்கப்பட்ட திருநாளில் பேராயர் றொஸ் ஆண்டகை முன்னி லையில் இப் பெரும் புனித சடங்கு நடைபெற்றது.[62]

## புதிய இயேசுசபை மாகாணாதிபதி

டிசம்பர் 21இல் பெரோ பிரான்சிஸ்கோ அடிகள் இயேசு சபையின் புதிய மாகாணாதிபதியாக நியமனம் பெற்றார். மலபார் மாகாணத்தின் பழைய இயேசு சபைத் தலைவர் லயர்சியோ அடிகள் நோபிலியின் தந்தையாகவும் பாதுகாவலராகவும் பாச நேசத்தோடு அவரை நடத்தியவர், ஆயின் புதியவர் அதற்கு முற்றிலும் மாறாகக் காணப்பட்டார். 47 வயதுடைய பெரோ பிரான் சிஸ்கோ கோவாவில் 22 ஆண்டுகள் பணியாற்றியவர். (புனித பவுல் கல்லூரி முதல்வராக, இறையியல் தத்துவ இயல் பேராசானாக, குரு முதல்வராக ஆன்மீக மேய்ப்புப் பணியாளராக) 1608இல் ரோமையில் நடைபெற்ற அனைத்துலக இயேசுசபை நிர்வாகிகள் மாநாட்டில் இந்திய பிரதிநிதியாகச் சென்றார். 1611

டிசம்பரில் மலபார் மாகாண அதிபதியாக நியமனம் பெற்றார். மதுரை மிஷனை அடக்கி ஒடுக்க, அவரால் அல்லது பெருந்தலைவர் பிமென்ராவால் முடிய வில்லை. ஏனெனில் மதுரை மிஷன், அனைத்துலக யேசுசபை அதிபரால் அங்கீ கரிக்கப்பட்டிருந்தது. எனவே மதுரை மிஷன் நிர்வாகிகள் மீது பல அடக்கு முறைச் சட்டங்களை விதித்தார். மதுரை இராச்சியத்திற்கு தனது உத்தி யோகபூர்வ தரிசனைகளுக்கு செல்வதை நிறுத்தினார். தே நோபிலியின் பல முயற்சிகளுக்கு தடை விதித்தார். ஆயின் கோயில்களின் குருமனைகளில் வசித்த குருக்களுக்கு ஆதரவும் உதவிகளும் வழங்கினார். பேர்ரினண்டெஸ், புக்காரியோ சைவ உணவு கொள்ள ஊக்க மளிக்கப்பட்டனர். சிறைச்சாலைகளுக்கு இக் குருக்கள் அடிக்கடி சென்று கைதிகளின் ஆன்மீக தேவைகளைக் கவனித்தனர். சோக்காந்தா ஆலயத்துக்கு தென்னிந்தியா முழுவதிலுமிருந்து வரும் நோயாளி களான யாத்திரிகர்களை கவனிக்க விசேட ஒழுங்குகள் செய்யப்பட்டன. பெரிய நாயக்க மன்னர் இவற்றால் மகிழ்ச்சியடைந்தார். திருப்பயணிகளை உபசரிக்கும் பணிக்கு பெருமுதவிகள் அளித்தார்.

கோவிற் திருவிழாக்கள் பழைய குருமனைகளில் சிறப்பாகக் கொண் டாடப்பட்டன. புனிதர்களின் வரலாறுகள் நாடகமாக மேடையேற்றப் பட்டன. அறிவு நிரம்பிய நூல்கள் உருவாக்கப்பட்டு கிறிஸ்தவர்கள் வாசிப் புக்கு ஊக்குவிக்கப்பட்டனர். கிறிஸ்துவின் சரிதமும் இரத்தமும் மற்றும் புனிதர் களின் வரலாறுகளும் சிறந்த கவிதைகளாக அழகிய கீத வடிவில் அனைவரும் இசைக்கும் வண்ணம் இனிய ராகங்களில் இசைக்கப்பட்டன. இவைகளை குழந் தைகள் அழகுறப் பாடித் தங்கள் இந்துமத பெற்றோரையும் மகிழ்வித்தனர். பாவ சங்கீர்த்தனங்கள் அடிக்கடி கேட்கப்பட்டன. நீண்ட காலம் பாவ சங்கீர்த்தனத் தொட்டிகளை தேடாதவர்களும் கொண்டு வரப்பட்டனர். நெடு நாள் பகைமை பாராட்டியோரும் நட்புரிமை கொண்டாட வழிவகுக்கப்பட்டது. தேவதாயின் திருச்சொரூபத்தின் முன்னால் இடைவிடாது சுடர் விட்டுக் கொண்டிருந்த ஒளிவிளக்கின் எண்ணையைத் தொட்டு, நம்பிக்கையோடு பூசிக் குணமடைந்த நோயாளர் பலர். **1612**இல் அனுப்பப்பட்ட அறிக்கையில் இவையெல்லாம் தரப்பட்டுள்ளன. செப்டம்பரில் பெரோ பிரான்சீஸ்கோ மதுரைக்குத் தம் முதற்தரிசனைக்காகச் சென்றார். கொங்காலோ அடிகளாரின் ஆலயத்தில் அவருக்கு மகத்தான வரவேற்பு அளிக்கப்பட்டது. பங்கு மக்கள் ஒரு சிறந்த வரவேற்பு பத்திரமளிக்க பாடசாலைச் சிறுவர் வரவேற்புப் பாக்கள் இசைத்தனர், ஒரு இயல், இசை, நாடக நிகழ்வும் இடம்பெற்றது. இவைகளால் மாகாண அதிபதியும் திருப்தியடைந்தார்.[63]

## பெரோவின் விளக்கம்

**1612**இன் முற்பகுதியில் குளோடியா அக்குவீவா, பெரோ பிரான் சீஸ்கோவுக்கு, மதுரை மிஷன் பற்றி ஒரு திருமடலை வரைந்தாள். திரு விழாக்கள், சடங்குகள், கீழைத்தேய பாணியில் நடத்தப்படுதல் பற்றியதே திருமடலின் பொருளாகும். பெரோ பிரான்சீஸ்கோவின் கருத்துப்படி நோபிலியின் மறைபரப்பு முறைகள் கண்டிக்கப்படல் வேண்டும். **1612** டிசம்பர் **6**இல் நோபிலிக்கு அவர்வரைந்த திருமடலில் அவரது கீழைத்தேய முறைகள் திரு வழிபாட்டுக்கும் திருச்சடங்குகளுக்கும் பொருந்தாதவை எனக் குறிப்பிட்டுள் ளார். இவை சரியானவை என நோபிலி எப்படி வாதாடினாலும் எந்தவித ஆதாரங்களை எடுத்தாண்டாலும் அவை ஏற்றுக் கொள்ளப்படமாட்டா.

நோபிலி தம் துறவற வார்த்தைப் பாட்டின்படி மேலதிகாரிகளுக்குப் பிர மாணிக்கமாயிருக்கவேண்டும். அவர் தாம் புதிதாகப் புகுத்தியவைகளை மாற்றி யமைக்க வேண்டும். இந்தியர்களுக்கு முன்னால் பறங்கி போல் தோற்றமளிப் பதையும், நூல் கட்டுதல், நூல் ஆசீர்வதித்தல், சந்தனம் அரைத்தல் ஆகியவற் றையும் குளிப்பு முறைகளையும் கைவிடல் வேண்டும். இந்தியரின் மனந் திரும்பு தல்களுக்கு இவைகளும் பிராமணர்போல் தோற்றமளிப்பதும் செயற்படுவதும் தேவையற்றவை. ஏனைய குருக்களுடன் பகலிலும் இரவிலும் நோபிலி உறவாடி உரையாட வேண்டும். நோபிலியின் இல்லத்துக்கு ஏனைய குருக்கள் எத்தருணத்திலோ எந்நேரத்திலோ செல்வதற்கு தடை விதித்தல் சரியல்ல. பெரோவின் திருமடலை நோபிலியும் வைகோவும் ஏற்றுக்கொள்ளும் வரை அவர்கள் இந்தியருக்கு திருமுழுக்கு அளிப்பதிலிருந்து விலக்கப்பட்டுள்ளது.

மாகாணாதிபதியின் திருமடலைக் கண்டதும் அவரது நிபந்தனைகள் தனது மகா மனந்திரும்புதலியக்கத்துக்கு விடுக்கப்பட்ட பெருஞ் சவால் என்ப தையும் திரளான இந்தியரையும் பிராமணர்களையும் இயேசுவின் திருமறைக்குத் திருப்புவதை, இந் நிபந்தனைகள் பாழாக்கிவிடும் என்பதையும் நோபிலி விளங்கிக்கொண்டார்.[64]

நான் கூறுவது அனைத்தும் உண்மை என்பதற்கு இறைவனே சாட்சி. நாயக்கர் இந்த நாட்டின் தனிப்பெருந்தலைவராயிருப்பதால் இங்கு வசிக்கும் பிராமணர், கள், சிற்றரசர்கள், மற்றும் எல்லா சாதி சனத்தவரும் அவரது ஆளுகைக்கு உட்பட்ட வர்களே. ஞான அலுவல்களில் அவர் குறுக்கீடு செய்யும் போதே அவர்கள் ஆட்சேபிப்பர், அல்லது எதிர்த்தெழுவர்.

நான் போதிப்பது உண்மைக் கடவுளின் திருவேதத்தை இந்தப் போதனை கள் ஆரம்பத்தில் இறைவன் அருளிய கட்டளைகளை ஆதாரமாகக் கொண் டவை. இந்த நாட்டில் முன்பு சந்நியாசிகளாலும் (புனித தோமஸ் போன்றோர்) துறவிகளாலும் (புனித பிரான்சீஸ் சவேரியார்) போதிக்கப்பட்ட சித்தாந் தங்களே. ஆயின் இக்கட்டளைகள் பறங்கியருடையவை என்று கூறுபவன் உண்மையாகவே பெரும் பாவி. ஆயின் உண்மைக் கடவுள் ஒரு பிரிவு அல்லது இனத்துக்குரியவரல்ல. அவர் எல்லாச் சாதிகளுக்கும் இனங்களுக்கும் பிரிவு களுக்குமுரியவரே. எனவே உண்மையான நித்தியமான பரலோக வாழ்வை இறுதியில் சுவைக்க விரும்புவன், இறைவனின் திரு வேதத்தைச் சேர்ந்து, அவரது கட்டளைகளை அனுசரிக்க வேண்டியவன். இதனால் அவன் தன் இனம், சாதி, பிரிவுகளுக்கு துரோகமிழைக்கிறான் என்றோ அல்லது அவைகளைக் காட்டிக் கொடுக்கிறானென்றோ எண்ணுவது மாபெரும் தவறு.

சுருக்கமாக இங்கு தரப்பட்ட தே நோபிலியின் விளக்கவுரை (அறிக்கை) விபரமாக ஓலைச்சட்டங்களில் வரையப்பட்டு, நோபிலியின் வீட்டுக்கு முன் னாலிருந்த ஒரு பெரிய மரத்தில் அறையப்பட்டது. நோபிலியை அவமதித்து தூற்றிய, அவதூறு மொழிந்த பலர் இவ்விளக்கவுரையை வாசித்து, சிந்தித்து, தங்கள் தவறுகளை உணர்ந்து, அடிகளிடம் சென்று முழந்தாளில் விழுந்து மன்னிப்புக் கோரியதுடன், உத்தம கிறிஸ்தவர்களாக வாழ்ந்து நோபிலியின் மறைபரப்பும் பணியிலும் கைகொடுத்துதவினர்.[65]

மறைபரப்புப் பணியில் நோபிலியை எதிர்கொண்ட பிரச்சனைகள், வாதப்

பிரதிவாதங்கள் என்பன திருச்சபைக்கு வெளியே (ஆட்சியாளர், அதிகாரிகள், வேலையாள்கள்) இருந்து மட்டுமல்ல, உள்ளிருந்துமே (திருச்சபை அதிகாரிகள், துறவிகள்) உருவாகி எழுந்தன. கோவா, மலபார் பகுதித் திருச்சபைகளின் சுற்று நிர்வாகி நிக் கொலஸ் பிமென்ரா அடிகள், மதுரை மிஷனுக்கு ஒரு பெரிய எதிர்ப்பாளரானார். இச்சபைகளை அடியோடு நசுக்கி விடுவதே அவரது குறிக்கோள். இதற்காக தமது ஆதரவாளர்களை அவர் திரட்டத் தொடங்கினார்.

கொங்காலோ பெர்னாண்டோ அடிகளின் ஆதரவு முதலில் கிடைத்தது. நோபிலியின் மீது ஏராளமான குற்றச்சாட்டுகளை சுமத்தி, ஒரு நீண்ட குற்றப் பத்திரத்தை அவர் அனுப்பினார். அவை இரு தலைப்புகளுள் அடக்கப்பட்டன.

1. பறங்கிகளுக்கு மட்டுமல்ல எல்லோருக்குமே நற்செய்தி போதிக்கப்பட வேண்டுமென்ற நோபிலியின் கொள்கை.

2. நோபிலி தனது மறை பரப்பு போதகம், கொங்காலோவின் போககதத்திலிருந்து மாறுபட்டதென்கிறார்.

மேலும் அவர்கள் இக் குற்றச்சாட்டுகளுக்காக கொடுத்த விளக்கமாவது: நோபிலி சைவமதகுருக்கள் அணியும் உடைகளையே உடுக்கிறார். பிராமணர்கள் போடும் பூனூல் அவரது கழுத்தையும் மார்பையும் அலங்கரிக்கின்றது. தமது கிறிஸ்தவர்களுக்கும் இவற்றை அணியும்படி கொடுக்கிறார். சைவக்குருக்கள் போல ஸ்நானம் செய்த பின்பே திருப்பலியை நிறைவேற்றுகிறார். ஞாயிறு திருப்பலியின் முன் சந்தனத்தை ஆசீர்வதித்து எல்லோருக்கும் வழங்கி பூசிய பின்பே திருப்பலியை ஒப்புக் கொடுக்கிறார். அவரது சீடர்களும் கிறிஸ்தவர்களும் தன்னை ஐயர் என்று அழைப்பதையே அவர் விரும்புகிறார். திருவழிபாட்டு வார்த்தைகள் சிலவற்றையே மாற்றி உபயோகிக்கிறார். அஞ்ஞானி போல நடமாட வேண்டாம் என அவரது மேலதிகாரிகள் கொடுத்த எச்சரிக்கைகளை அவர் புறக்கணித்துவிட்டார்.

தமக்கென ஒரு வீட்டையும் தமது முறையில் திருப்பலி நிறைவேற்ற ஒரு ஆலயத்தையும் அமைத்துள்ளார். மேசையில் இருந்து உணவருந்துவதை விடுத்து, தமது சக குருமாருடன் சாப்பிடுவதையும் தவிர்த்து, பிராமணர்களைக் கொண்டு தமிழ் முறையிலான உணவுகளைத் தயாரித்து, தரையில் கம்பளம் விரித்து சப்பாணம் கொட்டி உணவருந்துகிறார்.

பிமென்ரா அடிகள் இக்குற்றச்சாட்டு அறிக்கையை, கோவாவிலிருந்து வருகை தந்த இறையியல் வல்லுநர்களான அன்ரோனியோ பெர்னாண்டஸ் அடிகள், பிரான்சிஸ் வெகாரா அடிகள் ஆகியோரிடம் சமர்ப்பித்தார். அவர்களது பரிசோதனையின் பின், மூடநம்பிக்கையும், மதிப்புக் குறைவானதும் திருச்சபைச் சட்ட அனுமதி பெறாததுமான ஒரு செயல் என அறிக்கை சமர்ப்பித்தனர். எனினும் இந்த விசாரணையால் மேலதிகாரிகள் தே நோபிலியின் மேல் கொண்ட மதிப்போ அன்போ மாறவில்லை. மீண்டும் பதினான்கு உயரதிகாரிகள் (சேரா மறைமாவட்ட ஆயரும் ஒருவர்) கொண்ட ஒரு குழு இப்பிரச்சனையை துருவித்துருவி ஆராய்ந்தது. நோபிலி குற்றமற்றவர் என்றே ஆயருட்பட பெரும்பான்மையினர் கருதினர்.

எனினும், நோபிலி, பூனூலை அணிபவராக இருப்பின் இனிமேல் அதை அணிய வேண்டாம் என அன்பாக வேண்டுகோள் விடுத்தனர். ஆயின் இந்தத்

தப்பெண்ணங்கள் பரவாமலிருக்க, தான் ஏற்கனவே பூனூல் அணியும் வழக்கத்தை நிறுத்திவிட்டதாக நோபிலி தெரிவித்தார். 1610 ஆகஸ்ட் 18இல் லாசியோ, புக்காரியோ அடிகள் இருவரும் மதுரைக்கு வந்து அவர்மேல் விசாரணைக் குழு எந்தவித தவறையும் காணவில்லை எனத் தெரிவித்தனர்.

அவர்கள் சபையின் வருகைப் பெருந்தலைவர் மதுரைக்கு வருகைதந்து, தே நோபிலுயின் நல்ல வேலைகளை கண்ணாரக் காணவேண்டும் என்று விரும்பினர். ஆயின் கொச்சின் விசாரணைக் குழுவின் தீர்ப்பில் திருப்தி காணாத பிமேந்திரா அடிகள் நோபிலியின் புதுமுறை மேய்ப்புப் பணிகளையும் புதிதாக மனந்திரும்பிய கிறிஸ்தவர்கள், தே நோபிலி பற்றி கொண்டுள்ள எண்ணக் கருத்துக் களையும் பற்றி ஒரு விசாரணை நடத்துமாறு உத்தரவிட்டார்.

## தே நோபிலிமீது விசாரணை

கொங்காலோ பெர்னாண்டஸ், புக்காரியோ ஆகிய குருக்கள் இருவரும் விசாரணை நடத்துமாறு பணிக்கப்பட்டனர். மூன்று பிராமணர்கள், மூன்று பாடகர்கள், ஒரு இதன்கோலி, ஒரு ஞானி, இரு வேளாளர் இவர்களில் சிலர் மட்டுமே சமஸ்கிருத மொழியை நன்கு அறிவர். ஏனையோர் தங்கள் பெயரை எழுதவோ, கையொப்பமிடவோ அறியார். ஆயின் இவர்கள் அப்பகுதியில் வாழ்ந்த அனைவரையும் பிரதிநிதித்துவப்படுத்தினர். பதினைந்து வினாக்களுக்கு இவர்கள் விடையளித்தனர். இவ்விடைகள் அனைத்தும் தே நோபிலியின் மேய்ப்புப் பணிகள் சிறந்தவை - நற்பயன் தருபவை என்பதை ஊர்ஜிதப்படுத்தின.

செப்ரெம்பர் 30ஆம் நாள் விசாரணை முடிவுற்றது. புக்காரியோ மிகுந்த மகிழ்ச்சி கொண்டவராகக் காணப்பட்டார். ஆயின் பெர்னாண்டஸ் இரண்டு நாள் விசாரணையின்பின் சுகயீனம் காரணமாக ஓய்வுபெற்றுக் கொண்டார். மதுரையிலிருந்து விசாரணை அறிக்கை, தம்மிடம் வந்து சேருமுன், புனித சின்னப்பர் கல்லூரி இறையியல் பேராசிரியர்களையும் அதிபரையும், பெர்னாண்டஸ் அடிகளின் குற்றச்சாட்டுக் கடிதத்தை ஆதாரமாகக் கொண்டு நோபிலிக்குத் தீர்ப்பிடுமாறு பிமேந்திரா அடிகள் உத்தரவிட்டார்.

கிறிஸ்தவ பிராமணர் நோபிலியால் மந்திரிக்கப்பட்ட பூனூலை அணிதல் சகித்துக் கொள்ளக் கூடியது ஏனெனில் அதில் ஒரு குருசு தொங்குகிறது. ஆயின் நோபிலி நடத்திய திருமுழுக்குகள் மூடநம்பிக்கைக்குரியவை. திருவழிபாட்டில் மாற்றம் செய்வது பாரதூரமான குற்றம். கொங்காலோ பெர்னாண்டஸ் அடிகளிடமிருந்து மக்களை வேறுபடுத்துவது மன்னிக்க முடியாத தவறு. எனவே நோபிலியின் மேய்ப்புப் பணி முறைகள் சத்திய வேதத்துக்கு மாறானவை. அவரால் மனந்திருப்பப்பட்டோர் உண்மையான கிறிஸ்தவர்கள் அல்ல. ஆகவே மேலும் சத்திய திருச்சபைக்கு பேராபத்து நேராவண்ணம், மதுரை மிஷனை தடுத்து நிறுத்தவும், மேற்கொண்டு பணியாற்றாதவாறு உத்தரவிடவும் வேண்டுகிறோம். இது நோபிலிக்கு உத்தியோக பூர்வமாக அறிவிக்கப்பட்டது.[66]

றொபெட் நொபிலி அடிகளாரின் எதிரிகள், அவர் பிரமண சன்னியாச அப்போஸ்தலத்துக்கு பதில் பண்டார சுவாமிகள் என்று அமைப்பும் உருவாக்கி பின் தோல்விகண்டு கைவிடப்பட்டது.

யூலை 22, 1640இல் தத்துவ போதக சுவாமிகள் சிறைப்படுத்தப்பட்டார். துன்புற்றார். தன்னைக் காணவந்த பலருக்கு நற்செய்தி அறிவித்தார். போர்

முனை சென்ற 2 திருமலை நாயக்கர் மறவருக்கெதிரான போரில் இருந்து வீடு திரும்பி, சுவாமிக்கு விடுதலை தந்தார். அவன் மதுரைக்கு சென்ற பொழுது அவர் மீண்டும் சிறைப்படுத்தப்பட்டார் என அவர் எழுதிய ''தூஷணைதிக் காரம்'' என்ற ஏடு 23ஆம் அதிகாரம் சொல்கிறது. அது ஆவணி 7, 1641 அந்த தென்னாட்டு அண்ணகன் அவரின் கோவிலையும், திரு உருவங்களையும் அவர் மாதா பேரில் சமஸ்கிருதத்தில் எழுதிய பாடல்களையும் தீக்கிரையாக்கினான்.

மீண்டும் 1641ஆம் ஆண்டின் முடிவில் விடுவிக்கப்பட்டார். 1644 ஒக்டோபர் 29இல் திருமலை நாயக்கர் முன்னிலையில் வரவேற்கப்பட்டார்.[67]

1644இல் மதுரையைவிட்டு யாழ்ப்பாணம் வந்தார். 1645களில் நம் பஞ்சால் வீதியில் உள்ள ரேகடியில் தங்கி வாழ்ந்தார் என எங்கள் தந்தையார் லூயிஸ் செபஸ்ரியின் இராசநாயகம் அடிக்கடி கூறுவர்.

குருநகர் கத்தோலிக்கரும், யாழ்ப்பாணத்தவரும் அவரை ''பரிசுத்த தந்தை'' எனவே கருதினர். நான்கு பிராமணக் குருக்களுடன் இங்கு வந்த அவர், செபம், தபம், எழுத்து என வாழ்வில் செயல்பட்டு இங்கும் பலரை யேசு பிரான் பக்கம் ஈர்த்தார். அவர் யாழ்ப்பாணத்து வீதிகளில் நடந்து, அவர் கண்பார்வை குன்றியதால் தளர்ந்து தயங்கிய பொழுதெல்லாம் மக்கள் ஓடி வந்து கரங்களால் தாங்கி, கோவிலுக்கு தூக்கிச் செல்வர் ஓர் வெற்றிப் பவணியில் போன்று.

தேவதாயில் வற்றா அன்பு, சிலுவை நாயகனில் தீராப் பாசம் அவர் இறுதி நாட்களை மயிலாப்பூரில் யேசுவின் திருச்சித்தத்திற்கமைய செலவிட்டு 1656ஆம் ஆண்டு தை 16ஆம் திகதி யேசுவின் பிதாவின் கரங்களில் தன் ஆன்மாவை ஒப்படைத்தார்.[68]



# மதுரை மிசன்: சுவாமி வீரமாமுனிவர்

மேல்நாட்டு இலக்கியங்களை நன்கு சுவைத்து இன்புற்றவர்களுக்கு கவிஞர் திலகம் ''டாஸ்டயில் டான்டே'' எழுதிய ''டிவினா கொமடியா'' நினைவில் என்றும் நிற்கும். மோட்சம், நரகம், உத்தரிப்புத்தலம் பற்றி நற் செய்தி நூல்கள் மூலமாகவும், வேதவிற்பன்னர்கள் எழுதிவைத்த பிரபந்தங்கள் வாயிலாகவும் நாம் அறிபவை அதிகமல்ல. ஆயின் நூறு படலங்கள் அடங்கிய 'டிவினா கொமடியா'வில் நாம் மேலே குறிப்பிட்ட, ஒரு மனிதனின் மரணத்தின் பின் அவன் ஆன்மா செல்லக்கூடிய மூன்று அதிசய தலங்களைப் பற்றிய விபரங் களும், திருச்சபை வரலாறு, வேத தர்க்க சாஸ்திர ஆய்வுகளும், வானியல், இலக்கியம் முதலியவையும் பாலும் தேனும் பாகும் பருப்பும் கலந்த அமுத மாகக் காண்கிறோம். டான்டே காலத்தில் வாழ்ந்த மக்கள், அறவழியை அசட்டை செய்து, மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளால் மதிமயங்கி பழி பாவத்திற்கஞ்சாதவர்களாய் வாழ்ந்தது கண்ட கவிஞர் தாந்தே (டான்டே), அவர்களை நல்வழியில் திருப்ப இப்புனித காப்பியத்தை உருவாக்கினார் என வரலாறு கூறுகிறது. இப்பூவுலகில் தோன்றிய கவிஞர்களுள் தலை சிறந்தவர் தாந்தே என்பது இலக்கிய ஆய்வாளர்களின் ஏகோபித்த எண்ணம்.

இத்தாலிய மொழிக்கு 'தாந்தே' எவ்விதமோ, தமிழ்மொழிக்கு வீரமா முனிவர் அவ்விதமே என்பது இன்றைய கருத்து. அவர் தமிழல்லர். இத்தாலியர். 1680இல் நவம்பர் 8ஆம் நாளில் பிறந்தவர். கொன்ஸ்டன்ஸ் யோசவ் பெஸ்கி என்பது திரு முழுக்கின் போது இடப்பட்ட பெயர்.

இளமையிலேயே இத்தாலி, கிரேக்கம், ஈபுறு, இலத்தீன், போர்த்துக் கேயம் முதலிய மொழிகளில் புலமை பெற்றார். 1700இல் ரவன்னா நகரில் ஆசிரி யப்பணி புரிந்தார். இப்பணி 1706வரை நீடித்தது. பின் குருகுலப் பயிற்சியும் இறையியல், திருமறையில் அறிவும் பெற்று 1709இல் இறைவனின் குருவாகத் திருநிலைப்படுத்தப் பட்டார். இந்தியா சென்று மறைபணியாற்றும் எண்ணம் குருகுலப்பயிற்சியின் போதே இவர் உள்ளத்தில் சுடர்விட்டது. 1710இல் இந்தியா வந்து சேர்ந்தார்.

பெஸ்கி இயேசு சபையைச் சேர்ந்த குரு. 1534இல் புனிதர் இக்னேசியசு லொயலா, இத்துறவற சபையைத் தொடங்கினார். மார்ட்டீன் லுத்தேர் ஜேர்மனி நாட்டைச் சேர்ந்த புனித அகஸ்தீனியன் சபைத்துறவி. பதினாறாம் நூற்றாண்டில் இவர், பாப்பரசர் மேலும் திருச்சபைத் தலைமைப் பீடத்தின் மேலும் பல குற்றங்களைச் சுமத்தியதனால் திருச்சபையில் பிளவு ஏற்பட்டது. பாப்பரசரின் அதிகாரங்களை பிரமாணிக்கத்துடன் ஏற்றுக்கொள்ளவும்,

தேவையான சீர்திருத்தங்களைப் புகுத்தவும், திருச்சபையை புனிதப்படுத்தவும் இஞ்ஞாசியார் என்றழைக்கப்பட்ட இக்னேசியசு லொயலா, இயேசு சபையை அடியிட்டார். பாப்பரசர் அனுப்பும் இடங்களுக்கு (உலகின் எப்பகுதியாயினும்) சென்று நற்செய்திப் போதனை, மறைபரப்புப்பணிகளை இயேசு சபையார் ஆர்வத்துடன் ஆற்றிவந்தனர்.

இந்தியா முதலிய தென்கிழக்காசிய நாடுகளில் மறைபணியாற்றும் அருளாட்சிப் பொறுப்பு, பாப்பரசரால் போர்த்துக்கேய மன்னர்களுக்கு அளிக் கப்பட்டிருந்தது. இங்கு பணியாற்றிய குருக்களின் செலவுகள் அனைத்தும் மன்ன ராலேயே வழங்கப்பட்டது. இது மன்னரின் பொருளாதாரத்தைப் பாதித் தாலும் சமயப்பற்றுக் காரணமாக மன்னரே நடத்தி வந்தார். இப்பெரும் உதவிக்கு பாராட்டுத் தெரிவிக்குமுகமாக தமது அருளாட்சிப் பொறுப்பிலிருந்த மறை மாவட்டங்களுக்கு ஆயர்களை நியமிக்கும் கௌரவம் மன்னருக்கு வழங்கப் பட்டிருந்தது. (இது பின்னர் நீடிக்கப்பட்டுவிட்டது)

இந்தியாவிலிருந்த மறைமாவட்டங்களுள் மலபார் மறைமாநிலமும் ஒன்று. இதன் ஒருபகுதியே மதுரை மறைப்பணிக்களம். 1711இல் பெஸ்கி குரவர் மதுரைப் பணிக்களத்தில் பணிபுரிய அனுப்பப்பட்டார். தமிழ் நாட்டில் மறைபணியாற்றிய போர்த்துக்கேயக் குருக்கள் ஐரோப்பிய பண்பாடுகளையே உடை, உணவு, மற்றும் பழக்கவழக்கங்களில் கடைப்பிடித்தனர். இதனைக் கரையோரப் பகுதிகளில் கடைப்பிடித்தனர். இதனைக் கரையோரப்பகுதிகளில் வாழ்ந்த இந்தியக் கிறிஸ்தவர்கள் மதித்து மரியாதை அளித்துவந்தனர். எனினும் மதுரைப் பகுதி மக்கள் இவ்வுடை, உணவு, பண்பாடுகளை வேற்று நாட்டுப் பண்புகளா கவே கருதி அருவருத்தனர். இந் நிலமையை முதலில் நன்குணர்ந்தவர் றொபட் தேநோபிலி அடிகள். அவர் இந்திய பண்பாட்டையே மேற்கொண்டு, இந்தியத் துறவியாகவே வாழ்ந்ததால், மதுரை மக்களிடையே நன்மதிப்பைப் பெற்றிருந் தார். பெஸ்கி குரவரும் காவியுடை தரித்து சைவ உணவு உண்டு, இந்தியப் பண் பாட்டு வாழ்க்கை முறையை மேற்கொண்டார்.


சுவாமி வீரமாமுனிவர்

நோபிலியும் அவரோடு தமிழகத்தில் பணிபுரிந்தவர்களும் தங்கள் இத்தாலியப் பெயர்களின் தமிழ்க்கருத்துப்பெயர்களையே (இந்திய மரபுப்படி) சூடிக்கொண்டனர். றொபேட் தேநோபிலி - தத்துவபோதகர் என்றும், யோண் தேபிரிற்றோ-அருளானந்தர் எனவும், புத்தேரி - பெரியபரஞ்சோதி நாதர் என்றும், வெனான்ஸ்பூஸே - சஞ்சீவிநாதர் எனவும் பெயர் மாற்றம் செய்தனர். பெஸ்கி அடிகளும் தம் பெயரை தைரியநாதர் சுவாமி என மாற்றிக் கொண்டார். இவரின் தமிழ் மொழிப்புலமையை நன்கறிந்த மதுரைத் தமிழ்ச்சங்கத்தினர் 'வீரமாமுனிவர்' என்ற பெயர் சூட்டிக்கௌரவித்தனர். அப் பெயரே இன்றளவும் பெஸ்கி குருவின் பெய ராக விளங்குகிறது. இஸ்லாமிய பிரமுகர் சாந்தா சாகிப் என்பவர் 'இஸ்ம சந்நியாசி' என்ற பட்டத்தையும் அளித்தார்.

சிறிது காலம் பெஸ்கி, தூத்துக்குடி, மணப்பாடு புன்னைக்காயல் ஆகிய இடங்களில் தங்கி, தமிழ், சமஸ்கிருதம், உருது, தெலுங்கு மொழிகளைக் கற்றார். எனினும் தமிழ்மேல் அவர் கொண்ட காதலால், தமிழை வெகு ஆழமாகக் கற்றார். அவருக்கு தமிழிலும், சமயப்பணியிலும் நல்ல பயிற்சியளித்தவர் பிரபல கல்விமானான பூர்ஸே அடிகளார்.

1712இல் கிடைத்த அறிக்கை அவர் சோழமண்டலப்பகுதியில் பணி யாற்றியதாகக் கூறுகிறது. அக்காலத்தில் குருக்கள் பலமைல் தூரம் நடந்து சென்றே பணியாற்றினர். பெஸ்கியும் நீர்நிறைந்த ஆறுகள் பலவற்றைக் கடந்தே பணிபுரிந்தார். இந்துமதப் பிரமுகர்கள், குறுநில மன்னர்கள் பெஸ்கியின் தீவிர, உற்சாகமான மறைப்பணி இந்துமதத்துக்குப் பேராபத்தைக் கொண்டு வருமெனப் பயந்தனர். ஆகவே அடிக்கடி பல்வேறு வகையிலும் தொல்லைகள் கொடுத்து வந்தனர். எனினும் அவரது சமயப்பணி உற்சாகமாகத் தொடர்ந்தது.

அத்துடன் தமிழ் இலக்கண, இலக்கிய ஆய்வுத்துறையில் காலடி எடுத்து வைத்தார். தமிழ்மேல் கொண்ட ஒப்பற்ற காதலால் தாமும் தமிழில் காவியங் களையும் உரைநடை நூல்களையும் இயற்றினார். கால்களில் சிலப்பதிகாரம் என்னும் சிலம்பினையும், இடையிலே மணிமேகலை எனப்படும் மேகலா பரணத்தையும், மார்பினிலே சீவகசிந்தாமணி என்னும் மணிமாலையையும், காதுகளிலே குண்டலகேசி எனப்படும் குண்டலத்தையும், கைகளிலே வளையா பதி என்றழைக்கப்படும் வளையலையும் (ஐம்பெருங் காப்பியங்கள்) அணிக ளாகக் கொண்டிருந்த தமிழன்னைக்கு இத்தாலியக்கம்பன் வீரமாமுனிவர் சூட்டிய வாடாத தேன்மலர்மாலை 'தேம்பாவணி' என எழுத்தாளர் நாவண்ணன் பாராட்டுவது சாலவும் பொருந்தும்.

வீரமாமுனிவர் இயற்றிய காவியங்களுள் தேம்பாவணியே ஒப்பற்ற பாட லோவியமாகும். தேவ அன்னை, கன்னிமரியாளின் கைத்தாதை (கணவர்) வளனையே (புனித சூசையப்பரை) காவியத்தலைவனாக வைத்து இவ்வோவி யத்தை திறம்பட அமைத்துள்ளார் முனிவர் பெருந்தகை. அன்னைமேல் அபார பக்தி கொண்ட பெஸ்கி தமிழ் நாட்டில் அன்னையின் பேரால் பல ஆலயங் களை எழுப்பியுள்ளார். அவ்விதமே கோனான்குப்பம் என்ற ஊரில் தேவ தாயின் உருவமைப்பை தமிழ்ப்பெண்மணி போலமைத்து சேலை அணிவித்து, பெரியநாயகி அம்மை எனப் பெயரிட்டு, அன்னையின் திருவருள்வேண்டி, தேம்பாவணியைப் பாடிமுடித்தார் என தேம்பாவணியின் முதற்காண்டத்தின் மகனேர்ந்த படலத்துக்கு உரையமைத்த பண்டிதர் க.வீரகத்தி கூறுகின்றார்.

தேம்பாவணி தவிர, பல சிற்றிலக்கியங்களையும், உரைநடை நூல் களையும், இலக்கண நூல்களையும், மொழிபெயர்ப்பையும், அகராதிகளையும் வீரமாமுனிவர் இயற்றியுள்ளார்.

வீரமாமுனிவர் காவியம் புனைவதிலும் உரைநடை இலக்கியத்திலும் மட்டு மல்ல ஓவியந் தீட்டுவதிலும் வல்லவராயிருந்தார். ஓர் உதாரணம்:- ஒரு முறை ஆற்காட்டுக்குச் சென்றிருந்த முனிவர் நாயக்க மன்னர்களின் மரபு வழியை, ஒருமர வடிவத்தில் ஓவியமாகத் தீட்டி, சந்தா சாகிபுபங்காருவுக்கு அன்பளிப்பாக வழங்கினார். பங்காருவின் முன்னோர்களது 222 ஆண்டுக்கால மரபு வழியை அவ் வோவியம் சுட்டிக்காட்டியது. மரத்தின் இலைகளை அரியணையாகக் காட்டி ஒவ்வொரு இலைகளிலும் ஒரு நாயக்க மன்னரின் உருவம் தீட்டப்பட்டிருந்தது.

வீரமாமுனிவர் இந்திய வாழ்க்கை முறையையே பின்பற்றி வாழ்ந்தார் என இக்கட்டுரையின் ஆரம்பத்தில் சுருக்கமாகக் குறிப்பிட்டோம். அவரது வாழ்க்கை முறை இதுதான். ஒருநாளைக்கு ஒருமுறையே உண்பார். அதுவும் மரக்கறி உணவே. ஆசனங்கள், எழுத்துப்பீடம் பாவிப்பதில்லை. தரையிலே அமர்வார். அணிவது காவி உடை. இடுப்பில் வேட்டி மேலே ஒருசிறு மேலங்கி. தலைப்பாகை. காலில் மரத்தாலான பாதக்குறடு.

வீரமாமுனிவர் தமிழ்நாட்டில் ஏறத்தாழ 36 ஆண்டுகள் சமய, சமூக, மொழிப் பணிகள் புரிந்துள்ளார். அவர் இப்பணியை, குருக்கள்பட்டி, அய்யம் பேட்டை, திருக்காவலூர், வடுகர்பேட்டை முதலிய ஊர்களைத் தலைமையிட மாகக் கொண்டு நடத்தினார். 4.2.1747 அன்று தம் 67ஆம் வயதில் வீரமா முனிவர் இறைபதமடைந்தார் என்பதைத்தவிர அவரது இறுதிக்காலம் பற்றி வேறெதுவும் அறிய முடியாது.

## தேன்சொட்டும் தேம்பாவணி

கம்பனின் இராமாயணத்துக்கும் இளங்கோவின் சிலப்பதிகாரத்துக்கும் ஈடானதென மதிக்கப்படும் தேம்பாவணி, தேவதாயாரின் பத்தாவும், இரட்சகர் இயேசுவின் வளர்ப்புத் தந்தையுமான புனிதவளனாரை (சூசையப்பர்) காப்பியத் தலை வனாகக் கொண்டு பாடப்பட்ட ஒரு காவியம். எழுதப்பட்ட காலம் கி.பி 1726. இறைவனின் திரு அடிகளில் சாத்திய வாடாத மாலை என்பது தேம்பாவணிக்குப் பொருள்.

1665இல் ஸ்பானிய நாட்டில் வாழ்ந்த ஒரு புனிதை ஆகிர்தமேரி. தேவ தாயின் மேல் இவள் கொண்ட அபரிமிதமான பக்தியால் அந்த அன்னை, அடிக்கடி ஆகிர்தாளுக்குத் தரிசனம்தந்து தமது பத்தா சூசை மாமுனியின் வரலாற்றைக் கூற, அவளும் இவ்வரலாற்றை 'கர்த்தனின் நகர்' (CITY OF GOD) என்ற நூலாக வெளியிட்டாள். இந்நூலையே முதனூலாகக் கொண்டு, வீரமாமுனிவர் தேம் பாவணியை உருவாக்கினார்.

முப்பெருங் காண்டங்களையும், முப்பத்தாறு படலங்களையும், 3615 பாக் களையும் கொண்டது தேம்பாவணி. சாங்கிய இலக்கியப்படி அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கையும் கொண்டதால் இது ஒரு பெரும் காப்பியமாக மதிக்கப்படுகிறது. விவிலியத்திலிருந்து (BIBLE) 105 வர லாறுகளும், கத்தோலிக்க திருச்சபையின் கொள்கைகளும், அறிவுரைகளும், வழிபாட்டு முறைகளும்; கதைவடிவமாகவும் தத்துவ வடிவமாகவும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. தேம்பாவணி கிறிஸ்தவர்களின் கலைக்களஞ்சியம் என்கிறார் ஒரு அறிஞர்.

தேம்பாவணியை உரைநடையாகவும் பின்னர் 1887இல் வெளியிட்டனர். ஆறுமுக நாவலரின் கந்தபுராண வசனத்திலும் தேம்பாவணி உரைநடை சிறந்து காணப்படுகிறது என்கிறார் வித்துவான் கந்தையா என்னும் தமிழறிஞர்.

தேம்பாவணி, தமிழன்னைக்குச் சூட்டப்பட்டுள்ள, நறுமணம் காணு கின்ற தேம்பாத அணியாகும்.

## முனிவரின் தமிழாற்றல்

1. பதினெட்டாம் நூற்றாண்டின் மிகச்சிறந்த தமிழ்ப்புலவர்கள் இருவருள்

வீரமா முனிவர் ஒருவர் எனத்திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் இயற்றிய அறிஞர் கால்ட்வெல் ஐயர் எழுதியுள்ளார்.

2. தமிழறிஞருள் மிகச்சிறந்தவர் தைரியநாதர் என்றார் அறிஞர் போப் ஐயர்.

3. எமிலியோ தேசா என்ற இத்தாலிய அறிஞர், வீரமாமுனிவர் கீழ்த்திசை அறிஞருள் மிகவும் புகழ்பெற்றவர் எனக்கூறியுள்ளார்.

4. திராவிட மொழியியல் வல்லுநர்களின் முன்னோடி முனிவரே என்பது கமில்சுவலபில் என்ற செக்கோசிலாவாகிய நாட்டுத் தமிழறிஞரின் கூற்று.

5. முனிவர் தமிழில் மிகச்சிறந்த புலமை பெற்றவரென 1727ஆம் அறிக்கையில் பரோஸ்பெரோ ஜீலியானி அடிகள் குறிப்பிடுகிறார்.

6. முனிவரின் தமிழ்த்திறமையையும், தமிழ்ப் பண்பாடு பற்றிய அவரது அறிவாற்றலையும் பயன்படுத்தி மயிலை ஆயர் மேதகு யோசவ் பிஞ்ஞேயிரோ ஆண்டகை, 1693இல் கொல்லப்பட்ட மறைசாட்சி புனித அருளானந்தரின் வாழ்க்கை வரலாற்றை நூலாக உருவாக்கும் பெரும்பணியில் அவரை ஈடுபடுத்தினார்.[69]

## சுவாமி வீரமாமுனிவர் அருளிய நூல்கள்

### காவியங்கள்

★ தேம்பாவணி (3 காண்டம், 36 படலம், 3615 பாடல்கள்)
★ திருக்காவலூர்க் கலம்பகம்
★ அடைக்கலமாலை
★ கலிவெண்பா
★ அன்னை அழுங்கல் அந்தாதி
★ கித்தேரியம்மாள் அம்மானை
★ திருப்பாவணி
★ தேவாரம்
★ வண்ணக்கலைகள்
★ தேவமாதா அந்தாதி

### வசன நூல்கள்

★ வேதியர் ஒழுக்கம்
★ வேத விளக்கம்
★ பேதக மறுத்தல்
★ திருச்சபைக் கணிதம்
★ வாமன் கதை (தேம்பாவணியினின்று எடுக்கப்பட்டது)
★ லுத்தெரினித் தியல்பு
★ வீரமாமுனிவர் பதிதர்பேரில் திருக்கடையூர் நாட்டு திருச்சபைக்கு எழுதின நிருபம்
★ ஞானக் கண்ணாடி

### விகடம்

★ பரமார்த்த குருவின் சரிதை

## பஞ்சாங்கம்

☆ திருச்சபைக் கணிதம்

## இலக்கணங்கள்

☆ தொன்னூல் விளக்கம்
☆ கொடுந்தமிழ் இலக்கணம்
☆ செந்தமிழ் இலக்கணம் (லத்தீன்)
☆ லத்தீன் - தமிழ் இலக்கணம்

## அகராதிகள்

☆ சதுரகராதி (இதுவே தமிழில் எழுதப்பட்ட முதல் அகராதி)
☆ தமிழ் - இலத்தீன் அகராதி
☆ தமிழ் - போர்த்துக்கீசிய அகராதி

## வைத்திய நூல்கள்

☆ குணபாடம்
☆ சிந்தாமணி
☆ நசகாண்டம்

## மொழிபெயர்ப்பு

திருக்குறள் அறத்துப்பாலையும் பொருட்பாலையும் லத்தீன் பாடலாக மொழி பெயர்ப்பு

அத்தியாயம் ஒன்பது

# யப்பானிய ஆரம்பகால திருச்சபை வரலாறு

*1543 செப்ரெம்பர் 23இல் சீனாவில் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த ஒரு கப்பலில் நடைபெற்ற கலகத்தில் தப்பியோடிய மூன்று போர்த்துக்கேயர்கள் அன்ரோனியோ டி மொடா, பிரான்சிஸ்கோ செயிமோடா, அன்ரோனியோ பெயிக் கோடா யப்பான் நாட்டுக்கு வந்த முதல் ஐரோப்பியர்கள். இதைத் தொடர்ந்து யப்பானிய துறைமுகமான கைசுவுக்கு போர்த்துக்கேய "நாவாய்கள்" போக்கு வரத்துகளை தொடர்ந்தன.*

*1547 டிசம்பரில் புனிதர் பிரான்சிஸ் சவேரியார் மௌலுக்காசிலிருந்து கோவா செல்லும் வழியில் மலாக்காவில் மூன்று யப்பானிய இளைஞர்களைச் சந்தித்தார். இவ்விளைஞர் குழுவின் தலைவன் யாயிரோ இவரையே புனித சவேரியார், யப்பானில் திருச்சபையை அறிமுகம் செய்யக் கருவியாகக் கொண்டார். யாயிரோ, கோவாவுக்கு அனுப்பப்பட்டார். லான்செலட் அடிகள் இவருக்கு சத்தியவேத உண்மைகளை வெகு சிறப்பாகப் போதித்தார். 1548 மே மாதத்தில் கோவாவின் ஆயர் இவருக்கு திருமுழுக்காட்டி, பவுல் என்று நாமகரணம் செய்தார்.*

*புனித சவேரியார், தமது குழுவினருடன் 1549 யூன் மாதத்தில் மலாக்காவிலிருந்து மேய்ப்புப்பயணத்தைத் தொடங்கினார். காகோசிமாவில் (யப்பான்) 1549 ஆகஸ்ட் 15இல் வந்திறங்கினார்.*

*சவேரியார் சென்ற காலம், யப்பானிய நாட்டில் உள்நாட்டுப் பிரச்சனைகள் தலைதூக்கிய காலம். உள்நாட்டுக் கலகங்களால் அந்தநாடு அவதிப்பட்ட நிலை. யப்பானிய சக்கரவர்த்தி, யப்பானிய குலதெய்வத்தின் வாரிசு என்ற மூடநம்பிக்கை நிரம்பியிருந்த காலம் அது. இரண்டாவது உலகப் பெருஞ் சமரில் (1939 - 1945) யப்பானிய தேசத்தை வெற்றிகொண்ட நேச நாட்டு தளபதி ஆதரே இந்த மூடநம்பிக்கைக்குச் சாவாலிட்ட யப்பானிய சக்கரவர்த்தி கியூட்டோ மாளிகையில் வாழ்ந்தார்.*

*நாட்டின் நிர்வாகம் ஆயுதப் படைகளின் பிரதம தளபதியின் பொறுப்பிலிருந்தது. இத்தளபதி நாட்டின் செல்வாக்கு மிக்க பிரமுகர்களின் ஆலோசனையுடன் நிர்வாகத்தை நடத்திவந்தார்.*

*ஜப்பானிய தேசிய மதத்தின் பெயர் சின்ரோ. சூரியனையே யப்பானியர் தெய்வமாகக் கருதினர். சின்ரோ மதம் இந்நாட்டில் செல்வாக்குற்றிருந்த போதிலும் காலத்துக்குக் காலம் ஏற்பட்ட உள்நாட்டுப் பிரச்சனைகளின் தாக்கங்களினால் நலிவடைந்தது.*

## புனித சவேரியாரின் பணி (1549 - 1551)

*யப்பானுக்குச் சென்றபின் 1549 செப்ரம்பர் 29இல் சவேரியார், சற்சுறானா பிரிவின் அதிபதி சைமாசு தாக்கிசா அவர்களால் நல்வரவேற்கப்பட்டு அவரது ஆளுகைக்குட்பட்ட பிரதேசத்தில் சத்திய மறையைப் போதிக்க அனுமதிக்கப் பட்டார். யப்பானிய சக்கரவர்த்தியை சந்தித்து நாடு முழுவதும் சத்திய வேதத்தைப் போதிப்பதே சவேரியாரின் பிரதான இலக்கு. மேலும் அவர் சென் துறவிகளின் நிர்வாகத்துக்குட்பட்டிருந்த அசிகா கா கல்லூரியில் செல்வாக்குப் பெறவும் விரும்பினார்.*

*தாக்கிசா, சவேரியாரை ஆதரிப்பதன் மூலம் போர்த்துக்கேயரின் நட்பைப் பெறவும், போர்த்துக்கேய நாவாய்கள் தனது நாட்டுத் துறைமுகங்களுக்கு அடிக்கடி வந்துபோகவும் ஆசித்தார். ஓராண்டு முடிவில் சவேரியார் 100 யப்பானி யர்களைத் திருமுழுக்காட்டி சத்தியமறைக்கு யப்பானில் வித்திட்டதுடன், யப்பானிய மொழியிலும் நன்கு தேர்ச்சியடைந்தார். இதற்கு முக்கிய காரணர் மொழிபெயர்ப்பாளர் யாயீரோ அவர்களுக்குள் ஏழையான சமுராய் இனத்த வரான ஒருவர். இவர் பெர் நாடோ என நாமகரணஞ் செய்யப்பட்டார். ஐரோப் பாக் கண்டத்துக்குச் சென்ற முதல் யப்பானியரும் இவரே.*

*சவேரியார் சென்.சின்கோன் என்ற யப்பானிய உயர் பிரபுத்துவ இனங் களின் செல்வாக்கைப் பெற்றார். பியுகுயுசொஷி என்னுமிடத்திலிருந்த சென் துறவிகளின் இல்லத்தின் முதுபெரும் அறிஞரும் செல்வாக்குடையவருமான, நினிஜிற்சு என்ற பெரியாரின் நட்புறவும் சவேரியாருக்குக் கிடைத்தது. எனினும் சில துறவிகளின் ஒழுக்கக்கேடுகளையும் முறைகேடான பண்பாட்டையும், சவேரியார் பகிரங்கமாக மறை உரைகளில் கண்டித்துப்பேசியதால், அவருக்கு எதிரணி ஒன்றும் உருவாகியது.*

*அடுத்த போர்த்துக்கேயக் கப்பல் கிராடோ துறையில் நங்கூரமிட்டது. இத் துறை தாக்கிசாவின் எதிரிகளுக்குச் சொந்தமானது. இதனால் பல விதத்திலும் தாக்கப்பட்ட தாக்கிசா புதிதாக மனந்திரும்பிய யப்பானிய கிறிஸ்த வர்கள் பலரை சித்திரவதை செய்ததுடன் போர்த்துக்கேய மதகுருக்களை நாடு கடத்தினான் 1550 ஆகஸ்டில் சவேரியாரும் அவரது மறைபரப்புக் குழுவும் கிராடோவுக்குச் சென்றபோது அவர்களுக்கு மகத்தான வரவேற்பளிக்கப் பட்டது. துறவி பெர்னான்டஸ் சரளமாக யப்பானிய மொழியில் இயேசுவின் நற்செய்திகளைப் போதித்து நூற்றுக்குமேற்பட்ட யப்பானியர்களுக்குத் திரு முழுக்களித்தார். இச்சிறு மந்தையை தேரோ றஸ் அடிகளின் பொறுப்பில் விட்டுவிட்டு சகோதரர் பெர்னாண்டஸ் மற்றும் பேர்னார்டோவுடன் சவேரி யார் கியாட்டோவுக்குப் பயணமானார். இக்குழு க காட்டாவுக்கு படகு மூலம் சென்று அங்கிருந்து கால்நடையாக, யமாகுச்சிக்குச் சென்றது. அங்கு ஊச்சி யோசிற்றகா பிரபுவால் சவேரியாரும் குழுவினரும் வரவேற்கப்பட்டனர்.*

*1551 ஜனவரியில் சவேரியார் கியோட்டோவுக்குச் சென்று தலைநகரில் பதினொரு தினங்களைச் செலவிட்டார். அவரது தாழ்மைமிகு பண்புகளும் எளிமையான உடையுமே அவருக்கு தலைமைப்பீடத்தினர் மதிப்பளிக்காது விட்டமைக்கான காரணிகள்.*

*சவேரியார் கிராடோவுக்குச் சென்று, மிகச் சிறந்த உடையணிந்து, யமாகுச்சிக்குச் சென்றார். பெருந்தலைவர் ஒயுச்சி யோசித்தகா முன்னிலையில்*

இந்திய ராசப் பிரதிநிதி (Viceroy) கோவாவின் ஆயரின் அதிகாரக் கடிதத்தை கையளித்ததுடன் விலையுயர்ந்த அன்பளிப்புகளையும் வழங்கினார். பெருந் தலைவர் ஒருபழைய கோவிலை சவேரியார் இருப்பிடமாகப் பாவிக்கும்படி கொடுத்ததுடன், நற்செய்தியைப் போதிக்கவும் அனுமதியளித்தார்.

யமாகுச்சியில் சவேரியார் ஐந்துமாதங்களைச் செலவிட்டார். சின்கோன் துறவிகளுடனும் ஏனைய தலைவர்களுடனும் நல்லுறவாடினார். பலர் அவரது மேய்ப்புப் பணியின் துணைவர்களாயினர். ஜப்பானியர்களின் முதல் அப்போஸ் தலிக்க சீடர் சகோதரர் லோரன்கோ அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்.

புங்கோ பிரதேசத்தின் வாலிப தலைவர் ஒட்டோமோ பிரபுவின் அழைப்புக் கிணங்க, செப்ரெம்பர் நடுப்பகுதியில் சவேரியார் புனாய்க்குச் சென்றார். ஒட் டோமோ சவேரியாருக்கும் அவரது குழுவினருக்கும் மேய்ப்புப் பணிக்கான சகல வசதிகளையும் செய்தார். எனினும் 27 ஆண்டுகளின் பின்பே திருமுழுக்குப் பெற்று சத்தியமறையில் இணைந்தார்.

சவேரியார் அதிகநாட்களை புங்கோவில் செலவழிக்கவில்லை. இந்தியா விலிருந்து எதுவித செய்திகளும் கிடைக்காதது குறித்து கவலையுற்றார். எனவே அங்கு சென்று நிலமைகளை நேரில் கண்டறிய விரும்பினார். தம்மால் மனந் திருப்பப்பட்ட யப்பானியர் பேர்னாடோ, மாட்டியோ இருவருடன் கப்பலேறி னார். யப்பானில் சவேரியாரின் மேய்ப்புப்பணி, ஏனைய பிரதேசங்களில் அவரது பணியுடன் ஒப்பிடுகையில், மிகமிகக் குறைவானதே அவர் யப்பானை விட்டுச் செல்கையில் அங்கு அவரால் மனந்திருப்பப்பட்ட 800 கிறிஸ்தவர் களும், ஒரு குருவும், ஒரு தொண்டருமே, அங்கிருந்தனர். எனினும் யப்பானில் மேய்ப்புப்பணி பெருமளவில் தொடரவேண்டுமென்ற பெருந்தாகம் அவர் மனதைவிட்டகலவில்லை.

## மொழிப்பிரச்சனையும் பிறகாரணிகளும்

மேய்ப்புப்பணியில் - மறைபரப்புப் பணியில் வல்லவரான சவேரியார், பிற மொழிகளில் புலமை அடைந்த அளவுக்கு யப்பானிய மொழியில் பரிச்சயம் அடைய முடியவில்லை. ஆகவே யப்பானிய மொழிபெயர்ப்பாளரு டனேயே அவர் முக்கிய அலுவல்களில் தொழிற்பட வேண்டியிருந்தது. முதலில் தனது உதவியாளர் யாயிரோவின் மொழி பெயர்ப்புகளுடன் பணியாற்றினார். ஆயின் யாயிரோ அதிகம் படித்தவன் அல்ல. சீன மொழியிலும் அவனுக்கு அதிக திறமை இல்லை. வேறு சில கல்விமான்கள் பௌத்த சித்தாந்தங்களை அறியாதவர்களாகக் காணப்பட்டனர். யப்பானிய மொழியை நன்கு அறியாத வர்களால் கத்தோலிக்கத்தின் ஆழ்ந்த, அரிய உண்மைகளை உயரிய விழுமியங் களை யப்பானிய மக்களுக்கு, அவர்களது மொழியில் விளக்கிக் கூறமுடியாது.

## சிகூவிலும் கோகினாவிலும் மேய்ப்புப்பணிகள்

யப்பானில் சத்திய வேதத்தை அறிமுகம் செய்தவர் என்ற பெருமைக்குரி யவர் புனித சவேரியாரே. அவரது துணைவர்கள் பல்வேறு பிரச்சனைகளினூ டாக அப் பணியைத் தொடரவேண்டியிருந்தது. போதியளவு குருக்கள் இல்லாமை, அரசியல் வேறுபாடுகள், பிரதேச தலைவர்களின் ஒத்துழையாமை, நன்கு வேரூன்றிய மதங்களின் தலைவர்கள் அடிக்கடி உருவாக்கிய தலைவலிகள், மனந்

திரும்பிய கிறிஸ்தவ யப்பானியர்களை எதிர்கொண்ட சமூகப்பிரச்சனைகள் என்பவற்றால் கிறிஸ்தவம் மிக மிக மெதுவாகவே முன்னேற முடிந்தது.

1552 - 1556 கால எல்லையில் இரு குருக்கள் மட்டுமே பணியாற்றினர். பின் 1562 வரை மூவர். தொடர்ந்து 1564 வரை நால்வர். 1565 - 1570 வரை ஆறு குருக்கள். இவர்கள் பங்குகளில் தங்கிப் பணியாற்றியதில்லை. கால்நடையாக, ஒரு பங்குக்குச் சென்று சிலநாள் தங்கிப்பின் தூரமாக உள்ள வேறொரு பங்குக்குச் செல்வர்.

காகோசிமோ பகுதி, புனித சவேரியார் வேற்றிடம் சென்றபின் பல வருடங்களாக குருக்களின்றி ஆன்மீகத்தில் நலிந்தது. தலைவர் சிமாசு, இப்போது மத போதகர் பற்றிய தனது மனப்பான்மையை மாற்றிக்கொண்டு, குருக்களை அனுப்புமாறு விண்ணப்பித்தார். சில குருக்கள் அவ்வப்போது வருகை தந்தனரெனினும் அதிகபயன் விளையவில்லை.

யமாகுச்சி நல்ல பயன் தரும் ஒரு பெரிய பங்கு எனினும் உள்நாட்டுப் போரினால் அல்லலுற்றது. 1551களின் பிற்பகுதியில் சவேரியார் புங்கோவில் பணியாற்றிக் கொண்டிருக்கையில், யமாகுச்சியில் பெரும்கலகம் மூண்டது. ஊச்சி யோசிற்றகா, தப்பியோட வழியின்றி தற்கொலை செய்துகொண்டான். அவனது இளைய சகோதரன் ஒட்டோமோ யமாகுச்சியின் பிரபுத்துவ தலைவனாக நியமிக்கப்பட்டான். அவன் ஊச்சி யோசிநாகா என்ற பெயருடன் முடிசூடியதுடன் மேய்ப்புப்பணியாளர்களுக்கு சகல உதவிகளும் வழங்குவதாக வாக்குப் பண்ணினான். அவனது ஆதரவில் தேறொறஸ் அடிகள் ஒரு ஆலயத்தையும் குருமனையையும் அமைத்தார். பலர் சத்தியமறையில் இணைந்தனர். அவர்களுள் கிஜொன் சென்யோ ஆகிய இருவரும் திருமறை அறிவில் வல்லுநராகி மறைக்கல்வி போதிக்கும் பணியில் ஆர்வமுடன் தங்களை அர்ப்பணித்தனர்.

1557இல் ஊச்சி யோசினாகா, அயல் நாட்டரசன் மோரி மொட்டோனரியால் தோற்கடிக்கப்பட்டான். ஆலயம், குருமனை உட்பட நகரின் முக்கிய பகுதிகளனைத்தும் தீக்கிரையாக்கப்பட்டன. யோசினாகாவும் கொலைசெய்யப்பட்டான். தே ரோறஸ் அடிகள் தப்பியோடினார். 1586 வரை இப்பங்கு குருக்களையே காணவில்லை.

500 கிறிஸ்தவர்களைக் கொண்ட கிராடா பங்கு நிலையான பங்குக்குரு கிடையாது அல்லலுற்ற போர்த்துக்கேய கப்பல்கள் நங்கூரமிடும் இத்துறைமுக நகருக்கு இராணுவ வீரரின் (போர்த்துக்கேயர்) ஆன்ம நலன்களைக் கவனிக்க அடிக்கடி ஒரு குரு அனுப்பப்படுவார். அவரே அவ்வப்போது பங்குக் கிறிஸ்தவர்களையும் கவனிப்பார். சில விஷமிகளின் திட்டமிட்ட நடவடிக்கைகளால் கத்தோலிக்கம் அடியோடு நிர்மூலமாக்கப்பட்டது.

## பிரதான பிரச்சனைகள்

மேய்ப்புப்பணி, இப்பகுதிகளில் நல்ல பயனளிக்காமைக்கான பிரதான காரணி ஆட்பெலக்குறைவும் பொருளாதார நலிவுமேயாகும். மேய்ப்புப் பணியில் ஈடுபடுவோர் (பிரதானமாக குருக்கள்) தங்களை முற்றாக அர்ப்பணித்து பணிபுரியவே வருகின்றனர். ஆயின் அவர்களது சிக்கன வாழ்க்கைச் செலவுக்கும் மனந்திரும்பிய ஏழைக்கிறிஸ்தவர்களின் பொருளாதாரத்தை உயர்த்தவும் கோவில்களை கட்டிப் பராமரிக்கவும் பணம் தேவை.

யப்பானில் சத்தியவேதம் அறிமுகப்படுத்தப்பட்டபோது ஏனைய நாடுகளில் போல நன்கு முன்னேறாததற்கு காரணி பொருளாதாரக் குறைவே. யப்பானிய தலத் திருச்சபை ஆரம்பகாலங்களில் தன்காலில் தானே நிற்க முடியாது திண்டாடியது. எனவே போர்த்துக்கல் அரசரும் , பரிசுத்த பாப்ப ரசரும் சில உதவிகளைச் செய்ய முன்வந்தனர். மென்டஸ் பின்ரோ என்ற பிரமுகர் சவேரியாருக்கு, கோயில் ஒன்றை யமாகுச்சியில் கட்டியெழுப்ப 300 குருசேட்ஸ் நாணயங்களை வழங்கினார். வணிகப் பிரபு லூயிஸ் அல்மெய்டா, புங்கோ மேய்ப்புப்பணிக் குழுவுக்கு அடிக்கடி உதவிவழங்கியதுடன், தான் யேசுசபையில் சேர்ந்தபோது தன் சொத்து முழுவதையும் சபைக்கே எழுதி வைத்தார். வேறு போர்த்துக்கேய பிரமுகர்களும் அடிக்கடி உதவியளித்து உற்சாகப்படுத்தினர்.

யேசு சபையினர் யப்பானில் காலடி வைத்த நாளிலிருந்து பிரபுத்துவ வகுப்பினரின் (டெய்மோவஸ், சமுராய்) பேராதரவைப் பெற்றுக் கொண்டிருந் தனர். ஏனைய கீழ்த்தர வகுப்பினரும் பிரபுக்கள் சமூகத்தைப் பின்பற்றத் தொடங்கினர். உயர் வகுப்பினரில் சிலர் யேசுசபையினருக்கு நேரடி ஆதரவு வழங்க ஏனைய பிரபுக்கள் மறைமுகமாகவும் உதவியளித்தனர். இதனால் கத்தோலிக்கம் வளர்ச்சியடைந்தது.

## மறையறிவிப்பு வழிகள்

மேய்ப்புப்பணியினருக்கு கையுதவியாக மறைக்கல்வி நூல்கள் இருக்க வில்லை. எனினும் யப்பானிய மொழியில் தயாரிக்கப்பட்ட மறையுரைத் தொடர் நூல்களை (கையெழுத்துப்பிரதி) உபயோகித்தனர். தினசரி செபங்கள், மன்றாட்டு கள்கூட கையெழுத்துப்பிரதிகளாகவே உபயோகிக்கப்பட்டன. செபங்களை கட்டாயப்படுத்தி மனனம் செய்வித்தனர்.

மறையுரைகள் தினசரி மூன்று வேளைகளில் காலை, மதியம், மாலை போதிக்கப்பட்டன. பொதுவாக சிறுவர்கள் மதிய வகுப்புகளுக்கே அழைக்கப் பட்டனர். பதினைந்து அல்லது இருபது நாட்கள் மறையுரைகள் அளிக்கப் பட்டவர்களுக்கு ஒரு பரீட்சை நடத்தப்படும், திறமைச் சித்திபெற்றோர் திரு முழுக்குப் பெறத் தகுதியுடையோர் ஆவர். ஏனையோர் மீண்டும் சில தினங்கள் பயிற்சி பெறுவர்.

பொதுவாக 50 பேர் தொடக்கம் 250 பேர் அடங்கிய குழுக்களாகவே திருமுழுக்குப் பெறுவர். இத்திருமுழுக்கை சாதாரணமாக குருக்களும் அவர்கள் மேய்ப்புப்பணி காரணமாக வேற்றிடம் சென்றிருந்தால் டொயுகு என்றழைக்கப் படும் பயிற்சி பெற்ற தொண்டர்களும் வழங்குவர். மறைக்கல்விப் பயிற்சியின் முறை வருமாறு...

1. இறைவன் அவரது தகமைகள், அவரது சிருஷ்டிப்பு, ஆன்மா (ஒரு பூரண விவரணம்), யப்பானிய சாதி, இன, வகுப்பு பேதங்களின் தவறான நிலை.
2. வரலாற்று ரீதியாக கிறிஸ்தவ சித்தாந்தங்களின் தகமைகளையும் உண்மை களையும் ஆதாரங்களுடன் அறிவித்தல்.
3. பத்துக்கட்டளைகளின் முழு விளக்கம். திருமுழுக்கு சம்பந்தமான ஆழ்ந்த அறிவு.

இந்த வகை மறைக்கல்வி சம்பந்தமாக மேய்ப்புப்பணிக் குழுவைச் சேர்ந்த

புரோயிஸ் கூறும் விளக்கவுரை: முதலில் நாம், இப்பூவுலகை உருவாக்கிய ஒருவர் உளர்; பூவுலகு ஆதி தொடக்கம் இருந்தது அல்ல இனியும் நிரந்தரமாக இருக்க மாட்டாது; சிலர் சூரியன், சந்திரனை கடவுளர்களாக வணங்குகிறார்கள், அது தவறு; மனித உயிருக்கும் வாழ்வுக்கும் அவை ஒரு துணைக்கருவிகளே என்பதை விளக்குகிறோம். தொடர்ந்து ஆன்மா என்றுமே அழியாத ஒரு பொருள். மரணத்தின் பின் உடல் அழிந்துவிடும், உடலைவிட்டுப் பிரிந்த ஆன்மாவுக்கு என்றுமே அழிவில்லை என்பதையும். பகுத்தறிவுள்ள ஆன்மாவுக்கும் விவேக மிகுந்த ஆன்மாவுக்குமுள்ள வித்தியாசங்களையும் விபரிக்கிறோம். இதன் பின் மக்கள் மனதிலெழும் பல்வேறு சந்தேகங்களை அலசி ஆராய்கிறோம். இடர் பாடுகளைத் தீர்க்கின்றோம். மக்களிடையேயுள்ள பல்வேறு பிரிவினைகளின் (இனம், பிரிவு) மூடக்கொள்கைகளை களைந்தெறிகிறோம். மக்கள் மதம் சம்பந்தமான தெளிவான, யதார்த்தமான அறிவைக்கொண்டிருக்க முயற்சி களைக் கையாளுகின்றோம்.

இவைகளைத் தொடர்ந்து இறைவன் ஒருவரே ஆள்வகையில் மூவர் என்ற தம் திரித்துவ (மூவொரு தேவன்) கொள்கையை விரிவாக விளக்குகிறோம். உலக சிருஷ்டிப்பு, லூசிபரின் வீழ்கை, ஆதாமின் பாவம், கிறிஸ்துவின் அவதாரம், அவரது புனித வாழ்வு, மரணம், உயிர்ப்பு, ஆரோகணம். கிறிஸ்துவின் புனித சிலுவையின் வல்லபம், இறுதித் தீர்வை, நரகத்தின் மிகப்பயங்கர வேதனை மோட்சத்தின் நித்திய பேரின்பம் என்பன பற்றிய அபூர்வமான அறிவரங்குக்கு மக்களை இட்டுச் செல்கிறோம். மக்கள் கத்தோலிக்க அறிவுகளில் பக்குவப் பட்ட நிலையை அடையும் போது அவர்களுக்குத் திருமுழுக்கு அருட்சாத னத்தை விளக்குகிறோம். தொடர்ந்து இறைவன் அருளிய பத்துக்கட்டளை களை அலசி ஆராய்கிறோம். இவற்றின் கொடுமுடியாகத் திருமுழுக்கு அருட் சாதனம் வழங்கப்படுகிறது. திருமுழுக்காட்டிய பின்பு ஏனைய அருட்சாதனங் களுக்கான அறிவுரைகள், தரப்படுகின்றன. (பாவசங்கீர்த்தனம் - 5 அறிவுரைகள், நற்கருணை - 5 அறிவுரைகள்)

## மேய்ப்புப்பணியும் கிறிஸ்தவ வாழ்வும்

முன்னர் கூறியதுபோல பங்குகளில் தங்கி மேய்ப்புப்பணியாற்ற, போதி யளவு குருக்களின்மையால் நற்செய்திப் பணி, வேகமாக முன்னேற முடிய வில்லை. எனவே கிறிஸ்தவர்கள் அடிக்கடி திருப்பலியில் பங்குபெற முடிய வில்லை. ஞாயிற்றுக் கிழமைகளில் குரவர் இல்லாவிடில் மக்கள் கோவிலில் அல்லது தொண்டர் - மறை ஆசிரியர் இல்லத்தில் ஒன்றுகூடி மறையுரை கேட்பர். செபங்கள், திருப்பாடல்களுடன் கூடிய வழிபாட்டிலும் பங்கு கொள்வர். 1566இல் கிராடோ நகரில் ஒரு குரு சென்று பாவசங்கீர்த்தனம் கேட்டுத் திருப்பலி நடத்தி திருவிருந்தளித்தார். அவ்வித ஒரு நிகழ்வு நான்கு வருடங் களுக்குப் பின்னரே நடைபெற்றிருக்கிறது.

அடிக்கடி தம்மால் அருட்சாதனங்களை வழங்குவதற்குச் செல்லமுடியாத பகுதிகளுக்கு தினசரி செபவேண்டுதல்களைச் செய்யுமாறு குருக்கள் அறி வுறுத்தினர். பரலோக மந்திரம், அருள்நிறை மந்திரம், விசுவாச உச்சாடணம், செபமாலை, கிருபைதயாபரமந்திரம், புனிதர் மன்றாட்டு மாலை என்பன தினசரி செபநிரல்கள் ஆகும். யப்பானிய நாடு முழுவதுமே சத்திய மறையில் இணைய வேண்டும் என்ற கருத்துக்காகவும் சிறு செபம் சொல்லப்படும்.

திருச்சபையின் முக்கிய திருநாட்கள் முறைப்படி அனுசரிக்கப்பட்டன. உயிர்த்தெழுகை நாளில் ஆடம்பர பவனியொன்று, கல்வாரியை நோக்கி நடத்தப்பட்டது. கிறிஸ்து, மரியாள் பேரில் யப்பானிய மொழியில் அழகிய கீர்த்தனைகள் இசைக்கப்பட்டன. இயேசுவின் திருப்பாடுகளும் விவிலியக் கதைகளுடன் பக்தியருட்சிக்குரிய விதத்தில் மேடையேற்றப்பட்டன. தவக்காலத்தில் பாவப்பரிகாரமாக கடுந்தவக் கிரியைகள் மேற்கொள்ளப்பட்டன.

1562களில் ஏழைகளுக்காக மருத்துவமனை ஒன்றும், சிறுவர்களுக்கான பாடசாலை ஒன்றும் நிறுவப்பட்டது. இந்தப்பாடசாலையில் தொண்டராசிரியர் கற்பித்தாலும் போர்த்துக்கேய துறவியொருவரே மறைக்கல்வி வகுப்புக்களை நடாத்தினார். ஞாயிறு மாலை வேளைகளில் கிறிஸ்தவர்கள் ஒரு இல்லத்தில் ஒன்று கூடி அந்நாளுக்குரிய நற்செய்தி வாசகங்களை வாசித்து கலந்துரையாடி ஐயந்தீர்ப்பர். டொயூக்கா என்ற தொண்டராசிரியர்களுடன் பக்திச் சபையினரும் கிறிஸ்தவம் நலிந்துபோகாது பாதுகாத்தனர். தாபரிப்பு நிதி சேகரித்தல், நோயாளர் தரிசனை, ஆலய பராமரிப்பு முதலிய துணை அலுவல்களில் கைகொடுத்து உதவினர்.

### கியுசுவில் பெரிய அறுவடை

யப்பானின் மத்திய பகுதி ஆளுநனான நோபுநாகாவுக்கு கியூசு மாவட்டத்தில் எந்தவித அதிகாரமுமில்லை. எனினும் மேய்ப்புப்பணியாளர்கள் மேல் கொண்ட அன்புகாரணமாக தன்னாலான உதவியனைத்தும் வழங்கினான். ஆகவே பெரிய அறுவடைக்கு அத்திவாரமிடப்பட்டது.

1571இல் ஒமுறா சுமிற்றடாவில் 5600க்குமதிகமானோர் திருமுழுக்குப் பெற்றனர். இவர்களில் 1500 பேர் நாகசாகியில் வசிப்பவர்கள். 1575, 76களில் 40,000 யப்பானியர் கொயல்கோ அடிகளால் திருமுழுக்காட்டப்பட்டனர். ஒமுறா பகுதியில் 60,000 பேர் கத்தோலிக்கராயினர். 1579இல் நாகசாகி நகரில் இருந்த மோகி கோட்டை ஒமுறா சுமிற்றடாவால் யேசுசபையாருக்கு ஒரு நிபந்தனையுடன் கையளிக்கப்பட்டது. ஒவ்வொரு வருடமும் 1000 டுக்காற் நாணயங்கள் போர்த்துக்கேய கப்பல்களால் வாடகையாகத் தரப்பட வேண்டும். அப்போது நாகசாகியின் குடிசனத்தொகை 2000-1569இல் அல்மேயிடாவால் தொடக்கப்பட்ட அமாகுசா பங்கு 1579இல் 12,000 கிறிஸ்தவர்களைக் கொண்டிருந்தது.

1570களில் அரிமா யோசிசாடா பகுதியில் 3000 கிறிஸ்தவர்கள் இருந்தனர். 1576இல் இத்தொகை பதினையாயிரம் ஆகியது. யோசிசாடா இறக்க அவனது இடத்தில் நியமிக்கப்பட்ட கருணோபு வேதகலாபனை ஒன்றை நடத்தி 7000க்கும் அதிகமான கிறிஸ்தவர்களைக் கொலை செய்தான். ஆயின் கருணோபு பின் மனம் வருந்தி 1580இல் திருமுழுக்குப் பெற்றபோது, அவனோடு 4,000க்கும் அதிகமானோர் சத்திய மறையில் சேர்ந்தனர்.

1578களில் புங்கோவின் கத்தோலிக்கர் தொகை ஆறாயிரமாயிற்று. 1582 இல் கியூசுவில் 130,000 கத்தோலிக்கர் காணப்பட்டனர். பெருந்தொகையானோர் சத்திய மறையில் சேர்ந்ததால் அவர்களுக்கு அடிக்கடி மறைக்கல்வி போதிக்க, அவர்களது ஆன்மீக நலன்களைக் கவனிக்க போதிய குருக்களோ, மறையாசிரியர்களோ இல்லாததால் திருச்சபைக்குப் பெரிய திண்டாட்டமாயிருந்தது.

## மேய்ப்புப்பணிமுறைகள்.

கியூசுவின் பிரபுக்கள் பலர் திருமறையைத் தழுவியதன் முக்கிய காரணி, யாபத்திரி (வாசனைச் சரக்கு) வர்த்தகத்தைத் தமது உரிமையாக்குவதற்கே. எனினும் அவர்கள் நல்ல கிறிஸ்தவர்களாக இறக்கும்வரை வாழ்ந்தனர். இப் பிரபுக்களின் கீழ் பணியாற்றி (ஏராளமானோர் அடிமைகள்) யவர்களும் கிறிஸ்தவர் களாகினர். தங்கள் எசமானர்களுக்கு அவர்கள் அடிபணியவேண்டுமல்லவா? எதிர்த்தவர்கள் சிலர் பலவித நிர்ப்பந்தங்களுக்கும் உள்ளாகினர். அரிமா கருணோபா 1580இல் திருமுழுக்குப் பெற்றபோதும் இதே முறையைக் கையாண்டு தன் பிரசைகள் அனைவரையும் திருமுழுக்குப் பெறச்செய்தான். தன் பிரசைகள் மனம் மாறாதிருக்க, எல்லா பௌத்த ஆலயங்களையும் நிர்மூலமாக்க உத்தரவிட்டான்.

## மறைக்கல்விப் போதனை

கத்தோலிக்க குருக்களும் நன்கு பயிற்றப்பட்ட மறையாசிரியர்களும் பற்றாக் குறையாக இருந்தமையால், முன்னைய மறையறிவிப்பாளர்களால் அளிக்கப் பட்ட மறைக்கல்விக் கருத்தரங்குகளின் முக்கிய போதனைகளைத் திரட்டி வரிசைப்படுத்தி, அவற்றை புதிய மேய்ப்புப்பணியாளர் மூலம் மக்களுக்களிக்க ஒழுங்குகள் மேற்கொள்ளப்பட்டன. கொயல்கோ அடிகளுக்கு 20,000 பேரை மனந்திருப்பி திருமுழுக்களித்து நல்ல மறையறிவு வழங்க இரண்டு டோயூகு (மறைத்தொண்டர்)கள் மட்டுமே உதவி செய்தனர். கிறிஸ்தவ போதகங்களை விளக்கும் ஞான உபதேச நூல்கள் எதுவுமே இல்லாததும் ஒரு பெரிய குறைபாடு. தங்கள் தலைவர்களின் கட்டளைப்படி கிறீஸ்தவ மறைபற்றிய போதிய விளக்க வுரைகள் இன்றி திருமுழுக்கு பெற்றோரே மிக அதிகம்.

## திருச்சபையின் எதிர்காலம்

நாம் முன்பு கூறியவாறு தங்கள் குழுத்தலைவர்களின் வழிநடத்தலால் அல்லது அவர்களைப் பிரியப்படுத்துவதற்கு கிறிஸ்தவர்களாக மாறியவர்கள் (போதிய மறையறிவு இன்மையால்) தங்கள் குழுத்தலைவர்கள் விசுவாசத்துக்கு அல்லது திருச்சபைக்கு மாறாகச் செயற்படும்போது, தாங்களும் அவர்களைப் பின்பற்ற வேண்டியிருந்தது. மேலும் பெருந்தொகையில் திருமுழுக்குப் பெற்ற தால் திருச்சபை வளர்ச்சியடைகின்றதென்ற அறிக்கை தலைமைப்பீடத்துக்கு கிடைத்த சிறிதுகாலத்துள்ளே, அத்தொகையில் (தலைவர்களின் சுயநலன் காரண மாக) கணிசமான அளவு பிரிந்து விட்டதென்ற செய்திகளும் கிடைத்தன. இவை யனைத்தும் முறையான, அவசரமற்ற மறைக்கல்வி வழங்கப்படாததால் ஏற் பட்ட தீமைகளென வலிஞானோ அடிகள் தமது அறிக்கையில் குறிப்பிடு கின்றார். சிமோ இனத்தவரின் மதமாற்றம் பற்றி அவர் கூறுவது:''எவ்வளவு விரைவாக அவர்கள் சத்திய மறையினுள் இணைந்தார்களோ, அவ்வளவு விரை வாக விசுவாசம், நம்பிக்கையிலிருந்து விலகிக் கொண்டிருக்கிறார்கள். அருட் சாதனங்களை ஒழங்காகப் பெறுவதில்லை. அவர்களது வாழ்க்கை முறை அஞ்ஞானிகளுடையதாகி விட்டது. கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப்பட அருகதை யற்றவர்கள்'' எனவே அவர் தம் அறிக்கையின் இறுதியில் இரு பிரச்சனைகளை எழுப்பியிருக்கிறார்.

1. பூரண கத்தோலிக்க அறிவைப் பெறாதவர்களுக்குத் திருமுழுக்களிப்பதில் பயனுண்டா?

2. பெருந்தொகையான மக்களுக்கு ஒருசில கருத்தரங்குகளை நடத்திவிட்டு, திருமுழுக்கு வழங்குவது எவ்வளவு ஆபத்தானதென உணரப்படுகிறதா?

இந்த வினாக்கள் மேய்ப்புப்பணியாளர்களின் சிந்தனையில் இடம் பிடித்தன. மதமாற்றம் எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவுக்கு திருமுழுக்குப் பெற்றபின் கிறிஸ்தவ வாழ்வுவாழப் பயிற்றுவதும் கண்காணிப்பதும் முக்கிய மானதென உணர்ந்தனர். எனவே மதம்மாறியவர்களின் சிறப்பாக சிறுவர் சிறுமிகள் இளைஞர் யுவதிகளின் நலன் கருதி கல்லூரிகள், குருத்துவப் பயிற்சி நிலையங்கள் ஆரம்பிக்கப்பட்டன. சுதேச குருக்களை உருவாக்குவதும் வலிஞானோ அடிகளது அறிக்கையில் முக்கியமானதொன்று இதனைத் தொடர்ந்து எடுக்கப் பட்ட புதிய திட்டங்களாவன:

1. ஏழு தலைப்புக்களில் ஞான உபதேசம் வகுக்கப்பட்டு ஒன்றன்பின் ஒன்றாக நல்ல விளக்கத்துடனும் தெளிவாகவும் வழங்கப்பட்டது.
2. பௌத்த, சின்ரோ மதங்களின் பொய்ப்பிரசாரம் பற்றியும் தவறான கொள் கைகள் பற்றியும் சுட்டிக்காட்டப்பட்டன.
3. ஒரேயொரு கடவுளே இப்பூமியின் தலைவர்.அவரே ஆன்மாக்களுக்கு இறுதித் தீர்ப்பு (சன்மானம், தண்டனை) வழங்கும் அதிகாரமுடையவர் என்பதும் தெளிவாக அறிவுறுத்தப்பட்டது.
4. ஒழுக்கமின்மையும் அதனால் ஏற்படும் விபரீதங்களும் நன்கு விளக்கப் பட்டன.
5. இரட்சகரின் வருகைபற்றி விபரமாக விளக்கப்பட்டது.
6. இதன்பின் செபங்கள் (விசுவாச மந்திரம், பரமண்டலம், அருள்நிறை, பத்துக் கட்டளைகள், முதலியவை) யப்பானிய மொழியில் விளக்கப்பட்டு நன்கு மனனம் செய்விக்கப்பட்டன.

இந்நடவடிக்கைகளால் மனந்திரும்பிய கிறிஸ்தவர்கள் நல்ல கத்தோலிக்கர் களாக வாழப்பழகிக் கொண்டனர். அருட்சாதனங்களையும் ஒழுங்காகப் பெற்றனர்.

## கோகினாயில் திருச்சபை

நோபுங்காவின் மனமாறுதல் கோகினாயின் கத்தோலிக்க திருச்சபையின் வளர்ச்சிக்கு உறுதுணையாகவிருந்தது. 1565களில் கியோட்டோவிலிருந்து புரோயிஸ் அடிகள் சகாயுக்குச் சென்றபின் அவரிடத்துக்கு வேறெவரும் வர வில்லை. யோசிற் றெருவின் கொலையைத் (1569) தொடர்ந்து இந்நிலமை நீடித்தது. தகாயமாவின் வல்லமையுடைய நண்பனான வாடாகொரிமாசாவின் விருப்புக்கிணங்க கியோட்டோவுக்கு மேய்ப்புப்பணியாளர்கள் செல்ல அனுமதி கிடைத்தது. விலேலா அடிகள் 1560களில் பெற்றுக்கொண்ட திருச்சபைச் சொத்துகள் (இவை பின்னர் பறிமுதல் செய்யப்பட்டிருந்தன) மீண்டும் கையளிக்கப் பட்டன.

கியோட்டோவின் திருச்சபைத் தொகை மிகக் குறைவாயிருப்பினும், கத்தோலிக்கத்தின் சிறப்பையும் கௌரவத்தையும் எடுத்துக்காட்ட, தலை நகரில் ஒரு அழகிய ஆலயத்தை அமைப்பதென, மேய்ப்புப் பணியாளர்கள்

தீர்மானித்தனர். மூன்றுமேல் மாடிகளுடன் (முதல் மாடியில் ஆலயமும் குருக்கள் வதிவிடமும்) ஒரு கட்டடம் ஆரம்பிக்கப்பட்டது. பங்குகளிலிருந்து தாராளமாக அன்பளிப்புகள் செய்யப்பட்டன. ஆலயம் ஆரோபண மாதாவுக்கு அர்ப்பணிக்கப்பட்டது. (1577 ஆகஸ்ட் 15) இவ்வாலயம் நாளாபக்கங்களிலிருந்தும் வெகு தொலைவிலிருந்தும் கிறிஸ்தவர் களையும் பிறசமயத்தவரையும் அடிக்கடி வரச்செய்தது. கத்தோலிக்கரல்லாதவர்கள் தொழுகைக்காக வரும்போது, கிறிஸ்தவத்தை அவர்களுக்கு விபரமாக விளக்க, எல்லா ஒழுங்குகளும் செய்யப்பட்டன.

புரோயிஸ் அடிகள் கியோட்டோவுக்குச் சென்றபின் (1569) சாகாய் பிரதேச மக்கள் பலவருடங்களுக்கு ஒரு கத்தோலிக்கக் குரு கிடையாது அவதிப்பட்டனர். சமுராய் சமூகத்தின் மிகப்பெரிய பங்கு ராகற்சுகி. 1574இல் முதல் மனந்திருப்புகை இடம் பெற்றது. 1579இல் அங்கு 8000 கத்தோலிக்கர் இருப்பதாக கணக்கிடப்பட்டது. டாரியோ தகாயாமா ஒரு அழகான ஆலயத்தையும் குருமனையையும் அமைத்துக் கொடுத்தான். ஆலயத்தின் முன்றலில் அழகியதோர் நந்தவனமும் அமைக்கப்பட்டது. தோட்டத்தின் ஒரு பக்கத்தில் ஒரு பெரிய சிலுவையும் அதன் முன்பாக அழகிய மீன் தொட்டியும் காட்சியளித்தன. இவற்றின் காரணமாக கிறிஸ்தவர் தொகை அதிகரித்தது.

## லிமோரி மலையடியில்

லிமோரி மலையடியில் சங்காசிமா பங்குபற்றி நோக்குவோம். சான்சியோ என்ற தலைவனும், அவனது மகன் மான்சியோவும் திருமுழுக்குப் பெற, அவர்களது குடிமக்கள் அனைவரும் தம் தலைவர்களைப் பின்பற்றினர். ஏறத்தாழ 4000 க்குமதிகமாக கிறிஸ்தவர்களைக் கொண்ட இப்பங்கின் ஆன்மீகத் தேவை கவனிக்க, அழகியதோர் ஆலயம் அமைக்கப்பட்டது. திருச்சபையின் திருநாட்களும் சிறப்பாக நத்தார், உயிர்த்தெழுகைத் திருநாட்களும் மிகநல்ல முறையில் ஆடம்பரமாகக் கொண்டாடப்பட்டன. திருநாட்பலியின் பின் திருச்சொரூபம் பவனியாக எடுத்துச் செல்லப்பட்டது. இவைகளைத் தொடர்ந்து பிரதேச தலைவன் சான்சோ, கிறிஸ்தவர்கள் அனைவரையும் இரவு விருந்துக்கு அழைத்தான். உத்தானத்திருநாளின் பின் வாவியின் பக்கமாக பெரியதோர் மீன்விருந்து நடைபெறும். இவ்விதமே கிறிஸ்தவம் நன்கு செழித்து வளர்ந்த இத்தீவு ஒரு பிறசமய தலைவனால் கைப்பற்றப்பட்டதைத் தொடர்ந்து, கிறிஸ்தவத்துக்குச் சாவுமணியடிக்கப்பட்டது.

ஏனைய சமுராய் தீவுகளிலும் கிறிஸ்தவத்துக்கு நல்ல வரவேற்பு இருந்தது. ரம்பா பிரதேச தலைவன் 1570களில் தனது பிரசைகள் வேலையாட்களுடன் திருமுழுக்குப் பெற்றான். எனினும் நெயிட்டோ என்பவனின் படையெடுப்பால் அனைத்தும் நிர்மூலமாக்கப்பட்டது. 1581இல் எடுக்கப்பட்ட கணக்கெடுப்பின்படி கோகினாயில் 20,000 கத்தோலிக்கர் இருந்தனர்.

## அருட்பணி வலிஞானோவின் அரும்பணிகள் (1579 - 1582)

1539களில் இத்தாலிதேச சியட்டி நகரில் பிறந்தவர். அலெசாந்திரோ வலி ஞானோ அடிகள் யேசுசபை சிரேஷ்டர். இவர் மேர்குரியன் அடிகளால் 'பெருந்தரி சகர்' ஆக கீழை நாடுகளுக்கு அனுப்பப்பட்டார். இந்தியா, மலாக்கா, மக்காவோ பகுதிகளை தரிசித்தபின் 1579 யூலை பதினைந்தில் யப்பானிய

தீவுகளிலொன்றான குசினோற்சுவுக்கு வந்து சேர்ந்தார். அவரை எதிர்நோக்கிய பிரச்சனைகள் பல. பிரதானமானது, யப்பானிய மேய்ப்புப்பணியின் நடைமுறைகளை முற்றாகவே புனரமைப்புச் செய்வது.

### அ. மேய்ப்புப்பணி அறிக்கைகளில் குளறுபடி

முகாமையாளர் கப்ரால் அடிகளின் நிர்வாகத்தில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் காணப்படினும் கிசுசுபிரதேசத்தின் கிழக்குப் பகுதிக்குச் சென்ற வலி ஞானோ, ஏமாற்றமடைய நேரிட்டது. அவர் எதிர்பார்த்ததற்கு மாறானவற்றையே, அங்கு நேரில் கண்டார். அறிக்கைகளில் பலவித குளறுபடிகளை நேரில் அவதானிக்க முடிந்தது. மேய்ப்புப்பணியாளர்களின் அறிக்கையில் முழு நாடும் மனந் திருப்பப்பட்டதெனக் காணப்பட்டது. உண்மை நிலை பிரதேச தலைவனும் அவனது அமைச்சர்கள், பணியாளரின் குடும்பங்களுமே திருமுழுக்கைப் பெற்றிருந்தனர். ஐரோப்பிய கனவான்களை (பெருந்தொகைகளை உபகரித்தோரை) திருப்திப்படுத்த மேய்ப்புப்பணி மூலவர்கள், இவ்விதம் கூடுதலாக புகழ்ந்திருக்கலாம். உண்மையாகவே ஒவ்வொரு பிரதேசத்தினதும் முழு அங்கத்தவரும் மனந்திருப்பப்படவில்லை என்றும், பெருந்தொகையிலான திருமுழுக்குகள், முழு விசுவாசத்துடனும் அடிப்படையான ஆழமான மறையறிவுடன் செய்யப்படவில்லையென்றும் எனவே திருமுழுக்கின் பின் திட்டமிட்ட மறைக்கல்வி புகட்டப்படவேண்டும் என்றும் வலிஞானோ அடிகளார் சிபார்சு செய்தார். இவரது அறிக்கை திருச்சபையின் பெருந்தலைவர்களை (உரோமையிலும் கோவாவிலும்) ஆழ்ந்து சிந்திக்க வைத்தது. சாதாரண பங்குக் குரவர்கள், குருமுதல்வர்களுக்கும், குருமுதல்வர்கள் ஆயர்களுக்கும், ஆயர்கள் பிரதேச தலைமைப்பீடத்துக்கும் அனுப்பும் மேய்ப்புப் பணி பற்றிய அறிக்கைகளில் உண்மையான தரவுகள் காட்டப்பட வேண்டும். எதிர்கொள்ளப்பட்ட பிரச்சனைகளும் எடுக்கப்பட்ட தீர்வுகளும் நேர்மையாகவும் தவறின்றியும் தரப்படல் வேண்டுமென்பதும் வலிஞானோ அடிகள் வற்புறுத்தினார்.

### ஆ. யப்பானிய பண்புகள், பழக்கவழக்கங்கள்

கிசுசுவின் கீழ்ப்பகுதி, புங்கோ, கொயோட்டோ முதலியபிரதேசங்களின் குருக்கள், யப்பானிய துறவிகள், டொயுகுக்கள் (யப்பானிய தொண்டர்கள்), மனந் திரும்பிய கிறிஸ்தவர்கள் (முதியோர், வாலிபர், இளைஞர்) முதலிய பலவகுப்பினரையும் சந்தித்து பலவித வினாக்களால் அவர்களது உள்ளக் கிடக்கைகளை நன்கு ஆராய்ந்த பின்னர் வலிஞானோ அடிகள் மேய்ப்புப் பணிமுறைகளில் பல தவறுகள் நடந்திருப்பதை அறிந்தார். அவற்றுள் முக்கியமானது யப்பானிய பண்பாடு, கலை, கலாசாரம், பழக்க வழக்கங்கள் மறைபரப்புப் பணியில் உதாசீனப்படுத்தப்பட்டிருப்பது, ஒரு முன்னைநாள் போர்த்துக்கேய தளபதியே. பின்னர் குருத்துவ நிலை பெற்று முகாமையாளராகப் பணியாற்றும் அருள்பணி கப்ரால் அடிகளார் இவரே யப்பானிய மேய்ப்புப்பணியின் முக்கியஸ்தர் போர்த்துக்கேய (மேலை நாட்டு) நாகரிகத்தில் ஊறிப்போன இவருக்கு யப்பானிய கலை, பண்பாடுகள் அறவே பிடிக்காது. யப்பானிய துறவிகளையும் தொண்டர்களையும் மேலைத்தேச நாகரிகம், பழக்க வழக்கங்களை கைக்கொள்ளுமாறு இவர் வற்புறுத்தினார். இதனால் யப்பானிய மக்களுக்கு எத்தகைய மகத்தான தாக்கம் ஏற்படலா மென்றும், அது சத்திய மறை பரப்புப் பணிக்கு எவ்வித இடையூறுகளை விளைவிக்கும் என்றும் இவர் உணரவில்லை.

ஆயின் அருட்பணி வலிஞானோ அடிகள் யப்பானிய தொண்டர்கள், கிறிஸ்தவர்களின் இப்பெருந்தாக்கத்தை நன்குணர்ந்தார். "யப்பானியர்கள் தங்கள் சொந்த முறையில், தங்கள் தேசிய பண்பாடுகளுடன் கிறிஸ்துவை வழிபடவே விரும்புகிறார்கள். மேய்ப்புப்பணியாளர்கள் (மறைபரப்பு) இரண்டு வருட அவகாசத்தில் யப்பானிய மொழியை நன்கு கற்று, தங்கள் சுதேச பழக்க வழக்கங் களுக்கிணங்க கிறிஸ்துவைப் போதிக்க வேண்டும். இல்லையேல் யப்பானியரின் அவமதிப்புக்கு ஆளாகி வெறுத்தொதுக்கப்படுவர்'' என அறிக்கையில் குறிப்பிட்டார்.

எவ்வளவுக்கு யப்பானிய தேசிய முறைகளை, பழக்கவழக்கங்களை (பேச்சு, எழுத்துக்களில் மட்டுமல்ல, உணவு அருந்துதல் போன்ற சகல துறைகளிலும் கையாளப்படுகிறதோ அவ்வளவுக்கு மறைபரப்புப்பணி யப்பானில் வெற்றி யீட்டும் என்பது வலிஞானோ அடிகளின் ஆணித்தரமான கருத்து. யப்பானிய முறையில் கோவில்கள் - குருமனைகள் அமைத்தல், பெண்களை வரவேற்றல், விருந்தினர்களை உபசரித்தல், வரவேற்பு, பிரியாவிடை அனைத்திலும் யப்பானிய முறைகளே அமுலாக்கப்பட வேண்டும் என அவர் வலியுறுத்துகிறார்.

யப்பானில் வேதபோதகம் வெற்றிகரமாக நடைபெற்றுக் கொண்டிருந் தாலும் கத்தோலிக்கத் திருச்சபை முறையிலான ஆயர் பதவி இன்னும் நியமிக்கப்படவில்லை. வேதபோதகர் அனைவரும் யேசுசபையினரே. அவர்கள் தங்களது பதவி அணிகளுக்கிணங்க ஆறு பிரிவினராவர். துணை மாகாணாதிபதி, மூன்று மாவட்ட முகாமையாளர் (சிமோ, புங்கோ, கியோட்டோ), குருக்கள், துறவிகள், குருகுல பயிற்சியாளர், டோயுகுக்கள் இவர்கள் அனைவரும் யப்பானிய பண்பாடுகளுக்கிணங்க புனித வாழ்க்கை முறை, கென்-சு கலாசாரங்களைக் கடைப்பிடித்தல் அவசியம். இம்முறைகளில் புதியவற்றையோ, மேலைத்தேய முறைகளையோ நாகரிகமெனக் கருதிப் புகுத்துதல் நாசகார பிரச்சனைகளையே தோற்றுவிக்கும் என அவர் மேலும் சுட்டிக்காட்டினார்.

### இ. யப்பானிய மொழியில் தேர்ச்சி

வலிஞானோ அடிகள் தம் அறிக்கையில் கவலையுடன் குறிப்பிடும் அம்சம் மேய்ப்புப்பணியாளர்களுக்கு யப்பானிய மொழியில் நல்ல புலமை இல்லை என்பதே. அவர்களில் பலரால் பகிரங்கமாக யப்பானிய மொழியில் பிரசங்கிக்க இயலாது. யப்பானிய மொழியில் அதிகளவு பரிச்சயமில்லாத கப்ரால் அடிகள், வேத போதகத்துக்கு மொழியில் அதிக புலமை, அவசியமற்றது என அபிப் பிராயப்படுகிறார். அது தவறு. யப்பானுக்கு வந்ததுமே வலிஞானோ அடிகள் மேய்ப்புப் பணியில் ஈடுபடுவோர் அனைவரும் ஒன்றரை வருடங்களாவது யப்பானிய மொழியை முறையாகக் கற்கவேண்டும் என வற்புறுத்தினார்.

நல்ல தரத்தில் ஒரு இலக்கண நூல் தயாரிக்கப்பட்டதையும் ஒரு கல்வி நிலையம் (மொழிப் பயிற்சிக்காக) இயங்குவதையும் அவர் பாராட்டினார். 1582இல் முதலாவது அகராதியும் செய்தி ஊடகக்கலைக் களஞ்சியமும் வெளியிடப்பட்டன. 1595இல் வலிஞானோ எழுதிய கடிதத்தில் மொழிப் பிரச்சனை குறைந்துவிட்டது என்றும் மேய்ப்புப்பணியாளர்கள் ஒரு வருடத் துக்குள் பாவசங்கீர்த்தனம் கேட்கு மளவுக்கு மொழித்தேர்ச்சி பெறுகின்றார்கள் எனவும் குறிப்பிடுகிறார்.

## ச. யப்பானிய குருக்களை உருவாக்கல்

வளர்ந்து வரும் யப்பானிய திருச்சபையை எதிர்நோக்கிய அடுத்த பிரச்சனை மாவட்ட தேசிய சபைக்குருக்களை உருவாக்குதல். கப்ரால் அடிகள் யப்பானிய இளைஞர்கள் தொண்டர்களாக அல்லது துணைத்தியாக்கோன் தரத்தை அடைந்ததும் அவர்களுக்கு, அத்தரத்துக்கு மேற்பட்ட உயர்கல்வி வழங்குவதற்கு விரும்பவில்லை. யப்பானிய இளைஞர்கள் குருத்துவம் பெறத் தகுதியற்றவர்கள் என அவர் கருதினார். ஆயின் தேசிய குருக்களின் அத்தியா வசிய தேவையை கருத்தில் கொண்ட வலிஞானோ அடிகள் ஒரு மாவட்ட தேசிய (யப்பானிய) குருக்கள் பயிற்சிக் கல்லூரியை உருவாக்கத் திட்டமிட்டார்.

1580களில் அவரது திட்டம் நல்ல ஆதரவைப் பெற்றது. மூன்று பயிற்சிக் கல்லூரிகள் (ஒவ்வொரு மாவட்டத்துக்கும் ஒவ்வொன்று) உருவாக்கப்பட்டன. பெற்றோரின் அனுமதியுடன் புதல்வர்கள் பன்னிரு வயதில் அனுமதிக்கப் பட்டனர். குருவாக அனுமதிபெற நல்ல குடும்பப் பின்னணியும் சிறப்பாக சமுராய் குடும்பத்தினராயிருத்தலும் கவனிக்கப்படும். இவர்கள் தினசரி திருப் பலியில் பங்குகொள்ள வேண்டும். ஒரு மாதத்துக்கொருதடவை பாவசங்கீர்த் தனம் பெறுதல். வருடத்துக்கு நான்கு முறையாவது நற்கருணை பெறுதல். ஒவ்வோர் இரவும் ஆன்மசோதனை செய்தல். தொடர்ந்து மரியாளின் மன்றாட்டு மாலை செபித்தல் என்பன இவர்களுக்கு விதிக்கப்பட்ட கட்டளைகள்.

இக்குருமாணவர்களுக்கான பாடத்திட்டம் மிக விரிவாக ஆராயப்பட்டது. மிகக் கடுமையான ஆன்மீக வாழ்க்கை முறை, ஒழுக்க போதனை, திட்டமிடல் பயிற்சி, யப்பானிய லத்தீனிய மொழிகளில் இலக்கண, இலக்கியத் தேர்ச்சி, வாக்கிய அமைவுகள், சமூகத் தொடர்பு முறைகள், அரசியல் விஞ்ஞானவியல், சங்கீதம், வாத்தியக் கருவிகளைப் பயன்படுத்தும் பயிற்சி என்றெல்லாம் நவ குருக்களுக்கு நல்ல பயிற்சி வழங்கப்பட்டது. இதற்கான பாடபுத்தகங்களை உருவாக்க வல்லுநர் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. இதனைத் தொடர்ந்து ஒரு அச்சகத்துக்கு தேவையான இயந்திரங்கள், எழுத்துப் பொறிகள் அனைத்தும் கொண்ட பூரணத்துவமான அச்சகமொன்று நிறுவப்பட்டது.

மூன்று குருகுலக் கல்லூரிகள் நிறுவுவதெனத் தீர்மானித்தாலும் இரு கல்லூரிகளே நிறுவப்பட்டன. 1580 ஒக்டோபரில் கிசுசுமாவட்டத்தில் அரிமா என்னுமிடத்தில் கருணோபுவால் அன்பளிக்கப்பட்ட பழைய புத்தகோவில் கட்டடங்களில் ஒன்றும், 1580 மே 22இல் கியோட்டோ மாவட்டத்தில் அசுசி என்னுமிடத்தில் நோபுங்கா அன்பளிப்புச் செய்த இரு இல்லங்களில் ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டன. கீழ் இரண்டு அறைகளில் சிறு மாநாட்டு மண்டபங்களும் தேநீர்ச்சாலையும், குருக்கள், துறவிகள் வதியும் அறைகளும், மூன்றாவது மாடியில் வகுப்பறைகளும் அமைந்திருந்தன. வருட இறுதியில் 25 மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

## உ. ஐரோப்பாவுக்கு முதல் தூது

யப்பான் தேசத்திலிருந்து புறப்படுவதற்கு முன் வலிஞானோ அடிகள், யப்பானிய பிரபுத்துவ குடும்பங்களிலிருந்து பாப்பரசரிடமும், ஸ்பெயின் நாட்டு மன்னரிடமும், சில இளைஞர்களைக் கூட்டிச்செல்லத் திட்டமிட்டார். எனினும் இவர்களது பயணத்துக்கான பணத்தொகையைத் திரட்டுவது

கஷ்டமாயிருந்தது. எனினும் இத்தாலி முதலிய நாடுகளிலுள்ள பணம் படைத்தவர்கள், பிரபுக்கள், கர்தினால் ஆண்டகைகள் மற்றும் போர்த்துக்காலிலுள்ள தருமசபைக்கழகம் என்பனவற்றிடமிருந்து உதவிகளை எதிர்பார்த்தார் வலிஞானோ.

மேலும் இந்த இளைஞர்களுக்கு ஐரோப்பிய கலாசாரத்தையும், திருச்சபையின் தலைமைப்பீடம்' அமைந்துள்ளது உரோமை நகரின் பல்வேறு காட்சிகளையும் காண்பிப்பது வலிஞானோ அடிகளின் திட்டமாகும்.

தெரியப்பட்ட நான்கு இளைஞரும் கிசுசுவைச் சேர்ந்தவர்கள். மஞ்சியோ இற்றோ, முன்னாள் ஜமீன்தார் கையுகாவின் மைத்துனன், மைக்கல் சிஜிவா, அரிமா கருணோபுவின் மைத்துனன், மாட்டின் காறாவும், யூலியன் நாகுறாவும் மேற்கூறப்பட்ட இரு இளைஞர்களினதும் நண்பர்கள். யேசுசபையினர் நடாத்தும் உயர் கல்லூரி மாணவர்களான இவர்கள் பதினைந்து வயதினர். வலிஞானோ அடிகள் இந்நால்வருடனும் இவர்களைக் கூட்டிச் செல்லும் ஆசிரியர் மெஸ்குயிற்றா அடிகளுடனும் நாகாசாகியை விட்டுப்புறப்பட்டு (1582 பெப்ரவரி 20) ஒக்ரோபர் 1583இல் கோவாபோய்ச் சேர்ந்தார். இந்தியாவின் யேசுசபை பெருந்தலைவராக அவர் நியமிக்கப்பட்டதால் மேற்கொண்டு பயணம் செய்ய முடியவில்லை. மெஸ் குயிற்றா அடிகள் தனியாக பையன்களுடன் 1584 ஆகஸ்டில் லிஸ்பன் போய்ச் சேர்ந்தார். மட்ரிட் நகரில் 2வது பிலிப் மன்னர் இச்சிறுவர்களை அன்புடன் வரவேற்று உபசரித்தார். பின்னர் இளைஞர் குழு இத்தாலியின் கலாசார நாடுகளான பைசா, புளோரன்ஸ், சியன்னா வழியாக உரோமை நகருக்கு 1585 மார்ச் 20இல் போய்ச் சேர்ந்தனர்.

பரிசுத்த பிதா 13ஆம் கிரகோரி பாப்பரசர் இந்த யப்பானிய இளைஞர் குழுவை மகிழ்ச்சியோடு வரவேற்றார். எனினும் பாப்பரசர் சிலநோய்களால் வருந்திக்கொண்டிருந்தமையால் சில தினங்களின் பின் மரிக்க, 5ஆவது சிக்ஸ்துஸ் பாப்பரசராக முடிசூடினார். இந்த யப்பானிய இளைஞர் குழு இரு பாப்பரசர்களை ஒரு மாதகாலத்துள் கண்டதும், ஒரு பாப்புவின் மரணச் சடங்குகளுக்கும் இன்னொரு பாப்புவின் முடிசூடும் வைபவங்களுக்கும் சமூகமளித்ததும் அவர்கள் வாழ்வில் மறக்க முடியாத நினைவுகள். புதிய பாப்புவிடம் இந்த இளைஞர் குழு யப்பானை ஒரு மேற்றிராசனமாக (மறைமாவட்டமாக) நியமிக்குமாறு வேண்டுகோள் விடுத்தது பாப்பரசர் இவ்விளைஞர்களுக்கு 'பொன் ஈட்டி வீரர்கள்' என்ற கௌரவப் பட்டத்தை வழங்கினார். உரோமை நகரின் செனட்டர்கள் இவர்களை தலைநகருக்கு அழைத்து விருந்துபசாரமளித்து 'ரேமைநகர பத்திரிசியர்' என்ற கௌரவப் பட்டமும் வழங்கிக் கௌரவித்தனர். நித்திய நகராம் ரோமையிலிருந்து இந்த இளைஞர்கள், புறப்பட்டு (1585 யூன் 3) பிரசித்தி பெற்ற பொலக்னோ, வெனிஸ் நகர்களுக்குச் சென்றனர். வெனிஸ் நகரில் பிரபல்ய ஓவியர் ரின்ரொறேற்றோ இவ்விளைஞர்களைப் படமாகவரைந்தார். பின்னர் மிலான் நகரைப் பார்வையிட்டு, 1586 ஏப்ரல் 13இல் லிஸ்பன் நகரிலிருந்து புறப்பட்டனர். வலிஞானோ அடிகள், கோவாவில் இவர்களுடன் சேர்ந்து யப்பானிய பயணத்தைத் தொடங்கினார். நாகாசாகிக்கு 1590இல் வந்து சேர்ந்தனர்.

இக்குழுவினருக்கு அவர்களது பங்கின் அபிவிருத்திக்காக பெருந்தொகைப் பணம், செல்வந்தர்களால் வழங்கப்பட்டது இங்கு குறிப்பிடத்தக்கது. அவர்கள் கேட்டபடி பரிசுத்த பாப்பரசர் யப்பானில் ஒரு மறைமாவட்டத்தை

அதிகாரபூர்வமாக அறிவித்தார். *1588*இல் புனாய் மறைமாவட்டம் நிறுவப் பட்டு செபஸ்ரியன் டி மொராயிஸ் அடிகள், யப்பானின் முதல் சுதேச ஆயராக பதவியேற்றார்.

## அரசியல் நிலை

ஒஸ்வாரி என்ற சிறு கிராமத்தில் பிறந்தவர் ரொயோரொமி கைட்யோசி *(1536 - 1598)*. இவர் ஒரு விறகுவெட்டியின் புதல்வர். தனது பதினைந்தாவது வயதில் நோபுங்காவின் பணியில் அமர்ந்தார். அவரது பிரத்தியேக துணைவன் ஆனார். படிப்படியாக பதவி உயர்ந்து அவரது மிகச்சிறந்த தளபதியாக விளங்கி னார். தனது அவலட்சண உருவம் காரணமாக சேரு (குரங்கு) என்ற பட்டப் பெயர் பெற்றார். ஒரு சிறந்த இராணுவமதிநுட்பசாலி.

### அ. தேசத்தின் ஒன்றிணைவு

உள்நாட்டுப் போர்களைத் தொடர்ந்து, நோபுனாகாவும், மூத்த புதல்வனும் இறக்க, கியோசி தனது எதிரிகளை வென்று சர்வாதிகாரி ஆனான். கியூசுவின் தலைவர்கள் அவனுடன் போரிட்டு சரணாகதி அடைய (1587) ஒப்பாரும் மிக்காருமில்லாதவனானான். 1590களில் உள்நாட்டுப் போர்கள் முடிவுபெற்று, கைடெயோசி தலைமையில் ஒரு மத்திய அரசாங்கத்தின் கீழ் யப்பானிய சிறு தீவுகள் ஒன்றிணைந்தன. தனது மூதாதைவழி காரணமாக சோகன் என்ற உயர்கௌரவம் கைடெயோசிக்குத் தரப்படவில்லை. 1584இல் பதவி நீக்கம் செய்யப்பட்ட அசிககாவை (சோகன்) தன்னை அவரது வாரி சாகப் பிரகடனம் செய்து 'சோகன்' என்ற கௌரவத்தை தனக்களிக்குமாறு வேண்டுகோள் விடுத்தான். எனினும் 1585களில் யப்பானிய சக்கரவர்த்தி ஒகிமாச்சி கம்பாகு என்றழைக்கப்படும் இராசப்பிரதிநிதி பதவியை வழங்கி னார். ஒரு பழைய கொங்காஞ்சி ஆலயத்துக்கு அண்மையில் (ஒசாகாவில்) அழகியதோர் அரசமாளிகை அமைக்கப்பட்டு அங்கு தலைமை அலுவலகங்கள் செயற்பட்டன.

### ஆ. கோரிய யுத்தம் *(1592 - 1598)*

கைடெயோசி பேரவாக்கொண்டவன். தனது நாட்டில் அமைதியை நிலை நாட்டியபின் தனது அரசாட்சியை கொரியா, சீனாவுக்கும் விஸ்தரிக்கத் திட்டமிட்டான். 1592இல் 200,000 வீரர் கொண்ட ஒரு படையணி, புசானுக்கு அருகே தரையிறங்கியது. பிரதம தளபதிகளில் ஒருவர் கிறிஸ்தவர். ஜெனரல் கொனிசியு கினாகா படையணிகள் வடக்கே முற்றுகையிட்டு தலைநகர் சேயோலை கைப்பற்றின. சீனா, கொரியாவுக்கு உதவியது. இத்தருணத்தில் சில உடன்படிக்கைகளும் அத்துமீறல்களும் அடிக்கடி இடம்பெற்றன. 4 வருட கசப்பான அனுபவங்களைத் தொடர்ந்து 1598இல் கைடெயோசி மரிக்க இப்போர்களும் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டன.

## 1582 - 1587 ஆம் ஆண்டுவரை கிறிஸ்தவம்

### அ. மத்திய பகுதியில்

சில வருடங்கள் கைடெயோசி, திருச்சபை சம்பந்தமாக நோபுங்கா கடைப்பிடித்த கொள்கையையே தொடர்ந்தான். ஏனைய பெருந்தலைவர்

களுக்கு மாறாக மேய்ப்புப்பணியாளர்களுக்கு ஒத்துழைப்பு வழங்கினான். எனினும் கிறிஸ்தவ கொள்கைகள், சித்தாந்தங்களை அறிவதில் ஆர்வம் காட்டப் படவில்லை. ஒருமுறை அவன் ஜெஸ்பீட் அடிகளுக்குக் கூறியது "உங்கள் மதக் கோட்பாடுகளில் ஒரு அம்சத்தை நான் மிகமிக வெறுக்கிறேன். அதுதான் ஒரு மனைவிக்குமேல் வைத்துக்கொள்ளக் கூடாதென்ற கடுமையான கட்டுப்பாடு".

கைடெயோசியின் கீழ் பல உத்தம கத்தோலிக்கர், உயர் பதவிகளில் பணியாற்றினர். இவர்கள் கல்வியறிவு படைத்தவர்களாக - மதிநுட்பம் நிறைந் தவர்களாக - இராணுவ பணிகளில் சிறந்தவர்களாக பிரமாணிக்கத்துடன் சேவைசெய்தமையால் கைடெயோசி அவர்கள் சமயத்துக்கு பெருமதிப்பளித்து வந்தான். 1583இல் ஓர்கன்ரினோ அடிகள் கைடெயோசியுடன் நீண்டநேரம் உரையாடி, ஒசாகாவின் புதிய அரண்மனையின் பக்கத்தில், கோவில் கட்டவும் குருமனைக்குமான காணிகளைப் பெற்றுக்கொண்டார். தகயாமா தனது சொந்தச் செலவிலும் மேற்பார்வையிலும் குருமனையை அமைத்ததுடன் கோவில் கட்டவும் உதவிகள் நல்கினான். 1583இல் கிறிஸ்மஸ்தினத்தில் புதிய ஆலயம் திறக்கப்பட்டது.

ராகற்சுகி ஒரு சிறந்த மேய்ப்புப்பணித்தளமாக விளங்கியது. 1582 - 1585களில் ஒரு குரு அங்கு நிரந்தரமாகத் தங்கி ஆன்மீக அலுவல்களைக் கவனித் தார். ஒரு குரு மடமும் நிறுவப்பட்டது. 1585 களில் அங்கு 20,000 கத்தோலிக்கர் இருந்ததாக கணக்கறிக்கைகள் தெரிவிக்கின்றன. இவ்வருடத்தில் குருக்கள் பயிற்சிக்கல்லூரியும் ஒசாகாவுக்கு மாற்றப்பட்டது. கைடெயோசி தனது தம்பியுடனும் புதவன் நோபுவுடனும் புதிய பயிற்சிக் கல்லூரிக்கு வருகை தந்தான். கஸ்பேடஸ் அடிகளுடன் நீண்ட நேரம் சிநேகபூர்வமாக உரையாடி னான். இவ்வுரையாடலில் முகாமைக் குருவும் லொறங்கோ துறவியும் கலந்து கொண்டனர்.

1586இல் துணை மாகாணாதிபதி கொயல்கோ அடிகள் உத்தியோகபூர்வ விஜயம் மேற்கொண்டபோது, கைடெயோசி ஒசாகா மாளிகையில் அவருக்கும் குழுவினருக்கும் வரவேற்பு விருந்தளித்துக் கௌரவித்தான். அனைவரையும் அந்த அழகான மாளிகையின் பல பகுதிகளுக்கும் தானே கூட்டிச்சென்று காட்டி னான். கைடெயோசியின் தாராள மனதும், தகாயாமாவின் உத்வேக பணியும் மத்திய யப்பானில் ஒசாகா பங்கு செழித்து வளர உதவியது. 1585இல் கஸ்பெட்ஸ் அடிகள் 200 பேருக்குத் திருமுழுக்களித்தார். இவர்களுள் 65 பேர் பிரபுக்கள் குடும்பங்களைச் சேர்ந்தவர்.

கியோட்டோவில் மேய்ப்புப்பணி வளர்ச்சிக்கு பல இடையூறுகள் தோன்றின. எனினும் ராகற்சுகியிலிருந்து வந்த சில டொயுகுகளின் உதவியி னால் பலரை மனந்திருப்ப முடிந்தது. கொனிசி யுகிநாகா சாகாயின் முதற் கோவிலை அமைத்தார். பக்கத்திலிருந்த சோடோசிமா தீவிலும் இன்னொரு கோவிலைக் கட்டினார். அங்கு மிகக்குறுகிய காலத்துள் 1400 பேர் திரு முழுக்குப் பெற்றனர். மேலும் கொனிசியின் நிர்வாகத்திலிருந்த சில பிரதேசங் களிலும் பலர் மனந்திருப்பப்பட்டனர்.

## ஆ. கியுசு திருச்சபையின் சோதனைக்காலம்

யப்பானிய நாட்டின் மத்திய பகுதியில் மறைபரப்புப் பணியில் நல்ல

அறுவடை செய்யப்படுகையில், சிசுசு உள்நாட்டுப் போர்களால் அல்லலுற்றது. சற்சுமாவின் அதிபதியான சிமாசு யோசிகிசா, இந்நாடுகளைக் கைப்பற்றத் தொடங்கினான். நாகாசிகாயையும் அடிமைப்படுத்தியபின் புங்கோ, புனாயையும் தன் ஆளுகைக்குட்படுத்தினான். இந்நிலையில் மறைபரப்பாளரும் தம் பணியைத் தீவிரித்தனர். 1585இல் 12,000 பேர் திருமுழுக்குப் பெற்றனர். 1586இல் 3000 அதிகமானவர்களுக்குத் திருமுழுக்குகள் அளிக்கப்பட்டன. சிமாசுவின் படையெடுப்புகள் காரணமாக யேசுசபையார் தங்கள் குரு பயிற்சியாளர், மாணவர்களை சிமொனோசேகி, யமாகுச்சி என்ற இடங்களிலுள்ள இல்லங்களுக்குக் கொண்டு சென்று பாதுகாத்தனர். பல பிரச்சனைகள் இடம் பெற்றன. ஒமுறா சுமிற்றடா மே 4இலும் ஒட்டோமோ சொறின் யூன் 6இலும் இறக்க, கிசுசுவில் திருச்சபையின் நிலை திருப்தியாய் இருந்தது.

## இ. தடைச்சட்டம் *(1587 யூலை 25)*

கைடெயோசி, கொயல்கோ அடிகளுக்கு, க காட்டாவில் தன்னை வந்து சந்திக்குமாறு அழைப்பு விடுத்தான். கொயல்கோ அங்கு ஒரு போர்த்துக்கேய கப்பலில் சென்றார். இச்சந்திப்பு சிநேகபூர்வமானதாக உள்ளன்போடு கூடியதாகவுமிருந்தது. கைடெயோசி, மேய்ப்புப்பணியாளர்களுக்கு நகரில் ஒரு ஆலயம் கட்டவும் குருமனை அமைக்கவும் இடவசதி அளித்தார். அதே இரவில் கைடெயோசி, சில வஞ்சகர்களின் தூண்டுதலினால் யுக்கோனை நாடுகடத்தி, 20 நாட்களுள் மேய்ப்புப் பணியாளர் அனைவரும் நாட்டைவிட்டு வெளியேறுமாறு, கட்டளை விடுத்தான். அத்துடன் போர்த்துக்கேய கப்பலில் தங்கியிருந்த கொயேல்கோவுக்கு ஒரு கேள்விக் கொத்தை அனுப்பி உடனடியாக பதில் தருமாறு உத்தரவிட்டான். வினாக்கள் வருமாறு:

1. குருக்கள் உற்சாகமாகவும் தீவிரித்தும் மக்களை மனமாற்றம் செய்வதேன்?
2. பௌத்த, சின்ரோ ஆலயங்களை குருக்கள் நிர்மூலமாக்கியதேன்?
3. மக்களுக்குத் தேவையானதும் விலையேறப்பெற்றதுமான மிருகங்களை (பசுக்கள், குதிரைகள்) அவர்கள் கொன்று தின்பதேன்?
4. யப்பானிய மக்களை பெருந்தொகையினராக விலைக்கு வாங்கி ஐரோப்பாவுக்கு அனுப்பி அடிமை வியாபாரம் செய்வது சரியா?

இவற்றுக்கான பதில் உடனடியாக அனுப்பப்பட்டது. கொயெல்கோ தமது பதிலில் கூறுவது.

1. ஐரோப்பாவிலிருந்து வெகு தொலைவிலுள்ள யப்பானிய நாட்டுக்கு மத போதகர்கள் வருகை தருவது ஆன்மாக்களை பாதுகாக்கும் தங்கள் நோக்கங்களை நிறைவேற்றுவதற்கே. ஆயினும் அமைதியான முறைகளிலே, சமாதான வழிகளிலேயே இந்நோக்கங்களை நிறைவேற்றுவர்.
2. யப்பானிய மண்ணில் இருக்கும்வரை இம்மத போதகர்கள் இம் மண்ணின் மைந்தர்களை மனமாற்றுவதற்கு (மதம் மாற்றுவதற்கு) எவ்வித வன்முறைகளையும் கையாளப்போவதில்லை. பௌத்த மத சின்ரோ மத தேவாலயங்கள் நிர்மூலமாக் கப்பட்டதற்கு மதபோதகர்களை காரணிகளாகக் குற்றஞ் சாட்டுவது சரியல்ல. மதம்மாறிய யப்பானியர்கள் தங்கள் கத்தோலிக்க விசுவாசத்துக்கு இவ்வாலயங்கள் இடையூறாயிருக்குமென்பதை தாங்களே

உணர்ந்தவர்களாய் அச்செயல்களில் ஈடுபட்டனர்.

3. கத்தோலிக்க குருக்களோ, அல்லது போர்த்துக்கேயரோ குதிரை இறைச்சியை உண்பதில்லை. அவர்கள் சிலவேளைகளில் கன்றின் இறைச்சியையே அருந்துகிறார்கள். இது ஐரோப்பாவில் சர்வ சாதாரணம். அதையும் புசிக்கக் கூடாதென இராசப்பிரதிநிதி கட்டளையிட்டால் மதபோதகர் ஏற்றுக் கொள்வர்.

4. போர்த்துக்கேயர் செய்யும் அடிமை வணிகத்துக்கும் மதபோதகர்களுக்கும் எதுவித தொடர்பும் கிடையாது. யப்பானிய துறைமுகங்களில் அடிமை வணிகம் நடைபெறுவதை தடுக்க, மதபோதகர்களுக்கு எந்தவித அதிகாரமுமில்லை. அடிமைகளை விற்பவர்கள் யப்பானிய செல்வந்தர்கள் என்பதும் இங்கு கவனிக்கப்படல் வேண்டும். கைடெயோசி தனது அதிகாரத்தை உபயோகித்து இவ் அடிமை வணிகத்தை யப்பானில் தடுத்து நிறுத்தலாம்.

இவ்வறிக்கையை பெற்றுக்கொண்ட மறுதினமே கைடெயோசி தனது தடையுத்தரவைப் பிறப்பித்தான்.

1. காமிகளின் (தேவதைகளின்) நாடான யப்பான் பிரதேசத்தில் அலகைகளின் அசுத்த வழிகளைப் போதிக்க பிற நாட்டவர்களுக்கு எந்தவித உரிமையுமில்லை.

2. இப்போதகர்கள் யப்பான் நாட்டுக்கு வந்து தீயவழிகளை போதித்து யப்பானிய மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டி, எங்கள் நாட்டின் வரலாறு படைத்த சின்ரோ பௌத்த ஆலயங்களை நிர்மூலமாக்கியமை முன்னொரு போதும் கண்டிராத துரோகச் செயல். எங்கள் நாட்டின் தேசிய ஆவணங்களான இவைகளை உதா சீனப்படுத்தியதன் மூலம் தேசிய ஒருமைப்பாட்டையும் கட்டுக்கோப்பையும் சீர்குலைத்து சின்னாபின்ன மாக்கப்பட்டுள்ளது. இவை கடுந்தண்டனைக்குரிய குற்றங்கள். எம் நாட்டுத் தேவதை ரென்காவை அவமதிக்கும் பாரிய குற்றங்கள்.

3. எங்கள் பெருந்தேவதை ரென்கா, கிறிஸ்தவ மதப்பிரசாரத்துக்கு அனுமதியோ ஆதரவோ அளிக்கவில்லை. அவ்விதம் அளித்தாரெனக் காரணங்கள் காட்டப்படினும் யப்பானிய தேசிய ஒருமைப்பாட்டுச் சட்டத்துக்கு இவை முரண்பட்டதாகும். ஆகவே தேசிய துரோகிகளான இம்மதபோதகர்களுக்கு இனியும் இந் நாட்டில் இடமில்லை. எனவே இருபது நாட்களுள் தங்கள் அலுவல்களை முடித்துக்கொண்டு எல்லா வெளிநாட்டு மதபோதகர்களும் யப்பானிய மண்ணை விட்டு வெளியேற வேண்டும் இந்த இருபது நாட்களுள் வெளிநாட்டு மதபோதகர்களுக்கு எவராவது எதுவித துன்பமிழைத்தாலும் அவர்களும் கடுந்தண்டனை பெறுவர்.

4. போர்த்துக்கேய பெரும் நாவாய்களும் கப்பல்களும் யப்பானிய துறைகளை வர்த்தக நோக்கில் பயன்படுத்த எவ்வித தடையுமில்லை.

5. வர்த்தகர்கள் மட்டுமல்ல இந்திய நாட்டிலிருந்து வருகைதரும் மற்றெல்லாப் பயணிகளுக்கும் சின்ரோ, பௌத்த மதங்களையும் தேசிய ஒருமைப்பாட்டுக்கு குந்தகமிழைக்காதவரை யப்பானுக்கு வந்துபோக எவ்வித தடையுமில்லை.

1587 யூலை 25இல் இவ்வரச அறிக்கை விடப்பட்டது.

கைடெயோசிவிடுத்த இத்தடைச்சட்டத்தின் உண்மைக் காரணிகளை எந்த வரலாற்று ஆசிரியருமே கண்டுபிடிக்க முடியவில்லை. இத்தடைச் சட்டம் விதிக்கப்பட்டதைத் தொடர்ந்து கோயல்கோ, அடுத்த ஆறுமாதங்களுக்குள் போர்த்துக்கேய கப்பல்கள் யப்பான் நாட்டுக்கு வருவதற்கில்லையெனத் தெரிவித்தார். எனவே கைடெயோசி தனது தடையுத்தரவை போர்த்துக்கேய கப்பல்கள் வரும்வரை நீடித்தான். ஆயின் எல்லா வெளிநாட்டு மதபோதகர்களும் கிராடோவில் ஒன்றுகூடியிருக்க வேண்டுமென உத்தரவு பிறப்பித்தான்.

கிறிஸ்தவர்களை ஒருங்கிணைத்து பல அறிவுரைகளை வழங்கியபின் மத்திய யப்பானில் பணியாற்றிய வெளிநாட்டு மதபோதகர்கள் அனைவரும் படகுகள்மூலம் முரோட்சுவுக்குச் சென்றனர். இத்துறைமுகநகரில் அவர்கள் தங்கியிருந்தபோது ஓர்சன்ரினோ அடிகளும் லூரன்கோ சகோதரரும் சோடோசிமா நகரில் ஒளிந்துறைவது எனத் தீர்மானிக்கப்பட்டது. ஏனையோர் கிராடோவுக்குச் சென்றனர். ஏற்கனவே கிசுசு விலிருந்து மதபோதகர்கள் அங்குவந்து இவர்களுக்காக காத்திருந்தனர். குருத்துவப் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த மூன்று யேசுசபை மாணவர்கள் மக்காவோவுக்கு அனுப்பப் பட்டனர்.

## அடக்குமுறைக்காலம் (1587 - 1598)

### அ. கைடெயோசியின் அடக்குமுறை அமுல்செய்யப்படாமை

கைடெயோசி, தான் விடுத்த அடக்குமுறைச் சட்டத்தை தீவிரமாக அமுல் செய்யவில்லை. எனினும் சத்திய திருச்சபை பலத்த பாதிப்புக்குள்ளாகியது. 1587இல் அரிமா, ஒனுரா என்னுமிடங்களிலிருந்த ஆலயங்களும் ஒசாகா, கியோட்டோ, சாகாய் என்ற பகுதிகளின் கோவில்கள் குருமனைகளும் நிர்மூல மாக்கப்பட்டன. ஆயினும் சில காலம் செல்ல கைடெயோசி தனது திட்டத்தை அமுல்நடத்துவதில் அக்கறை காட்டவில்லை. இதற்கான முக்கிய காரணி போர்த்துக்கேய வர்த்தகத்துடனான நெருங்கிய தொடர்பாகும். கிராடோவில் ஒருங்கு கூடிய மதபோதகர்கள் சிசுசுவின் பல பிரிவுகளுக்கும் அனுப்பப் பட்டனர். கிராடோவின் மற்சுரா பகுதியிலும் ஒரு வேதகலாபனை எழுப்பப் பட்டு ஆலயங்கள் அழித்தொழிக்கப்பட்டன.

1588இல் நாகாசாகியில் ஒமுறா சுமிற்றடாவால் யேசுசபையாருக்கு முன் வழங்கப்பட்ட பிரதேசங்களை கைப்பற்றுமாறு கைடெயோசி உத்தரவிட்டான். 1591இல் அரச பிரதிநிதி ஒருவரால் அது ஆளுகை செய்யப்பட்டது. அடக்கு முறைகள் காரணமாக மதபோதகர்கள் குருத்துவ அங்கியணிவதைத் தவிர்த்தனர். யப்பானிய முறைப்படி கிமோனாவைத் தரித்துப் பிரச்சனைகளைத் தவிர்தனர். இரகசியமாகவே மேய்ப்புப்பணிகளை நடத்தினர். இவர்களது சுறுசுறுப்பான பணி, வெதுவெதுப்பான பல கிறிஸ்தவர்களை மீண்டும் சத்திய மறைக்குள் சேர்த்தது. 1589இல் சிமோவில் 12,500 பேர் மனந்திருப்பப்பட்டனர்.

1587இல் ஒசாகாவிலிருந்த குருத்துவக் கல்லூரி அரிமாவுக்கு அனுப்பப் பட்டது. 1591இல் இக்கல்லூரி காசிராவோவில் மீண்டும் நிறுவப்பட்டது. அரிமா கருணோபா, புதிய கட்டடங்களை அமைப்பதற்குப் பொறுப்பாக இருந்தார். சற்சுமாவுடன் நடத்தப்பட்ட போரில் யுசுகியிலிருந்த கல்லூரி முற்றாக நிர்மூலமாக்கப்பட்டது. ஆரம்ப குருத்துவக்கல்லூரி ஆரி என்னுமிடத் துக்கும் கல்லூரி சிசிவா என்னுமிடத்துக்கும் மாற்றப்பட்டன. யப்பானின்

மத்திய பகுதியில் ஒளிந்திருந்த ஓர்கன்ரீனோ அடிகள் இரகசியமாக தம்மந்தையின் மேய்ப்புப் பணிகளை கவனித்தார்.

## ஆ. வலிஞானோ இராசப்பிரதிநிதியாக நியமனம்

1586இல் ஒசாகா கோட்டையில் நல்வரவேற்பு அளிக்கப்பட்டதைத் தொடர்ந்து, கொயல்கோ அடிகள் வலிஞானோவுக்கு எழுதிய மடலில், கைடெயோசிக்கு, இந்தியாவின் வைஸ்ரோய் (அரச பெருந்தூதுவர்) ஒரு பிரதிநிதியை அனுப்பி சத்திய திருச்சபைக்களித்த நலன்களுக்காக நன்றி செலுத்த வேண்டுமெனக் குறிப்பிட்டிருந்தார். வைஸ்ரோய் அம்மடலை அங்கீகரித்தார். வலிஞானோவையே தமது பிரதிநிதியாக நியமித்தார். யப்பானிய தூதுவர் நால்வரும் உரோமையிலிருந்து கோவாவுக்கு வந்த பின் அவர்களை கைடெயோசியிடம் கூட்டிச் சென்று அறிமுகப்படுத்தினார் (1588) எனினும் அவரது கிறிஸ்தவ விரோத மனப்பான்மையை அறிந்து கொண்டார். எனவே ஒரு தூதுக் குழுவை அனுப்பி பிரச்சனைகளை ஆய்வுசெய்ய அனுமதி கோரினார். கைடெயோசி அதை ஏற்றுக்கொண்டார். எனவே வலிஞானோ மக்காவோவிலிருந்து புறப்பட்டு நாகாசிக்கு 1590 யூலை 31இல் வந்து சேர்ந்தார். மீண்டும் சில பிரச்சனைகளால் இழுபறிப்பட்டு 1591 மார்ச் 3ஆம் திகதியே இக்குழுவை உத்தியோகபூர்வமாக வரவேற்றனர்.

இராசப்பிரதிநிதியாக பதவியேற்றபின் வலிஞானோ, கைடெயோசியை சந்திப்பது இதுதான் முதல்முறை அவருடன் சில மதபோதகர்களும் 26 போர்த்துக்கேய பிரசைகளும், 4 யப்பானிய பிரதிநிதிகளும் சென்றனர். இந்த நேர்முக சந்திப்பு சிநேகபூர்வமாகவும் புரிந்துணர்வு மனப்பான்மையுடனும் இடம் பெற்றது. தொடர்ந்து நடைபெற்ற இரவுணவின் போது நான்கு இளம் யேசு சபையினருடனும் கைடெயோசி நீண்ட நேரமாக அளவளாவினார். இச் சந்திப்பு யேசுசபையினர் பலவித சலுகைகளைப் பெற்றுக்கொள்ள வாய்ப்பு அளித்தது. மேற்கூறிய 4 இளம் யப்பானியரில் ஒருவர் யோவா றொட்ரிகஸ் ருசு. இவர் மொழிவல்லுநராக விளங்கியமையால் எல்லாவித மொழி பெயர்ப்புகளுக்கும் ஈடு கொடுப்பவரானார். 1594இல் குருத்துவ அபிஷேகம் பெறுவதற்கு மாகாவோவுக்குச் சென்றார்.

வலிஞானோ யப்பானில் இரு பெரும் கருத்தரங்குகளை நடத்தினார் (1590 ஆகஸ்ட், 1592 ஜனவரி) மேய்ப்புப்பணி சம்பந்தமான பல்வேறு பிரச்சனைகள், இக் கருத்தரங்குகளில் அலசி ஆராயப்பட்டன. மேய்ப்புப் பணியாளர்கள் தம் அப்போஸ்தலிக்க அலுவல்களில் கடைப்பிடிக்கவேண்டிய புண்ணியங்களை (சிறப்பாக பரிசுத்த தனம்) வலிஞானோ இக் கருத்தரங்குகளில் வலியுறுத்தினார்.

## இ. யேசுசபையினரின் அப்போஸ்தலத்துவம் *(1592 - 1598)*

கிசுசுவில் மதபோதகத்தை பல பிரச்சனைகள் எதிர்நோக்கின. கோரிய யுத்தத்தின் போது கைடெயோசி நாகோயா என்ற சிறு நகரில் தன் தலைமையகத்தை அமைத்திருந்தான். அவனது தொல்லைகளால் நாகாசாகியிலிருந்து மதபோதகர்கள் ஒடித்தப்ப வேண்டியிருந்தது.

உரோமை நகரிலிருந்து யப்பானிய பிரதிநிதிகள் நால்வரும் கொண்டு

வந்த அச்சகப்பொறிகள், உபகரணங்களுடன் தரமான அச்சகம் ஒன்று காசூசாவில் நிறுவப்பட்டது (1591). இது பின்னர் அமாகுசுவுக்கு கொண்டு செல்லப்பட்டது. மறைக்கல்வி நூல்கள் இங்கு பெருந்தொகையாக அச்சிடப்பட்டன. மறைக்கல்வி ஊட்டுவோருக்கு அருந்துணையாக அமைந்த இந்த ஞான உபதேச நூல்கள், மேய்ப்புப் பணியாளர்கள் பற்றாக்குறையான இடங்களிலும் பேருதவியாக அமைந்தன.

பல்வேறு கலாபனைகளுக்கும் மத்தியில் மேய்ப்புப் பணி வெற்றிகரமாக இயங்கியது. 1594இல் நாகாசாகியில் மட்டும் 10,000 பேர் திருமுழுக்குப் பெற்றனர். 1597இல் இத்தொகை 65,000 ஆகியது. 1592இல் நாகாசாகியில் இடம்பெற்ற கருத்தரங்கில் ஒரு ஆயரின் தேவை அவசியமானதென்று வற்புறுத்தப்பட்டது. இதனைத் திருச்சபைத் தலைமைப்பீடம் (உரோம்) ஏற்றுக் கொண்டது. புனாய் மறை மாவட்ட ஆயராக 1596இல் யேசுசபையைச் சேர்ந்த மாட்டின்ஸ் ஆண்டகை, பொறுப் பேற்றார் (1596, ஆகஸ்ட் 14). யப்பானிய மண்ணில் காலடிவைத்த முதல் ஆயரான இவர், சுதேச குருக்களை உருவாக்கும் பணியை ஊக்குவித்ததுடன் 4000க்கு மேற்பட்டோருக்கு உறுதிபூசுதல் அருட்சாதனத்தையும் வழங்கினார். மேய்ப்புப் பணியில் ஆர்வமுடனும் உறுதியுடனும் செயற்பட்ட இவ்வாயருக்கு (1597இல்) நாகாசாகியில் 26 கத்தோலிக்கர் இரத்த சாட்சிகளாகக் கொலையுண்டது தாங்கொணா வேதனையைத் தந்தது.

கோரிய யுத்தத்துடன் அடிமை வணிகமும் தலையெடுத்து நல்ல இலாபத்தைக் கொடுத்தது. யுத்தக் கைதிகளும் மற்றும் ஆயிரக்கணக்கான கோரிய பெண்கள், குழந்தைகள், சிறுவர்களும் போர்த்துக்கேய வணிகர்களுக்கு விற்கப்பட்டனர். நாகாசாகி அடிமை வணிகத்தின் பிரதான சந்தையாக விளங்கியது. மதபோதகர்கள் இவ்வணிகத்தை முழு மூச்சாக கண்டித்து வந்தனர். எனினும் பணம், பதவி, அதிகாரம் ஆகியவை அடிமை வணிகத்துக்கு அருந்துணையாக அமைந்தன. எனினும் மதபோதகர்களின் அயராத எதிர்பிரசாரத்தால் அடிமைகளை வாங்கியோர் பலர் அவர்களுக்கு விடுதலையும் சுதந்திரவாழ்வும் அளித்தனர். 1596ஆம் ஆண்டின் இறுதியில் நடைபெற்ற வேத கலாபனையால் மத்திய யப்பான் பிரதேச கத்தோலிக்கம் வெகுவாக நலிவுற்றது. ஏராளமானோர் இரட்சகர் இயேசுவின் இரத்த சாட்சிகளாயினர்.

## பிரான்சீஸ்கன் சபையினரின் வருகையும், பணியும் (1593 - 1597)

### அ. தொடர்புகளும் இணக்கமும்

1565களில் லீகஸ்பியின் வருகையும், 1571இல் மணிலாவில் அலுவலகம் நிறுவப்பட்டமையும் பிலிப்பைன்சில் ஸ்பானியரின் ஆட்சிக்காலம் தொடங்கப்பட்டதன் அறிகுறிகள். விரைவில் மணிலா, மாகாவோவின் வணிக எதிரியாக மாறியது. எனினும் ஐரோப்பாவில் போர்த்துக்காலும் ஸ்பெயினும் 2வது பிலிப் அரசரின்கீழ் (1580) ஒன்றுபட்டதைத் தொடர்ந்து வர்த்தகப் பிரச்சனைகளும் தவிர்க்கப்பட்டன. லீகஸ்பியுடன் அகஸ்தீனிய சபையார் பிலிப்பைன்ஸ் தீவுகளுக்கு வருகை தந்தனர். பிரான்சீஸ்கன் சபையார் 1578களில் மணிலாவுக்கு வந்து சேர்ந்தனர். யேசு சபையினர் 1581லும் தொமினிக்கன்ஸ் ஸ்பெயினர் 1587களிலும் வருகை தந்தனர்.

யப்பானில் முதலில் காலடி வைத்த ஸ்பானிய பிரான்சீஸ்கன், சகோதரர் யுவான் பொபிரி டியஸ் பார்டோ 68 வயதினரான பொபிரி சில மாதங்களுக்கு

முன்னர்தான் பிரான்சீஸ்கன் சபையில் சேர்ந்திருந்தார். மணிலாவுக்குச் சென்றபின் மீண்டும் மாகாவோவுக்கு வருகைதர 1584இல் இன்னொரு பிரான்சீஸ்கன், டியாகோ பெர்னால், இரு அகஸ்தீனியன்ஸ், பிரான்செஸ்கோ மன்ரிக்கியூ, மாற்றியோ டி மென்டஸ் ஆகியோருடன் ஒரு போர்த்துக்கேய நாவாயில் சென்றார். ஒரு புயலால் அலைக்கழிக்கப்பட்டு, கிராடாவில் கரையேற (ஆகஸ்ட் 4) ஸ்பானிய குருக்கள் அப்பிரதேச அதிபதி மற்சுராவுடன் அவர்களை வரவேற்று, நன்கு உபசரித்தனர். நாகாசி, மற்சுரா துறைகளின் இயக்கத்தால் போர்த்துக்கேய வர்த்தகத்தால் தான் சம்பாதிக்க வேண்டிய பெருந்தொகையை இழந்த கிராடோ, ஸ்பானியர்களை தன் துறைமுக நகருக்கு வரவேற்கத் தயாராகவிருந்தான். சில கிறிஸ்தவ பிரமுகர்களை உள்ளடக்கிய ஒரு பிரதிநிதிகள் குழுவை, ஒரு கடிதத்துடன் மணிலா ஆளுநருக்கு அனுப்பி னான். பிரான்சீஸ்க மதபோதகர்களை தன் நாட்டுக்கு அனுப்புமாறு அக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தான். 1586இல் மணிலாவுக்கு 11 கிறிஸ்தவர்கள் வந்து சேர்ந்தனர். அவர்கள் மணிலாவின் அதிகாரிகளிடம் கொயல்கோ அடிகளின் திரு மடலைச் சமர்ப்பித்தனர். கிசுசுவில் நடைபெறும் உள்நாட்டுப் போரில் கிறிஸ்தவர்களைப் பாதுகாக்குமாறு இம்மடல்மூலம் துணைமாகாணாதிபதி கேட்டிருந்தார். மேலும் யேசுசபையாரின் சில நடவடிக்கைகளால் பெரிதும் அதிருப்தி அடைந்திருந்த அடிகளார் பிரான்சீஸ்கன் சபையினரை அனுப்புமாறு விண்ணப்பித்திருந்தார்.

எனினும் வலிஞானோவின் விருப்பத்திற்கிணங்க பதின்மூன்றாம் சிங்கார யர் பாப்பிறை, தமது 1585 ஜனவரி 28ஆம் திகதியிட்ட சுற்றுமடலில் யப்பானிய மேய்ப்புப்பணி நடவடிக்கைகள் அனைத்துக்கும் யேசுசபையினரே முக்கிய சூத்திரதாரிகள் என அறிவித்திருந்தார். எனவே யேசு சபையினரைத் தவிர வேறு எச்சபையினரும் யப்பானில் மேய்ப்புப்பணி நடவடிக்கைகளை ஆரம்பிக்கமுடி யாது 1590இல் இந்த விடயத்தை அறியவந்த பிலிப்பைன்சில் உள்ள ஸ்பானிய மதபோதகர்கள் ஆச்சரியமும் அதிர்ச்சியும் அடைந்தனர். கைடெயோசியும் 1587இல் யேசுசபையாரை வெளியேற்றி தடையுத்தரவு பிறப்பித்திருந்தான்.

எனினும் கைடெயோசி, மணிலாவின் ஆளுநருடன் புரிந்துணர்வு உடன் படிக்கை ஒன்றில் கையெழுத்திட்டிருந்தான். 1591இல் ஒரு கிறிஸ்தவ கண்டு பிடிப்பாளர் போல் காராடா கைமொன் பிலிப்பைன்சுக்கு வர்த்தக நோக்கில் வருகை தந்தார். இவர் கைடெயோசிக்கு, மணிலா அரசிடம் தூதுக்குழு ஒன்றை அனுப்புமாறு இறுமாப்புடன் கடிதம் வரைந்தார். கைடெயோசியின் ஆலோ சகர்கள், ஆளுநருடன் சிநேகபூர்வமாக இருக்கவே தம் தலைவர் விரும்பு கிறாறென விளங்கப்படுத்தியும் பயன்கிட்டவில்லை. எனவே ஆளுநர் இரு நம்பிக்கையான பிரதிநிதிகளை (லோப்டி லியானோ, யுவான் கோபோ) அனுப்பி னார். இவர்கள் கைடெயோசியால் நன்கு வரவேற்கப்பட்டனர். ஆயினும் இவர் களது கலந்துரையாடல்களின் விபரம் தெரியவில்லை. காரணம் கோபோ பயணித்த நாவாய் பாறையுடன் மோதி உடைந்துபோக அவரது ஆவணங் களும் ஆழ்கடலுடன் சங்கமமாயின.

### ஆ. கியோட்டோ, நாகாசாகி, ஒசாகா

1593 மே 28இல் மணிலாவிலுள்ள அகஸ்தீனிய சபையாரின் இல்லத்தில் நடை பெற்ற மாநாட்டில் ஏழு இறையியல் வல்லுநர்கள் 13ஆம் கிரகோரி

பாப்பரசரின் தீர்மானத்தை (யப்பானில் பிரான்சிஸ்கன் சபையினரே மேய்ப்புப் பணி அலுவல்களுக்குப் பொறுப்புடையோர்) ஆதரித்து வாதாடினர். எனவே யப்பானில் பிரான்சிஸ்கன் சபையாரே தூதுவர்களாகவும் பணியாற்றவல்லவர்.

*1593* மே *30*இல் பீற்றர் பப்ரிஸ்ற் பிளாக்குஸ் அடிகள் இராசப் பிரதிநிதி யாகவும் தூதுவராகவும் (பிலிப்பைன்ஸ் ஆளுநரின்) புறப்பட்டார். இவருடன் பர்த்த லோமியு றூயிஸ் அடிகள்,கொன்சாலோ கார்சியா அடிகள் (மொழி பெயர்ப்பாளர்) சகோதரர் பிரான்சீஸ் டிலா பரிலா ஆகியோரும் சென்றனர். கைடெயோசி அவர்களை நாகோயாவில் வரவேற்றான். அவன் ஆரம்பத்தில் இறுமாப்புடன் காணப்படினும் பிளாக்குவிஸ் அடிகளின் உறுதியான மனப் போக்கைக் கண்டு மனமிளக வேண்டியதாயிற்று. நட்புரிமை உடன்படிக்கை செய்யவும் வணிகநோக்கில் வரும் ஸ்பானிய கப்பல்களைப் பாதுகாக்கவும் உடன்பட்டான். பீற்றர் பப்ரிஸ்ற் அடிகளின் வேண்டுகோளுக்கிணங்க, பிரான் சீஸ்கன் சபையார் கியோட்டோவில் ஓர் ஆலயத்தையும் துறவியர்மடத்தையும் அமைக்க அனுமதி வழங்கினான். அத்துடன் ஆளுனரின் வேண்டுகோளுக் கிணங்க, பிரான்சீஸ்கன் சபையார் யப்பான் நாட்டுக்கு செல்லவும் அனுமதி வழங்கப் பட்டது.

*1594*இல் பீற்றர் பப்ரிஸ்ற் அடிகள், தம் உதவியாளருடன் ஒரு மடத்தை உருவாக்கினார். ஸ்பெயினில் போல அழகு மாடங்களும் நந்தவனமும் மூன்று பீடங்கள் கொண்ட தேவாலயமும் அமைக்கப்பட்டன. ஒக்ரோபர் 4இல் ஆரம் பிக்கப்பட்ட ஆலயம் சம்மனசுகளின் இராக்கினி மாதாவுக்கு நேர்ந்தளிக்கப் பட்டது. பிரான்சீஸ்கன் சபையினர் ஏழைகளுக்காக 50 படுக்கைகள் கொண்ட மருத்துவமனை ஒன்றையும் அமைத்து புனித அன்னாளின் பாதுகாவலில் நடத்தினர். சிறிது காலத்துள் நோயாளர் பராமரிப்புக்காக புனித வளனார் பெயரில் மற்றொரு மருத்துவமனை அமைக்கப்பட்டது. மக்களிடமிருந்து திரட்டிய நிதியுடன் இவை அமைக்கப்பட்டன. கைடெயோசியும் ஒவ்வொரு வருடமும் பல அரிசிமூடைகளை அன்பளித்து வந்தான். அவனது மருமகன் கைடெற்சுகுவும் உணவுப்பொருட்களை வழங்கி வந்தான்.

கைடெயோசி பிரான்சீஸ்கன் சபையினருக்கு மத பிரசாரம், மேய்ப்புப் பணி சம்பந்தமாக சகல உதவிகளையும் தாராளமாக அளித்த அதேவேளை, ஏனைய சபையாருக்கோ அல்லது மறைமாவட்டக் குருக்களுக்கோ எந்தவித உதவியும் வழங்காததுடன் அவர்களது சகல மறைபரப்புப் பணிகளும் கடுமை யான கண்காணிப்புக்கும் உள்ளானது. ஓர்கன்ரினோவும் அவரது உதவியாளர் களும் யப்பானிய அங்கிகளையே அணிந்து நடமாடி, இரகசியமாக மறை பரப்புப் பணிகளில் ஈடுபட்டனர். கிறிஸ்தவ இல்லத்தரிசிப்புகளும் இரகசிய மாக இரவிரவாகவே நடைபெற்றது.

### இ. யேசு - பிரான்சிஸ்கன் சபையாரிடை முரண்பாடு

ஒரு நாட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட சபையினர் மேய்ப்புப் பணிகளில் ஈடுபடின் அவர்களிடை முரண்பாடு எழுவது இயற்கையே. ஆகவே யப்பான் நாட்டில் முழு மூச்சுடன் இயேசுவைப் போதிக்க முனைந்த யேசுசபையிணர்க்கும் பிரான்சீஸ்கன் சபையினருக்குமிடையே பிணக்குகளும் முரண்பாடுகளும் ஏற் பட்டதில் ஆச்சரியம் ஏதுமில்லை.

போர்த்துக்கேயருக்கும் ஸ்பானியருக்குமிடையே இருந்த அரசியல், வர்த்தகப் பிரிவுகள், பிளவுகள், பிரச்சனைகள் மறைபரப்புப் பணிகளிலும் தலை தூக்கி பாதித்தன. ரொயோரோமி காலத்தில் மணிலாவிலிருந்து வந்த பிரான் சீஸ்கன் மதபோதகர் எல்லோருமே ஸ்பானியர் அல்லர். இருவர் போர்த்துக் கேயர். ஏனையோர் ஸ்பானியர் அல்லது இத்தாலியர்.

மேற்கூறப்பட்ட பிணக்குகள் தனிப்பட்ட அல்லது அதிகார காரணங் களையும் கொண்டிருந்தன. கியோட்டோவின் பிரான்சீஸ்கன் மறைபரப்பாளர் கள் கோவிலையும் மடத்தையும் கட்டுவதற்கு இத்தாலிய யேசுசபை ஓர்கன்ரினோ அடிகளிடம் பணம் கேட்டனர். அவரோ இவர்களுக்கு உதவ விரும்பவில்லை. அதுபோல மேய்ப்புப்பணியில் ஒரு சபையினர் சென்று பணியாற்றும் பகுதியில் (பிரதேசத்தில்) மறுசபையார் செல்வதைத் தடுத்தனர். பிரான்சீஸ்கன் சபையார் புதுப்புது உத்திகளைக் கையாள்வதாக யேசுசபையார் குற்றஞ்சாட்டினர். உதாரணமாக புனிதர் பிரான்சீஸ் அசிசியால் ஆரம்பிக்கப்பட்டு, 5ஆவது சிக்ஸ்துஸ் பாப்பிறையால் 1585இல் அங்கீகரிக்கப்பட்ட ஒரு பக்திச்சபை யையும், அதிரியான் பாப்பிறை தொடக்கிய மற்றொரு நவநாள் பக்தியையும் பிரான்சீஸ்கன் சபையார் புதுவிசுவாசிகளிடையே அறிமுகப்படுத்தியது தவறு. அது குருட்டுப்பக்தி முறையில் மாற்றமடையலாம் என்பது யேசு சபையினரின் வாதம்.

யேசு சபையினர் தங்கள் ஆலயங்களுக்கு பிரான்சீஸ்கன் சபைக் கிறிஸ்த வர்கள் செல்வதைத் தடுக்கின்றனர் என்பது இன்னொரு முறைப்பாடு. இவ்விதம் இரு சபைகளுக்குள்ளும் முரண்பாடு அதிகரித்து வருவதைத் தடுக்க, பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. துணை மாகாண அதிபதி கோமஸ் அடிகள், ஸ்பானிய ரான மோர்ஜன் அடிகளை கியோட்டோவுக்கு அனுப்பி அங்குள்ள பிரச்சனை களை ஆராயச் செய்தார். 1595இல் பீற்றர் பப்ரிஸ்ற், யேசு சபையாரின் குற்றச் சாட்டுகளை ஆழமாக அலசி ஆராய்ந்தார். பிரான்சீஸ்கன் சபையின் ஸ்திரமான நிர்வாகமும், அரசியல் துணையும், செல்வாக்குமே ஏனைய சபையாரின் பொறாமைக்கும் ஏனைய பிரச்சனைகளுக்கும் முக்கிய காரணி என்பதைக் கண்டறிந்தார். பெரும்பான்மை யேசு சபையாரும் ஆயர் மாட்டின்ஸ் ஆண்ட கையும் 13ஆம் கிரகோரி பாப்பிறை யின் அறிக்கையையே தம்வாதங்களுக்குத் துணை கொள்கின்றனர். பிரான்சீஸ்கன்ஸ் யப்பானுக்குச் சென்றது பாப் பிறையின் விருப்புக்கு மாறானது என்பது அவர்கள் வாதம். பிரான்சீஸ்கன்ஸ் கூறுவது 5ஆவது சிக்ஸ்துஸ் பாப்பிறையின் கட்டளைப்படியே தாங்கள் யப்பா னுக்கு வந்ததாக. எனினும் இரு பகுதியினரையும் ஒன்றி ணைப்பதற்கு மற்றொரு பிரச்சனை குறுக்கிட்டது.

### 4. நாகாசாகியின் இரத்த சாட்சிகள் (1597)

1596 ஒக்டோபர் 19இல் ஸ்பானிய நாவாய் 'சான்பிலிப்பி' புயல் காரண மாக ரோசாநகர்ப்பிரிவான உறாடோவில் கரைதட்டியது. யப்பானிய நாட்டுச் சட்டப்படி கரைதட்டும் கடற்கலங்களும் அவை சுமந்து வரும் அனைத்தும் அரச சொத்தாகும். எனவே அப்பகுதியின் தலைவன் அங்கு காவல் வைத்து, கப்பற் தலைவனிடம், ஆளுனன் கைடெயோசிக்கு தூது அனுப்பும் படி சிபார்சு செய்தான். கப்பலில் ஏராளமான மதபோதகர்கள் இருப்பதாகவும், நல்ல பணமும் ஆயுத பலமும் நிறைந்திருப்பதாகவும் அவனது அறிக்கை கூறியது.

கைடெயோசிக்கு கொரியா யுத்தம் சார்பாக பணத்தேவை மிகுதியாக இருந்தது. ஸ்பானியருடன் வர்த்தக உறவுகளையும் வைத்திருக்க விரும்பினான். எனினும் மசூடா, செயாகுயின் (கிறிஸ்தவ எதிர்ப்பாளன்) ஆகியோரின் ஆலோசனையை நாடினான். மசூடா, நாவாயிலுள்ள பொருட்களைக் கைப்பற்றுமாறு ரோசா வுக்கு அனுப்பப்பட்டான். மணிலா ஆளுநரின் ஆலோசகர் என்ற தகமையில், பீற்றர் பப்ரிஸ்ற் கியோட்டோவின் ஆளுநரான மெடா மன்கிசாவிடம் ஸ்பானிய கப்பல்களுக்கு கைடெயோசி வழங்கிய பாதுகாப்பு வசதிகளை வழங்கச் செய்யு மாறு கோரினார். நாவாயிலிருந்து அதிகாரிகள் தங்களை காவற்கைதிகளாக நடத்துவதை ஆட்சேபித்தனர். இவையணைத்தும் ஸ்பானியர் தனது நாட்டைக் கைப்பற்றுதற்கான திட்டம் என கைடெயோசி திடமாக நம்பினான். எனவே அவன் உடனடி நடவடிக்கைகளை மேற்கொண்டான். நாவாயிலிருந்தவை அனைத்தும் கைப்பற்றப்பட்டன. மாலுமிகளும் பயணிகளும் மணிலா செல்லு மாறு அறிவிக்கப்பட்டனர். நாவாயிலிருந்த 7 மதபோதகரில் நால்வர் அகஸ்தீனியன்ஸ், ஒருவர் டோமினிக்கன், இருவர் பிரான்சீஸ்கன்ஸ், டோமினிக் கனும் அகஸ்தீனியன்ஸ்சும் மணிலாவுக்குத் திருப்பியனுப்பப்பட்டனர். ஒரு பிரான்சீஸ்கன் (பிலிப் டாலஸ் காஸ்) கைதுசெய்யப்பட்டு இரத்த சாட்சியா னார். ஏனைய பிரான்ஸ்சீஸ்கன் சகோதரர் யுவான் பொப்ரி டி சமோரா, யப்பானை விட்டு வெளியேறினார்.

கியோட்டோ மடத்திலிருந்த பிரான்சீஸ்கன் சபையினர் அனைவரும் கைது செய்யப்பட்டனர். ஒசாகாவிலிருந்தோரும் பிடிபட்டனர். மரண தண்டனை பெற்றனர். சித்திரவதை செய்யப்பட்டு பகிரங்கமாக சிலுவையிலறையப் பட்டனர். 1597 ஒக்ரோபரில் (மரண தண்டனை பெற்றவர்களைவிட) எஞ்சியிருந்த யேசுசபையினர் மற்றும் போர்த்துக்கேய மறையாசிரியர்கள், மக்காவோவுக்குத் தப்பியோடினர். 1598இல் நாகசாசி, ஒமுரா, அரிமா முதலிய இடங்களிலிருந்த கிறிஸ்தவ ஆலயங்கள் அனைத்தும் சூறையாடப்பட்டு நிர்மூலமாக்கப்பட்டன. குருமடங்கள் அழிக்கப்பட்டன. இப்பயங்கர வேதகலாபனை 1598 செப்ரம்பர் 16இல் ஏற்பட்ட கைடெயோசியின் மரணத்துடன் ஒரு முடிவுக்கு வந்தது.

## கிறிஸ்தவ இலக்கியம்

### அ. யேசுசபையின் அச்சுப்பிரசாரம்

யப்பானியரில் பெரும்பான்மையினர் நன்கு எழுத வாசிக்க அறிந்தவர்கள். எனவே மத பிரசார அலுவல்களுக்கு அச்சுப்பிரசுரங்கள், நூல்களின் அவசியத்தை மேய்ப்புப்பணியாளர்கள் நன்குணர்ந்தனர். மரத்தாலாய அச்சுப் பொறிகள் யப்பான் நாட்டில் நீண்டகாலமாகப் பாவனையில் இருந்தன. யேசு சபையார் ஏறத்தாழ 40 ஆண்டுகளாக கிறிஸ்தவ நூல்களை கையெழுத்துப் பிரதிகளா கவே பாவித்தனர். இந்நூல்களுள் ஆக்கங்கள், மொழிபெயர்ப்புகள், கவிதைகள் என்பன முக்கியமானவை.

அச்சகங்களை யப்பானில் அறிமுகப்படுத்திய பெருமை வலிஞானோ அடி களுக்கே உரியது. 1584களில் அவர் உரோமையிலிருந்த 4 யப்பானிய பிரதிநிதி களுக்கும் அச்சுக்கலையைப் பழக்கி, லத்தீனிய அச்சு எழுத்துகளை கொண்டு வருமாறும் அறிவித்திருந்தார். ஒரு சிறந்த அச்சகத்தின் மூலம் அவர் அமுல் நடாத்த எண்ணியவை:- 1. ஞான உபதேச புத்தகங்கள் (மறைக்கல்வி நூல்கள்). 2. செபப்புத்தகங்கள் (யப்பானிய மொழியில்). 3. பக்தி நூல்கள். 4. யப்பானிய

மொழியை கற்பிக்கும் இலக்கண (இலக்கிய) பாடப்புத்தகங்கள். 5. குருத்துவ மாணவர்கள் லத்தினைக் கற்கக் கூடிய ஆதார நூல்கள்.

### ஆ. கிறிஸ்தவ ஆன்மீக, சித்தாந்த நூல்கள்.

யேசு சபையாரின் முதலாவது அச்சகம் லத்தீனிய எழுத்துக்களை றொமாயி என்ற அச்சுவித்தை முறை மூலம் அச்சடித்தது. இம்முறையில் 1591 - 1599இல் அச்சு வாகனமேறிய நூல்கள், பிரசுரங்களாவன.

1591 - புனிதர்களின் வாழ்க்கையிலிருந்து சில நிகழ்வுகள்.

1592 - முக்கிய சொற்களின் மொழிபெயர்ப்பு. லத்தீன் - யப்பான்

1592 - ஜப்பானிய மொழியிலான மறைக்கல்வி நூல். ஐரோப்பிய நூல்களின் மொழிபெயர்ப்பு அல்ல. ஐரோப்பிய ஞான உபதேச நூல்களை ஆதார மாகக் கொண்டு யப்பானிய ஆன்மீக தேவையின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட வினாவிடை நூல்.

1596 - கிறிஸ்துநாதர் அநுசாரம் (யப்பானிய மொழியில்)

1599 - மனமாற்றம் - மனந்திரும்ப, தன் தீயசெயல்களை சிந்திக்க, மனஸ் தாபப்பட உதவும் கையேடு.

1598 - பாவசங்கீர்த்தனம் - அருட்சாதன விளக்கவுரை, ஞானஸ்நானம் - அருட்சாதன விளக்கவுரை, மரணவேளையில் உதவி, ஆன்மீக, லௌகீக அனுசரணைகள்.

### கிறிஸ்தவ கலை
### வர்ணந்தீட்டுகை, செதுக்குவேலை.

ஆரம்ப காலங்களில் யப்பான் நாட்டுக்குச் சென்ற மதபோதகர்கள், பீடப் பாவனைக்காக, அக்காலத்தில் ஐரோப்பாவில் பிரசித்திபெற்ற கலைப்போதனா பீடமான பிளெமிஸ் கலாமன்ற ஓவியங்களை (வர்ணப்படங்கள்) உபயோகித் தனர். சிமாசு ரர்கிஸ்லாவுக்கு யாயிரோ அவர்களால் அழகிய வர்ணத்தாலான மரியன்னையின் ஓவியம் காண்பிக்கப்பட்டது. இதுபோன்ற இன்னொரு வர்ண ஓவியத்தை புனித சவேரியார், இய்க்கு சமுக முதற்கிறிஸ்தவர்களுக்கு அன்பளிப்புச் செய்தார். டி ரோறஸ் அடிகள், பெருந்தலைவன் ஒமுரா சுமிற்றடா திருமுழுக்குப் பெற்றபோது அவனுக்கும் அழகிய மரியன்னையின் உயிரோவிய மொன்றை அன்பளிப்புச் செய்தார். எனினும் சிறு கத்தோலிக்கப் படங்கள் அக்காலத்தில் அதிகமாக இறக்குமதி செய்யப்படவில்லை. மேய்ப்புப்பணி, உற்சாகத்துடன் செய்யப்பட, சத்தியதிருச்சபையின் விசுவாசிகளினதும் எண்ணிக்கை அதிகரிக்க கத்தோலிக்க உயிரோவியங் கள், சொரூபங்கள், பெரியதும் சிறியதுமான வர்ணப்படங்கள், கறுப்பு வெள்ளைப் படங்களின் தேவை அதிகரிக்கத் தொடங்கியது.

### அழகுகலைகள் பயிலகம்

யப்பான் நாட்டில் 1591இல் யேசு சபையார் அழகுக் கலைகளைப் பயிற்று விக்கும் ஒரு கல்லூரியையும் ஒரு சிறந்த அச்சகத்தையும் நிறுவினர். மேலும்

எண்ணெய் வர்ணந்தீட்டும் முறையையும் வெண்கலத்தில் உருவங்களை வடிவமைக்கும் கலையையும் யப்பானில் அறிமுகப்படுத்தியவர்களும் யேசுசபையாரே.

அழகுக் கலைகளைப் பயிற்றும் பாடசாலையை ஆரம்பித்தவர், யோவான்னி நிக்கொலா அடிகள். இவர் ஒரு இத்தாலியர். நேப்பிள்ஸ் நகரத்தவர். *1560*இல் பிறந்தவர். இறையியல் கல்வியை முடிக்கு முன்னரே யப்பானுக்கு அனுப்பப்பட்டார். நாகாசாகியிலும் அரிமாவிலும் சில ஆலயங்களுக்கான எண்ணெய் வர்ண ஓவியங்களைத் தயாரித்தபின் அமாகுசாவில் *1591*இல் இப்பாடசாலையை தொடங்கினார். *1592*இல் *23* மாணவர் இப்பாடசாலையில் கற்றனர். *1601*இல் இப்பாடசாலை அரிமாவுக்கு இடம்பெயர்ந்தது. *1603 - 1614* வரை நாகாசாகியில் இயங்கியது. அவ்வருடத்தில் ஏற்பட்ட வேதகலாபனையைத் தொடர்ந்து நிக்காலோஷம் அவரது யப்பானிய மாணவரும் மக்காவோ சென்றனர். இவரிடம் கலைப்பயிற்சி பெற்றோரில் யேசுசபைத் துறவிகளும் டோயு கு என்றழைக்கப்பட்ட தொண்டர்களுமே அதிகமானோர்.

யேசு சபையாரின் சித்திரம் கீறுதல், வர்ணந் தீட்டுதல், ஓவியக்கலை, சிற்பம் வடிவமைத்தல், மரங்களில் உளியால் செதுக்கி உருவமைத்தல் ஆகியவை யப்பானியர் மத்தியில் கலையார்வம் கொழுந்து விட்டெரிந்து பலர் சத்திய மறையைத் தழுவ வழி வகுத்ததுடன், அந்நாட்டில் ஒரு நவீன கலையுலகையும் சிருஷ்டிக்கக் காரணமாயிருந்தது.[70]



யப்பானியக் கலாசாரத்துக்கேற்ப உருவாக்கப்பட்ட
மாதாவும் - குழந்தை இயேசுவும்

# யப்பானிய அரசியல் நிலையும் கிறிஸ்தவமும்

கையோடேசியின் இறுதிக் காலத்தில் ஆறுவயதுடைய தன் புதல்வன் கைடெயோரிக்கு அரசுரிமையை எவ்விதம் உரிமையாக்குவதென்பது பெரிய பிரச்சனையாயிருந்தது. எனவே அரசியல் அனுபவமும் நம்பிக்கையும் கொண்ட ஒரு குழுவை நிர்வாகிகளாக நியமித்தான். நிர்வாகக் குழுவின் முதல் உத்தியோக பூர்வ நடவடிக்கை (கைடெயோசியின் மரணத்தின் பின் கோரியாவிலிருந்த இராணுவத்தை திருப்பி அழைத்ததாகும். எனினும் நிர்வாகக் குழுவினர். எதேச்சாதிகார செயல்களிலும் ஈடுபட்டனர். அரசியல் காரணங்களுக்காக (உடன்படிக்கையை மீறி) சில திருமணங்களை நிறைவேற்றினர். இவர்களுள் முக்கியமானவன் ஐயேசு. இவன் தனது செல்வாக்கை உபயோகித்து நிர்வாகப் பொறுப்புகள் சிலவற்றைத் தனதாக்கிக் கொண்டான். இதனால் ஆளுநர்கள் இருவராகினர், நாடும் இரண்டாகப் பிரிந்தது. ஐயேசுவும் அவனது ஆதரவாளர்களும் ஒருபுறம், ரொயோரொமி தலைமைப்பீட ஆதரவாளர்கள் மறுபுறம்.

1600இல் கோடை காலத்தில் பிரச்சனைகள் உச்ச நிலையடைந்து யுத்தமாக மாறியது. ஐயேசு குழுவே வெற்றி பெற்றது. எனினும் பல கிறிஸ்தவ பிரமுகர்கள் போரின் விளைவுகளால் மரணத்தைத் தழுவிக் கொண்டனர். ஐயேசுவுக்கு உதவிசெய்த பிரமுகர்களுக்கு பல்வேறு அன்பளிப்புகளும் வழங்கப்பட்டன. எதிரணியில் நின்ற பிரமுகர்கள் சித்திரவதையும் சிரச்சேதமும் பெற்றனர்.

ஐயேசு தான் வெற்றி பெற்றாலும் பல பிரமுகர்கள் ரொயோரொமி குழுவுக்கு விசுவாசமாயிருப்பதை அறிவான். ஆகவே இளைஞனான கைடெயோரிக்கு எதிராக எதுவித நடவடிக்கையையும் எடுக்கவில்லை. அந்த இளம் வாரீசை (ரெயிகோ குடும்பம்) ஓசாகா மாளிகையில் குடியேற்றி சுற்றியுள்ள நகரங்களையும் அவனது ஆளுகைக்கு உட்படுத்தினான். 1602இல் ஐயேசுவின் பேத்தியான சென்கிமிக்கு (கைடெராவின் புதல்வி) 9 வயதுடைய கைடயோரியை திருமணம் செய்து வைத்தான்.

மினமொட்டோவின் முறையான வாரீசு என்ற வகையில் சோகுன் பதவிக்காக 1603இல் யப்பானிய சக்கரவர்த்தியிடம் விண்ணப்பித்தான். 1605இல் ஐயேசு தன் பதவியை விட்டுவிலக சோகுன் பதவியும் கௌரவமும் அவனது புதல்வன் கைடெரா டாவுக்கு கிடைத்தது. அவன் இடோ மாளிகையில் வாசஞ் செய்தான். ஐயேசு ஓய்வுபெற்றபின் குபோ என்ற கௌரவத்துடன் சும்பு என்ற இடத்தில் வசித்தான்.

டோகுகாவாவின் அதிகாரம் அதிகரித்துக்கொண்டே சென்றாலும் செல்

வாக்கு உயரவில்லை. எனவே ஐயேசு தனது குடும்பத்தினரை இதற்குள் புகுத்த முயற்சிகளை மேற்கொண்டான். சக்கரவர்த்தியும் அவனது முயற்சிகளில் சந்தேகப்படும் நிலை ஏற்பட்டது. 1612இல் இவனது நிர்வாகத்தில் கோ-யுசே தலையிட முயற்சிக்கிறானென்பதை அறிந்தவுடன் ஐயேசு ஒரு படையணியை கியோட்டோவுக்கு அனுப்பினான் சக்கரவர்த்தியை பதவியிலிருந்து அகற்றி கோ - மிசுனோ - ஒ வை பதவி யேற்றினான்.

கைடெயோறி 1608இல் முதுமையடைந்தபடியால் அவனிடமிருந்தும் ஆளுகைக்கு எதிர்ப்பு எதிர்பார்க்கப்பட்டது. அவனைச் சுற்றியிருந்த பிரமாணிக்கமுள்ள ஆதரவாளர்கள் அவனது பதவியை பாதுகாக்கத் தயாராயிருந்தனர். ஐயேசு தருணம் வந்ததும் கைடெயோரியின் பதவிகளை அகற்றி அவனது செல்வாக்கைக் குறைத்தான். இப் பிரச்சனைகள் ஒசாகா கோட்டை யூன் 4இல் பிடிபட்டதுடன் ஒரு முடிவுக்கு வந்தது. 1615களில் ரோகுகாவா படையணிகள் கைடெயோரியையும் அவனது அன்னையையும் எரியும் கோட்டைக்குள் தள்ளிக் கதவுகளை மூடினர். ஐயேசுவின் பேத்தி தப்பியோடினாள். கைடெயோசியின் ஒன்பது வயதினனான புதல்வன் பின்னர் கியோட்டோவில் சிரச்சேதம் செய்யப்பட்டான்.

இவ்விதமே ரொயோட்டோமி குழுவை பழிவாங்கியபின் ஐயேசு நிர்வாக முறைகளில் பல மாறுதல்களைப் புகுத்தி தன்னுடையவும் ஆதரவாளர்களினதும் நிலையை ஸ்திரப்படுத்தினான். ஓவாரி, கிஜி, கிற்றாச்சி பகுதிகளின் பெருந்தலைவர்களாக தனது மூன்று புதல்வர்களையும் நியமித்தான். இவர்களுக்கு வாரிசுகளாக புத்திரர்களில்லாமல் போனால் ஆதரவளிக்கும் பெருந்தலைவர்களிடமிருந்து ஆளுநர்களைத் தெரிந்து கொள்ளவும் விதி செய்தான்.

பொது மக்கள் நான்கு பிரிவினர்களாயினர். சாமுராய் (பிரபுக்கள் குழு) இவர்கள் ஆயுதபாணிகளாக நடமாட அனுமதிக்கப்பட்டனர். கயாகுசோ (விவசாயிகள்). சோகுணின் (கலைஞர்கள்). சோமின் (வர்த்தகர்கள்) கீழ் வரிசையில் பல்வேறு கீழ்த்தர தொழிலாளிகள், பாமர மக்கள், ஏழைகள் என்போர் அடங்கினர். ஆளுநரான சோகுன் அவர்களின் வாசஸ்தலமாகவும் இராணுவ தலைமைப் பீடமாகவும் ஈடோ விளங்கியது. கியோட்டோ தலைநகராகியது. வர்த்தக தலைமைப்பீடங்களாக ஒசாகா, சாகாய், நாகசாகி விளங்கியது.

## வெளித்தொடர்புகளும் வர்த்தகப் போட்டிகளும்

ஐயேசு தன்னாட்டில் அந்நியராதிக்கம் பரவாதிருக்கவும் அதே நேரத்தில் வெளிநாட்டு வர்த்தகத்தை விஸ்தரிக்கவும் திட்டமிட்டான். தானே ஒரு நாவாய் மூலம் வர்த்தகம் செய்ய விரும்பினான். இதற்காக கிறிஸ்தவத்தைப் போதிப்போருக்கு சலுகைகள் அளிக்கவும் முன்வந்தான். ஆயின் அனைத்தும் தன் கட்டுப்பாட்டுக்குள் இருக்க வேண்டுமென்பது அவனது எண்ணமாகும். எனினும் வர்த்தகம், அரசியல், வெளிநாட்டு ஆதிக்கம் என்பன ஒன்றுக்கொன்று பின்னிப்பிணைந்திருந்தன.

ஐயேசு போர்த்துக்கேயருடன் வர்த்தகத் தொடர்புகளைக் கொண்டிருந்தான். 1609 வரை மாகோ வர்த்தகமே முக்கியமாக இடம் பெற்றிருந்தது. போர்த்துக்கேய வர்த்தகர்களுடன் மொழித் தொடர்பு கொள்ள யேசு சபையைச் சேர்ந்த ரொட்ரி குஸ்ரோசு அடிகளின் துணையை அடிக்கடி நாடினான்.

இக்காலகட்டத்தில் ஒல்லாந்தர்கள் கிழக்குப் பிரதேசங்களில் போர்த்துக் கேய, ஸ்பானிய வர்த்தகத்தை அடியோடு அழிப்பதில் முயற்சிகளை மேற் கொண்டிருந்தனர். கடற்கொள்ளைக்காரர்களாக மாறி, மாகாவோ கப்பல்களை பலவந்தமாக மறித்து, விலையேறப்பெற்ற வர்த்தகப் பொருட்களை (இவற்றில் யேசு சபையாரின் தாபரிப்பு நிதிக்கென அனுப்பப்பட்டவைகளும் அடங்கும்) அபகரித்ததுடன், இக் கப்பல்கள் நாகாசாகிக்கு செல்வதையும் தடுத்தனர்.

யப்பானுக்கு வந்த முதல் டச்சு (ஒல்லாந்த) நாவாயின் பெயர் டி லிப்டா. இது முன்னர் எராஸ்மஸ் என அழைக்கப்பட்டது. இது 1600 ஏப்ரலில் பெப்பு குடாவில் உடைந்த நிலையில் பிரவேசித்தது. கேவலமான நிலையில் ஒதுங்கிய இந்நாவாயின் மாலுமிகளுள் ஒருவனான வில்லியம் அடம்ஸ், ஒரு ஆங்கிலேயன். இவன் பின்பு ஒரு யப்பானியப் பெண்ணை மணந்து, யப்பானிலேயே வசித்து வந்தான். இவனது சிறந்த வர்த்தக அறிவாற்றல்களை அறிந்து ஐயேசு தனது ஆலோசகராக அவனைப் பயன்படுத்திக் கொண்டான். 1605 இல் இக்கப்பலின் பிரதான மாலுமி யப்பானை விட்டு வெளியேற அனுமதி பெற்றான். அவன் யப்பானுடன் ஒல்லாந்து, வர்த்தகத் தொடர்பு கொள்ளும் அனுமதிப்பத்திரங் களையும் பெற்றுக்கொண்டான். 1602இல் ஒல்லாந்த வர்த்தக தொழிற்களம் கிராடோவில் 1609இல் நிறுவப்பட்டதென்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

இத்தருணத்தில் ஐயேசு ஸ்பானியருடன் மணிலாவில் நேரடி வர்த்தக நட வடிக்கைகளிலீடுபடத் தருணத்தை எதிர்பார்த்திருந்தான். தனது குடும்ப உரிமைக்களமான கன்ரோவுக்கு ஸ்பானிய நாவாய்கள் அடிக்கடி வருகை தருவதை அவன் பெரிதும் வரவேற்றான். 1509இல் பிரான்ஸ்கன் சபையைச் சேர்ந்த ஜெரோம் டி ஜீசஸ் ஐயேசுவால் மணிலாவிலிருந்த ஆளுநருக்கு சில ஆலோசனைகளுடன் அனுப்பப்பட்டார். எனினும் மணிலாவின் உயர் அதிகாரிகள் சான்பிலிப்பி என்ற தங்கள் நாவாய்க்கு முன்னர் நடந்த பேரழிவுகளை இன்னுமே நினைவில் வைத்திருந்ததால் இவ்வர்த்தகத் தொடர்புகளில் அதிக அக்கறை காட்டவில்லை. ஆயின் ஸ்பானியரின் உண்மையான இலக்கு, யப்பானின் கிழக்குப் பகுதிகளுக்கு பயணிக்கும் தங்கள் வர்த்தகக் கப்பல்கள் தங்கி நங்கூரமிட்டு இளைப்பாறிச் செல்ல - சுதந்திர - தன்னாதிக்கமுள்ள ஒரு சுதந்திர துறைமுகம் தங்கள்வசம் இருக்க வேண்டுமென்பதே. 1608இல் ஆங்கில மாலுமி வில்லியம் அடம்ஸ் மணிலாவுக்கு அனுப்பப்பட்டு, வர்த்தக உடன் படிக்கைகள் செய்துகொள்ளப்பட்டது. எடோ குடாவின் வாயில் துறையான உராகா, ஸ்பானிய நாவாய்களுக்காக திறந்து விடப்பட்டது. பிரான்சீஸ்கன் சபையினரும் தங்கள் இல்லமொன்றை நிறுவினர்.

1609இல் மணிலாவின் முன்னாள் ஆளுநர் ரொட்ரிக்கோ டி விவேரோ, மெச்சிக்கோவுக்குச் செல்லும் வழியில் அவனது கப்பல் கடற்பாறைகளுடன் மோதியதாலேற்பட்ட பேரழிவுகளுடன் பொசோ பெனின்சியுலா கரைகளில் வந்தொதுங்கியது. சோகுன் பதவியிலிருந்த கைடெறாடாவை (ஈடோவில்) சந்தித்தபின் சிசுக் கோவிலுள்ள ஐயேசுவின் சமஸ்தானத்தில் இவர் வரவேற்கப் பட்டார். பேச்சுவார்த்தைகளில் ஒல்லாந்தரை தடைசெய்ய வேண்டுமென்ற அம்சத்தைத் தவிர மற்றனைத்துக்கும் ஐயேசு உடன்பட்டார்.

யப்பானுக்கும் புதிய ஸ்பெயினுக்கும் (மெக்சிக்கோ) இடையிலான நேரடி வர்த்தகத் தொடர்பு பற்றியும் ஆலோசிக்கப்பட்டது. ஐயேசு இதுபற்றி மெக்சிக் கோவின் ஆளுநருடன் தொடர்பு கொண்டிருந்தானெனினும் நிச்சயமான பதில்

கிடைக்கவில்லை. மெக்சிக்கோவிலிருந்து சுரங்க - தாதுப்பொருட்கள் அகழ்வில் கைதேர்ந்த நிபுணர்களையும் சாடோ, இசு என்னுமிடங்களின் தங்கள், வெள்ளிச் சுரங்கங்களில் பணியாற்றவல்ல நிபுணர்களையும் அவன் எதிர்பார்த் தான். மேலும் சிறந்த கப்பல்கட்டும் தொழிலாளர்களை தருவித்து, தன்னாட்டில், தனக்குத் தேவையான நாவாய்களை உருவாக்கவும் திட்டமிட்டான். ஆகவே விவேராவுக்கு (அவரது கப்பல் இன்னமும் திருத்தியமைக்கப்படவில்லை) மெக்சிக்கோவுக்கு வில்லியம் அடம்ஸின் நாவாய்களில் ஒன்றில் பயணிக்கு மாறும், அவருடன் ஒரு தூதுக்குழுவை அழைத்துச் செல்லுமாறும் வேண்டு கோள்விடுத்தான். விவேரா அதை ஏற்றுக் கொண்டான். 1610 ஆகஸ்ட் முதல் தேதியில் விவேரா, பிரான்ஸ்சீஸ்கு சபையைச் சேர்ந்த, அலொன்சோ முனோஸ் உடன் புறப்பட்டான். விவேரா, சிசுகோவில் தங்கியிருக்கையில் 'மாத்ரே டிடேயுஸ்' விவகாரம் யப்பானிலிருந்த போர்த்துக்கேயரை ஒரு உலுக்கு உலுக்கியது.

கிறிஸ்தவ பிரமுகரான அரிமா கருணோபுவின் கப்பல் சம்பாவிலிருந்து பயணிக்கையில் (1608) மாகாவோவில் வந்து தங்கியது. குளிர்கால உல்லாச நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்த மாலுமிகளுக்கும் (யப்பானியர்) போர்த்துக் கேயருக்குமிடையே திடீரென வாதப்பிரதிவாதங்கள் முறுகல் நிலையை அடைந்து தகராறு சண்டையாக மாறியது. பலத்த உயிர்ச்சேதத்தைத் தொடர்ந்து நகர ஆளுநர் அன்டி றெஸ் பெசோவா, இராணுவத்துடன் தலையிட்டு, நிலைமையை சமாளித்து அமைதியுறச் செய்தார். சரணாகதி அடைந்தோருக்கு மன்னிப்பு வழங்கப்பட்டது.

1609இல் பெசோவா 'மாத்ரே டி டேயுஸ்' கப்பலின் பிரதம தளபதியாக நாகாசாகிக்குச் சென்றான். யப்பானியரின் அறிக்கையை அவன் ஐயேசுவிடம் சமர்ப்பித்தான். ஐயேசு உடனடியாக யப்பானியர் மாகாவோ செல்வதற்குத் தடை விதித்தான். தொடர்ந்து துறைமுகத்துக்கு வந்த அரிமாவின் கப்பல் கைப் பற்றப்பட்டது. தனது வீரர்களின் இழப்பினால் ஆத்திரமடைந்தான் அரிமா. நாகாசாகியின் தலைவன் கசெகாவா சகாயோ (இவன் பெசாவோவுடன் கார்கோ வர்த்தகத்தில் தகராறு கொண்டிருந்தான்) யப்பானியர்களின் கொலைகளுக்கு பெசோவாவே காரணி என ஐயேசுக்கு அறிக்கை சமர்ப்பித்தான். மாகோவா வர்த்தகத்தை தன் கைகளில் வைத்திருக்க ஐயேசு விரும்பினாலும், கப்பலையும் வர்த்தகப் பொருட்களையும் கைப்பற்றுமாறும் பெசோவாவை உயிருடன் அல்லது பிணமாக தன்னிடம் கொண்டு வருமாறும் அரிமாவுக்கு கட்டளையிட்டான். பெசோவா தன்னை எதிர்நோக்கும் ஆபத்தை உணர்ந்தான். தக்க பாது காப்பைத் தேடிக்கொண்டான். கப்பலின் பிரதம தளபதி, தனது கப்பலிலுள்ள வர்த்தகப் பொருட்களின் விபரங்களை வெளியிட மறுத்தான். எனவே அரிமா தனது சாமுரே வீரர்களைக் கொண்ட 30 படகுகளுடன் கப்பலைத் தாக்கினான். மூன்று நாள்கள் தொடர்ந்த போரின் பின் 1610 ஜனவரி 6இல் தோல்வி மேல் தோல்வியைக் கண்ட பெசோவா, தனது கப்பலுக்குத் தீமூட்டுமாறு கட்டளை யிட்டான். விலையுயர்ந்த வர்த்தகப் பொருட்களுடன் கப்பலும் வீரர்களும் கொழுந்துவிட்டெரிந்த தீயில் கலந்து மாண்டனர்.

ஐயேசு ஆத்திரங் கொண்டான். யேசு சபையாரே அவன் சினத்துக்குக் காரணி களாயினர். ஐயேசு ஒருபுறமும் போர்த்துக்கேயர் மறுபுறமும் பட்டு வர்த்த கத்தை தமது ஏகபோக உரிமையாக்க எண்ணினர். 1611 ஆகஸ்ட் 4இல்

காகோசிமாவில் வந்திறங்கிய போர்த்துக்கேய பிரதிநிதியான நுனோ டி சொட்டோமேயர், சோகுன், ஐயேசு ஆகியோரால் நல்வரவேற்கப்பட்டார். 1610களில் ஸ்பானியரோ ஒல்லாந்தரோ யப்பானிய நாட்டுக்கு வரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. 1612 களில் மக்காவோவுக்கும் நாகாசாகிக்குமிடையே வர்த்தகத் தொடர்புகள் நிலை நாட்டப்பட்டன.

சொட்டோமேயர் எடோவுக்கு வருவதற்கு ஒருசில வாரங்களுக்கு முன்பு புதிய ஸ்பெயினின் ஆளுநரான செபஸ்ரியன் விஸ்காசினோ உறகாவுக்கு வந்து சேர்ந்தார். சொட்டெலா அடிகள் அவரது மொழிபெயர்ப்பாளர். ஆளுநர், கைடெற்றடாவால் 1611 யூன் 22இல் நல்வரவேற்கப்பட்டார். யூலை 3இல் ஐயேசு அளித்த வரவேற்பைத் தொடர்ந்து விஸ்காசினோ விடுத்த விண்ணப்பத்தில் ஸ்பானிய நாவாய்கள் பாதுகாப்பாக நங்கூரமிடுவதற்குதவியாக கன்ரோ துறையின் கரையோரங்கள் புனரமைக்கப்பட வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். 1611 ஒக்ரோபர் 6இல் உராகாவிலிருந்து புறப்பட்ட விஸ்காயினோ கிழைத்தேசக் கடற்கரைகள் முழுவதையும் மிகக் கவனமாக அளவிட்டார். கென்டாயின் பிரபு முற்சுவால் அவருக்கொரு பெருவரவேற்பு அளிக்கப்பட்டது. சென்டாயிலிருந்து விஸ்காயினோ சோரெலோவுடன் வடபகுதியையும் பார்வையிட்டு எடோவுக்கு 1611 டிசம்பர் 30இல் திரும்பினார்.

யப்பானிய ஸ்பானிய வர்த்தகத் தொடர்புகள் சோரெலோ அடிகளுக்கு அதிக சிரமத்தைக் கொடுத்தன. 1612 ஆகஸ்டில் அவரை ஸ்பெயின் மன்னரிடம் தனது வர்த்தக தூதுவராக அனுப்பினான் சோகுன். அவர் பின்னர் பிலிப்பைன்ஸ், மெக்சிக்கோ நாடுகளுக்கும் அனுப்பப்பட்டார். மசாமுனே, சோரெலோ அடிகளை தனது தூதுவராக பாப்பரசரிடமும் அரசனிடமும் அனுப்பினான். சோரெலோ 1612 ஒக்டோபர் 3இல் அடம்ஸ் அவர்களால் நிர்மாணிக்கப்பட்ட கப்பலில் தனது நீண்ட பயணத்தை ஆரம்பித்தார். ஆயின் அன்றிரவே அக்கப்பல் ஒரு பெரும் பாறையில் மோதி இரண்டாகப் பிளந்தது. சோரெலோ அடிகள் அதிஷ்டவசமாக உயிர்பிழைத்தார்.

விஸ்காயினோவின் நடவடிக்கைகளை ஐயேசு சந்தேகக் கண்ணுடன் பார்த்தான். ஐரோப்பாவில் கீழ்த்திசை நாடுகள் பற்றிய விபரங்களை பல்வேறு நாடுகளும் திரட்டிவருவதால் பெரியதொரு இராணுவ நடவடிக்கைக்கு இடமுண்டு என அடம்ஸ், ஐயேசுவுக்கு கூறினான். 1613 ஆகஸ்டில் எடோவில் ஓர் பெரும் வேதகலாபனை எழுந்தது. சோரெலோ மரணதண்டனை விதிக்கப்பட்டார். மசாமுனே இறுதிவேளையில் எடுத்த நடவடிக்கையால் சோரெலோ காப்பாற்றப்பட்டார். மசா முனே, பிரான்சீஸ்கன் துறவிகளை ஐரோப்பாவில் தன் வர்த்தக தூதுவர்களாக உபயோகித்தான். 1613 ஒக்ரோபர் 28இல் லூயிஸ் சோரெலோ, காசேகுரா ருஸ்னெனாகா ஆகிய இருவரும் மசாமுனேயால் ஸ்பெயினுக்கும் வத்திக்கானுக்கும் உத்தியோகபூர்வ தூதுவர்களாக நியமிக்கப்பட்டனர். இவர்கள் 150 யப்பானியருடன் மெக்சிக்கோவுக்குப் புறப்பட்டனர். ஜனவரி 25இல் அவர்கள் அக்காபுல்கோவில் தரையிறங்கினர். 1614 ஜனவரி 27இல் கைடெறடா தனது வேதகலாபனைத் திட்டத்தை பகிரங்கப்படுத்தினான்.

1613 யூன் 11இல் முதல் ஆங்கிலக் கப்பல் 'குளோவ்' கிராடாவுக்கு வந்து சேர்ந்தது. அது ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியால் அனுப்பப்பட்டது. அதன் வருகையின் முக்கிய நோக்கு யப்பான் நாட்டுடன் வர்த்தகத் தொடர்புகளை ஆரம்பிப்பதே. வில்லியம்ஸ் அடம்ஸின் பிரதிநிதிகளால் பிரதம தளபதி யோண்

சாரிஸ் வரவேற்கப்பட்டு ஐயேசுவுக்கு அறிமுகம் செய்யப்பட்டான். ஒல்லாந் தருக்கு வழங்கப்பட்ட எல்லா சலுகைகளும் இவனுக்கும் தரப்பட்டன. எனினும் ஐயேசுவின் இலட்சியமும் அடம்ஸின் ஆலோசனையுமான உராகாவில் தொழிற் சாலை நிறுவுவதை ஏற்றுக்கொள்ளாத சாரிஸ் தூரத்திலுள்ள கிராடாவில் வர்த்தகத் தொடர்புமையத்தை தொடக்க வேண்டுமெனக் கூறினான். பத்து ஆண்டுகள் மிகச் சிறப்பான நிர்வாகத்தில் வர்த்தக நிறுவனத்தை நடத்தியும் ஒல்லாந்தருடனான போட்டியில் வெல்ல முடியாத நிலையின் 1623 டிசம்பரில் ஆங்கிலக் கம்பனி தனது வர்த்தக நிறுவனத்தையும் தொழிற்சாலையையும் மூடிவிட்டது.

போர்த்துக்கேயரின் வர்த்தக இலக்குகள் முறியடிக்கப்பட்டமை யப்பானில் கிறிஸ்தவம் வளர ஒரு முக்கிய வாய்ப்பாகியது. யப்பானின் வெளிநாட்டு வர்த் தகத்தில் மாகாவோவணிகம் முக்கியமாகக் கருதப்பட்டமையால் போர்த்துக் கேய யேசுசபையினர் மொழிபெயர்ப்பாளர்களாகவும், தொடர்புறுத்துபவர் களாகவும் பணியாற்றும் தேவை உண்டாகியது. ஆயினும் 1613 இல் ஸ்பெயின், ஒல்லாந்து, ஆங்கில நாடுகளும் வர்த்தகப் போட்டிக்குள் நுழைந்தமையால் யப்பானிய கப்பல்களின் செல்வாக்கும் அதிகரிக்க போர்த்துக்கேயரின் வர்த்தக வாய்ப்புக்குறையத் தொடங்கியது. ஐயேசுவின் வர்த்தக ஆலோசகராகப் பணி புரிந்த ரொட்ரிகுஸ் அடிகளை வில்லியம் அடம்ஸ் மாற்றியதைத் தொடர்ந்து, கிறிஸ்தவ போதகர்களை தங்கள் மொழிபெயர்ப்பாளர்களாக நியமிப்பதை குறைத்துக்கொள்ளத் தொடங்கினர் போர்த்துக்கேயர். யப்பானிய வர்த்தகப் பிரமுகர்கள் மாத்ரே டி டேயுஸ் நிகழ்வைத் தொடர்ந்து, ஐயேசு - போர்த்துக் கேயர்கள் மதபோதகரின் துணையின்றியே வர்த்தகத் தொடர்புகளைக் கொள் ளலாம் எனப் பிரகடனப்படுத்தினான்.

மதபோதகத்துக்கு ஒல்லாந்தரின் சதிமுயற்சிகளால் ஏற்பட்ட பின்னடைவு ஒருபுறமிருக்க, யப்பானிய ஆளுநர்கள், புரட்டஸ்தாந்தர்களான ஒல்லாந்த, ஆங்கில வர்த்தகர்களுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களும் திருச்சபைக்கு பாதகமாயிருந்தன. வில்லியம் அடம்ஸ் கத்தோலிக்க திருச்சபையையும் அரசனையும் ஒன்றிணைக்கும் சந்தர்ப்பங்களை இழந்துவிட்டாரென, பொக்சர் கூறினார். எடோவின் சமஸ்தானத்தில் ஒல்லாந்தரும் ஸ்பானியரும் ஆளையாள் விழுங்கும் நிலையிலேயே காணப்பட்டனர். ஸ்பானியர் ஒல்லாந்தரை கொள் ளையர், ஸ்பானிய அரசனுக்கெதிரான ஆக்கிரமிப்பாளர்கள் விசுவாசத்தின் எதிரிகள் எனத்திட்ட, ஒல்லாந்தர் ஸ்பானியரை வெளிநாடுகளை கத்தோலிக்க மதபோதகப் போர்வையில் அடிமைப்படுத்தும் துரோகிகள் எனத்திட்டித் தீர்த்தனர். கத்தோலிக்கம் ஐரோப்பாவில் புரட்டஸ் தாந்த நாடுகளில் எவ் விதம் பின்னடைவு பெற்றது என்பதையும் ஒல்லாந்தர் சுட்டிக் காட்டினர். கத்தோலிக்க நாடுகளான ஸ்பெயினிலிருந்தும் போர்த்துக்காலிலிருந்தும் வந்த கத்தோலிக்க மதபோதகர்கள் தம்முள் ஒற்றுமையின்றி பிணக்கிடுவதும் ஐயேசு வுக்கு புரியாத புதிராக இருந்தது. கிழக்குக் கரையோரமாக விஸ்காயினோ, சோரெல்லோ என்போர் நடத்திய மதிப்பீடும்; ஐயேசு, ஸ்பானிய தூதுவர் மீதும் ஸ்பானிய மதபோதகர்கள் மீதும் ஐயுறவுகளை அதிகரித்தன.

## கிறிஸ்தவத்துக்கெதிரான புனருத்தாரண முயற்சிகள்.

நோபுங்கா, கைடெயோசி ஆகியோரின் ஆளுகையின் கீழ் நலிந்திருந்த

பௌத்தமதத்தை மீண்டும் உரிமையுடையதாக்கவும் பலுகிப்பெருகிவரும் கிறிஸ்தவத்தை கூடியளவு நசுக்கிவிடவும் கருதினான் ஐயேசு. அவனது ஆலோசகர் குழுவிலிருந்த பௌத்த பிக்குகளுக்கு, கிறிஸ்தவம் பற்றிய அறிவு மிகக் குறை வானது. மேலும் யப்பானிய சாம்பிராச்சியத்துக்கு, கிறிஸ்தவத்தால் பேராபத்து உண்டாகும் என அவர்கள் அஞ்சினார்கள்.

தனது ஆளுகையின் இறுதிக்காலத்தில் (கிறிஸ்தவம் பற்றிய விடயங்களில்) ஐயேசு, சுடென் (*1569 - 1633*) என்ற சென் மதக்குருவின் ஆலோசனைகளையே நாடினான். இப்புத்தபிக்கு வேதகலாபனையின் காரியகர்த்தாக்களுள் மிக முக்கியமானவன். நியோ கொன்பியுசியத்தைச் சேர்ந்த சில பண்டிதர்களும் கிறிஸ்தவ எதிர்ப்பின் முன்னணியிலிருந்தனர்.

பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நியோ கொன்பியுசிசம் பௌத்த மதத்தின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டது. ரோகுகாவா ஆளுகை யாளரின் ஆதரவில் அது வளர்ந்தது. ஐயேசுவும் கொன்பியூசியானிசத்தைப் படிப்பதில் அக்கறை காட்டினான். *1606*இல் கையேசி றசான் (*1583 - 1657*), கொன்பியூசி யானிசத்தின் போதகராக பதினேழாம் நூற்றாண்டின் முற் பகுதியில் யேசுசபைத் துறவி பேபியன் புகானுடன் மதசம்பந்தமான மிக நீண்ட கலந்துரையாடலில் ஈடுபட்டார். கிறிஸ்தவ கடவுளின் முதன்மை, கொன்பியூசியன் இலக்குகள் என்ற தலைப்புகளில் இக்கலந்துரையாடல் பல உண்மைகளை எடுத்துக் காட்டியது. இக்கலந்துரையாடல் மேலும் யப்பானிய யேசுசபையாரில், அறிவாற்றல் மிக்கவரான பேபியன், இளம் கொன்பியூசி யன்சை மனநோகப் பண்ணிவிட்டார் என்றும் பேசப்பட்டது.

நாட்டை நல்லமுறையிலும் பெலமான முறையிலும் பராமரிப்பதற்காக, ரோக்குகாவாவிலுள்ள சோகன்ஸ் குழுவினர், வழமையான சின்ரோ கலாசாரங் களையும் நடைமுறைகளையும் அமுலுக்குக் கொண்டு வந்தனர். தேசிய தெய்வ வணக்கங்களும் நடைமுறைப்படுத்தப்பட்டன. பழைய சின்ரோ வைபவங்கள் இடம் பெற்றதுடன் தேசிய தெய்வங்களுக்கான கோவில்களும் உருவாக்கப் பட்டன. பொன்சுன் என்பவர், சின்ரோ பிரச்சனைகள் சம்பந்தமாக ஐயேசுவுக்கு ஆலோசகராக நியமிக்கப்பட்டார். ஆரம்ப காலங்களில் சின்ரோ மதம், கொன் பியூசியானிசத்துக்கு எதிரானதாக எண்ணப்படவில்லை.

இந்நிலையில் பௌத்தம், கொன்பியூசியானிசம், சின்ரோசிசம் ஆகிய மார்க்கங்களின் கொள்கைகள் சித்தாந்தங்களை ஆழமாக கற்றாலன்றி கிறிஸ்தவமே உண்மையான மதம் என்பதை நிரூபிக்க முடியாதென யேசு சபையார் உணர்ந்தனர். நாகாசாகியிலுள்ள யேசு சபைக்கல்லூரியில், யப்பானிய இருமன், டோயுகு (தொண்டர்கள்)க்களுக்காக புத்தமத எதிர்ப்புக் கோட்பாடு களை நன்கு விளக்க, வகுப்புக்கள் தொடங்கப்பட்டன. கியோட்டோவிலிருந்து வந்த ஒரு யப்பானிய துறவி இவ்வகுப்புகளின் விரிவுரையாளராக நியமிக்கப் பட்டார். இவர் கிறிஸ்தவத் துறவி என்ற முறையிலல்ல, பல துறைகளிலும் அறிவைத் தேடியடையும் ஒருவர் என்ற முறையில் யப்பானிய பிறமத கோவில் களுக்கு அடிக்கடி சென்று அவர்களது மதக்கொள்கைகளை ஆழமாக அறிந்து கொண்டார். எனவே அவரிடத்தில் கற்ற தொண்டர்கள் யப்பானிய பூர்வீக மதங்களிலுள்ள தவறுகளை எடுத்துக்காட்டி, கிறிஸ்தவமே சிறந்ததென நிரூபிக்கும் ஆற்றலுடையவராயினர்.

*1606 - 1607க்கான அறிக்கையில் பேஜ்ஸ், கியோட்டோவில் 7 குருக்களும் 13 துறவிகளும் இருந்ததாகக் குறிப்பிடுகிறார். இத்துறவிகள் அறிவாற்றல் படைத்த ஒரு துறவியால் பயிற்றுவிக்கப்படுகிறார்களெனவும் அறிக்கை மேலும் கூறுகிறது.*

### வேதபோதக நடவடிக்கைகள்

#### அ. ஐயேசுவின் அதிரடி நடவடிக்கைகள்

*வர்த்தகம் சம்பந்தமாக, கிறிஸ்தவ நாடுகளான ஸ்பானியரும் போர்த்துக் கேயரும் தம்முள் பிணங்கிக்கொண்டமை கத்தோலிக்க எதிர்ப்பு நாடுகளான ஒல்லாந்த, ஆங்கிலேய நாடுகளின் யப்பானிய பிரவேசத்துக்கு நல் வாய்ப்புக் களை அளித்தது. அதுபோல கைடெயோசியின் மரணம் தொடக்கம், பின்னர் நடந்த மாபெரும் வேதகலாபனைவரை மதபோதக அலுவல்கள் வெகு சிறப்பாக நடத்தப்பட்டன.*

*தொடக்க நாட்களில் ஐயேசு, மதபோதகர்கள் மட்டில் சகிப்பு மனப் பான்மையுடன் நடந்து கொண்டான். தனிப்பட்ட முறையில் கிறிஸ்தவ சித்தாந் தங்களில் அவனுக்கு ஆர்வம் இல்லை. நட்பு மனப்பாங்கே அவனுடையதாயி ருந்தது. வர்த்தக உறவுகளே அவனது குறிக்கோள். ஆயின் தமக்குக் கிடைத்த சுதந்திரத்தை முழுமையாக உபயோகிப்பதில் மதபோதகர்கள் சிரத்தையுள்ள வர்களாயிருந்தனர். போர்த்துக்கேய வர்த்தகர்களுடன் ஐயேசு தொடர்பு கொள்வதற்கு, றொட்ரிகுஸ் ருகுசு மொழிபெயர்ப்பாளராக உதவியளித்தார். 1601 இல் மூன்று தேவாலயங்கள் (நாகசாகி, கியோட்டோ, ஒசாகா என்னு மிடங்களில்) அரச அங்கீகாரத்துடன் யப்பானிய கிறிஸ்தவர்களின் ஆன்மீக தேவைகளுக்கு உதவின. கைடெயோசி இவைகளுக்கு அங்கீகாரம் வழங்கிய துடன் அரிமா, ஒமுறா முதலிய பகுதிகளிலும் மதபோதகம் செய்ய அனுமதி யளித்தான். எடோவிலும் (1599) உரகாவிலும் (1608) ஆலயங்கள் அமைப் பதற்கு பிரான்சீஸ்கன் சபையினர்க்கு அனுமதி வழங்கப்பட்டது. ஏனைய இடங்களில் அவ்வப்பகுதித்தலைவர்களின் சொந்த விருப்பு வெறுப்புகளுக் கிணங்கவே மதபோதகம் இடம்பெற்றது. 1606இல் ஆயர் லூயிஸ் செர்குயிரா ஆண்டகைக்கு ஐயேசு, கியோட்டோவில் (இந்தியாவின் இராசப்பிரதிநிதியின் தூதுவராக அல்ல) திருச்சபையின் உத்தியோகபூர்வ பிரதிநிதியாக, ஒரு பெரிய வரவேற்பை அளித்தான். ஓராண்டின் பின், துணைமாகாண அதிபதி, பிரான் சீஸ்கோ பாசியோ அடிகளார் ஐயேசுவின் சிசுகோ சமஸ்தானத்தில் நல்வர வேற்கப்பட்டார். இவருக்கு சோகுன் கைறெடாவும் எடோவில் வரவேற் பளிக்கத் தவறவில்லை. இவ்வரவேற்புகள், போர்த்துக்கேய வர்த்தகத்துக்கு அதிக உதவியளிக்குமென ஐயேசு நம்பினான். 1599இல் ஜெரோம் டி ஜீசஸ் கைதுசெய்யப்பட்டு ஐயேசுவிடம் கொண்டுவரப்பட்டபோது அவரை மரியாதையாக நடத்துமாறு உத்தரவிட்டான். மேலும் ஸ்பானியருடன் வர்த்தகத் தொடர்புகளை தொடங்க உதவுமாறு கேட்டுக் கொண்டான் எடோவில் ஒரு கிறிஸ்தவ இல்லம் அமைக்கவும் உதவி வழங்கப்பட்டது.*

*எனினும் பகுதிகளினதும் பிரதேசங்களினதும் தலைவர்கள், கிறிஸ்தவர்க ளாகப்படாது எனத்தடை விதிக்கப்பட்டது. 1600க்கும் 1614க்குமிடைப்பட்ட காலத்தில் வேகசா பிரதேசத்தின் பிரபுவான கியோகோகு ராகற்சுகு தன் மனைவிமக்களுடன் (1602) இரகசியமாகத் திருமுழுக்குப் பெற்றான். வர்த்த கர்கள், விவசாயிகள் பலரும் இவ்விதமே திருமுழுக்குப் பெற்றனர்.*

இக்கால கட்டத்தில் மதபோதகர்களின் தொகை அதிகரித்தது. 1607இல் யப்பான் நாட்டில் 140 யேசுசபைப்பரித்தியாகிகள் இருந்தனர். அவர்களில் 63 பேர் குருக்கள். ஏனையோர் அருட்சகோதரர்கள். 1604க்கும் 1613க்குமிடையே ஏழு யப்பானிய மாவட்டக் குருக்கள் திருநிலைப்படுத்தப்பட்டனர். 1602 இல் முதலாவது ஸ்பானிய டோமினிக்கன் குருவும், அகஸ்தீனிய குருவும் வந்து சேர்ந்தனர்.

வெவ்வேறு சபைகள் வேதபோதக அலுவலில் ஈடுபடும்போது, அவைகளிடையே பிரச்சனைகள் ஏற்படுவது சகஜம். எனவே எட்டாவது கிளமென்ற் பாப்பிறை சில ஒழுங்குகளை அவர்களிடையே அறிவித்தார். விசுவாசிகளின் தாபரிப்புநிதியில் மதபோதகப் பணிகளை மேற்கொள்பவர்கள் (கோவா வழியாக யப்பானுக்குச் சென்றவர்கள்) தொடர்ந்து தம்பணியைச் செய்யலாமெனவும், மணிலா வழியாகச் சென்றவர்கள், பிலிப்பைன்ஸ் நாட்டுக்கு திருப்பி அனுப்பப்படவேண்டுமென்பதே பாப்பரசரின் விதிமுறை. மேலும் மத போதகர்கள் தாங்கள் சார்ந்திருக்கும் சபையின் முகாமையாளர்களின் கட்டளைப் படியே நடக்க வேண்டுமென்றும்; ஆயின் நற் செய்திப் போதனை, அருட்சாதனங்களை வழங்குதல் ஆகிய கருமங்களில் தங்கள் மறைமாவட்ட ஆயர்களுக்கு அமைந்து செயலாற்ற வேண்டுமென்பதும் பாப்பிறையின் கட்டளை. ஒரு அப்போஸ்தலிக்க ஸ்தானாதிபதியின் அதிகாரங்கள் ஆயர்களுக்கு உண்டு. போதகசபைகளுக்கிடையே அவ்வப்போது நிர்வாகம் சம்பந்தமாக ஏற்படக் கூடிய பிரச்சனைகளுக்கு, ஆயர்களின் தீர்ப்பே இறுதியானதாகும்.

பாப்பிறையின் அறிக்கை, பல்வேறு பிரச்சனைகளை உருவாக்கும் தர்ம சங்கட நிலையை அளித்தது. வாதப் பிரதிவாதங்கள் பலமாக எழுந்தன. இறுதியாக 1608 ஜூன் 11இல் 5ஆவது சின்னப்ப பாப்பிறையின் அறிவிப்பால், எங்கிருந்து எவ்வழியாக பயணம் செய்தவர்கள் என்ற பாகுபாடின்றி, கத்தோலிக்க மதபோதகர்கள் அனைவரும் நற்செய்திப் போதனையில் ஈடுபடலாம். அருட்சாதனங்களை வழங்கலாம் என்றும், மதபோதகர்கள் அம் மறைமாவட்ட ஆயர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்றும் தெரிவிக்கப்பட்டது.

### ஆ. யேசு சபையினரின் பணி

♦ நற்செய்திப்பணி, பாரிய மனந்திருப்புகை.

கைடெயோசி 1598 செப்ரெம்பர் 16இல் மரணமானான். யேசு சபையினரும் பழைய பணித்தளங்களுக்குத் திரும்பிச் சென்றனர். பல பழைய கோவில்கள் மீண்டும் புதுப்பிக்கப்பட்டன. கிறிஸ்தவ சபைக்கு, யப்பானிய கிறிஸ்தவ பிரமுகர்கள் பகிரங்கமாக பல்வேறு வழிகளிலும் உதவினர். தென்கைகோ பகுதியில் 25,000 திருமுழுக்குகள் 1599இல் இடம்பெற்றன. உற்றோவில் 6,000 பேர் மனந்திரும்பித் திருமறையில் சேர வேறுபகுதிகளில் 17,000 பேர் சத்திய மறையில் இணைந்தனர். ஆயர் சேர்குயிராவின் அறிக்கையின்படி 1598 - 1599இல் திருமுழுக்குப் பெற்றோர் தொகை 70,000.

ஆயின் அடுத்த ஆண்டிலேற்பட்ட ஆட்சிமாற்றத்தைத் தொடர்ந்து கிறிஸ்தவர்கள் மீது மாபெரும் கலாபனை ஒன்று கட்டவிழ்த்துவிடப்பட்டது. ஏராளமான கிறிஸ்தவர்கள் கொல்லப்பட்டனர். பலர் காடுகளில் ஒளிந்து கொண்டனர். வலிக்னோவின் அறிக்கை (1603) 20,000க்கும் குறைவான கிறிஸ்தவர்களே எஞ்சியிருந்தனர் எனக் கூறுகிறது.

ஒழுங்குமுறையான அப்போஸ்தலிக்கம்

*1600இல் கொனிசி யுகிநாகா பகுதியில் நடைபெற்ற உள்நாட்டுப் போர்கண்டு ஐயேசு அதிர்ச்சியுற்றான். மதபோதகர்களுக்கெதிராக நடவடிக்கை எடுக்க முடியாதது கண்டு வருந்தினான். 1601இல் இராசப்பிரதிநிதி விடுத்த அறிக்கையில் நாகாசாகி, கியோட்டோ, ஒசாகாவின் ஆலயங்கள் சட்டபூர்வ மானவை எனக் குறிப்பிட்டிருந்தார். 1601 தொடக்கம் யப்பானிய திருச்சபை சுதந்திரக் காற்றை நன்கு சுவாசித்தது. மதபோதகர்கள் ஆர்வத்துடன் மேய்ப்புப் பணியில் ஈடுபட்டனர். திட்டமிடப்பட்ட அப்போஸ்தலப் பணி, நடைமுறைப் படுத்தப்பட்டது. யேசுசபையில் 140 பேர் (63 குருக்கள், 77 பொதுநிலைச் சகோதரர்கள்) 1607இல் நற்செய்திப் பணியில் ஈடுபட்டனர்.*

*கிறிஸ்தவத்தின் மையமாக விளங்கியது நாகாசாகி. 40,000க்கும் அதிக மான கத்தோலிக்கர் இங்கு வசித்தனர். 1601இல் ஆயர் வசிக்கும் தலைநகர் ஆகியது. யேசுசபைக் கல்லூரியும் குருமடமும் அதே ஆண்டில் நிறுவப் பட்டன. யப்பானிய முதலாவது யேசுசபைக் குருக்கள் செபஸ்ரியன் கிமுறா, லூயிஸ் நியாப்ரா 1601இல் திரு நிலைப்படுத்தப்பட்டனர். முதலாவது மாவட்டக் குரு 1604இல் திருநிலை பெற்றார். இவர் ஆயர் இல்லத்தில் இறையியலில் பயிற்சி பெற்றவர். 1602இல் ஆயரின் ஆசனக்கோவிலாக உத்தா னமாதா ஆலயம், மிக அழகிய முறையில் அமைக்கப்பட்டது. 1605இல் முத லாவது நற்கருணைப்பவனி, கோலாகலமாக நடத்தப்பட்டது. 1611களில் நாக சாகியில் 11 கத்தோலிக்க ஆலயங்கள் இருந்தன. நாகசாகி 'யப்பானின் உரோமை' ஆகிக் கொண்டிருந்தது.*

*அடுத்து 1607களில் அரிமாவும் மேய்ப்புப்பணிகளில் சாதனை படைக்கத் தொடங்கியது. ஒரு கல்லூரி மாணவர்களுக்கு அறிவியலுடன் கத்தோலிக்கத் தையும் கலந்து ஊட்ட, ஒரு குருமடம் (80 மாணவருடன்) குருக்களை உருவாக்கத் தொடங்கியது. 30 யேசுசபையினர் (16 குருக்கள் + 14 துறவிகள்) இந்நிறுவனங்களிலும் ஆரி, சிம்பாரா, செய்கோ, சிஜிவா, காசுசா, குசினோட்சு ஆகிய பங்குகளிலும் அமாகுசாவிலுள்ள இரு பணித்தளங்களிலும் வியத்தகு பணியாற்றினர். ஒமுரா நிர்வாக தலைமைப்பீடமாகியது. மத்திய யப்பானின் நிர்வாகத் தலைமைப்பீடமாக கியோட்டோ விளங்கியது. ஏழு குருக்களும் பதின்மூன்று துறவிகளும் இங்கு நோட்டோ, எசிசென், ஒமி, ஒவாரி, கரிமா ஆகிய பிரதேசங்களின் ஆன்மீக தேவைகளைக் கவனித்தனர்.*

*எனினும் தொகையான திருமுழுக்குகள் இடம்பெறவில்லை. பொதுமக்கள் மனந்திரும்பி சத்திய மறையை அனுசரிப்பினும் அவர்களது கிராமிய தலை வர்களும் பெரும் பிரதேசத் தலைவர்களும் திருமுழுக்குப் பெறுவதை ஆட்சிப் பீடம் தடுத்தது. எனினும் 1602 தொட்டு 1613 வரை ஆண்டுக்கு 5000க்கு மதிகமானோர் திருமுழுக்குப் பெற்றிருந்தனர். இவ்விதம் திருமுழுக்குப் பெற்ற அனைவரும் நற்செய்தியில் கணிசமான அறிவைப் பெற்றதோடு கத்தோலிக்க சித்தாந்தங்களில் நல்ல பயிற்சியையும் பெற்றனர். மேலும் அருட்சாதனங் களையும் முறையாகவும் பக்தியோடும் பெற்று வந்தனர். ஆயர் சேகுயிரா ஆண்டகையும் கூடுமானவரை பங்குகளுக்குத் தரிசனைதந்து ஊக்குவித்தார்.*

*இந்நிலையைக்கண்டு ஆத்திரங்கொண்ட அலகையும் தன் கைவரிசையைக் காட்டத் தொடங்கியது. 1614இல் கத்தோலிக்க எதிர்ப்பியக்கம் பிரகடனப்*

படுத்தப்பட்டது. கைகோ, காட்டோகியோமாசா, முதலிய இடங்களில் அது ஏற்கனவே சிறுசிறு கலகங்களாகத் தொடங்கியது. பின்னர் கத்தோலிக்கர் மேல் வன்செயல்கள் ஏவிவிடப்பட்டன. கத்தோலிக்க வீடுகள் சூறையாடப்பட்டன. வேதகலாபனை உச்சக்கட்டமாக மாறியது. யேசுசபையினர் மீதும் திட்ட மிட்ட தாக்குதல்கள் மேற்கொள்ளப்பட்டன. அவர்கள் மாகாவோ வர்த்தகத் தால் பெற்றுவந்த வருமானமும் வீழ்ச்சியடைந்தது.

ஆயர் சேர்குயிராவின் அறிக்கையின்படி எல்லாக் கத்தோலிக்க தேவால யங்களும் குருமனைகளும் பெருஞ்சேதமுற்றன. கத்தோலிக்க திருச்சபை பெரும் நட்டத்தையடைந்தது. உதாரணமாக யேசு சபையார் 126 குருக்கள், 284 குரும டத்தினர், 170 தொண்டர்களைத் தாபரிக்க வேண்டியிருந்தது.

1599இல் 4 லட்சம் கிறிஸ்தவர்கள் இறைசாட்சிகளாக இரத்தம் சிந்தி உயிர் நீத்தனர். உரோமிலுள்ள மறைபரப்புத் திணைக்களத்தின் பெருந்தலைவர் ஜில் டிலா மாற்றா அடிகள் கப்பல் விபத்தில் உயிர்துறந்தார். கப்பலும் பெருஞ் சேதமடைந்தது. யப்பானிலுள்ள மறைபரப்பு அலுவலகத்துக்கு 1603லும் 1604லும் உணவுப் பொருட்கள், பராமரிப்புப் பொருட்களை ஏற்றிவந்த கப்பல்கள் ஒல்லாந்தரால் சூறையாடப்பட்டன.

## இ. பிரான்சிஸ்கு சபையின் பணிகள்

நாகாசாகியில் நடைபெற்ற பெரும் வேதகலாபனையின் பின், பிரான்சீஸ்கு சபையினரான ஜெரோம் டி ஜீசஸ், லூயிஸ் கோமஸ் அடிகளார் ஆகிய இரு வரும் யப்பானுக்கு வந்து சேர்ந்தனர். கோமஸ், கைகோவில், கைதுசெய்யப் பட்டு மணிலாவுக்கு அனுப்பப்பட்டார். ஜெரோம், ஐயேசுவினால் நல்வர வேற்கப்பட்டார். ஐயேசு, ஸ்பானியருடன் வர்த்தக உறவுகளை பெருமளவில் செய்வதற்கு ஜெரோமை மொழி பெயர்ப்பாளராக உபயோகிக்கத் திட்ட மிட்டான். ஜெரோம், எடோவில் ஒரு தேவாலயம் கட்டவும் ஐயேசுவிடம் அனுமதி பெற்றார். ஸ்பானிய கப்பல்கள் தனது ஆளுகைக்குட்பட்ட துறைகளுக்கு வரவேண்டுமென்ற பேராவவே கன்ரோ மாவட்டத்தில் சத்திய மறையைப் பரப்புவதற்கு பிரான்சீஸ்கன் சபையினருக்கு பேருதவியாயிருந்தது. எடோவில் அமைக்கப்பட்ட தேவாலயம் செபமாலை அன்னைக்கு நேர்ந் தளிக்கப்பட்டு, 1599 பெந்தக்கோஸ்தே விழாவில் திறக்கப்பட்டது.

நவம்பரில் ஐயேசு, ஜெரோம் அடிகளை மணிலாவுக்கு வர்த்தகத் தொடர்புகள் சம்பந்தமாக, தனது தூதுவராக அனுப்பினான். பழைய நிபந்த னைகளே முன்வைக்கப்பட்டன. இதே காலத்தில் எடோவிலிருந்த தேவாலயம் குருக்களின்றி அனாதரவாக விடப்பட்டது. 1601 ஜூனில் அவர் மீண்டும் யப்பா னுக்கு வந்து சேர்ந்தார். அவருடன் லூயிஸ் கோமஸ் அடிகளும் பீட்ரோ டி பேர்குயிலோஸ் துறவியும் வந்தனர். ஆயின் அவர் அவ்வருடம் ஒக்டோபர் மாதத்தில் இறைவனடி சேர்ந்தார்.

1602இல் டி பேர்குயிலோஸ் சகோதரர், ஐயேசுவின் கடிதத்துடன் மணி லாவுக்கு அனுப்பப்பட்டார். ஜூலை 3இல் பேர்குயிலோஸ் 7 பிரான்ஸ்சீஸ்கன் களுடன் திரும்பினார். ஸ்பானியர்கள், மதபோதகர்களையே அனுப்பிக் கொண்டிருக்கிறார்களே தவிர, கப்பல்களை அனுப்பவில்லையென ஐயேசு ஆத்திரங்கொண்டான். நான்கு பிரான்சீஸ்கன் குருக்கள் எடோவுக்கும்

ஏனையோர் கியோட்டோ, புஸ்சினி ஆகிய இடங்களில் புதிய ஆலயங்களைத் திறக்கவும் அனுப்பப்பட்டனர். 1608இல் சோரெலோவின் தீவிர முயற்சியால் ஸ்பானிய வர்த்தகம் துரிதமாக முன்னேற, ஐயேசுவும் மனமகிழ்ந்து, உரகாவில் ஒரு தேவாலயமும் கன்னியர் மடமும் கட்டியெழுப்ப அனுமதியளித்தான்.

சோகுன் உயர்வம்சத்தவருடனும், பெருந்தலைவன் ஐயேசு மற்றும் பிரபுக்களுடனும் தொடர்புகள் உறவுகள் கொண்டிருந்தாலும் பிரான்சீஸ்கன் சபையினர் தங்கள் பிரதான இலக்கை, பொதுமக்கள் தாழ்த்தப்பட்டவர்கள், குஷ்டரோகிகள், ஏழைகள் ஆகியோருக்கு இயேசுவைப் போதிப்பதை மறந்து விடவில்லை. அவர்களது தேவாலயங்களோ அல்லது மடங்களோ ஆடம்பர மற்றவை. அவர்களது இறைபணியுடன் இலவச மருத்துவப்பணியையும் சிறப் பாக நடத்தினர். பயிற்சி பெற்ற இல்லறத் தொண்டர்கள் இங்கு மருத்துவர் களாக, ரண வைத்தியர்களாக பணியாற்றினர்.

வட யப்பானிலும் இயேசுவை அறிமுகப்படுத்தியவர்கள் பிரான்ஸ்சீஸ்கன் சபையினரே. பெருந்தலைவன் டேற் மசாமுனேயின் வைப்பாட்டிகளுள் ஒருத்தி கடும் நோயால் வருந்தியபோது பிரபல மருத்துவர்களால் கைவிடப்பட்ட நிலையில், அந்த நோயைக் குணப்படுத்தியவர் சகோதரர் பேர்குயிலோஸ் அவர்களே (1610) இதற்கு நன்றியாக டேற், தனது சமஸ்தானத்தில் சத்திய மறையைப் போதிப்பதற்கு எவ்வித கட்டுப்பாடுமில்லையென முகாமையாளர் சோரெலோ அடிகளுக்கு அறிவித்தான். சோரெலோ கிறிஸ்தவ சித்தாந்தம் பற்றிய விளக்கங்களை, தாமே டேற் தலைவனுக்கு கற்பித்தார். 1611 நவம்பரில் டேற் தனது சமஸ்தானத்தில் சமய வழிபாட்டுச் சுதந்திரத்தைப் பிரகடனம் செய்தான். சோரெலோ சென்டாயில் 1800 பேரை மனந்திருப்பி, அவர்களுக் காக ஒரு கோவிலையும் கட்டினார்.

1612இல் எடோவில் வேதகலாபனை ஆரம்பமாகியது. ஆலயமும் கன்னியர் மடமும் சின்னாபின்னப்படுத்தப்பட்டன. எல்லா மதபோதகர்களும் கைடரெடாவின் உத்தரவுப்படி வெளியேற்றப்பட்டனர். அவர்களில் சிலர் புசிமிக்கும், சிலர் நாகாசாகிக்கும் சென்றனர். சோரெலோ மட்டும் தங்க அனுமதிக்கப்பட்டார். காரணம், சோகுன் அவரை புதிய ஸ்பெயினிலுள்ள இராசப்பிரதிநிதியிடம் தனது தூதுவராக அனுப்பவிருந்தான். 1613 ஜூனில் சோரெலோ ஒரு சிற்றாலயத்தை அசாகுசாவில் உருவாக்கினார். அது பெரிய பிரச்சனையை உருவாக்கியது. ஏழைகளான 27 கிறிஸ்தவர்கள் கொல்லப் பட்டனர். (1613 ஆகஸ்ட் - செப்ரெம்பர்) சோரெலோவும் மரண தண்டனை விதிக்கப்பட்டார். ஆயின் டேற் மசாமுனேயின் வேண்டுகோளினால் விடுவிக்கப்பட்டார். முன்னர் நாம் தெரிவித்தபடி சோரெலோவும், காஸ்கவா ரசுனகாவும் - டேற்றின் பிரதிநிதிகளாக ஸ்பெயினுக்கும் வத்திக்கானுக்கும் அனுப்பப்பட்டனர் (1613 ஒக்ரோபர்).

பொது வேதகலாபனை தொடங்கியபோது, யப்பானில் 26 பிரான்சீஸ்கன் குருக்கள் இருந்தனர். எடோ, நாகாசாகி, ஒசாகா, கியோட்டோ, புசிமி, வெக யாமா, உரகா என்னுமிடங்களில் மடங்களையும், மருத்துவமனைகளையும் இவர்கள் நிர்வகித்தார்கள். இச்சபையினரால் மனந்திருப்பப்பட்டோர் தொகை தெரியவில்லை. எனினும் 1613இல் ஆயர் சேர்குயிரா எழுதிய மடலில் 1611இல் 7000 திருமுழுக்குகளும் நடத்தப்பட்டன என்கிறார்.

### அ. டொமினிக்கன் சபையாரின் அப்போஸ்தலம்

சற்சுமா பிரதேசத்தின் தலைவர் சிமாசு இயிசாவின் அழைப்புக் கிணங்கவே டோமினிக்கன் சபையினர் யப்பான் நாட்டுக்கு வந்து சேர்ந்தனர். அவனது முதல் அழைப்பில் கோசிகி துறைமுகத்தை போர்த்துக்கேய கப்பல்கள் உபயோகித்தால் யேசு சபையாருக்கு ஒரு சிற்றாலயமும், வீடும் கட்டித்தரு வதாகக் கூறியிருந்தான். யேசு சபையாருக்கு சிமாசு வர்த்தகத்திலே மட்டும் குறியாயிருப்பதும் மதம்பற்றி அக்கறை இல்லாததும், ஐயேசுவுடன் அவன் பிணக்குப்படுவதும் நன்கு தெரியும். ஆகவே அவர்கள் இவ் வேண்டுதலை நிராகரித்துவிட்டனர்.

ஆயினும் டோமினிக் சபையினர் இவ்வொப்பந்தத்தை ஏற்றுக்கொண் டனர். எனவே முதற்குழுவில் நான்கு குருக்களையும் ஒரு அருட்சகோதரரையும் அனுப்பினர். கோசிகியில் இக்குழு 1602 ஜூலை 3இல் வந்திறங்கியது. உடனே அவர்கள் காகோசிமாவுக்குச் சென்றனர். ஆயின் நகரபிதாக்கள் இக் குழுவை ஏற்றுக் கொள்ளவில்லை. சிமாசுவும் நடந்தவைகளை ஆராய்ந்து முடி வெடுக்காது தனது முன்னைய வாக்குப்படி அவர்களுக்கு எந்த உதவியும் செய்யவில்லை. ஏமாற்றமடைந்த இக் குழு கோசிக்குத் திரும்பியது. பின்பு மிகக் கடுமையான முயற்சிகளைத் தொடர்ந்து ஒரு கிறிஸ்தவ வர்த்தகரான லீயோ கிஜெமென் உதவியுடன் ஒரு இல்லம் அமைக்கப்பட்டது.

1603இல் டோமினிக்கர்கள் கியோடொமரியில் குடியிருக்கவும், மத போதகம் செய்யவும் அனுமதி பெற்றனர். நிறைவாகப் பணிபுரிந்தும் குறைந்த பயனையே பெறவேண்டியதாயிற்று. எனினும் 1606 ஜூலையில் ஒரு ஆலயத்தை அமைத்தனர். ஆயின் சற்சுமாவில் அப்போஸ்தலிக்க அலுவல்கள் எதிர்பார்த்த அளவு திருப்தியாக அமையவில்லை. 1605இல் வேதபோதக மேலதிகாரி களான தோமஸ் கெர்னாண்டஸ், தே மேனா என்போர், ஒமூராவிலுள்ள கிறிஸ் தவர்களைத் தரிசிக்க வருகைதந்த போது, யேசுசபையினர் வெளியேற்றப் பட்டிருப்பதைக் கண்டனர். 1606இல் டோமினிக்கர்கள் வேறு மாநிலங் களுக்கும் தம்பணியை விஸ்தரித்தனர்.

1608இல் (மதபோதகர்களின் வருகையைத் தொடர்ந்து) ஸ்பானிய வர்த்தக நாவாய்கள் தனது துறைமுகங்களுக்கு வராததையிட்டு சிமாசு, ஆத்திரம் கொண்டான். தனது ஆளுகைக்குட்பட்ட பகுதிகளில் திருச்சபைக்கு எதிரான கலாபனைகளைத் தூண்டிவிட்டான். இதனால் டொமினிக்கன் சபையி னரே அதிகபாதிப்புக்குள்ளாயி னர் (1609). மொராலெஸ் அடிகள் நாகாசாகியி லிருந்து வெளியேறினார்.

அதே காலத்தில் யோசவ் கைசிந்த் அடிகள், கியோட்டோவுக்குச் சென்று ஆலயம் ஒன்று அமைப்பதில் வெற்றிகண்டார். பின் 1610இல் ஒசாகாவிலும் ஒரு கோவிலைக் கட்டினார். 1613இல் டோமினிக்கர்கள் கிசானிலிருந்து வெளி யேற்றப்பட்டனர். 1614இல் யப்பான் நாட்டில் ஒன்பது டோமினிக்கர்களே மதபோதக பணியில் எஞ்சியிருந்தனர்.

### உ. அகஸ்தீனியரின் மேய்ப்புப்பணி

முதலில் யப்பான் நாட்டுக்கு வருகைதந்த அகஸ்தீனிய மேய்ப்புப்பணி யினர் தியாகோ தே குவாரா அடிகளும் எஸ்ராசியோ ஒரிற்சு அடிகளுமே.

இவர்கள் 1602 ஆகஸ்ட் பன்னிரண்டில் கிராடோ நகருக்கு வந்து சேர்ந்தனர். உடனடியாகவே தே குவாரா அடிகள் கியோட்டோவுக்கு அனுப்பப்பட்டு மறைபரப்புப் பணிகளை ஆரம்பித்தார். எனினும் அவர் பல இடையூறுகளை எதிர்கொள்ள வேண்டியிருந்தது.

அகஸ்தீனிய மறைபரப்பாளர்களில் மிகச் சிறந்தவரான கெர்னாண்டோ தே அயலா அடிகள் 1605இல் வந்து சேர்ந்தார். அடுத்தவருடமே தன்பணியை சாகிக்கும் விஸ்தரித்து, அங்குள்ள ஒரு பிரபுவின் (மோரிதகாமாசா) உதவியால் நல்லதொரு ஆலயத்தையும் அமைத்தார். மேலும் அயற்கிராமமான கியுகா விலும் தம் அப்போஸ்தலிக்கப் பணியைத் தெடர்ந்தார்.

1606இல் ஓரோசோகோ அடிகள் காலமானார். அகஸ்தீனிய மேய்ப்புப் பணியாளர் தொகையும் குறைந்தது. எனவே கெர்னாண்டோ அடிகள், மணிலா சென்று (1607) வேதபோதகர்களைத் தேடிப்பிடிக்க வேண்டியதாயிற்று. இவ் வருட இறுதியில் அவர் யப்பான் நாட்டின் துணைமாகாண அதிபதியாகவும் நியமனம் பெற்றார். ஒருசில மாதங்களின் பின் இரு குரவர்கள் அங்கு அனுப்பப் பட்டனர்.

1610இல் யுவான் டாமொரின் அடிகள் அங்குவந்து சேர்ந்தபோது அங்கு தலைவனாக (சாமுராய்) கடமையாற்றிய அரிமா கருணோபுவால் கொல்லப் பட்டார். அதே ஆண்டில் தே மொன்ரேயோ அடிகள் மணிலாவுக்கு வரும் போது ஸ்பானியரின் துப்பாக்கிகளால் சுடப்பட்டு மரணமானார்.

1612இல் கிராடோவில் ஒரு கோவிலை எழுப்ப முயற்சித்து தோல்வி கண்ட கெர்னாண்டோ அடிகள், நாகாசாகிக்குச் சென்று அங்கு புனித அகுஸ்தீ னாரின் பாதுகாவலில் ஒரு கோவிலை அமைத்தார். 10,000க்கும் அதிகமான கிறிஸ்தவர்கள் அவரது பாதுகாவலில் இருந்தனர். 1612இல் வருகை தந்த பர்த்த லோமியு அடிகள் ஊசுகி பிரதேசத்தின் ஞானமேய்ப்பராக விளங்கினார். 1614இல் யப்பானில் 3 குருக்களும் 1 துறவியுமாக 4 அகஸ்தீனியர்களே காணப் பட்டனர்.

## வேத கலாபனை 1614 ஜனவரி 27

### அ. காரணிகள்

இக்கலாபனை திடீரென ஏற்பட்டதல்ல. நன்கு திட்டமிட்டுச் செயற் படுத்தப்பட்ட ஒரு செயல். வேத போதகர்களின் அறிக்கைகளும், கடிதங் களும் ஐயேசி கிறிஸ்தவம் சம்பந்தமாகக் கொண்டிருந்த உண்மை மனநிலையை தெரிந்துகொள்ளவில்லை என்பதைத் தெளிவுறுத்துகின்றன.

1612இல் மெக்சிக்கோவிலிருந்த இராசப்பிரதிநிதிக்கு, ஐயேசி எழுதிய கடிதத்தில், ''உங்கள் சொந்த நாட்டின் மத சித்தாந்தங்கள், எங்களுடைய மதக் கொள்கைகளுக்கு முரண்பாடாக அமைந்துள்ளன. எனவே இம்மதக்கோட்பாடு எங்கள் நாட்டுக்குத் தேவையற்றது. ஆயின் உங்களது வர்த்தக நாவாய்கள் இங்கு அதிகமாக வந்து போவதையும் வர்த்தகத் தொடர்புகளை அதிகரிப் பதையும் நாம் நன்கு வரவேற்கிறோம்.'' எனக் குறிப்பிட்டுள்ளான்.

ஐயேசி கிறிஸ்தவத்தின் மீது கொண்ட பகைமை உணர்ச்சிக்கு அடிக்கடி உரமிட்டு வளர்த்தவர்கள் அவனது முக்கிய ஆலோசக குழுவினராவர்.

அவர்கள் (சென் மதகுரு சுடன், புரட்சிவாத கொன்பூசியானி கயேசிறசான், நாகாசாகியின் புரட்சிவாத அமைப்பாளன், கசேகவா சயோ, ஆங்கில மாலுமி வில்லியம்ஸ் அடம்ஸ். மேலும் பெருந்தொகையான மதபோதகர் குழு வந்தி றங்கும்போதெல்லாம் அவர்கள் மத போதகர் என்ற போர்வையில் வரும் இராணுவப் புலனாய்வாளர்கள் என்றே கிறிஸ்தவத்தின் எதிரிகளால் சந்தேகிக் கப்பட்டது. வெளிநாடுகளிலிருந்து வருகைதந்த கத்தோலிக்க பிரமுகர்கள் கிறிஸ்தவம் பற்றி எடுத்த மதிப்பீடுகளும் இச்சந்தேகங்களுக்குத் தூபமிட்டன. எனவே ஸ்பானியர்கள் யப்பான் நாட்டைக் கைப்பற்றுவார்கள் அல்லது ஸ்பானி யர்களுக்கு விசுவாசமுள்ள மதபோதகர் ஒரு சிலரின் கையில் நாட்டின் நிர்வாகப் பொறுப்பு, ஒப்படைக்கப்படும் என ஐயேசி திடமாக நம்பினான்.

*1612,13* களில் நடைபெற்ற வேறு சில நிகழ்வுகளும், கிறீஸ்தவத்தை யப்பான் நாட்டிலிருந்து வேரோடு களைந்துவிட வேண்டுமென்ற ஐயேசியின் இலட்சியத்தை மேலும் ஸ்திரப்படுத்தின. எனவே கிறிஸ்தவத்துக்கெதிராக திட்டமிட்ட விரிவான பிரச்சாரம் ஒன்றை உருவாக்கினான். கிறிஸ்தவர்கள், துரோகிகள் நாட்டைக் காட்டிக் கொடுப்பவர்கள். மதபோதகர்கள் கிறிஸ்தவர் களைத் தூண்டிவிடுபவர்கள் என மக்கள் மனதில் நன்கு பதிந்தது. ஆகவே நாடளாவிய ரீதியில் கிறீஸ்தவர்களுக்கு எதிரான வன்முறைகள் கட்டவிழ்த்து விடப்பட்டன. சித்திரவதைகள், சிரச்சேதங்கள் தாராளமாக இடம்பெற்றன. இதன் விளைவோ சொல்ல முடியாதது.

### ஆ. கிறிஸ்தவத்துக்கெதிரான சுற்றறிக்கை

தொடர்ந்து கைடெற்டாவின் கையொப்பத்துடனான சுற்றறிக்கை ஒன்று வெளியிடப்பட்டது.

ஆதிமுதலே எம்நாடு தேவர்களின் ஆசியையும் அபிமானத்தையும் பெற் றுள்ளது. புனிதமான எம் தேவர்களின் கட்டளைகள், எம் மக்களால் எவ்வித எதிர்ப்புமின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டு நடைமுறைப்படுத்தப்படுகின்றன. எம் நாடு கௌதம புத்தரின் நாடு என அன்றிருந்து அழைக்கப்படுகிறது. கடவுள் என்பதும் புத்தர் என்பதும் இருவேறு சொற்களாயினும் அவற்றின் பொருளும் குறிக்கோளும் ஒன்றே. இறைவனின் திருவருளால் புத்த பெருமானின் அவ தாரம் பெற்ற குருக்களும் பொது நிலையினரும் உண்மையைத் தேடி, கடல் கடந்து இந்நாட்டுக்கு (சீனாவுக்கு) வந்து சேர்ந்தனர். பௌத்த தர்ம உண்மை கள், சித்தாந்தங்கள் அவர்களுக்கு அருளப்பட்டன. இவைகளே மிகச்சிறந்த மதக் கொள்கைகள் என்பதை அவர்கள் நன்கு அலசி, ஆய்வு செய்து, கண்டு பிடித்தனர்.

ஆயின் கிறிஸ்தவ மதகுழுமங்கள் வர்த்தகவியல், ஒழுக்கவியல் பயிற்சி என்ற போர்வையில் வர்த்தக ரீதியான பொருட்பரிமாற்றம் என்ற அடிப் படையில் யப்பான் நாட்டுக்குள் புகுந்தனர். பின் ஓர் துன்மார்க்கத்தை, தீய சட்டவியலை புகுத்திக் கொண்டிருக்கின்றனர். இதன்மூலம் நாட்டில் ஒரு புரட்சிகரக் கொள்கையைப் பரப்பி தருணம் பார்த்து இத்தேச அரசியலுக்குள் நுழைந்து நாட்டைக் கைப்பற்றுவதே அவர்களது உண்மையான குறிக்கோள். எனவே இந்த நச்சுத்திட்டம் முளையிலேயே கிள்ளி எறியப்பட்டு அனைத்து தீயசக்திகளும் அழிக்கப்பட வேண்டும்.

புத்தரினதும் தேவர்களினதும் நாடே யப்பான் இந்தக் கொள்கைக்கு எதிரான எவரும், இந்த நாட்டில் வாழ முடியாது. அவர்கள் இந்நாட்டின் தேசிய இனமல்ல. அவர்கள் சபிக்கப்பட்டவர்கள். தேசத்துரோகிகளான அவர்கள் நாடுகடத்தப்பட வேண்டியவர்கள். நரகத்தில் தள்ளப்பட வேண்டியவர்கள். யப்பானில் ஒரு அங்குல நிலம்கூட இந்த நாசகார சக்திகளின் கையில் விழக்கூடாது. யப்பானிய மக்களாகிய நாம் பரலோகத்திலிருந்து புத்த பெருமானின் பாதுகாவலைப் பெற்றுள்ளோம். இதற்குதவியாக ஐந்து முதற்தர புண்ணியக்கொள்கைகள் அருளப்பட்டுள்ளன. எமது சித்தாந்தங்கள் இந்த அடிப்படையிலேயே வரையப்படல் வேண்டும். எமது மக்கள் இந்த நெறி முறைக்கிணங்க வழிநடத்தப்பட வேண்டியவர்கள். அவர்களின் மாசற்ற உள்ளங்களில் இந்த வெளிநாட்டு நச்சுவிதைகள், விதைக்கப்படலாகாது. பரலோகமும் நான்கு கடல்களும் இந்த உண்மையை அறியட்டும்.

இந்திய அறிக்கை, கிறிஸ்தவம் ஏன் பகிஷ்கரிக்கப்பட வேண்டுமென தெளிவாக்குகிறது.

1. மதபோதகர்கள் ஒரு தீயவழியை நாட்டில் புகுத்தி, மக்களை மயக்கி அவர்கள் ஏமாந்தவேளை, அரசியலைக் கைப்பற்றவே இந்நாட்டுக்கு வருகை தந்துள்ளனர்.
2. இந்நாட்டின் தேசிய மதங்களின் (பௌத்தம், சின்ரோனிஸம், கொன்பியூசிசம்) பிரதான எதிரி, கிறிஸ்தவ மதமே''.

ஆகவே இந்த அறிக்கையின்படி ஏற்படக் கூடிய பெரும் ஆபத்துகளைத் தவிர்க்க, நாகாசாக்கியிலுள்ள அனைத்து வெளிநாட்டு மதபோதகக்குழுக் களும் மாகோவாவுக்கு அல்லது மணிலாவுக்கு நாடுகடத்தப்பட வேண்டும். யப்பானிலுள்ள எல்லாக் கிறிஸ்தவ தேவாலயங்கள், மடங்கள் அனைத்தும் நிர்மூலமாக்கப்படல் வேண்டும். கிறிஸ்தவர்கள் யாருமிருப்பின் அவர்கள் அம் மதத்தைப் புறக்கணிக்க வேண்டும். மறுத்தோருக்கு சித்திரவதையும் சிரச்சேதமும் இறுதித் தண்டனை எனப் புதிய சட்டங்கள் பிரகடனப்படுத்தப் பட்டன.

### இ. மதபோதகர்கள் நாடுகடத்தப்படல்

எனவே எல்லாமதபோதகர்களும் (வெளிநாட்டு) நாகாசாகிக்கு அழைத்து வரப்பட்டார்கள்.

இக்காலகட்டத்தில் (பெப்ரவரி 16) ஆயர் செகுயிரா இயற்கையெய்தினார். மாவட்டக் குருக்கள் குழு, வலன்ரைன்கார் வல்கோ அடிகளை இடைக் கால நிர்வாகியாகத் தெரிவுசெய்தது. கத்தோலிக்கர்களுக்கு வழிபாட்டுச் சுதந்திரம் வேண்டி நாடளாவிய ரீதியில் வேண்டுதல்கள், இடைவிடாது இடம் பெற்றன.

ஜுன் மாதமுற்பகுதியில் மாகோவா நாவாய் வந்து சேர்ந்தது. போர்த்துக் கேயரின் வர்த்தகத் தொடர்பு இதனால் பாதிக்கப்படலாமென ஐயேசு அஞ்சினான். நாவாயின் பிரதம மாலுமி யோவா டா குன்கா, சிசோக்காவுக்கு ஆளனுப்பி, நாகாசாகியில் போர்த்துக்கேய வர்த்தகர்களுக்காக ஒரு கோவிலாவது அனுமதிக்கப்பட வேண்டும் என வற்புறுத்தினான்.

ஒக்ரோபர் 21இல் சில துடிதுடிப்பான பிரான்சீஸ்க, டோமினிக்க துறவிகள் ஒருங்கிணைந்து விக்கார் ஜெனரல் எனப்படும் குருமுதல்வர் பதவிக்கு யேசு சபையைச் சேர்ந்த ஒருவரை நியமிப்பது சபையின் நியம விதிகளுக்கு மாறானது எனக் காரணம் காட்டி, பிரான்சிஸ்கோ டி மோறலஸ் என்பவரை தெரிவு செய்து, தலைமைப்பீடங்களுக்கு அறிவித்தனர். டோமினிக்க மாகாணாதிபதி இவ்விடயத்தில் நேரடியாகத் தலையிட்டு சமரசமேற்படுத்தினார்.

ஒரு சில தினங்களின் பின் (ஒக்ரோபர் 27) எல்லாமத போதகர்களும் (36 குருக்கள், 29 துறவிகள்) ஒரு பெரிய நாவாயில் மாகாவோவுக்கு வந்து சேர்ந்தனர். 23 யேசு சபையினர் மணிலாவுக்குச் சென்றனர். 38 தேசிய குருக்கள் யப்பான் நாட்டின் கிறிஸ்தவர்களின் நலம் பேண அனுமதிக்கப்பட்டனர். வேதகலாபனை தொடக்கப்பட்டு, முழுமூச்சாக அமுலாக்கப்பட்டது.

## கிறிஸ்தவ இலக்கிய, அச்சகப் பணிகள்

அச்சுப்பிரசுரங்களுக்காக யேசு சபையினர் தொடங்கிய அச்சகம், 1596 - 1614 வரை நாகாசாகியில் இயங்கி ஏராளமான கிறீஸ்தவ இலக்கியங்களை வெளியிட்டது. 1614 இல் இது மாகாவோவுக்கு கொண்டு போகப்பட்டது. யப்பானியர்களுக்கு அவர்களது மொழியில் கிறிஸ்தவத்தை விளக்கும் பிரசுரங்கள் மட்டுமல்ல, யப்பானிய மாணவர்களுக்கு லத்தீன் மொழியை அறிமுகம் செய்யவும், வெளிநாட்டு மத போதகர்களுக்கு யப்பானிய மொழியை பயிற்றுவிக்கவும் தேவையான பிரசுரங்களும் வெளியிடப்பட்டன.

## யப்பானிய கலைகளில் கிறிஸ்தவத்தின் ஊடுருவல்

### அ. மேற்குலக ஓவிய நடை

யேசு சபையினர் நடத்திய பல்கலைக்கல்லூரியில் ஓவியங்களுக்கும் செதுக்குதல் வேலைகளுக்கும் முக்கியத்துவம் தரப்பட்டது. யப்பானிய துறவிகளும் டொயுக்குகளும் இதில் நன்கு பயிற்றப்பட்டனர். ஆயின் மேற்குலக ஓவிய நடை தாராளமாகப் பயன்படுத்தப்பட்டது.

### ♦ நம்பான் பயோபு (தெற்கத்திய பார்பேரியன் படத்தட்டிகள்)

ஓடா நோபுங்காவின் அசுசிகோட்டை, கானோ எற்றோகுவின் பொன்னிலைப் படத்தட்டிகளால் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. கைடெயோசி இதே ஓவியர்களையே ஓசாகா கோட்டையை அழகுபடுத்த உபயோகித்தான். இவ்விதமே பெரிய சீமான்களும் இவ்விதமே தங்களது மாளிகைகளையும் மடிப்புத்தட்டிகளாலும் தொடர்த்தட்டிகளாலும் அழகுசெய்தனர். யேசு சபையினரும் மக்கள் ரசனையை, கவர்ந்திழுக்க தங்கள் ஆலயங்களையும் வரவேற்பு மாடங்களையும் பொன்னிலைத் தட்டிகளால் அலங்கரித்தனர். ஆயின் அவர்களது கண்ணியம், கட்டுப்பாட்டுக்கிணங்க, வசிப்பிடங்களில் இந்த அழகுசாதனங்கள் காணப்படவில்லை.

எனினும் அவர்களது பாடசாலைகளில் அழகுவர்ணக் கலையை மிகச் சிறந்த முறையில் கற்பித்தனர். போர்த்துக்கேய கப்பல்களிலும் வணிகக் கூடங்களிலும் அழகு வர்ண ஓவியங்கள் ஏராளமாகக் காணப்பட்டன. இன்றும் அவற்றை யப்பான் நாட்டில் காணலாம்.

போர்த்துக்கேயரின் மிகப்பெரிய நாவாய்களுள் ஒன்றான 'குறோபுண்' (கறுப்புக் கப்பல்) பிரதம மாலுமி, ஏனைய மாலுமிகள் சகிதம் அழகுவர்ண சீருடைகள் அணிந்து, ஈட்டி வாள் சகிதம் அரச அதிகாரிகளை சந்திக்கச் செல்வது பிரமாதமான காட்சியாகும். அதுபோல அரச அதிகாரிகளும் மத போதகர்களும் பிரதான வைபவங்களில் சீருடை அணிந்தே காணப்படுவர்.

ஆலயங்களிலும் சிற்றாலயங்களிலும் மதகூடங்களிலும் திருப்பலி, மறைக் கல்வி, வழிபாடு, செபித்தல், நூல்களைப் படித்தல் போன்ற நிகழ்வுகளிலும் ஒன்று கூடுவோரின் ஆடையணிகள், பிரமாதமாகக் காணப்படும். எனினும் இந்த அழகு சாதனங்களை உருவாக்கும் ஓவியர், சிற்பிகளில் எத்தனைபேர் கத்தோலிக்கர் என்பது கேள்விக்குறி.

யேசுசபை, பிரான்சீஸ்கன் சபையினர் மட்டுமல்ல டோமினிக்க, அகஸ்தீனிய சபையாரும் தங்கள் அலங்கரிப்பு அலுவல்களுக்கு அழகுவர்ணத் தட்டிகளை பயன்படுத்தியுள்ளனர். இவ்வலங்கரிப்பு வேலைகள் அனைத்தும் *1614*க்கு முன்னரே இடம்பெற்றன.

எனினும் இந்த ஓவியர், சிற்பிகள் அனைவருமே பிரசித்தி பெற்ற இத்துறை முக நகரை வசிப்பிடமாகக் கொண்டவர்களல்ல என்பதும் தேவையையொட்டி நகருக்கு அவ்வப்போது வந்துபோகிறவர்கள் என்பதும் தெரியவருகிறது.

இறுதியாக இந்த அழகுவர்ண வேலைகள் அனைத்தும் யப்பானிய தேசிய கலையமைப்பையே ஆதாரமாகக் கொண்டவை. யப்பானிய தூரிகைகளால் வரையப்பட்டவை. வர்ணக் குழம்புகள் அனைத்தும் யப்பான் நாட்டின் மூலி கைகள், வேர்கள் பிற சாதனங்களை உபயோகித்து உருவாக்கப்பட்டவை.

### ஆ. கிறிஸ்தவக் கலையின் பிறவடிவங்கள்

யப்பானில் கிறிஸ்தவக் கலையின் ஊடுருவல்களை (அக்காலத்தில்) காட்டும் வேறு சாதனங்களும் உண்டு. கிறிஸ்துவின் மிகப்பெரிய உருவம், சிலுவையில் தொங்கும் கிறிஸ்து, தலைக்கவசங்களில் கிறிஸ்துவின் பல்வேறு வடிவங்கள், வாள் கவசங்களில் கிறிஸ்துவின் உருவங்கள், குதிரைமேலுள்ள ஆசனங்களில் கிறிஸ்தவ சின்னங்கள் என்றெல்லாம் அரச அதிகாரிகள் செல் வந்தர்களின் சகல பாவனைப் பொருட்களிலும் கிறிஸ்தவம் முக்கியத்துவம் பெற்றது.

கிறிஸ்தியின் டோரோ என்றழைக்கப்படும் கல் - விளக்குகளில் முகலாய் கிறிஸ்தவ கலைவண்ணங்கள் பிரகாசிக்கின்றன. இந்த விளக்குகளில் சிலுவை யும் அதை வணங்கும் மனிதனும் போன்ற கருத்துமிக்க கற்பனை வளங்கள் செதுக்கப்பட்டுள்ளன. பௌத்த, சின்ரோ மதக்கோவில்களிலும் இவ்வித கல்விளக்குகள் (பல்வேறு வடிவங்களில்) காணப்படுகின்றன.

## 1614 - 1639 ஆம் ஆண்டுகளில் யப்பான்

### அ. ஒசாகா பிரச்சாரத்தில் கிறிஸ்தவம்

*1614*இல் பொது வேதகலாபனை தொடங்கியது. ஐயேசு இன்னமும் ரொயட் டோமி கைடெயோரியுடன், பிரச்சனைபட்டுக்கொண்டிருந்தான். கிறிஸ்தவர்கள் அமைதியாக எதிர்காலத்தை எதிர்பார்த்தவண்ணமிருந்தனர்.

ஐயேசு பெரியதொரு அடிபாட்டுக்குத் தன்னைத் தயார் நிலையில் வைத்திருந் தான். பல தலைவர்கள் கிறிஸ்தவத்துக்கெதிராக செயல்பட ஆயத்தராகினர்.

ஒசாகா பிரச்சனையில் கிறிஸ்தவர்கள் இருபக்க இராணுவங்களிலும் பணி யாற்றினர். ஆயின் இப்போது கைடெயோரியின் பிரமாண்டமான சேனைக் கெதிராக கிறிஸ்தவ இராணுவத்தின் தொகையோ, மிகக்குறைவு. கைடெயோரி யின் வெற்றி, வேதகலாபனைக்கு ஒருமுடிவு செய்யுமென எதிர்பார்க்கப்பட்டது.

## ஆ. கைடெற்றாடா ஆட்சியில் இரத்த வெள்ளம்

ஆரம்பத்திலிருந்து கைடெற்றாடா, தான் ஒரு கிறிஸ்தவ எதிரி என்பதை சொல்லிலும் செயலிலும் காட்டிக் கொண்டிருந்தான். *1616* செப்டெம்பரில் அவன் விடுத்த கட்டளையில் "கிறிஸ்தவ மதபோதகர்களுக்கு தங்கள் வீடுகளில் தங்க இடமளிப்பது கொலைக்குற்றமாகும்" என அறிவித்தான். யப்பானில் தங்கி யிருக்கும் வெளிநாட்டு வர்த்தகர்கள் அனைவரும் நாகசாகி, கிராடோ துறை முகங்களுக்குச் சென்று தங்கியிருக்குமாறு பணித்தான். 1617இல் பல மதபோத கர்கள் கைது செய்யப்பட்டனர். இரு மாதங்களின் பின் இரு யேசு சபையினர் (J.B.மச்சாடோ, பிரான்சீஸ் பீட்ரோ) ஒமுராவில் மரணதண்டனை பெற்றனர். இவ்விதம் வெளிநாட்டு மதபோதகர்கள் மட்டுமல்ல, உள்ளூர்க் கிறிஸ்தவர் பலரும் சிறைவாசமும் சிரச்சேதமும் பெற்றனர்.

*1618*இல் இரத்த சாட்சிகளின் தொகை *68*. ஒரு பயங்கர கலாபனை கோகுராவிலும் நாகாட்சுவிலும் *37* இரத்த சாட்சிகளைச் சரித்தது. நாகா சாகியில் குழந்தைகள் பெண்கள் உட்பட *14* பேர் உயிரோடு எரிக்கப் பட்டனர். *1619*இல் *90*க்கும் அதிகமானோர் வேதசாட்சிகளாயினர். *1619* ஒக்ரோபர் *7*இல் *52* கிறிஸ்தவர்கள் எரித்துக்கொல்லப்பட்டனர். ஜப்பானிய குரு லெயோனார்டே கிமுராவும் மரண தண்டனை பெற்றார். ஒமுரா சிறையில் பல குருக்கள் அடைக்கப்பட்டனர். எனினும் அடுத்தவருடங்களில் இரத்த சாட்சிகளின் தொகை குறைந்தது. *1620*இல் *17*, *1621*இல் *20*. இக்கால கட்டத்தில் *12* குருக்கள் ஒமுரா சிறைவாசம் பெற்றனர்.

*1622*இல் கிறிஸ்துவுக்காக உயிர்த்தியாகம் செய்தோரில் *(122) 14* வெளி நாட்டுக் குருக்கள், ஒரு யப்பானிய குரு, பல துறவிகளும் அடங்குவர். இவ்விதமே யப்பான் நாடு முழுவதும் கிறிஸ்தவர்களின் இரத்த வெள்ளம் ஆறாக ஓடியது. கிறாடோவிலிருந்த ஆங்கில புரட்டஸ்தாந்த சபைத் தலைவர் றிச்சாட்குக் கூறியது: "சிசுசுவிலுள்ள கிறீஸ்தவர்கள் உண்மையான விசுவாசிகள். சித்திர வதைகளுக்கும் சிறைவாசம் சிரச்சேதத்துக்கும் அஞ்சி இயேசுவுக்கு பிரமாணிக் கவீனம் செய்யமாட்டார்கள்."

குருக்களுக்கும் துறவிகளுக்கும் பயங்கர தடுப்பு முறைகள் அமுலில் இருந்த போது கிறிஸ்தவர்கள் தம் விசுவாசத்தை, வீடுகளில் கூடி செபமாலை ஓதுதல், பூசைத்தியானம், குழு வழிபாடுகள் மூலம் வளர்த்தனர். ஆயின் கத்தோலிக்க எதிர்ப்பு நடவடிக்கைகளில் இரு முன்னால் குருக்கள் மும்முரமாகத் தொழி லாற்றியதும் இங்கு குறிப்பிடப்பட வேண்டும். அவர்கள் 'பாபியன் புக்கான், தோமஸ் ஆர்க்கி' என்போர் இக்குருக்கள் முன்பு கிறிஸ்துவுக்காக பிரமாணிக்க மாக உழைத்தவர்கள். பின்பு அலகையின் வாய்ப்பட்டு கிறிஸ்தவ எதிர்ப்பியக் கத்தில் மும்முரமாக ஈடுபட்டனர்.

கிறிஸ்தவத்துக்கெரிரான வேதகலாபனைகள் காரணமாக, மதபோத கர்கள் உற்சாகமிழக்கவில்லை. தமது பணிகளைக் கைவிட்டு ஒளிந்தோட வில்லை. தமது வேதபோதக, மதமாற்றும் பணிகளில் மும்முரமாக உழைத் தனர். அதன் பயன் யேசுசபை அறிக்கைப்படி 1617இல் 800 திருமுழுக்குகள், 1619 இல் 1800 திருமுழுக்குகள், 1621இல் 1945 திருமுழுக்குகள். 1622இல் 2000 திருமுழுக்குகள்.

### இ. வடமாகாணங்களுக்கும் கிறிஸ்தவ அறிமுகம்

வடமாகாணங்களில் மதபோதக பணிகளுக்காக முதலில் அனுப்பப் பட்டவர் லூயிஸ் சோரெலோ அடிகள். இவர் 1611இல் செண்டாய்க்கு ஓசுவின் பிரபுவான டேற்மசாமுனேயின் அழைப்பிற்கிணங்க அனுப்பப்பட்டவர். இவர் ஓர் கோவிலை அமைத்ததுடன் 1800 பேரையும் மதமாற்றினார். பின்னர் டேற்மசாமுனியின் தூதுக் குழுவில் அங்கம் வகித்து, 1613களில் உரோமை சென்றார். தொடர்ந்து 1618 இதிலும் 1620இதிலும் பிரான்சீஸ்கன் மதபோதகர்கள் வருகை தந்தனர்.

மத்திய மாகாணங்களில் வேதகலாபனை மும்முரமாக இடம்பெற்ற போதே வடமாகாணங்களில் கிறிஸ்தவத்துக்கு நல்ல விளைச்சலும் அறுவடை யும் கிடைத்தது. ஐயேசு கிறிஸ்தவ நாவாய்களில் கைவைக்கத்தொடங்க, அவைகள் ரோகோகு சென்றன. அங்கு தலைமைப்பீடாதிபதி சோகுன் அவை களைக் கட்டுப்படுத்தவில்லை. அந்நாவாய்களிலிருந்த போதகர் ஒருவர் (பீற்றர் கிற்றோமி) சேம் போகுவில் 600 பேரை மனந்திருப்பினார்.

வேதகலாபனை பிரகடனப்பட்டதை தொடர்ந்து கியோட்டோ, ஓசாகா பகுதிகளிலிருந்து 71 கிறிஸ்தவர்கள் வெளியேற்றப்பட்டனர். இவர்களில் பலர் கிரோசாகியில் பின்பு குடியேற்றப்பட்டனர். வெளியேற்றப்பட்ட கிறிஸ்தவர் களில் பலர் விவசாயம் செய்தும் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட வெள்ளிச் சுரங்கங்களில் கூலி வேலை செய்தும் பிழைத்தனர். அவர்கள் கிறிஸ்தவத்தை அனுசரிப்பதில் தடையேதுமில்லை. அவர்களது உத்தம நடத்தையாலும் வழி காட்டுதலாலும் பலர் மனமாற்றமடைந்து திருமுழுக்குப் பெற்றனர்.

சோகுணால் அரசின் உருக்கூட்டுதலால் 1620 செப்டெம்பர் 4இல் டேற்மசா முனி செய்த அறிவிப்பு: கிறிஸ்தவத்தை அனுசரிப்பதை விடுத்து, தங்கள் தேவைகளை வழிபடாத அனைவருக்கும் மரணதண்டனை விதிக்கப் படும். இதைத் தொடர்ந்து பகிரங்கமாக கிறிஸ்தவத்தை அனுசரிப்பது நிறுத்தப்பட்டது. எனினும் இரகசியமாக கிறிஸ்தவம் நடைமுறைப்படுத்தப் படினும் டேற்மசாமுனி எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

### ஈ. டேற்மசாமுனி குழுவின் உரோமைத்தரிசிப்பு (1613 – 1620)

டேற்மசாமுனியால் உரோமைக்கு அனுப்பப்பட்ட தூதுக்குழுவில் கசே குராவும் ருசுனேகா அடிகளும் அடங்குவர். இக்குழு மட்ரிட், உரோம் போவ தற்காக அகாபுல்கோ துறையை அடைந்தபோது கைடேற்றடா கிறிஸ்தவர் களுக்கு எதிரான மரண தண்டனை முறையை பிரகடனம் செய்தான். 150 பேர் அடங்கிய குழு முதலில் மெக்சிக்கோவை அடைந்தது. அவர்களில் 78 பேர், மிகச்சிறந்த முறையில் மறைக்கல்வி வழங்கப்பட்டபின் ஆடம்பர வைபவங்

களுடன் திருமுழுக்காட்டப்பட்டனர். தூதுக் குழுவினர் மெக்சிக்கோவிலிருந்து மே 8இல் புறப்பட்டு 28 பேர் மேற்கொண்டு பயணஞ் செய்ய ஏனையோர் யப்பான் நாடு சென்றனர்.

தூதுக்குழு 1614 டிசம்பர் 20இல் மட்ரிட் நகரை அடைந்தது. இரு மாதங் களின் பின் (1615 பெப்ரவரி 17) கசெகுரா ஆடம்பரமாக ஞானமுழுக்கு பெற்று, பிலிப் பிரான்சிஸ் எனப் பெயரிடப்பட்டான் (பேரரசன் 111ஆவது பிலிப் நினைவாக).

உரோம் நகரையடைந்த 21 யப்பானியரை (1615 ஒக்ரோபர் 25) பாப்பரசர் நவம்பர் 3இல் வரவேற்று அன்புடன் அளவளாவி திருக்கர ஆசியும் அளித்தார். பாப்பரசருக்கு டேற்மசாமுனி எழுதிய கடிதமும் பகிரங்கமாக 5ஆவது சின்னப்ப பாப்புவின் முன் படிக்கப்பட்டது. இக் கடிதத்தில் தனது இராச்சியத்தில் கிறிஸ்துவைப் போதிக்க, பிரான்சீஸ்கன் சபையினரை மட்டுமே அனுப்பவேண்டுமென்றும் இங்குள்ள கிறிஸ்தவர்களைக் கண்காணிக்க, அனுபவம் வாய்ந்த, ஆற்றல்மிக்க குரு முனிவர் ஒருவரை தெரிந்தனுப்புமாறும், இதற்கான செலவுகள் அனைத்தும் வழங்கப்படுமென்றும் தெரிவித்திருந்தான்.

கார்த்திகை 15இல் பிரான்சீஸ்குவின் மூன்றாம் சபையின் 3 அங்கத்தவர்க ளுடன் (யப்பானியர்) சோரெலோ பரிசுத்த பாப்பரசரைச் சந்தித்து ஒரு மகஜரைச் சமர்ப்பித்தான். இந்த மகஜரில் 116 உயர் குல யப்பானிய கிறிஸ்தவர்கள் (73 ஆண்கள், 43 பெண்கள்) கையொப்பமிட்டிருந்தனர். இவர்கள் கியோட்டோ, புஸ்ஸிமி, ஒசாகா, சாகாய் நகர்களைச் சேர்ந்தவர்கள் அவர்களது வேண்டு கோள்களாவன:

1. யப்பானில் ஒரேயொரு ஆயர் மட்டுமே இருக்கிறார். அவருக்கு எங்கள் மொழியில் நன்கு பேச, எழுத, வாசிக்கத் தெரியாது. நாகாசாகியிலேயே அவரது வசிப்பிடம் உளது. எனவே யப்பானியர் ஒருவர் ஆயராக நியமிக் கப்பட வேண்டும். அவர் ஆன்மீக ஞானம் மிக்கவராக நல்ல கல்விமா னாக, சிறந்த நிர்வாகியாக, யப்பானிய திருச்சபை முழுவதையும் ஆண்டு நடத்துவதில் வல்லவராக விளங்க வேண்டும். திருச்சபையின் மேல் மட்டத் துடன் உறவாடுபவராக மட்டுமன்றி திருச்சபையின் மத்திய கீழ் மட்டங் களுடனும் உறவாடி உரையாடி அவ்வப் போதைய திருச்சபையின் பொது நிலையினரின் விருப்பு வெறுப்புகளையும் உண்மை நிலையையும் தெரிந்து கொண்டு செயலாற்றுபவராக இருக்க வேண்டும். அவர் அரசியல், வர்த்தக அலுவல்களில் அதிக கவனம் செலுத்தக்கூடாது.

2. குருக்களின் தொகை பற்றாக்குறையாக உளது. குருக்கள் பயிற்சிக் கல்லூரியில் பயிற்சி பெறுபவர்களுக்கு ஒரு உபகாரநிதி வழங்கப்பட வேண்டும். ஆயர்கள் தொகையும் அதிகரிக்க வேண்டும். யப்பானிய புதல்வர்கள் உயர்கல்வி பெற ஒரு கல்லூரியோ அல்லது பயிற்சி மாடமோ நிறுவப்பட வேண்டும். இக் கல்லூரியில் லத்தீனுடன், இறையியல், தத்துவ இயல் மட்டுமல்ல விஞ்ஞானவியல், பொருளியல் போன்ற ஏனைய சாஸ் திரங்களும்; இவர்கள் சமய பாடத்தில் (மறைக்கல்வி) வல்லுநராயிருப்பின் மதபோதகர்களின் வேலைப்பளு குறையும்.

3. ரெயிகோவின் ஆளுகையில் (1597) மறைசாட்சிகளாகக் கொல்லப்பட்ட 6 பிரான்சீஸ்கரும் 20 கிறிஸ்தவரும் இரத்த சாட்சிகளாகப் பிரகடனப்படுத்

தப்படுதல். இவர்களை புனிதர் வரிசைக்கு உயர்த்த நடவடிக்கை எடுத்தல்.

4. சோரெல்லோ அடிகளால் நிறுவப்பட்ட, ஐந்து காயவரத்தர் சபை உத்தி யோகபூர்வமாக ஏற்றுக்கொள்ளப்படுதல். குருசுகள், வரவணிக்கங்கள், புனிதர்களின் படங்கள், செபமாலைகள் என்பன கத்தோலிக்க பொதுநிலை யினருக்கு தாராளமாகக் கிடைக்க நடவடிக்கை எடுத்தல்.

இவ்வேண்டு கோள்களை அலசி ஆராய்ந்த பாப்பரசர், யப்பானிய நாட்டுக்கு வெகுவிரைவில் ஒரு பேராயரும் நான்கு துணை ஆயர்களும் அனுப்பப்படுவரென அறிவித்தார். மேலும் சோரெலோ அடிகளே முதலாவது பேராயராக நியமிக்கப்பட்டு காலப்போக்கில் யப்பான் நாட்டின் முதலாவது கருதினால் (திருச்சபையின் இளவரசர்) ஆக கௌரவிக்கப்படுவார் எனவும் தெரிவிக்கப்பட்டது. எனினும் இவ்வித பெரியபதவி நியமனங்களுக்கு அரசரினதும் ஆளும் நிர்வாக சபையினரதும் அனுமதி அவசியமாகும்.

அத்துடன் ஆயர் சேர்குயிராவும் யேசு சபையாரும் மேற்கூறிய தீர்மானங்களுக்கு பலத்த ஆட்சேபனை தெரிவித்தனர். இவைகளனைத்துக்குமான பாப்பரசரின் உத்தியோகபூர்வபதில் அவரது **1615** டிசம்பர் **27** ஆம் திகதி வெளியிட்ட நிருப மூலமாக அறிவிக்கப்பட்டது.

1. மதபோதகர்கள் அனுப்பப்படும் விடயமாக தமது (பாப்புவின்) முன்னைய கட்டளைகள் அனுசரிக்கப்படும்.
2. திருச்சபைச் சட்டங்களுக்கிணங்க ஒரு பெரிய மாகாணத்தில் பல ஆயர்கள் கடமையாற்றினால் மட்டுமே அங்கு பேராயர் பதவி வழங்கப்படும்.
3. ஒசுவில் ஒரு ஆயர் நியமிக்கப்பட்டபின் அவரே தனது மாவட்ட தேவையை உணர்ந்து குருமடத்தை நிறுவுவார்.
4. பிரான்சீஸ்க இரத்த சாட்சியானோர் திருச்சபையின் புனித பட்டமளிப்பு சம்பந்தமான ஆய்வுகள் முறையாக நடத்தப்பட்டு திருப்தியாயின் புனிதர் கௌரவம் வழங்கப்படும்.

## இமிற்சுவின் ஆளுகை (1623 - 1639)

**1623**இல் கைடெற்ரடா தனது சோகுனேற் (பெருந்தலைவர்) பதவியிலிருந்து ஓய்வு பெற்றான். அவனது மகன் இமிற்சு பெருந்தலைவனானான். யப்பானிய வரலாற்றில் கிறிஸ்தவத்தின் மிகப்பயங்கரமான எதிரி எனவும் யப்பானில் வெளிநாட்டுச் செல்வாக்கை தகர்த்தெறிந்தவன் எனவும் இவனை சரித்திர ஆசிரியர்கள் வர்ணிக்கின்றனர்.

ஐயேசுவின் ஆளுகையில் வெளிநாட்டு மதபோதகர்கள் வெளியேற்றப்பட்டனர் என முன்பு கண்டோம். எவருக்கும் மரணதண்டனை வழங்கப்படவில்லை ஆயின் கைடெற்ரடா இன்னும் ஒருபடி அதிகமாகவே நடந்துகொண்டான். சித்திர வதைகளை அவன் கட்டளையிடவில்லை. சிரச்சேதம் அல்லது உயிருடன் எரிக்கப்படுதல் என்பனவே வெளிநாட்டு மதபோதகர்களுக்கு அவன் வழங்கிய தீர்ப்பு.

### அ. நாடெங்கும் வேதகலாபனை

முதலில் இமிற்சு நாடெங்குமுள்ள டெய்மோக்களை அழைத்து அவர்கள்

தனது உத்தரவுகளை மீறக்கூடாது, மீறினால் அவர்களுக்கு கடுந்தண்டனை வழங்கப்படும் என அறிவித்தான்.

1623 டிசம்பர் 4இல் ஜெரோம் டி அஞ்செலிஸ், பிரான்சிஸ் கல்வெஸ் என்ற குருக்களும் 48 கத்தோலிக்க பிரமுகர்களும் உயிரோடு எரிக்கப்பட்டனர். மிகப் பெரிய மரணதண்டனை டிசம்பர் 29இல் இடம்பெற்றது. குழந்தைகள் பெண்கள் உட்பட 37 கிறிஸ்தவர்கள் கொல்லப்பட்டனர். கிறிஸ்தவர்களை எங்கு கண்டாலும் அவர்கள் மேல் சித்திரவதைத் தாக்குதல் நடத்துவது சர்வசா தாரணமாகிவிட்டது.

1624இல் 200க்கும் மேற்பட்டோர் தம் கிறிஸ்தவ விசுவாசத்துக்காக பிராணனைத் தியாகம் செய்தனர். ஓகஸ்ட் 25இல் 4 குருக்கள் ஓமுராவில் கொல்லப்பட்டனர். கிராடாவில் 38 கிறிஸ்தவர்கள் இயேசுவுக்காக உயிர் இழந்தனர். கொட்டோ, புங்கோ, ஆகி இலும் கிறிஸ்தவர்களின் இரத்தம் ஆறாய் ஓடியது. பிஜென், காரிமா ஒசாகாவின் கிறிஸ்தவர்கள் நாடுகடத்தப் பட்டனர்.

இதைவிடப் பயங்கரமான வேதகலாபனை வடமாநிலங்களில் இடம் பெற்றது. 1624 பெப்ரவரி 22இல் டியாகோ கார்வெல்கோ என்ற குருவும் 6 கிறிஸ்தவர்களும் நீரில் அமிழ்த்திக் கொல்லப்பட்டனர். அகிற்றா நாட்டு அதிபதியும் 32 கிறிஸ்தவர்களை எரியும் பயங்கர நெருப்பில் தள்ளினான். குபேட்டாவில் (ஜூலை 18) 52 கிறீஸ்தவர்கள் சிரச்சேதம் பெற்றனர். ஜூலை 26இல் 14 போர் உயிரிழந்தனர். 1625இல் 7 பேரும், 1626இல் 20 பேரும் கொல்லப் பட்டனர்.

ஆயினும் மதபோதகர்களின் விசுவாச போதனைகளை இப்பயங்கர கொலைகளும் சித்திரவதைகளும் தடுத்து நிறுத்தவில்லை. டேவாவில் 300 போரும், யப்பானின் வேறு பகுதிகளில் 1200 பேரும், 1624இல் சத்திய மறையில் சேர்ந்தனர். 1625இல் 1100 யப்பானியரும் 1626இல் 2000 பேரும் கிறிஸ்தவத்தைத் தழுவினர்.

### ஆ. புதியவித பயங்கரங்கள்

1627இல் மிசூனோ கவாச்சி வேறுவிதமான தொல்லைகளைக் கொடுத்தான். கிறிஸ்தவர்களின் வீடுகளை கொள்ளையடித்தல், அவர்களது ஆடையாபரணங்கள் உடமைகளை அபகரித்தல், நிம்மதியான அவர்களது வாழ்க்கையைக் கெடுத்தல், வேலைவாய்ப்புகளை தடுத்தல், வருவாய்களை, அபகரித்தல் எனப் பலவித தொல்லைகளைக் கொடுத்தான். கிறிஸ்தவ பிரமுகர் களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் ஏராளம்.

அரிமாவின் அதிபதி மற்சுகுரா சிகேமாசா தனது ஆட்சிக்குட்பட்ட கிறிஸ்தவர்களை வாட்டி வதைத்தான். சித்திரவதைகள், பல்வகை உபத்திர வங்கள், நிர்வாணமாகத் தெருக்களில் நடக்கவைத்தல் முதலிய தொல்லை களால் பழிவாங்கினான். விரல்களை வெட்டி அவர்கள் வாழ்வைக் கெடுத் ததுடன். இறுதியில் இரக்கமற்ற விதத்தில் கொலை செய்தான். கொதிநீரில் அமிழ்த்தும் போது அவர்கள் துடிதுடித்து, பதைபதைத்து உயிரிழப்பது அவனுக்கு எல்லையற்ற மகிழ்ச்சியைக் கொடுத்தது.

இவ்விதம் 1628 இலும், 1629 இலும் இடம்பெற்றது. தொடர்ந்து வேறுவித முயற்சிகளும் நடைமுறைப்படுத்தப்பட்டன. 1629 நவம்பரில் அன்ரனி இசிடா அடிகளார் (இறையியல் வல்லுநர், கல்விமான்) கைது செய்யப்பட்டு வெகு மரியாதையுடன் உபசரிக்கப்பட்டார். உனேமி தலைமையில் பௌத்த சித்தாந்த வல்லுநர்குழு ஒன்று தங்கள் மதத்தின் தொன்மைச் சிறப்பு இலட்சியங்களை, கத்தோலிக்கத்துடன் ஒப்பிட்டு கத்தோலிக்கம் கொள்கையற்றதும் நிலையாமையும் இழிவானதுமான ஒருமதம் என நிரூபிக்க முயன்று தோல்வி கண்டனர். இருவருடங்களின் பின் 1631 நவம்பரில் செயிட்டோ கொனாய் என்ற கொன்பியூசிய மதவல்லுநரை இசிதா அடிகளுடன் வாதாடச்செய்து கிறிஸ்தவ விசுவாசத்துக்கு முற்றுப்புள்ளிவைக்க முயன்றும் முடியவில்லை.

இவற்றால் சினங்கொண்ட உனேமி, 1631 டிசம்பரில் ஒமுராவில் சிறை வைக்கப்பட்டிருந்த எல்லா மதபோதகர்களையும் அவர்களுடனிருந்த இரு போர்த்துக்கேய சீமாட்டிகளையும் அன்சென் என்னுமிடத்திலுள்ள சித்திரவதைக் கூடத்துக்கு அனுப்பினான். 33 நாட்கள் நடைபெற்ற பல்வேறுவித பயங்கர சித்திரவதைகளின் பின்னும் அவர்கள் கிறிஸ்துவை மறுதலிக்கவில்லை எனவே மத போதகர்கள் மீண்டும் சிறையிலடைக்கப்பட்டு கொதிக்கும் நெருப்புச்சுவாலைகளில் தள்ளப்பட்டு இறைவனடி சேர்ந்தனர். (1632 செப்டெம்பர்) சீமாட்டிகள் மாகாவோவுக்கு நாடு கடத்தப்பட்டனர்.

யப்பான் நாடு முழுவதும் கிறிஸ்தவர்களை வதைத்துக் கொல்வதில் இன்பங் கண்டது.

## இ. சிம்பாரா எழுச்சி (டிசம்பர் 1637 – ஏப்ரல் 1638)

இதன் காரணிகளாக ஏழை விவசாயிகளின் மேல் விதிக்கப்பட்ட கடுமையான வரிகளும் சித்திரவதைகளுமே என வரலாற்று ஆசிரியர் சிலரும் டச்சுத்தொழிற்சாலை அதிபரும் (புரட்டஸ்தாந்தர்) குறிப்பிடுகின்றனர். இவைகளினால் பொறுக்கவியலாத பொதுமக்கள் பொங்கி எழுந்தனர். ஆயுதமேந்தினர். ஆயின் இத்தீவிரவாதிகள் எல்லோருமே கிறிஸ்தவர்களாகக் காட்டி அவர்களை பொருளாதாரத்தில் நலியவைப்பதும் வேதகலாபனை ஒன்றை இரகசியமாக அரங்கேற்றுவதுமே உள் நோக்கமாகும். ஆயின் இந்த இலட்சியம் தோல்வி கண்டது. கிறிஸ்தவ இனம் கட்டுப்பாடாக வேதவிரோதிகளை முழுமூச்சாக எதிர்த்தது. குருக்களும் தங்கள் முழு ஆதரவை கிறிஸ்தவர்களுக்கு அளித்தனர்.

1637 டிசம்பரில் முதலாவது படையணி அனுப்பப்பட்டது. இது முற்றாக முறியடிக்கப்பட்டு, ஆயுதங்களும் அபகரிக்கப்பட்டன. எனினும் தீவிரவாதிகள் சிம்பாரா கோட்டையை மும்முரமாகத் தாக்கினர் (1638 ஜனவரி 7). எனினும் கைப்பற்றவில்லை. இத்தாக்குதல்பற்றி கேள்வியுற்ற அமாகுசா குடியிருப்பினர் ரோமியோகா கோட்டையைத் தாக்கினர். எனினும் கைப்பற்றாத நிலையில் நீர்நிலையைத் தாண்டி சிம்பாரா வீரர்களுடன் சேர முயற்சித்தனர். மசுடா சிரோ என்ற 17 வயது இளைஞன் தீவிரவாதிகளின் அணித் தலைவனானான். சிம்பாராவுக்கு அரசு, ஏராளமான துருப்புகளை அனுப்பியதாக தலைவனுக்குச் செய்தி கிடைத்தது. உடனே தனது குழுவிலுள்ள 20,000 பேரையும் அவர்களது குடும்பத்தினரான 17,000 பேரையும் முன்னைய அரிமா அதிபதியால் கைவிடப்பட்ட காராநோயோ மாளிகைக்கு அனுப்பினான். மிக உயர்ந்த குன்றுகளிடையே அமைந்துள்ள இப்பிரமாண்டமான மாளிகையை, மூன்றுபக்கம் கடல் அரண்

செய்கிறது. மறுபக்கம் சதுப்பு நிலமாகும்.

குசுசு பகுதியிலிருந்து அனுப்பப்பட்ட 30,000 துருப்புக்களைக் கொண்ட இராணுவம் இக்கோட்டையைத் தாக்கியது. பெப்ரவரி 3இல் முதல் தாக்குதலில் இராணுவம் புறங்காட்டி ஓடியது. இரண்டாவது தாக்குதலில் (பெப்ரவரி 14) சோகுனால் அணியின் பிரதம தளபதி இத்தாக்குதலால் சிகெமாசா கொல்லப்பட்டான். புதிய தளபதி மற்சுடெய்ரா நோபுற்சுனா எதிரிகளை பட்டினி போட்டுக் கொல்லத் திட்டமிட்டான். தனது ஆட்கள் ஒரு லட்சம் பேரை சுற்றிவர நிறுத்தி உணவுப் பொருட்கள் செல்லாதவாறு தடுத்தான். கிராடோவிலுள்ள டச்சுத்தொழிலகத் தலைவனின் (கொச்சேபக்கர்) உதவியும் கோரப்பட்டது. அவனால் அனுப்பப்பட்ட ஆயுதந் தாங்கிய நாவாய் பெப்ரவரி 24 முதல் மார்ச் 12 வரை பீரங்கியால் அடுத்தடுத்துக் குண்டுகளைப் பொழிந்தது. கோட்டைக்குள்ளிருந்தோருக்கு விரைவில் உணவும் ஆயுதங்களும் தேவைப்படும் நிலை உருவாகியது. பின்னர் ஏப்பிரல் 15இல் நடத்தப்பட்ட மூன்றுநாள் தாக்குதலில் கோட்டை கைப்பற்றப்பட்டது. கோட்டையிலிருந்த அனைவரும் (பெண்கள், குழந்தைகளுட்பட) ஈவிரக்கமின்றிக் கொல்லப்பட்டனர். சோகுணாவின் 13,000 வீரர்களும் வீரமரணமடைந்தனர்.

இத்துர்ப்பாக்கிய நிகழ்வைத் தொடர்ந்து நாட்டின் வெளிநாட்டார் ஆதிக்கம் (டச்சு, சீனரைத்தவிர) முடிவடைந்தது.

## திருச்சபையின் நிலை

1623 மார்ச் மாதத்தில் யப்பானில் 34 மதபோதகர்களே (யேசுசபை 23, அகஸ்தீனியன் 1, டோமினிக்கன் 2, பிரான்சீஸ்கன் 8) காணப்பட்டனர். கோடை கால நாட்களில் 3 டோமினிக்கரும், 2 பிரான்சீஸ்கரும், 2 அகஸ்தீனியரும், ஒரு ஸ்பானிய நாவாயில் கள்ளமாக வந்து சேர்ந்தனர். அத்தருணத்தில் யப்பான் நாட்டுக்கு போர்த்துக்கேயக் கப்பல்களில் மதபோதகர் எவரும் வரக்கூடாதென மாகாவோ அதிகாரிகள் கட்டளை பிறப்பித்திருந்தனர். மணிலாவுக்கும் யப்பானுக்குமிடையே வர்த்தகத் தொடர்புகளனைத்தும் துண்டிக்கப்பட்டிருந்தன. (1624). 1627,1628களில் மதபோதகர் சிலரை வரவழைக்கும் முயற்சிகள் தோல்வி கண்டன. எனினும் யப்பானிய யேசுசபையினர் பீற்றர் காசுயி (உரோமையில் குருவாக திருநிலைப்படுத்தப்பட்டவர்) மைக்கல் மசுடா, மற்றும் மாவட்டக் குரு ஜெரோம் ஐயோ, மணிலாவிலிருந்து ஒரு பழைய நாவாயில் யப்பானுக்குள் பிரவேசித்தனர். தொடர்ந்து 1632இல் 11 மதபோதகர்கள் வந்தனர்.

1636இல் இரு டோமினிக்கக் குருக்கள் றுக்குதீவுகள் சென்று அங்கிருந்து யப்பான் செல்ல முயற்சித்தனர். அவர்கள் கைது செய்யப்பட்டு நாகாசாகிக்கு அனுப்பப்பட்டனர். இவ்விதமே அடிக்கடி யப்பான் தேசத்துக்கு வெவ்வேறு வழிகளால் வந்து சேர்ந்த ஐரோப்பிய மதபோதகர்கள் (குருக்கள்) கைது செய்யப்பட்டு நாடுகடத்தப்பட்டனர். அல்லது மரணதண்டனை பெற்றனர்.

இப்பயங்கர காலங்களில் யப்பானில் விசுவாசத்தை தளரவிடாது கட்டிக்காத்த பெருமை சுதேச குருக்களுக்குரியது. 1614இல் ஆயர் கார்குயிரா இறைவனடி சேர்ந்தார். ஆயரின்றி திருச்சபை அல்லலுற்றது. 1618இல் டியாகோ வலன்ரி ஆயராக நியமிக்கப்பட்டார். ஆயினும் அவர் யப்பானுக்குள் வரமுடியாதிருந்தது. 1633இல் வலன்ரி இறைவனடிசேர மீண்டும் பிரச்சனைகள் தலைதூக்கின. எனினும் குருக்கள் தலைமையில் யப்பானியரின் கிறிஸ்தவ விசுவாசம் காப்பாற்றப்பட்டு உறுதிப்படுத்தப்பட்டது.[71]

# பிலிப்பைன்ஸ் திருச்சபை வரலாறு

ஸ்பானிய குடியேற்றகாரருக்கு கிறிஸ்தவ விசுவாசத்தை வெளிப்படுத்தியவர் மகேலன். இவரே 1521இல் கியூமாபொன், கபூவானொஸ் பகுதிகளுடன் உடன்படிக்கை செய்துகொண்டவர். வரலாற்று ஆசிரியர் பிகாபெட்டா, இவரது அதிவேக மதமாற்ற அலுவல்களை சிறப்பாக வர்ணித்தாலும், கிறிஸ்தவத்தின் உண்மையான - உன்னத கோட்பாடுகளுக்கிணங்க இவர் நடக்கவில்லையெனக் குறைகூறவும் தயங்கவில்லை. மகேலன் மூலம் திருமுழுக்குப் பெற்றவர்கள், கிறிஸ்தவத்தை உண்மையாகவே புரிந்து கொண்டவர்களா என்பது கேள்விக்குறி என்பது இவரது வாதம்.

பிரதம தளபதி, சமாதானம் பற்றி நீண்டதோர் உரை நிகழ்த்தினான். இறைவன் தனது நாவின் மூலமே உரையாற்றினார் என்பது அவனது திடமான நம்பிக்கை. அவனது உரையால் தாங்கள் ஆட்கொள்ளப்பட்டதாகவும், அதுவரை அப்படிப்பட்ட ஒரு சிறந்த உரையை, தாங்கள் கேட்டதில்லையெனவும் அவர்கள் கூறினர். தனது பேச்சை அவர்கள் ஏற்றுக்கொண்டதால் உவகை கொண்ட தளபதி, அவர்கள் கிறிஸ்தவ விசுவாசிகளாக மாறவேண்டும் என்ற தன்விருப்பை வெளிக்காட்டினான்.

அரசனின் இறப்பின்பின் அரச பதவியை ஏற்பது யாரெனவும் வினாவினான். ''அரசனுக்கு புதல்வர்கள் இல்லாததால், புதல்விகளில் மூத்தவளுக்கே அரசுரிமை உண்டு. இவள் அரசனின் மருமகனையே மணம் செய்திருப்பதால் அவ்விளவரசும் அரசுரிமையில் மனைவியோடு பங்குகொள்வான்'' எனக் கூறப்பட்டது. மேலும் பெற்றோர் வயது முதிர்ச்சி அடையும்போது பிள்ளைகள் அவர்களை மதிப்பதில்லை எனவும், பிள்ளைகளே பெற்றோருக்குக் கட்டளையிட்டு அவர்களை ஆண்டு நடத்துவர் என்றும் அவர்கள் கூறினர். தளபதி அவர்களுக்குத் தெரிவித்தது யாதெனில் ''இறைவன் வானத்தையும், பூமியையும், கடல்களையும் மற்றும் அனைத்தையும் உண்டாக்கினார். அவரது கட்டளைப்படி நாம் எம் தந்தையர், தாய்மாரை நேசித்து, மதித்து காப்பாற்ற வேண்டும். இறைவனின் கட்டளைகளைப் புறக்கணித்து அவற்றுக்கு விரோதமாக நடப்பவர்கள் நித்திய நரக தண்டனைக்குள்ளாவர். முதல் மனிதராகிய ஆதாம் ஏவாளின் வழிவந்தவர்களே நாம் அனைவரும். எமக்கு ஒரு அழியாத ஆன்மாவை இறைவன் தந்திருக்கிறார். அந்த ஆன்மா இறைவனில் விசுவாசமும் நம்பிக்கையும் கொண்டிருக்க வேண்டும்.''

அவர்கள் எல்லோரும் தளபதியின் வார்த்தைகளை மகிழ்ச்சியோடு

ஏற்றுக் கொண்டனர். தம்மை விசுவாசத்தில் ஸ்திரப்படுத்தவும் ஓரிருவரைத் தந்தருளுமாறு வேண்டுகோள் விடுத்தனர். தளபதியோ ''அவ்விதம் சில மனிதரைத் தந்துதவமுடியாத நிலையில் தாமிருப்பதாகவும்; அவர்கள் விரும்பினால், தங்களுடனுள்ள குரு அவர்களுக்கு திருமுழுக்கு அளிப்பாரெனவும் அடுத்தமுறை தான் வரும்போது குருக்கள், துறவிகளை அழைத்து வருவார்'' எனவும் கூறினான். அவர்கள் முதலில் தமது அரசனைச் சந்திக்க விரும்புவதாகவும், மிக மகிழ்ச்சியுடன் திருமுழுக்குப்பெற்று கிறிஸ்தவத்தில் சேர்வார்களெனவும் தெரிவித்தனர்.

பிரதம தளபதி, தனக்கோ அல்லது தனது உதவியாளருக்கோ, பயந்து கிறிஸ்தவத்துள் சேரமுடியாதெனவும், தங்கள் சொந்த விருப்பத்தினால் மட்டுமே திருமுழுக்குப் பெறலாம் எனவும் கூறினான். அவர்கள் ஒரே குரலாக - தாங்கள் எவருக்கும் அஞ்சி திருச்சபையில் சேர விரும்பவில்லையெனவும், எவரையும் திருப்திப்படுத்தும் நோக்கமின்றி தங்கள் சொந்த விருப்பின் பேரில் திருமுழுக்குப் பெற விரும்புவதாகவும் ஆர்ப்பரித்தனர்.

ஸ்பெயின் ஆட்சிப்பீடம் பிலிப்பைன்ஸ்சில் நிரந்தரமாகக் குடியேற முடிவுசெய்தது. மைக்கல் லோப்பஸ் தே லீகஸ்பி, அகஸ்தீனிய துறவிகளுடன் நற்செய்திப் பணியை ஆரம்பித்தார். இவர்களது நற்செய்திப்பணி மகேலனது செயற்பாடுகளை விட நன்கு திட்டமிடப்பட்டதாகவும் உயிரூட்டமுள்ளதாகவும் அமைந்தது. உரோமைத் தலைமைப்பீடத்தின் தொடர்பும் இவர்களுக்குக் கிடைத்தது.

எமக்கு மாட்சிமை தங்கிய அரசரால் வழங்கப்பட்ட நற்செய்திப்பணியின் மகத்தான பொருளையும் இலட்சியத்தையும் உணர்ந்து, இறைவனுக்கே மாட்சிமையையும் கௌரவத்தையும் அர்ப்பணித்து, பெரும்பாலானோரை இரட்சணிய வழியில் திருப்பும் அலுவலில் ஈடுபடுகிறோம். ஆகவே நீண்ட பயனுள்ள கலந்துரையாடல்களுடனும்; உங்களது அன்பு, ஆதரவு, ஒத்துழைப்பு, உதவிகள், ஆலோசனைகளுடனும் இப்பெரிய அப்போஸ்தலிக்க அலுவலில் ஈடுபட எம்மை அர்ப்பணிக்கிறோம்...

....எமது அதிகாரத்துக்குள்ளிருக்கும் எல்லாவித வல்லமைகளுடனும் கிறிஸ்துவின் நற்செய்தியை எல்லா மக்களுக்கும் எடுத்துக்கூறவும், விசுவாசிக்கும் அனைவரையும், மூவொரு கடவுளின் நாமத்தால் ஞானமுழுக்காட்டி, அவர்களுக்கு சத்திய வேதத்தின் விசுவாசப் பிரமாணங்களை விளக்கி, சத்திய நெறியின் வழியில் அவர்களை நடத்தவும் உங்களை உரோமானிய கத்தோலிக்கத் தலைமைப்பீடத்தின் பெயரால் அன்புடன் அழைக்கிறோம். புதுவித சித்தாந்தங்களைப் போதிக்காது, கத்தோலிக்கத் திருச்சபையின் பிதாமகர்கள் காட்டும் உண்மைச்சத்தியங்களை மக்களுக்குத் தெளிவுபடுத்துவதில் உங்கள் கவனத்தைச் செலுத்துவீர்களாக. பாப்பரசருக்கும் அவரது பிரதிநிதிகளாக உங்களை வழி நடத்த வரும் ஆயர்கள், குருக்களுக்கும் கீழ்ப்படிவும் பிரமாணிக்கமும் காட்டுவீர்களாக. அதுபோல உங்கள் ஆட்சியாளர்களுக்கும் (அவர்கள் உங்கள் கிறிஸ்தவ வாழ்வில் குறுக்கிடாதவரை) பிரமாணிக்கமுள்ளவர்களாக விளங்குவீர்களாக. கத்தோலிக்க விசுவாசம், நம்பிக்கை, தேவநேசம் உங்களில் ஊற்றெடுத்து உங்களைச் சார்ந்தோருக்கும்பாய்வதாக. பழைய பழக்கவழக்கங்கள் உங்களை விட்டு அகலட்டும். பசாசின் ஆதிக்கம், உங்களை ஆட்கொள்ளாதிருப்பதாக.

அவர்களின் ஆட்சிமுறைகளும், மத அனுசரணைகளும், பாரம்பரிய வழமை களையும் தேசிய முறைமைகளையும் அடிப்படையாகக் கொண்டது. இவை அலகையின் ஏவுதல்களால் உருவாக்கப்பட்டவை. தேசிய மதத்தலைவர்கள், துறவிகளின் தான்தோன்றித்தனமான நிர்வாகத்தால் இயக்கப்பட்டன. இந்த அம்சங்களை அடிப்படையாகக் கொண்ட தேசிய பாடல்களே இம்மத சித்தாந் தங்களை அவர்களது மதபிரமுகர்கள் மூலம் சந்ததிசந்ததிவழியாக நிலைக்க வைத்தன. நூல்கள் நடைமுறையில்லாக் காலந்தொட்டு இப்பாடல்களை மனனம் செய்வதன் மூலமாகவே இத்தேசிய மதங்கள் பாதுகாக்கப்பட்டன.

வீடுகளில், வெளியிடங்களில் எந்த அலுவல்கள், வைபவங்களின்போதும் இப்பாடல்கள் இடம்பெற்றமையால் இந்த மத சித்தாந்தங்கள் மக்கள் மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டன. எனவே இந்த விதத்தில், கத்தோலிக்க அணுகு முறைகள் அமைந்தாலொழிய, நற்செய்திப்பணி வெற்றியடையாது என்பது உணரப்பட்டது. எனவே மாற்றுவழிகளைப் புகுத்துதல் அவசிய தேவை ஆயிற்று. நற்செய்திப் போதகர்களில் ஒருவர், சிறந்த ஓவியர். அவர் வரைந்த நரகக் காட்சி அழகாக, உயிரூட்டம் கொண்டதாக அமைந்தது. அவ்வோவியம் பலர் மனந்திரும்ப உதவியாயிற்று. மேலும் தங்கள் மூதாதையரைப்பின்பற்றிய பலர், பலவித சிலைகளையும் உருவங்களையும் வழிபட்டனர். அவற்றுக்கு கோயில் எழுப்பி பூசைபண்ண பூசாரிகளையும் நியமித்தனர். இறந்த உறவினர்களை வழிபடும் வழக்கமும் பல இடங்களில் காணப்பட்டது. இவ்விடங்களில் கற்களால், மரங்களால், தந்தங்களால் இறந்த உறவினர்களுக்குச் சிலைகள் அமைக்கப்பட்டன. மேலும் இவர்கள் எகிப்தியரைப் போல மிருகங்கள், பறவை களையும்; அசீரியரைப்போல் சூரியன், சந்திரனையும் தங்கள் தேவதைகள் ஆக்கினர். வானவில்லை இறைவனின் பிரதிவிம்பமாக வழிபட்டனர்.

இவர்கள் ஆலயங்களை அமைக்கவில்லை ஆயின் குருக்களால் வழி நடத்தப்பட்டனர். இக்குருக்கள் பசாசுகளின் தொடர்பைக் கொண்ட ஆண்கள், பெண்களிலிருந்து தெரியப்பட்டனர்.

மோறோ இனத்தவர் வழிபட்ட தேவதையின் பெயர் 'பதலா' இத்தெய் வமே எல்லா மனிதரையும் படைத்தது என அவர்கள் நம்பினர். இத்தேவ தைக்குப் பல அமைச்சர்கள் இருந்தனரென்றும் அவர்களை காலத்துக்குக் காலம் தனது கட்டளைகளை நிறைவேற்ற இத்தேவதை அனுப்புகிறது என்றும் கூறப்பட்டது.

இந்த அமைச்சர்கள் 'அனிற்றோஸ்' என அழைக்கப்படுவர். ஒவ்வொரு அனிற்றோவுக்கும் ஒவ்வோர் கடமை உண்டு. வயல்களில், மாலுமிகளில், தொழிற் சாலைகளில், நோயாளிகளில் ... எந்த அனிற்றோவின் உதவி தேவையோ அவர்களுக்குரிய பரித்தியாகங்களை இவர்கள் நிறைவேற்ற வேண்டும். இவை களை நிறைவேற்றும் குருக்களை பின்ராடோஸ் (தேகம் முழுவதும் பலவித வர்ண மைகளைப் பூசிக்கொண்டிருப்பர்) என அழைப்பர். அவர்கள் நோயாளி களை அல்லது உதவி தேவைப்படுவோரை பெருமளவில் அரிசி, மீன், மாமிசம் என்பவற்றைக் கொண்டுவரச் செய்து அவைகளை பசாசுகளுக்குப் படைத்து, தங்களை தீய ஆவிமேற்கொள்ளும்வரை பேயாட்டம் ஆடுவர். ஆவியினால் ஆட்கொள்ளப்பட்டபின் பல அறிவித்தல்களைக் கொடுப்பர்.

நீங்கள் இப்பரித்தியாகக் காணிக்கைகளை பதாலாவுக்குச் செலுத்தாமல்

அனிற்றோவுக்கு கொடுப்பதேன்? என நான் கேட்டபோது 'பதாலா' பெரிய கடவுள் எனவும் அவர் பரலோகத்தில் இருப்பவர் எனவும் அவரோடு எவரும் பேசமுடியாதெனவும் கூறினர். அனிற்றாக்கள் அவரது அமைச்சர்கள். கடவுளின் கட்டளைகளை நிறைவேற்ற பூவுலகத்துக்கு அடிக்கடி வருபவர்கள் எனப்பதில் தரப்பட்டது. ஒரு வீட்டில் அன்னையோ தந்தையோ அல்லது உறவினரோ இறப்பின், அவர்கள் ஒரு தடியில் இறந்தவரின் மாதிரிகையாக ஒரு பொம் மையை பொருத்தி அதனை வீட்டின் முற்றத்தில் நடுவர். இறந்தவர்கள் 'அனிற்றா'க்களாக மாறி தங்கள் வீடுகளையும் அங்கு வசிப்போரையும் பாதுகாவல் செய்கின்றனர் என இவர்கள் திடமாக நம்புகின்றனர்.

மணிலா குடாவை ஆளுகை செய்வோர் முஸ்லிம்கள். அவர்கள் புறுணை யின் அரச குடும்பத்தினர். முஸ்லிம் வர்த்தகர்கள் பரவலாகக் காணப்படும் பலாயன், செபு பகுதிகளில் இஸ்லாம் மதம் செல்வாக்குப் பெற்றிருந்தது.

கடற்கரையை அடுத்த பகுதிகளில் சிலர் பன்றி இறைச்சி அருந்துவ தில்லை. முன்பு மாகோமா என்ற சமயத்தை போதித்தோர் அதைத் தடுத்திருந் தனர். இதற்கான காரணி என்னவென நான் வினாவிய போது அவர்கள் திகைத் தனர். மாகோமா என்பவர் யாரென்றுகூட அவர்கள் அறியார்கள். போர்ணியை பிறப்பிடமாகக் கொள்ளாதவர்கள் பன்றி இறைச்சியைப் புசிக்கலாம் எனச் சிலர் கூறினர். இவ்விதமே பல மூட நம்பிக்கைகள் அவர்களிடம் காணப்பட்டன.

1965இல் லீகாஸ்பியின் கண்டுபிடிப்புக்குழு செபுவில் காலடி எடுத்து வைத்தபோது, அவரது வீரர்களுள் ஒருவன் குழந்தை இயேசுவின் திருவுருவைக் கண்டெடுத்தான். இது முன்னைய மறை பரப்பாளர் மகேலனால் 1521இல் ஒரு பிரமுகருக்கு அன்பளிப்புச் செய்யப்பட்டதாகும். இக்கண்டு பிடிப்பு இறைவனின் திருவருள் என்று வியந்த லீகாஸ்பி அந்த நகருக்கு 'சனிபெய்மோ நோம்பிறே தே யேசு' எனப் பெயரிட்டார். இன்று அது இந்த நாமத்துடன் பேராயரின் தலைமையகமாக விளங்குகிறது. பிலிப்பைன்ஸ் கிறிஸ்தவத்தின் தொட்டில் என்ற சிறப்புப் பெயரும் இதற்கு உண்டு.

மேன்மை தங்கிய தங்களது கவனத்துக்கு, இப்பகுதியில் கடவுளின் கருணைவெள்ளம் இன்னுமே வற்றாது ஓடிக்கொண்டிருக்கிறது என்பதை தெரிவிக்க விரும்புகிறேன். நாம் இக்கிராமத்தில் (செபு) காலடி எடுத்துவைத்த போது எமது போர் வீரரில் ஒருவர் ஒரு மண்ணின் மைந்தனின் மிகப்பெரிய கம்பீரமான மாளிகைக்குச் சென்றிருந்தார். அங்கு அவர் குழந்தை இயேசுவின் அழகான சொரூபமொன்றை அதற்குரிய பொன்மயமான தொட்டிலில் கண்டார். இது ஸ்பெயினிலிருந்து கொண்டுவரப்பட்டதாகும். புத்தம் புதிதாகக் காட்சி யளித்த இவ்வற்புத சொரூபத்தின் கையிலிருந்த பூமியின் குருசு (சிலுவை) மட்டும் சிறிது சேதமடைந்து காணப்பட்டது. இவ்வீட்டில் இச்சொரூபம் மிகச் சிறப்பான விதத்தில் ஆராதிக்கப்பட்டது. மலர்ச்செண்டுகள் சொரூபத்தை அலங்கரித்தன. எமது போர்வீரர் சொரூபத்தை ஆராதித்தபின், அவ்வீட்டார் அனுமதியுடன் தமது இருப்பிடத்துக்கு கொண்டுவந்தார். நான் சொரூபத்தை வணங்கி, இயேசுவின் திருநாமத்துக்குப் புகழ்ச்சிப்பா ஒன்றைப் பாடினேன். எமது விசுவாசப் பரப்புதற் பணியில் வெற்றிதர வேண்டுமெனவும் வேண்டிக் கொண்டேன்.

தொடக்க காலத்தில் அகஸ்தீனிய சபையினர் மட்டுமே பிலிப்பைன்ஸ்சில்

நற்செய்திப் பணிக்கு நங்கூரமிட்டுப் பாதுகாத்தனர். பின் ஸ்பானியரின் ஆதிக்கம் அதிகரிக்க, வேறு கத்தோலிக்கக் குழுக்களும் இப்பணியில் பங்கேற்றனர். 1578 பிரான்சீஸ்கன் சபை, 1581 யேசுசபை, 1587 டோமினிக்கன் சபை, 1606 றெக் கொலேற் றோஸ். ஒவ்வொரு சபைக்கும் இரண்டாவது பிலிப் அரசரால் அவரது பிலிப்பைன்ஸ் ஆளுநர் மூலம் தேசத்தின் ஒருபகுதி, நற்செய்திப்பணிக்கென ஒதுக்கப்பட்டது.

கோமஸ் பெரஸ் டஸ்மரினாஸ் (சந்தியாகோபட்டவர்த்தினர்) என்ற எனது கௌரவ ஊழியரும், எனது பிலிப்பைன்ஸ் தீவுகளின் ஆளுநரும், அங்குள்ள எனது படையணிகளின் பிரதம தளகர்த்தருமாகிய உமக்கு அரசராகிய நாம் தெரிவிப் பது எமது தீவுகளின் சுதேசிகளின் நிலைபற்றியும் அவர்களை மனந்திருப்பி சத்திய மறையில் சேர்த்துக்கொள்வது சம்பந்தமாகவும் நீர் எழுதிய கடிதத்தைப் படித்தபின், மறைபோதகர்களின் பற்றாக்குறை அனைத்து நற்செய்திப்பணி களுக்கும் முட்டுக்கட்டையாயிருப்பது நன்கு தெரிகிறது. எனவே உடனடியாக 100 மறைபோதகர்கள் (40 அகஸ்தீனியர், 24 டோமினிக்கர், 18 பிரான்சீஸ்கர், 18 யேசு சபையினர்) அனுப்பப்படவேண்டுமென உத்தரவு பிறப்பித்துள்ளேன். தொடர்ந்து, பிலிப்பைன்சின் ஆன்மீக அலுவல்கள் தன்னிறைவு காணும்வரை குருக்கள், துறவிகள் அனுப்பப்பட வேண்டுமென விரும்புகிறேன். ஒவ்வொரு சபையினர்க்கும் ஒரு தனிமாவட்டத்தை அளிப்பது நற்செய்திப்பணிக்கு நல்ல வாய்ப்பளிக்கும் என்பது என் எண்ணம்.

அரசரின் இத்திட்டம் தொடர்ந்து இரு நூற்றாண்டுகளாக நற்செய்திப் பணியில் நல்ல பயனை அளித்தது. ஏனைய மதபோதக சபைகளுக்கு சாம்பலஸ், பலாவன், கலாமைன்ஸ், மின்டாநாவோ பிரதேசங்கள் ஒதுக்கப்பட்டன.

அகஸ்தீனிய சபையே, இத்தீவுகளில் நற்செய்திப்பணியைத் தொடக்கி வைத்தது. ரக்லா மாகாணங்கள், பம்பன்கா, யோலோகோஸ், பின்ராடொஸ் பகுதிகளின் பொறுப்பு இச்சபையிடம் விடப்பட்டது. இச்சபைக்கு 60 குரு மனைகளும், 108 குருக்களும், 53 பொதுநிலைத் தொண்டர்களும் பணியாற்றினர். புதிய பிரதேசங்கள் கண்டுபிடிக்கப்பட்ட வேளைகளிலும் நற்செய்திப் பணிக்கு இச்சபையினரே அழைக்கப்பட்டனர். இப்பணிக்காக ஆண்டு ஒன்றுக்கு 20 பேர் மேலதிகமாகத் தேவைப்படுவர் என்றும் கணக்கிடப்பட்டது. இவ்விதம் புதிய ஊழியர் கியூவா எஸ்பானாவிலிருந்து அழைக்கப்படின் அங்கிருந்து பழக்கப் பட்ட ஊழியரே அனுப்பப்படுவதால், அரச திறைசேரியின் செலவீனங்கள் பெருமளவில் குறைவதுடன், இவர்கள் சுதேசியரிடையில் பணியாற்றி அனுபவம் வாய்ந்தவராதலால், பயன் அதிகமெனவும் தெரிவிக்கப்பட்டது.

பிரான்சீஸ்கன் சபை, கமாரின் பிரதேசத்தைப் பொறுப்பேற்றது. அவர் களுக்கு 40 குருமனைகளும், 120 மறைபோதகர்களும் (குருக்கள் - துறவிகள் மற்றும் 23 பொதுநிலையினர்) பணியாற்றினர். இவர்களுக்கு ஆண்டுதோறும் மேலதிகமாக 50 பேர் தேவைப்பட்டனர். ககாயன் பிரதேசம், டொமினிக்கன் சபையிடம் தரப்பட்டது. இவர்கள் 12 குருமனைகளையும் 71 மறைபோதகரை யும் பணியிலமர்த்தினர். இவர்கள் வருடாவருடம் 20 குருக்கள் அனுப்பப்பட வேண்டுமென விண்ணப்பித்தனர். எனவே நற்செய்திப்பணிக்காக, தங்கள் பிர தேசங்களில் பல இளைஞர்களையும் அழைத்துப் பயிற்சி அளித்தனர்.

யேசு சபைக்கு 12 இல்லங்கள் இருந்தன. பின்ராடொஸ், சமார்,

லெயிட்டி, பாபாவோ என்ற பிரதேசங்களில் யேசுசபையினர் பணியாற்றினர். குருக்கள், போதகர்கள், பொதுநிலை ஊழியராக 43 பேர் கடமைபுரிந்தனர். இவர்களுக்கு வருடமொன்றுக்கு 50 குருக்கள் தேவைப்பட்டனர். மேற்கூறிய மதபோதக சபையாரின் தலைவர்கள், மிகத்திறமைசாலிகள்; பக்தியுணர்வு கொண்டவர்கள்; நிர்வாகத்திறன் படைத்தவர்கள்; இயேசுவின் நேசத்துக்காக இன்னல்களைப் பொறுமையுடன் தாங்கிக் கொள்பவர்கள்; தம் கீழுள்ள குருக் கள், துறவிகள், பொதுநிலையினரின் மேல் புரிந்துணர்வு கொண்டவர்கள். எனவே இச்சபைகள் நற்செய்திப் பணியிலும் மதமாற்ற முயற்சிகளிலும் மேலான அறுவடை செய்ததில் வியப்பேதுமில்லை.

1579இல் உரோமையின் கத்தோலிக்கத் தலைமைப்பீடம், மணிலா மறைமாவட்டத்தை அங்கீகரித்தது. பிறே டொமிங்கோ டி சலாசர் முதலாவது ஆயராக நியமிக்கப்பட்டார். அவர் 1581இல் தம் பொறுப்புகளை உத்தியோக பூர்வமாக ஏற்றுக் கொண்டார்.

மணிலா ஒரு மறைமாவட்டமாக்கப்பட்டு, தலைமையகம் நிறுவப்பட்ட போதும் அது ஒரு பெரிய பிரதேசமாக இருந்ததால், நிர்வாகத்தில் பல பிரச்ச னைகள் தலைதூக்கின. பிரதானமானது குருக்கள் பற்றாக்குறையே. மேலும் போக்குவரத்து முதலிய பிரச்சனைகள் காரணமாக ஆயரால் பங்குகள் அனைத் தையும் தரிசிக்கவும் பங்குகளின் நிர்வாகத்தை அடிக்கடி பரிசீலனை செய்ய வும் முடியவில்லை. எனவே எனது ஆலோசனையாளர்களின் கருத்துப் பரிமாற் றங்களின் பின், சில முக்கிய நடவடிக்கைகளை எடுக்க எண்ணியுள்ளேன்.

எனவே மணிலாவின் ஆலயம் பேராலய அந்தஸ்து பெறும். பேராயரின் உத்தியோகபூர்வ தலைமையகமாகச் செயற்படும். மூன்று மறைமாவட்டங் களும் அவற்றை நிர்வகிக்க மூன்று ஆயர்களும் இடம்பெறுவர். மூன்று மறை மாவட்டங்கள் வருமாறு நியூவாசெ கோவியாநகரம் (கருத்தாங்கிய மாதாவின் அடைக்கலத்தில்), கசராஸ் நகரம் (நற்செய்தியாளர் புனிதயோவானின் அடைக் கலத்தில்), கமாரினஸ் பிரதேசம் (காவல் தூதுவரின் அடைக்கலத்தில்). எனவே இம்மூன்று ஆயர்களும் தங்கள் மறை மாவட்டங்களில் நீதிபரிபாலனம், நிர் வாகம், பங்குக்குருக்களை மேற்பார்வை செய்தல் - நியமித்தல், மறைக்கல்விப் போதனை, நற்செய்திப்போதனை, மத மாற்றம் முதலியவற்றை மேற்கொள்வர்.

அரசர் பிலிப்பைன்ஸ் ஆளுநருக்கு அறிவிப்பது: டோமினிக்க சபையினரும், தீவுகளின் ஆயருமான அதிபூசித பிறேடொமிங்கோ டி சலாசர் எமக்குத்தெரி வித்ததாவது, தீவுகளில் குடியிருக்கும் வசதிகளுடன் அவர் செல்கிறார். மடால யங்களை அமைத்து நடத்தவும், மதமாற்றங்களைச் செய்யவும், நற்செய்திப் போதனையை ஆற்றவும், தகுதியானோரை அழைத்துச் செல்கிறார். அவரது குழுவில் திறமைமிக்க பிரான்சீஸ்கர்களும், அகஸ்தீனியரும் அடங்குவர். நிச்சய மாக எமது இரட்சகர் இயேசுவை அத்தீவுவாழ் மக்களுக்கு அறிவிப்பதில் வெற்றியடைவார் என நம்புகிறேன். எமது மதபோதக அலுவல்கள் சம்பந்த மாக அவ்வப்போது அறிக்கைகள் அனுப்புவீராக.

## நீதிக்கான போராட்டம்

பிலிப்பைன்ஸ் தீவுகளை ஸ்பானியர் கைப்பற்றியபோது வெறியாட்டங் களோ, சர்வாதிகாரத் திணிப்புகளோ இடம்பெறவில்லை. அமைதியான

நடவடிக்கைகளே மேற்கொள்ளப்பட்டன. இவை படையணியுடன் சென்ற மதபோதகர்களின் வழி நடத்துதல்களாயிருக்கலாம்; வேறிடங்களில் இவ்வித போராட்டங்களின் போது படையினரின் வெறியாட்டங்களும் பாலியல் வல்லுறவுகளும் சுதேசிகள்மீது திணிக்கப்பட்டதை வரலாறுகள் கூறுகின்றன.

ஒரு கப்பல் தலைவன், போர் வீரருடனும் மொழி பெயர்ப்பாளர்களுடனும் ஒரு நகருக்குச் செல்கிறான். அந்நகரைப்பற்றி முன்பு அவன் அறிந்திருக்கலாம். அல்லது முன்னரே ஸ்பானியர் அங்கு சென்றிருக்கலாம். இவர்கள் நகர மக்களுக்கு நீங்கள் ஸ்பானியருடன் நட்புறவுகொள்ள விரும்பினால் அவர்களுக்குப் பெரும்பொருள் கொடுக்க வேண்டும். மக்கள் உடன்பட்டால் உடனடியாகத் தருமாறு வற்புறுத்துவர். சிலசமயம் மக்கள் மறுத்தால் நகரம் முழுவதும் ஈவிரக்கமின்றிச் சூறையாடப்படும். அத்துடன் பல்வேறு வன்செயல்களும் கட்டவிழ்த்துவிடப்படும். இந்தப் போர் வீரர்கள், அரசரால் எக்காரணத்துக்காக அனுப்பப்பட்டார்களென்றோ அல்லது மத போதகம், மனமாற்றத்துக்கு ஒத்துழைப்பு வழங்கவோ முயற்சிப்பதில்லை.

யுத்த ஆலோசனைக்குழு, சுதேசிகள் ஸ்பானியரின் நட்புறவை விரும்பவில்லை எனில் போராலும் வன்செயல்களாலும் சுதேசிகளை அடிமைப்படுத்த நடவடிக்கைகளை மேற்கொள்ளும். ஸ்பானியருக்கெதிராக எழுச்சிகொண்ட சுதேசிகள் கைது செய்யப்படுவர். சித்திரவதைகளும் இறுதியாக சிரச்சேதமுமே கிளர்ச்சியாளர்களின் முடிவு. அந்த மக்களின் வீடுகள், சூறையாடப்படும்.

ஸ்பானிய குடியேற்றக்காரரின் ஆன்மீக தந்தையும் பிலிப்பைன்ஸ் தீவுகளின் மதமாற்றத்துக்கு பொறுப்பாளராயிருந்தவருமான 'ராடா' அடிகளின் கருத்துப்படி தங்களது அலுவல்களுக்கு அனுசரணையாக தீவுகள் முழுவதும் ஸ்பானியரின் ஆதிக்கத்துக்குள் இன்னமும் வரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அரசரின் உத்தரவுக்கிணங்க நாம் இங்குவந்துள்ளோம். அரசியல் பிரச்சனைகளை நாம் அணுகமுடியாது. இந்த நாட்டில் நடைபெறும் வழிப்பறிகள், கொள்ளையடிப்பு, முதலிய வன்முறைகளுக்கு அரசபடைகளோ மதபோதகர்களோ காரணர் அல்லர். சுதேசிகளின் கைங்கரியம் அது. அவர்களது செயல்கள் மணிலா நகரின் அமைதிக்கும் சில தடவைகள் குந்தகம் விளைவித்துள்ளன.

மேலும் சில காரணிகள்: ஸ்பானியரை எதிர்க்கும் சுதந்திர மூர்க்கங்கொண்ட ஒருகுழுவினரின் வன்முறைகள், இத்தீவுகளிலுள்ள ஸ்பானிய மத போதகர்கள், அதிகாரிகள், படையினரைப் பாதுகாக்க ஸ்பானியர் எடுக்கும் வன்முறை கலந்த நடவடிக்கைகள் படையணியினர்களுக்கு ஆளுநர்கள் ஒவ்வொரு தடவையும் கட்டளைகள் பிறப்பிக்கும் போது கிறிஸ்தவ இலட்சியங்களையே (அன்பு, இரக்கம், விட்டுக் கொடுக்கும் மனப்பாங்கு) அனுசரிக்குமாறு உத்தரவிடுகின்றனர். சில தருணங்களில் மாட்சிமை தங்கிய மன்னரின்பேரால் விக்கப்படும் கட்டளைகள் மன்னருக்கெதிரான எண்ணங்களை மக்களிடையே உருவாக்கவும் படையணியினரின் அல்லது சில சுதேச தலைவர்களின் தான் தோன்றித்தனமான செயல்களும் காரணிகளாகின்றன. ஆயின் ஸ்பானியரை ஆயுதபாணிகளாக செய்வது அவர்களது சொந்த ஆட்களின் நலன்களுக்காகவே என்பது இங்கு சுட்டிக்காட்டப்படுகிறது. ஸ்பானியர் நிராயுத பாணிகளாக நடமாடியபோது பலதடவைகள் சுதேசிகளால் ஈவிரக்கமின்றித் தாக்கப்பட்டு கொலைசெய்யப்பட்டுள்ளனர். எனவே ஸ்பானியர் கொடுங்கோலர் என்றோ, குரூரவாதிகள் என்றோ வழங்கிவரும் கருத்து தவறானது ஆகும்.

அதே தருணத்தில் ஸ்பானியப் படையினருக்கு கப்பம் கட்டாவிடில் யப்பானிய சுதேசிகளுக்கு இழைக்கப்படும் அநீதிகளும் சொல்லுந்தரமன்று. எனினும் இவ் விதம் கப்பம் பெறுவதற்கு கைமாறாக ஸ்பானிய படையணியினர் சுதேசிகளை அவர்களது பிற எதிரிகள், பகைவர்களிடமிருந்து பாதுகாக்கின்றனர் என்பதும் இங்கு குறிப்பிடப்படல் வேண்டும். இப்பாதுகாப்பு காரணமாக அமைதியான குடும்பவாழ்வை சுதேசிகள் தேடிக்கொள்கின்றனர் என்பதும் வெள்ளிடைமலை.

அகஸ்தீனிய சபையார் அநீதிவழங்கப்படுவதை ஆணித்தரமாகக் கண்டிக்கத் தயங்கவில்லை. பிலிப்பைன்ஸ் நாட்டு மக்கள் நீதியாக நடத்தப்படல் வேண்டு மென்பதில் அவர்கள் கண்ணுங்கருத்துமாயிருந்தனர். என்கொமின்டாங் குழு வினரின் சர்வாதிகாரப் போக்குகளை அவர்கள் ஆணித்தரமாகக் கண்டித்தனர். ஒவ்வொரு சுதேசியனுக்கும் தினசரி இரண்டரை றியாலஸ் நாணயங்கள் கொடுக்கப்படல் வேண்டுமென வாதாடினர். இந்த நாட்டை ஸ்பானிய மன்னர் சர்வாதிகாரமாக ஆளுகை செய்யமுடியாதெனவும் தெரிவித்தனர். எனவே இந்த விடயங்கள் சம்பந்தமாக (மத மாற்றம், நற்செய்திப் போதனை, அரசியல் நிர் வாகம்) மாட்சிமை தங்கிய மன்னர், பிலிப்பைன்சில் பணியாற்றும் வெளி நாட்டவர் நடந்துகொள்ள வேண்டிய முறைகள் பற்றிய விதிமுறைகளை உத்தி யோகபூர்வமாக அறிவிக்கவேண்டியதவசியமாகிறது. என்கமாண்டோக்களும் பொதுமக்களும் மதமாற்றம் பெறாவிடில் நரகத்துக்குப் போகநேரிடுமே என்ற குறுகிய நோக்குடன் விரைந்து செயல்படவேண்டிய கருமமல்ல இது.

மணிலாவின் முதற்கத்தோலிக்க ஆயர் அதிபூசித டொமிங்கோ டி சலாசர் O.P 1581இல் வந்து சேர்ந்தார். அல்கல்டெஸ் - மேயோரிஸ் என்ற பிலிப் பைன்ஸ் தீவுகளின் மிகத்தலையாய தீவிரவாதி சுமத்திய பலகுற்றச்சாட்டுகள் சம்பந்தமாக பல கருத்தரங்குகள், கலந்தாலோசனைகள் இடம்பெற்றன. அல்கல்டெஸ் - மெயோரிஸ் கன் அரசனின் பெயரால் சிறுசிறு பிரதேசங்களை ஆளுகைசெய்தனர். ஆட்சிமுறையானது சோசலிஸ அடிப்படையான அரசியல் யாப்பைக் கொண்டிருக்க வேண்டும் என்ற கூக்குரல்கள் புதிய ஆயர்முன் குழுக் களின் தலைவர்களால் சமர்ப்பிக்கப்பட்டது.

1582 ஜூன் 15இல் முதல் ஆயரான டொன் பிறே டொமிங்கோ டி சலாசர், (இவர் அரசரின் ஆலோசனைக் குழுவிலும் அங்கம் வகிப்பவர்) சுதேச குழுக்கள் தலைவர்களைக் கொண்ட சம்மேளனம் ஒன்றைக் கூட்டினார். இக்குழுவுக்கு, மாட்சிமைமிக்க மன்னருக்குத் தாம் சமர்ப்பிக்கப்போகும் மனு சம்பந்தமாக விபரங்களைத் தெரிவித்தார். அவர்கள் தாம் அனுபவிக்கும் பல்வேறு இன்னல் கள், பழிவாங்கப்படல், தேவையற்ற வன்முறைத் தொந்தரவுகள் பற்றி மன்ன ருக்குத் தெரிவிக்குமாறு விண்ணப்பித்தனர். தங்கள் கஷ்டங்களுக்குத் தகுந்த பரிகாரத்தை அரசர் தருவார் என்ற ஆழ்ந்த நம்பிக்கையோடு, இப்பரிதாபமிக்க சனக்கூட்டம், இத்துன்பங்களிலிருந்து விடிவுபெறும் நாளை ஆவலுடன் எதிர் பார்த்து நிற்கிறது.

அரசர், மட்றிட் நகரிலிருந்து 1574 நவம்பர் 7இல் பிலிப்பைன்ஸ் தீவுக் கூட்டங்களின் ஆளுநருக்கு அனுப்பிய உத்தியோகபூர்வ மடல்: உமது ஆளு கையின்கீழுள்ள தீவுகளில் பணியாற்றும் - வதிக்கும் ஸ்பானியர்கள் அங்குள்ள சுதேசிகளை (இந்தியயோக்களை) அடிமைகளாக வைத்திருக்கிறார்களென எமக்குத் தகவல்கள் கிடைத்துள்ளன. யுத்தங்களால் அல்லது வேறு காரணிகளி னால் அடிமைகளாக்கப்பட்ட அனைத்து சுதேசிகளும் உடனடியாக விடுவிக்கப்

படல் வேண்டும். எவருக்கும் தலைவணங்கி குற்றேவல் செய்யாது சுதந்திரமாக நடமாட தம் தொழிலை - வாழ்வை நடத்த அனுமதிக்கப்படல் வேண்டும்.

இரண்டாவது பிலிப் மன்னர் ஜனநாயக சோஸலிச கொள்கைகளில் மிகுந்த பற்றுடையவர். தமது ஆட்சியின் கீழ் சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரம் பேணப்படுவதில் மிகுந்த அக்கறை காட்டுபவர். மணிலா ஒரு சுதந்திர மறை மாவட்டம் ஆக்கப்படுதல், அதன் முதல் ஆயரை திறமையும் பக்தியும் கொண்ட சுதேசியாக தெரிவு செய்தல், இவை சம்பந்தமாக பாப்பரசரிடம் தமக்கிருந்த செல்வாக்கைத் துஷ்பிரயோகம் செய்யாமை என்பனவற்றால் அரசரின் நற்பண்பு கள் தெரியவந்தன. ஆயர் சலாசர் மெக்சிக்கோ மக்களின் நீதிசுதந்திரப் போராட் டத்தில் முன்னின்று உழைத்தவர் என்பது இங்கு குறிப்பிடல் வேண்டும். அவர் மணிலாவுக்கு வந்ததும் (1581) அகஸ்தீனிய, பிரான்சீஸ்கன் சபையார், ஆளு நர்களுடனும் என்கொ மாண்டரோஸ்களுடனும் கொண்டிருந்த பிரச்சனை களை சுமுகமாகத் தீர்ப்பதில் முனைந்தார். 1582இல் அவர் இப்பிரச்சனை களுடன் தொடர்புகொண்ட குருக்கள், உயர்பீடங்களில் பணியாற்றும் பொது நிலையினர் கொண்ட ஒருமகாநாட்டைக் கூட்டி அவர்களது கருத்துக்களை அறிந்து கொண்டார்.

ஸ்பானிய ஆளுகையில் நீதிநேர்மை உதாசீனம் செய்யப்படுகிறதா என்பதையறிவதே அவரது முக்கிய குறிக்கோள். மேலும் நற்செய்திப் போதனை முக்கிய இடத்தைப் பெறச் செய்தல். அவரது தலையாய இலக்கு. மணிலாவில் 1582 - 1586இல் கூட்டப்பட்ட சினொட் கருத்தரங்கு (யுண்டா என்பது மணி லாவின் வழங்கப்பட்ட பெயர்) நற்செய்திப் போதனையை எதிர்கொள்ளும் எல்லா வித பிரச்சனைகளையும் அலசி ஆராய்ந்தது.

பிரதம தளபதி, படையணியினர், ஆளுநர்கள், அதிகாரிகள் என்போருக்கு இந்த நாடுகளின் மேல் அரசரால் கொடுக்கப்பட்டதைத் தவிர மேலதிக அதிகா ரங்கள் எதுவும் கிடையாது. அரசருக்கோ கிறிஸ்துவினால் கொடுக்கப்பட்டதே உண்டு. ஆண்டவர் கிறிஸ்து அரசருக்கு கொடுத்த கட்டளை உலகனைத்துக்கும் நற்செய்தியைப் போதிப்பதே. இக்கருத்துக்காக மதபோதகர்களை அகில உலகுக்கும் அனுப்புதல் அவரது கடமை. எவரதும் உடைமைகளை அபகரிக்க அவரால் முடியாது. மத போதகர்களுக்குப் பாதுகாவலாக இராணுவ வீரரை அனுப்ப வேண்டியதும் அவரது கடமை. மதமாற்றம் செய்யப்பட்டவர்களை (திருச்சபையின் புதிய அங்கத்தவரை) பலவித இன்னல்களிலிருந்து பாது காப்பதும் அவரது கடமையே. அதேவேளை அரசரின் சார்பில் கடமை யாற்றும் அதிகாரிகள், அரசர்பெயரால் தன்னலங்கருதி இப்பெரும் பொறுப் புகளை துஷ்பிரயோகம் செய்வது மிகப்பாரதூரமானது. மேலும் இவ்வித ஒரு நல்ல அரசமைப்பின்கீழ் இயங்கும் மதபோதப்பணி வெற்றியடைய சில அம்சங்கள் கவனத்தில் எடுக்கப்படல் வேண்டும்.

1. ஆட்சிபுரிபவர்களும் அரச பணியாளரும் இறை விசுவாசத்துடன் செயற்படுதல்.
2. மக்கள் தமக்குப் போதிக்கப்படும் நற்செய்தியில் நம்பிக்கைவைத்து விசு வாசத்துடன் அவ்வழியில் இயங்குதல்.
3. தாம் பெற்ற விசுவாசத்துக்கு அவர்கள் சாட்சிகளாக வாழ்வதுடன் நின்று விடாது மதபோதகர்களுக்கு உதவுவதும் அவர்களை இன்னல்களிலிருந்து காப்பாற்றி விசுவாச வாழ்வு பரவ ஒத்தாசையளித்தலுமாகும்.

பிலிப்பைன்சில் லுசான் மலையகப்பகுதியிலுள்ள சம்பாலெஸ் இன்னமும் ஸ்பானியரது ஆளுகைக்குட்படாததால் அப்பகுதியில் 'நீதி, விசாரணை' யுத்த காரணங்களால் அல்லோலகல்லோலமடைந்திருந்தது. சினொட் கருத்தரங்கில் இப் பிரச்சனை விவாதிக்கப்பட்டு, போர்மேகங்கள் அப்பிரதேச மக்களின் சுதந்திர ஜனநாயக உரிமைகளை உதாசீனம் செய்யாதிருப்பதில் மிகக் கவனம் காட்டப் பட வேண்டுமென சிபார்சு செய்யப்பட்டது. எனினும் இப்பிரச்சனைகள் பிலிப் பைன்சில் பணிபுரிந்த ஸ்பானிய அதிகாரிகளுக்கு தலையிடியைக் கொடுத்தது என்பதும் இங்கு குறிப்பிடுதல் நலம்.

மண்ணின் மைந்தர்களை அடிமைப்படுத்தி அவர்களது இராணுவப் பலத்தை நிர்மூலமாக்குவதில் வெற்றிகண்ட அரசர் அவர்களது எதிரிகளிட மிருந்து அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பையும் சுமந்தவராகிறார். இங்கு எதிரிகள் எனப்படுபவர்களில் திருமுழுக்குப் பெறாத சுதேசிகளும் அடங்குவர். ஆயினும் யுத்தத்தினால் எந்தவொரு சுதேசிகளும் பாதிக்கப்பட்ட பழிவாங்கப் படக்கூடாது என்பது அரசரின் மிகக் காத்திரமான கட்டளை.

ஸ்பானியரின் பிலிப்பைன்ஸ் ஆளுகை எதிர்நோக்கிய மற்றொரு பிரச்சனை அடிமைத்தனம். இரண்டாவது பிலிப் மன்னரால் அடிமைத்தனம் உத்தியோக பூர்வமாக - பகிரங்கமாகக் கண்டிக்கப்பட்டும்; பிலிப்பைன்சில் அடிமைத்தனம் நிலவித்தொழிற்பட்டு வந்தது. சினொட் கருத்தரங்கும் இப்பிரச்சனையை அலசி ஆராய்ந்தது. புதிய ஸ்பெயினிலும் 'பேரு'விலும் அடிமைத்தனம் என்ற கொள்ளை நோய் அடியோடு களையப்பட்டதுபோல இங்கும் அடிமைத்தனம் அகற்றப் பட புதிய உத்திகள் தேவைப்பட்டன. செல்வம்படைத்த சுதேசிகளும் மற்றும் வசதியுள்ள பொது மக்களும் தங்கள் வழக்கமான வேலைகளுக்காக, பல அடிமை களை வைத்திருந்தனர். இவர்களைக் காலத்துக்குக் காலம் வெளிநாட்டவருக்கு விற்றனர். அடிமை வர்த்தகத்தால் செல்வந்தரானோர் பலர். ஆயரும் குருக் களும் அல்லது மதபோதகரும் அடிமைத்தனத்தை ஒழிக்கவிரும்பினும் பல சிக்கல்கள் தலைதூக்கின. நல்ல கிறிஸ்தவனாக வாழவிரும்பும் ஒரு செல்வந்தர் (தலைமகன் அல்லது சுதேசி) தான் முன்பு பெரும் பொருள் கொடுத்துப்பெற்ற அடிமைகளை லாபத்துடன் விற்கவே விரும்புவர். எனவே திருச்சபையினர் ஒவ்வொரு அடிமைக்கும் பெருமளவில் பணம்கொடுத்து மீட்கவும் பின் இந்த அடிமைகள் சுயதொழில் செய்து தங்களைத் தாங்களே தாங்கும் வரை, அவர் களைப் பாதுகாக்க வேண்டியிருந்தது. அடிமைகளை வைத்திருப்போர், அவ்வடி மைகளை சுதந்திரவாளிகளாக அனுப்பிய பின், அவ்வடிமைகள் இதுவரை கூலி ஏதுமின்றிச் செய்துவந்த பாரியபணிகளுக்கு, தகுந்த கூலிகொடுத்து செய்ய வேண்டிய பெரும்பிரச்சனைக்கு ஈடுசெய்யமுடியாதமையால் பல தொழில் களை மூட வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகியது. பாட்டனார், தந்தை, மகன் வழி அடிமைகளாக வைக்கப்பட்டிருந்தோர் பிரச்சனை ஒருபுறம், அடிமைக ளாக இருந்து சுதந்திரம் பெற்றோரைத் திருமணம் செய்ய, சாதாரண - பெரிய குலத்தவர்கள் முன்வராதது மற்றுமோர் பிரச்சனை.

சினொட் சங்கம், அல்கெய்டாமேயர்களின் தவறுகள் அனைத்தையும் சுட்டிக் காட்டியதோடு அவர்களது பணிகளையும் வலியுறுத்தியது. அவர்கள் ஆளுகை செய்யும் அதிகாரவர்க்கமாக மாறக்கூடாதென்றும், சுதேசிகளின் தேவை களைப் பூர்த்தி செய்ய முயற்சிப்பவர்களாகவும், அவர்களிடையே அடிக்கடி எழும் பிரச்சனைகளில் சமரசம் செய்து வைப்பவர்களாகவும் பணியாற்ற வேண்டு

மெனச் சுட்டிக் காட்டப்பட்டது. சிறப்பாக சுதேசிகள் நல்ல பிரசைகளாக (குடிமக்களாக) மாற வழிவகுத்தல் அவசியமெனவும் கூறப்பட்டது. இவ்விதம் பணியாற்றாத அல்கெய்டா மேயர்கள் தம் கடமைகளைச் செய்யத்தவறுவதால் பாவம்கட்டிக் கொள்கிறார் என்றும் அறிவுறுத்தப்பட்டது. மேலும், அவர் நீதி செலுத்துவதில் பண்பற்ற விதத்தில் நடந்து கொண்டால் அவர் சர்வாதிகாரி யாக மாறுகிறார். இச் சர்வாதிகாரப் போக்கு நற்செய்திப் போதனையின் இலட்சி யங்களையே சிதறடித்துவிடும் என்பதும் வலியுறுத்தப்பட்டது.

ஒரு என்கொமாந்திரோ, தன் கீழுள்ள என்கொமீந்தாக்களை, அமைதியின் வழியில் நடத்திச் செல்லவும் தனது முன்மாதிரிகையால் நல்வழியில் கொண்டு செல்லவும் கடப்பாடுடையவன். அந்த சுதேசிகளின் இன்பவாழ்வே அவனது இலட்சியமாக வேண்டும். தங்களிடம் வரிவசூழிப்பவனாக மட்டுமல்ல தங்கள் நல்வாழ்வுக்காக அயராதுழைப்பவனாகவும் அவன் விளங்குகிறான் என அவர்கள் விசுவாசம் கொள்ளுமளவுக்கு, அவன் தனது நம்பகத்தன்மையை செயலில் காட்ட வேண்டும். என்கொமான்தீரோ என்ற கௌரவப் பெயரின் சிறப்பு இதுவே. அரசரின் கொள்கைப் பிரகடனமும் அதுவே. (போர், பயங்கர நிகழ்வுகள், வன் முறைகள் மற்றும் சகல தீமைகளிலும் அவர்களை நிர்மூலமாக்கும் வன்செயலாளர் களிலுமிருந்து சுதேசிகளைப் பாதுகாத்தல்.)

மேலும் அரசரிடமிருந்து பேராயர், மதகுருக்கள் என்ற வரிசையில் வருபவர் களைத்தவிர வேறு எவரும் நற்செய்தியைப் போதிக்கவோ மதவழிபாடுகளை அல்லது திருவருட்சாதனங்களை வழங்கவோ முடியாது. பிலிப்பைன்சில் எந்தெந்தப் பகுதி, அரசரின் படையால் கைப்பற்றப்பட்டதோ அங்கெல்லாம் நீதியை நிலை நாட்ட, சர்வாதிகார வன்செயல்களைக் கட்டுப்படுத்த சகல நடவடிக்கைகளும் காலதாமதமின்றி மேற்கொள்ளப்படல் வேண்டும். சினொட் அதிகாரிகள் இதுபற்றி உறுதியான செயற்பாடுகளில் இறங்க வேண்டும். இவை நிறைவேற்றப்படுவதில் பணம் பெருமளவில் வீண் விரயமாகுமென்ற குறுகிய கோட்பாடு விட்டொழிக்கப்படல் வேண்டும்; என்பவை சினொட் சங்க சிபார்சுகள்.

இவை தவிர சொத்துக்கள், பங்கிடப்படல் - கொடுக்கல் வாங்கல் - பண மாற்றுகள் சம்பந்தமாகவும் சினொட் குழு விபரமாக ஆய்வு செய்தது. இவை களில் நேர்மையீனம், அநியாயம், கடும்வட்டி அல்லது கடுமையான தரகுக் கழிவு அனைத்தும் தவிர்க்கப்படல் வேண்டும். ஆயின் இக்கூடாத பண்புகள் அவர்களிடம் ஊறிப்போயிருந்தமையால் இவற்றினின்று அவர்களை விடுபடச் செய்து மனமாற்றம் அளிப்பது, மிகமிகக் கஷ்டமான ஒரு நிலையாயிருந்தது.

அடுத்து என்கொமிண்டாக்களின் நிர்வாகத்தால் கிடைக்கும் பெருந் தொகை நிதியை பரிமாற்றம் செய்யும் நிர்வாகம் சம்பந்தமாகப் பெரும் பிரச்சனை உண்டாகியது. இரண்டாவது பிலிப் மன்னர், மணிலாவின் ஆளுந ராக, கோமஸ் பெரஸ் டமிற்றாசை நியமித்தபோது ஆயர் சலாசர் சம்பந்தப் பட்ட பிரச்சனைகளை சுமுகமாகத் தீர்க்குமாறு வற்புறுத்தியிருந்தார். எனினும் சலாசர் தமது பிரச்சனைகளில் ஆளுநர் தலையிடுவதை விரும்பவில்லை. எனவே இருவருக்குமிடையே அடிக்கடி மோதல்கள் எழுந்தன (1591). எனவே சலாசர் இப்பிரச்சனைகள் சம்பந்தமான தமது மதிப்பீடுகளைத் தொகுத்து இருபது தீர்மானங்கள் (விதிமுறைகள்) ஆக வெளியிட்டார். இவை பல பிரச்சனை களைத் தோற்றுவித்தபோதிலும் அரசுரிமை, மதபோதகம் என்ற இலக்குகளை

நோக்கிய அணுகுமுறைகளுக்கு தோற்றுவாயாகின.

இத்தீவுகளின் அரசுரிமை இருவழிகளில் மட்டுமே பெறப்படலாம். ஒன்று தேர்வு முறை, மற்றையது யுத்த முறை.

மாட்சிமைமிக்க மன்னர் போதியளவு குருக்கள், ஆயர் (மதபோதகர்கள்) களை அவ்வப்போது அனுப்பிக்கொண்டிருந்தால் சுதேசிகள் உட்பட கிராம, பட்டின, நகர மக்களிடையே மதபோதக அலுவல் சிறப்புடன் இயங்கும். அனைவரும் இரட்சகர் இயேசுவை அறிந்து அவர் வழிச்செல்வர்.

ஸ்பானியர்கள் அறிமுகப்படுத்தியவை, மிகச்சிறந்த வழிமுறைகள். இவற்றை விசுவாச நம்பிக்கையற்ற சுதேசிகளுக்கு அளித்தால் அல்லது நடைமுறைப்படுத்தினால் பிரபுக்களும் அவர்களது பண்ணையாளர்களும் மாட்சிமைமிக்க மன்னரைத் தங்கள் சட்டபூர்வமான அரசனாக ஏற்று மன்னருக்கும் பின்னர் அவர் வழியின் அரசுரிமையாளர்களுக்கும் பிரமாணிக்கமுள்ள பிரசைகளாக நடப்பதுடன் அவருக்குரிய கப்பமும் (வரிப்பணம்) முறையாகச் செலுத்தப்படும்.

1597இல் மன்னர், தமது ஆளுநருக்கு விடுத்த கட்டளையில் அஞ்ஞான சுதேசிகளிடம் முறைகேடாக அறவிடப்பட்ட வரிப்பணம் அவர்களுக்கு மீளளிப்புச் செய்யப்பட வேண்டுமெனப் பணித்தார். மேலும் பிலிப்பைன்சிலுள்ள கிறிஸ்தவ சுதேசிகள் இனிமேலும் தாங்கள் அடிமைகள் அல்லரென்றும் அறிவித்தார்.

## நற்செய்திப் பணி

1580 களின் ஆரம்ப காலத்தில் மணிலாவுக்குப் புறம்பாயுள்ள ஸ்பானிய குடியிருப்புகளில் திருமுழுக்களிப்பது பெருமளவில் இடம்பெறவில்லை. மதபோதகர்கள் போதியளது இல்லாதது ஒரு காரணி. மதமாற்றம் பெற்றவர்கள் ஒழுங்காக அல்லது அடிக்கடி திருவருட்சாதனங்களைப் பெற முடியாதது மற்றொரு காரணி. ஒருவர் திருமுழுக்குப் பெற்று திருச்சபையில் சேர்ந்ததும் நற்செய்திப் பணி முடிந்து விடாது. மாறாக அன்றுதான் ஆரம்பமாகிறது. கிறிஸ்தவர்கள் ஒரே குழுவாக ஒரு கிராமத்தில் அல்லது ஒரு ஊரில் இருந்தால் நற்செய்திப் பணி பாரிய வெற்றியைப் பெற்றிருக்கும். ஆயின் சிதறுண்டு திக்குத்திக்காயிருந்தமையும் ஒரு பெரிய பின்னடைவு. எனவே முதலில் சில பாரன்கேயுக்களைச் சேர்த்து (பாரன்கேயுஸ் என்பது 30 முதல் 100 வரையுள்ள குடும்பங்களை ஒன்றுசேர்க்கும் ஒரு குழுமப்பெயர்) ஒரு குடியிருப்பு அல்லது கிராமமொன்றை அமைத்தல் ஆரம்பப்பணியாயிற்று. இதற்கென பிரதம ஆலோசகராக பாதுகாவலர் பிரதம குருவான 'பிறே யுவான் டி கரோவிலஸ் அடிகள்' அழைக்கப்பட்டார். எந்தெந்தக் குடியிருப்புகளைச் சேர்த்து கிராமம் அல்லது நகரம் ஆக்குவதென்றும் எத்தனை தேவாலயங்கள் அமைப்பதெனவும் ஆலோசிக்கப்பட்டது. திருமுழுக்கைப் பெறுவது தம்மை நாகரிகமாக்கும் ஒரு நற்செயல் என்ற தவறான விளக்கம் சுதேசிகளின் மனதில் வேரூன்றுவதைத் தவிர்க்க, திருமுழுக்கின் பரிசுத்த நிலை; அதன் ஆன்மீக இலக்குகள்; திருமுழுக்குப் பெறுதல், ஸ்பானிய மன்னரையும் அவரது அதிகாரிகளையும் திருப்திப்படுத்தும் ஒருசெயல் என்ற தவறான கருத்தை அடியோடு அழித்தல்; திருமுழுக்கினால் கிறிஸ்தவனானபின் கிறிஸ்தவத்தை அனுசரிக்கும் பாரிய கடமை உண்டு; என்ற கருத்துக்களை நன்கு விளக்குவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

அடுத்து பாட்டான் என்ற பகுதிக்குள் டோமினிக்கன் சபையின் நற்செய்திப்பணி ஆராயப்படுகிறது. இச்சபையினர் இங்கு செல்வதற்குமுன் இங்குள்ளோர் நிரந்தரமாகக் குருக்களின் சேவையைப் பெறமுடியவில்லை. அருட்சாதனங்களும் ஒழுங்கு முறையாக வழங்கப்படவில்லை. எனவே அஞ்ஞான உலகின் நடுவில் இவர்களது விசுவாசநிலை தத்தளித்த வண்ணமேயிருந்தது.

இவ்விடத்தில் இன்னொரு முக்கிய விடயமும் குறிப்பிடப்படுதல் அவசியம். குருக்களின் பணியை மதிப்பிடுதல் அவர்கள் செல்லுமிடங்களில் திருமுழுக்குப் பெற்றவர் தொகையைக் கொண்டே மதிப்பிடப்பட்டது. இந்தக் கிராமத்தில் இவ்வளவு திருமுழுக்களிக்கப்பட்டு அத்தனைபேரும் திருச்சபையில் அங்கத்தவர் என்ற கணக்கீடே முக்கியமாகக் கருதப்பட்டது. திருமுழுக்குப் பெற்றோர் கிறிஸ்தவ வாழ்வு வாழ்கிறார்களா?, அருட்சாதனங்கள் முறையாக வழங்கப்படுகின்றனவா?, தல திருச்சபை முறைப்படி விசுவாச அறிவைப் பெற்றுள்ளதா?, என்பதெல்லாம் கவனிக்கப்படுவதில்லை. மாட்சிமை தங்கிய மன்னருக்கு எத்தனை ஆயிரம் சுதேசிகளுக்கு திருமுழுக்குக் கொடுத்தேன் என்று கணக்குக் காட்டி நற்பெயரும் பரிசும் பெறுவதே குருக்களின் பிரதான நோக்கமாயிருந்தது. அத்துடன் சுதேசிகளும் புதிதாகத் திருமுழுக்குப் பெறுபவர்களுக்கு கிடைக்கும் சலுகைகள், பரிசுப்பணத்தைக் குறிக்கோளாகக் கொண்டு ஒரு குரு மாறிச்சென்று வேறொரு குரு வரும்போது தாங்கள் அவிவிசுவாசிகள் - அஞ்ஞானிகள் என நடித்து பலதடவைகள் திருமுழுக்குப்பெறுவர். ஆயின் கிறிஸ்தவ அறிவு - விசுவாச நிலை, திருவருட் சாதனங்களைப் பக்தியோடு பெற்று, அனுசரித்தல் எதுவுமே கிடையாது. மதபோதகர்களுக்கு சுதேசிகளின் மொழியில் அதிகபரிச்சயமில்லாததும் சுதேசிகள் அவர்களை ஏமாற்றிவந்தமைக்கு ஒரு முக்கிய காரணி. குருக்களின் அல்லது ஸ்பானிய அதிகாரிகளின் வற்புறுத்தல்களுக்கு அல்லது மிரட்டுதல்களுக்கு அஞ்சி திருமுழுக்குப் பெற்றோரும் போலிக் கிறிஸ்தவர்களாகவே வாழ்ந்தனர்.

எங்கள் முகாமையாளர் அதிவண. அலொன்சோடி கியூமனிஸ் அடிகளிடம் தலைமைத்தியாக்கோன் (ரானே பகுதிப் பொறுப்பாளர்) நேர்முகமாக, ஆண்டவரின் பேரால், தமது மக்களுக்கு, இறைவனின் போதனைகளை எடுத்துக்கூற ஒரு குருவை தந்துதவுமாறு கேட்டுக்கொண்டதாக யேசுசபைக்குரு கபிரியேல் சான்சஸ் **1600** நவம்பரில் எழுதிய ஓர் மடலில் குறிப்பிடுகிறார். இக்குருவே அத்தீவுக்கு அனுப்பப்பட்டார். அவரை சுதேசிகள் அனைவரும் கடற்கரையில் ஒன்றுகூடி வாத்தியகோஷம் ஒலிக்க ஆடம்பரப்பவனியாக அழைத்துச் சென்றனர். இக்குருவின் முதலாவது உரையே மக்களால் வரவேற்கப்பட்டது. எனவே அவர் உற்சாகமுடன் நற்செய்திப் போதனையைத் தொடர்ந்தார். இறைவனைப் பற்றிய அவரது உரைகளை அவர்கள் ஆர்வத்துடன் செவிமடுத்து சிந்திக்கலாயினர். இவர்களில் பலர் நாம் முன்பு குறிப்பிட்டவாறு திருமுழுக்கை (விபரம் தெரியாமலே) பெற்றிருந்தனர். ஆயின் இறைவன், மனித சிருஷ்டிப்பு முதலிய பழைய ஏற்பாட்டின் முக்கிய நிகழ்வுகளையும் கிறிஸ்துவின் பிறப்பு, அவரது போதனை, சாதனைகள் - திருப்பாடுகள் 'சிலுவை மரணம்' உயிர்ப்பு என்பவற்றை விபரமாக தங்களது மொழியில் பேசுவதைக் கேட்டு மனமாற்றம் பெற்றவர்களாய் தங்களைப் பாவசங்கீர்த்தனம் என்னும் அருட்சாதனத்தால் அர்ச்சிக்கும்படி வேண்டுகோள்விடுத்தனர்.

ஒருமாத காலத்துள் நானூறுக்குமதிகமானோர் தங்கள் கடந்தகால பாவ

வாழ்வை உணர்ந்து கண்ணீர்சிந்தி பாவசங்கீர்த்தனத்தால் புனிதப்படுத்தப் பட்டு, நற்கருணையால் ஆண்டவர் இயேசுவுடன் ஐக்கியமாகினர். இக்கிறிஸ்தவர் களுக்காக திருவழிபாட்டு முறைகளை ஒழுங்குக்கிரமமாக அளிக்கும் திட்டங்கள் யேசுசபைத் துணை மாகாண முதல்வர் அருள்மிகு ரமோன் பிறாற் அடிகளால் 1598இல் அமுல் செய்யப்பட்டன.

இவ்விதம் கிறிஸ்தவத்துள் இணைந்தவர்களை நல்வழிப்படுத்தி, ஏனைய கிராமவாசிகளுக்கு முன்மாதிரியாக விளங்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டன. அவர்கள் தங்கள் பழைய பாவவாழ்வை வெறுத்து அவ்வழி மீண்டும் செல்லாதிருக்கவும் அஞ்ஞான ஆடம்பர வாழ்வை அடியோடு விட்டொழிக் கவும் திட்டங்கள் தீட்டப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டன.

மதபோதக அலுவல் என்றுமே இலகுவானதொன்றல்ல. ஆட்சிப்பீடங் களும் அதிகாரிகளும் வல்லவர்களுமான அஞ்ஞானிகளால் மட்டும் பிரச்சனைகள் எதிர்ப்புகள் எழுந்தன என்று சொல்வது முற்றுப்பெறாத ஒன்று. மத பரப்பு கையில் கத்தோலிக்க குருக்கள் துறவிகள் இணைந்த வெவ்வேறு சபைகளுக் கிடையிலும் எதிர்பாராத பிரச்சனைகள் தலைதூக்கின. அகஸ்தீனிய சபையும் யேசுசபையும் இவ்விடயத்தில் (மதபோதகம், மனமாற்றம், திருமுழுக்கு) தமக் கிடையே மோதல்கள் உருவாகிய பல சந்தர்ப்பங்களில் வெகு சாதுரியமாக நடந்து கொண்டமை இங்கு குறிப்பிடத்தக்கது. பின்னர் டோமினிக்கன் சபையும் இக் குழுவினருடன் பிரச்சனையின்றி மத போதக அலுவல்க்ளில் பங்குகொண்டது.

நியூவா செகோவியாவிலுள்ள சுதேசிகளுக்கு விசுவாச வித்தை விதைத் தவர்கள் அருள்மிகு டியாகோ டி சொரியாவும் அவரது குழுவினரும். ஆண்டவன் திருவருளால் இவர்களது முயற்சிகள் ஆரம்பமுதலே நல்ல அறுவடையை அளித்துக் கொண்டிருந்தன. சாதாரண திருமுழுக்குகளும், திருச்சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டோர் தொகைபற்றிய தரவுகளும், வெறும் சிலுசிலுப்பே என்பதை ஆழமாக நம்பியவர் டியாகோ டி சொரியா அடிகள். எனவே திருமுழுக்குப் பெற்று திருச்சபையில் இணைந்தவர்கள் உண்மையான கிறிஸ்தவராக வாழ் கிறார்களா? விசுவாச நிலை அவர்களில் மேன்மேலும் வளர்கின்றதா? என்பதை அடிக்கடி ஆய்வு செய்து தகுந்த மாற்று நடவடிக்கைகளை அளிப்பதில் அடிகள் கண்ணும் கருத்துமாயிருந்தார். ஆன்மாக்களை வெற்றிகொண்டு நிரந்தர விசுவாச நிலையில் அவர்களை நிலை கொள்ளச் செய்வதே அடிகளின் மேலான இலட்சியமாகும்.

மாகாணாதிபதி, பாட்டான் மாவட்டத்தைப் பார்வையிடச் சென்றார். குருக்களின் சிறந்த கருமமாற்றுகையின் நல்விளைவு கண்டு மிக்க மகிழ்ச்சி கொண்டார். மூன்று அல்லது நான்கு தெருக்கள் ஒன்றுகூடும் சந்திகளில் சிலுவை மரங்கள் நாட்டப்பட்டிருந்தன. இங்கு தங்கள் தோட்டங்களில், விவசாய நிலங்களில் அல்லது வேலைத்தலங்களில் இருந்து மாலை வேளைகளில் வீடு திரும்பும் சுதேசிகள் ஒருவரிடம் மற்றவர் சுகம் விசாரித்து, விசுவாச மந்திரம் செபித்து கத்தோலிக்க கொள்கைகளை, கோட்பாடுகளை ஒருவர் விளக்கிக் கூற ஏனையோர் கேட்பதுடன் விசுவாச ஐயப்பாடுகளை நன்கு தீர்த்து சமா தானத்துடனும் மகிழ்ச்சியுடனும் வீடு திரும்புவது. மாகாணாதிபதிக்கு மிகுந்த மனநிறைவை அளித்தது. மேலும் இம் மக்கள் பாவசங்கீர்த்தனம் செய்ய, பெரு மளவில் தாமாகவே ஒன்றுகூடுவது மாகாணாதிபதியின் மனதைத் தொட்டது. மக்கள் தம் மனக்குறைகளை ஜனநாயக முறையில் திறந்த மனதோடு

வெளியிட்டதால் மதபோதகர்கள் அவற்றை தாங்களோ அல்லது அதிகாரி களைக் கொண்டோ தீர்த்துவைப்பது மாகாணாதிபதியை மகிழ்ச்சியுற வைத்தது. இவ்விதமே சுதேசிகளின் இரட்சணியப் பாதை நல்ல முறையில் வகுக்கப்பட்ட தால் தங்கள் நோக்கம் நிறைவேறும் என்று நம்பிக்கை கொண்டார் மாகாணாதிபதி.

மக்கள் ஒன்றுகூடும் வேளைகளில் அவர்கள் சிலுவைமந்திரம் வரைந்து, பரலோக - அருள்நிறை - விசுவாச மந்திரங்களைச் செபித்தே தம் உரையாடலைத் தொடங்குவர். மேலும் ஞாயிறு திருப்பலி மறை உரைகள் - தினசரித்திருப்பலி களின் முன்னுரைகள் சம்பந்தமான ஐயப்பாடுகளும் இவ்வொன்றுகூடல்களின் போது தீர்த்துவைக்கப்பட்டன.

பிலிப்பைன்சிலுள்ள வேதபோதக கிராமங்களில் ஞாயிறு கடன்திரு நாட்களில் ஆலயங்களில் ஒன்றுகூடித் திருப்பலிகண்டு மறையுரை கேட்டு, பின்னர் ஞான உபதேச விளக்கங்களை கிரகித்து வீடு திரும்புவது வழக்க மாயிற்று. இதன் காரணமாக இம் மக்களிடையே போதியளவு கிறிஸ்தவ விளக் கமும் பிரதான செபங்களின் மனப் பாடமும் மிகச்சிறப்பாக வளர்ந்துவந்தது. மேலும் வாத்தியங்களின் பின்னணியில் லத்தீனிய வழிபாட்டுப் பாடல்களை யும் கிறிஸ்தவ கீதங்களையும் பாடுவதற்கும் பயிற்சி பெற்றிருந்தார்கள். தொழில் காரணமாக இந்நிகழ்வுகளில் அடிக்கடி பங்கு பெறமுடியாதவர்களும் தம் ஓய்வுநேரங்களில் அடுத்த வீடுகளில், அல்லது அயலவரிடம் இவற்றை விசாரித் தறிய மறக்கமாட்டார்கள். ஆலய வழிபாடுகளை விசுவாசிகளுக்கு அறிவிக்க, கோவில் மணிகள் அடிக்கப்படும். தொடர்ந்து பிள்ளைகள்கைகளில் சிலுவை களைத் தாங்கி, மாலையாராதனைப் பாடல்களைப் பாடிக் கொண்டு வீதிகளில் பவனிவர ஆலயம் செல்லும் மக்களும் அவர்களைத் தொடர்ந்து ஆலயம் செல்வர். தொடர்ந்து ஆலயத்தில் அரைமணித்தியாலமாவது ஞான உபதேச விளக்கம் அளிக்கப்பட்டு திருவழிபாடு ஆரம்பமாகும். திங்கட்கிழமைகளில் இறந்தோருக் காகவும், சனிக்கிழமைகளில் மரியன்னையை வாழ்த்தியும் விசேட வழிபாடுகள் இடம்பெறும். பாடசாலை மாணவரும் வயது வந்தோரும் வழிபாடுகளுக்கு வருகை தருதல் கட்டாயமாக்கப்பட்டது. பல்வேறு துறைகளிலும் தொழில் புரிவோருக்கு சில சலுகைகள் அளிக்கப்பட்டதெனினும் ஞாயிறுகடன் திருநாட் களை அனைவரும் அனுசரித்தேயாக வேண்டும். வயது முதிர்ந்தோருக்கு வீடுகளில், சென்று மறைக்கல்வி போதிக்கும் அலுவல், சிறுவரிடம் ஒப்படைக்கப்பட்டது. காலை, மதியம், மாலை வேளைகளில் ஆலயமணி அடிக்கப்பட்டு திரிகாலச் செபம் ஓதும் பழக்கம், வழக்கமாக்கப்பட்டது. இரவு வேளைகளில் சிலர் மணி அடித்தவண்ணம் வீதிகளில் சென்று மக்களை, மரித்தோரின் ஆன்ம சாந்திக்காகவும், பாவநிலையிலுள் ளோர் மனம்மாறி சங்கீர்த்தனம் செய்வ தற்காகவும் செபிக்குமாறும் மக்களைத் தூண்டுவார். உத்தரிக்கும் ஆன்மாக் களுக்காக செபிக்கும் முறை மக்கள் மனதில் நன்கு வேரூன்றியது. குருக்கள் குறைவான பகுதிகளில் சிற்றாலயங்கள் அமைக்கப்பட்டு குருக்கள் வசதியுள்ள நேரங்களில் மட்டும் திருவழிபாடுகளை நடத்த ஏனைய தினங்களில் மேற்கூறிய வண்ணம் செபித்தல் இடம்பெறும்.

தரிசகரின் கூற்று: இப்பிரதேசங்களை நான் இருமுறை தரிசித்தேன். முதல் தடவை சில முக்கிய காரணங்களுக்காகவும் இரண்டாம்முறை ஒரு பயணி யாகவும் தரிசித்தேன். எனது முதல் நோக்கம், நான் கொடுத்த ஆலோசனைகள் செயற்படுத்தப்படுகின்றனவா? என்பதை அறிவதற்காக நான் சென்ற இடமெல்

லாவற்றிலும் எமது விசுவாச உண்மைகளை மக்கள் நன்குணர்ந்து உண்மையான கிறிஸ்தவ வாழ்வை வாழும் மறை உரைகளை நிகழ்த்தினேன். இந்த வாழ்வு கிறிஸ்தவரல்லாதோருக்கு கிறிஸ்துவை உணரச்செய்ய வேண்டும் என்பதை வற் புறுத்தினேன். ஏறத்தாழ 150 சிறுவர்களுக்கு திருமுழுக்கு அளித்தேன். வயது வந்தோர் 15 பேர் மட்டில் திருமுழுக்கும் ஏனைய அருட்சாதனங்களும் பெற்றனர். இம்மக்களுக்காக ஆலயங்களும் அமைக்கப்பட்டன. ஞான உபதேசப் பயிற்சியும் அளிக்கப்பட்டது. தினசரி வீடுகளில் நாளாந்தம் செபவேண்டுதல்கள் நடை பெற்றன. ஆலயங்களில் ஞாயிறு திருப்பலிக்குமுன் இவை இடம்பெற்றன. நோயாளரைத் தரிசித்து செபித்தல், மரண வேளையிலும் அடக்கத்தின் போதும் செபவேண்டுதல் நடத்துதல் என்பனவும் நல்லமுறையில் இடம்பெற்றன. குருக்களை மரியாதையாக வீடுகளில் வரவேற்றல், அவர்களுடன் சுமுகமாகப் பழகுதல் என்பனவும் திருமுழுக்குப்பெற்றோரால் நடைமுறைப்படுத்தப் பட்டன. இவ்வித தருணங்களில் நல்ல அன்பளிப்புகளை குருக்களுக்கு தருதல் என்ற பண்புகளிலும் அவர்கள் சிறந்து விளங்கினர். ஞாயிறு வழிபாடுகளில் விசுவாசிகள் ஆர்வத்துடன் பங்குபற்றினர். இவர்களை தகுந்த முறையில் கிறிஸ்தவ நெறியில் வழிநடத்த, குருக்கள் போதியளவு இல்லாதது எமது மறைபரப்புப் பணியின் முக்கிய ஒரு குறைபாடாகும்.

பைகல் பகுதியில் பிரான்சீஸ்கன் சபையார் வேதபோதகப்பணியின் பொறுப்பையேற்று நடத்தினர். இவர்கள் ஆரம்பப் பாடசாலைகளை தம் பணிக்களத்தின் முக்கிய இலக்காகக் கொண்டனர்.

தினசரி கோவில் மணி ஒலித்ததும் பாடசாலைச் சிறார்கள் கோவிலில் ஒன்று கூடுவர். சிறாரின் பாடகர்குழு தெதேயும் என்ற தோத்திரகீதத்தை இசைக்கும். தொடர்ந்து தேவதாயின் மந்திரமாலை பாடப்படும். பின்னர் துறவிகளுக்குரிய திருப்பலி நடை பெறும். பின்னர் எல்லோரும் சேர்ந்து செப மாலை ஓதுவர். செபமாலை முடிவில் மாணவர்கள் பாடசாலைக்கும் பாடகர் கள் பயிற்சிக்கழகத்துக்கும் செல்வர். மீண்டும் மணி இருமுறை அடிப்பது போதனை முடிவின் அறிகுறி. அனைவரும் மதியபோசனத்துக்காக வீடு செல்வர். மீண்டும் 2 மணிக்கு மணியோசை ஒலிக்கும். எல்லாச்சிறுவரும் ஆலயத்தில் ஒன்றுகூடி 'வெஸ்பர்ஸ்' என்ற மாலை வழிபாட்டில் பங்குகொள்வர். பின்னர் அனைவரும் தத்தம் அலுவல்களைக் கவனித்தபின் 5 மணியளவில் வீதிகளினூ டாக நடைபெறும் செபமாலைப் பேரணியில் பங்குகொள்வர். முடிவில் மரியாயின் மாசற்ற இருதய மந்திரமாலை பாடப்பட்டு உத்தரிப்புத் தலத்தினுள்ள மரித்த விசுவாசிகளுக்கான மன்றாட்டு மாலையுடன் முடிவடையும்.

சனிக்கிழமைகளில் மரியாயின் மாசற்ற உற்பவ திருப்பலி சொல்லப்பட்டு இறுதியில் கிருபைதயாப மந்திரம் பாடப்படும். தொடர்ந்து ஞான உபதேசங் கள் இடம்பெறும். இதில் பிரதானமாக பழைய தவறுகளை நினைவில் கொணர்ந்து பகிரங்கமாக மன்னிப்பு கோரும் நிகழ்வு இடம்பெறும். இதற்கு தவியாக அடிக்கடி பங்குக்குரு நேரில் சமூகமளித்து பல்வேறு வினாக்கள் மூலம் அவர்களது தவறுதல்களை பாவங்களை நினைவுக்குக் கொண்டுவருவார்.

கத்தோலிக்க பாடசாலைகள் எதிர்காலத் திருச்சபையின் தலைவர்களை உருவாக்கும் சாதனமாயின பெரிய நகரங்களில் கத்தோலிக்க விடுதிப்பாட சாலைகள் ஆரம்பிக்கப்பட்டு நாளைய தலைவர்களான சிறுவர், மாணவர், இளை ஞரை 24 மணிநேரமும் கண்காணித்து உருவாக்கும் திட்டங்கள் அமுலாயின.

அன்ரிபோலோ பிரதேசத்தில் தேவநற்கருணைத் திருநாள் வெகு ஆடம் பரமாக நடைபெறும். நற்கருணையின் மகத்துவத்தை விளக்கும். உரைநடை, கலந்துரையாடல், மறையுரை, கலைநிகழ்வுகள் மிக்க சிறப்பாக அரங்கேற்றப் படும். மாணவர் விடுதிச்சாலைகளின் தாபரிப்பு நிதியை, சுதேசிகள் தாராள மாக அளித்து வந்தனர். இவ்விடயம் ஸ்பானியருக்கே முன்மாதிரிகையாக அமைந்தது. பல இளைஞர்கள் கிறிஸ்தவ வாழ்வை வாழ்ந்து காட்டினர். தினசரி பூசைப்பலிக்கு சமூகமளித்தல், பூசைப்பலிநடத்தக் குரு கிடைக்காவிடில் நற் செய்தி விளக்கமளித்து வழிபாடு நடத்துதல். திருநாட்களை வாத்தியக்குழுக் களுடன் கூடிய இசையால் சிறப்படையச் செய்தல். நல்வாசிப்பு, கட்டுரை, கவிதைப் போட்டிகளால் நற்செய்தியையும் கிறிஸ்தவ போதனைகளையும் அனைவரது உள்ளங்களிலும் ஆழமாகப் பதித்தல். என்பவற்றுடன் மருத்துவ மனைகளுக்குச் சென்று நோயாளர்களை ஆறுதற்படுத்தி உதவுவதுடன் அவர்கள் அருட்சாதனங்களைப் பெற ஒழுங்குகளைச் செய்தல் முதலிய பணிகளில் பொறுப் புணர்வுடனும் உற்சாகமாகவும் பங்குபற்றினர்.

ஒரு பிரதேசத்தில் குறிப்பிட்ட ஒரு தொகையினராவது கிறிஸ்தவர்களாக திருமுழுக்குப் பெற்றுவிட்டால் அவர்களது விசுவாசநிலையை உறுதிப்படுத்தவும் ஒரு ஆலயத்தை அமைத்துபின் மதமாற்றங்களை மேற்கொள்ளவும் வசதியாக இரு மதபோதகர்கள் ஒரு வீட்டில் குடியிருத்தப்படுவர். அவர்கள் தங்கள் சபை ஒழுங்குப்படி தமது அறநெறி வாழ்க்கை மூலமும் முன்மாதிரிகையான செயற் பாடுகள் (அன்பு காட்டல், பகைவரையும் நேசித்தல், புரிந்துணர்வு மனப் பான்மை மூலமும் நற்செய்திப் போதகத்தாலும்) விசுவாசத்தை ஸ்திரப்படுத்தவும் அஞ்ஞானிகளை மனந்திருப்பவும் முயற்சிகள் எடுப்பர்.

மேலும் எட்டுவயதுக்கும் இருபது வயதுக்குமிடையிலான பையன்களை ஒன்று சேர்த்து, பீடப்பரிசாரகப் பணிகள், கோயிற் பணிகள் பழகுதல், வாசிப்பு எழுத்தில் தேர்ச்சி பெறுதல், கடவுளின் கட்டளைகளுக்கு எவ்விதம் அமைந்து நடத்தல் என்ற விரிவான விளக்கம், இல்வாழ்க்கை பற்றிய விளக்கவுரைகள் என்ற அம்சங்களில் நல்ல பயிற்சியை அளிக்கவும் கொன்வென்ரோஸ் என்ற ழைக்கப்படும் இந்த வீடுகள் உதவும். இந்த நல்ல பயிற்சிகள் இவ்விளைஞர்கள் திருமணம் செய்யும்போது நல்ல கிறிஸ்தவ இல்லறத்தவர்களாக வாழ, பெரு மளவில் உதவியளிக்கும். மேலும் இந்த இளைஞர்கள் பொது நிலையினராக இல்வாழ்வில் நுழைந்த பின், கொன்வென் ரோஸ் வீடுகளில் பயிற்சி பெறும் பையன்களுடன் புரிந்துணர்வு மனப்பான்மையுடன் சகோதர, சகவாழ்வு நடத்துவர்.

இவ்விளைஞர்கள் வயலின், ஆர்மோனியம், கிற்றார் போன்ற திருவழி பாட்டு வாத்தியங்களைக் கையாளவும் சங்கீதத் திறமை பெற்றோர் பாடகர் குழுவில் சேர்ந்து பயிற்சி பெறவும் வசதிகள் செய்யப்பட்டன இச்சுதேசி களுக்கு. சங்கீதத்தில் மிகுந்த ஆர்வமிருந்ததால் பாடகர்குழு, வாத்தியக்குழுக் களில், பயிற்சிபெற வரும் இளைஞர் தொகை அதிகரித்தது. தொகை அதிகரிப் பைச் சமாளிக்க காலையிலும் மாலையிலும் சங்கீத வகுப்புகள் நடத்தப்பட்டன. காலைத்திருப்பலிகளிலும் மாலை வழிபாடுகளிலும் பாடல்களும் பின்னணி வாத்திய இசையும் தவறாது இடம்பெற்றன.

திரிகாலைச் செபத்துக்கான திருந்தாதி மணி ஆலயத்தில் அடித்தபின் பையன்கள் சிறுமணிகளை அடித்த வண்ணம் வீதிகளில் சென்று உத்தரிப்புத்தல

ஆன்மாக்களுக்காகச் செபிக்குமாறு அறிவிப்பர். மேலும் இவ்விளைஞர்கள் ஆலயத்தை துப்பரவு செய்து, மலர்களால் அலங்கரித்து வழிபாட்டுக்கு வருவோர் புனிதமான, அழகான சூழ்நிலையில் இறைவனைத் தொழுவதற்கு உதவுவர். இவ்வித பயிற்சி பையன்களை நல்வழிப்படுத்தியதுடன் அவர்கள் மூலம் அவர்களது பெற்றார், உறவினர்களையும், நண்பர்களையும் கிறிஸ்தவவிசுவாச நிலையில் உறுதிப்படுத்த மறைமுகமாக உதவியது. ஸ்பானியருக்கும் இது ஒரு முன்மாதிரியாக விளங்கியது.

இத்திட்டங்கள் இப்பாடசாலைகளில் கற்ற (பயிற்சி பெற்ற) மாணவர்கள் தங்கள் இல்லங்களிலும் சூழலிலும் தந்தையர்க்குரிய தகமைகளுடன் அனைவரையும் அறநெறியில் நடத்திச் செல்லும் விதத்தில் தேர்ச்சியடையவைத்தன; பொறுப்புணர்ச்சியுடன் செயலாற்றச் செய்தன. இதற்கு ஆதாரமாகப் பல நிகழ்வுகளைப் பதிவு செய்துள்ளன. ஒன்றை இங்கு எடுத்தாள்வோம் ஒரு ஸ்பானியர் மேற்கூறிய பயிற்சி பெற்ற ஒருபையனை (இவன் ஆலயப்பணியாளன், பீடப்பரிசாரகன்) ஆபாச செயலொன்றுக்கு வற்புறுத்தியபோது, அவன் பணிவாகவும் சாதுரியமாகவும் பதிலளிக்கிறான். ''ஐயா உங்கள் அழைப்பு, எத்தகையதொரு கொடியசெயலைப்புரிய உங்களைத் தூண்டியிருக்கிறதென்பதை அறிவேன். எனவே நீங்களும் நானும் புனிதமரியன்னையின் ஆதரவையும் பாதுகாவலையும் கூவி அழைத்து, ஒரு செபமாலை சொல்லுவோம் வாருங்கள் அது எல்லாத்தீய சோதனைகளையும், பயங்கர பாவ நாட்டங்களையும் விரட்டியடித்து எம்மைக் காக்கவல்லது.'' எனவே இவ்விதம் மதபோதகத்தால் மனந்திருப்பப்பட்ட இச்சிறுவன் தன்னையும் தன்சூழலையும் தீயவரிடமிருந்தும் தீமைகளிலிருந்தும் பாதுகாக்கும் பயிற்சியைப் பெற்றிருக்கிறான் என்பது தெளிவாகிறது. எனவே இம்மதபோதகர்கள் தாம் மதபோதகத்தில் இணைந்த நோக்கை - மதபரப் புப்பணியை சரிவர நிறைவேற்றமட்டுமல்ல, உண்மையான தேவனை அறியாதோர் அனைவரும் தெரிந்து கொள்ளவும், இறையரசை அனைத்துலகுக்கும் பரப்பவும் அயராதுழைக்கிறார்கள் என்பது தெளிவாகிறது.

இக்காலகட்டத்தில் மிக நற்பணியாற்றியவரும் சிந்தனை - சொல் - செயல்களால் புனிதம் நிரம்பியவருமான பிறே பொனே வெந்துரா டி றின்கொன் என்ற பொதுநிலைச் சகோதரர் குறிப்பிடத்தக்கவர். 1594 இல் இத்தீவுகளுக்கு வருகைதந்தார். ஆன்மதாகம் மிக்க இவர் இயேசுவின் நற்செய்தியைப் போதிப்பதில் அயராதுழைத்தவர். அப்பணியில் தம்மையே முழுதாக அர்ப்பணித்திருந்தார். சோதனைகள் பலமாக எழுந்தன. வேதனைகளால் அல்லலுற்றார் ஆயின் தம் இலட்சியப் பாதையிலிருந்து அற்பமேனும் விலகவில்லை. மதபரப்புப் பணியில் பல சாதனைகளை நிலைநாட்டினார். விசேடமாக மஜாயாய் என்னுமூரிலிருந்து நாக்கர்லாங் என்னுமூருக்கு செல்லும் பாதையை செப்பனிட்டுத் திருத்தியமைப்பதில் இவர் அல்லும் பகலும் அயராதுழைத்தார். காரணம் மதபோதக அலுவலில் ஈடுபடுவோரின் பயணங்களுக்கும் சுதேசிகளின் பல்வேறு தேவைகளுக்கும் இந்நீண்ட பாதை அத்தியாவசியமாயிருந்தது. இப்பாதை செப்பனிடப்பட்டதால் மதபரப்பாளர்கள் தங்குதடையின்றி இரவுபகலாகப் பயணித்து இறையரசைப் போதித்து நல்ல அறுவடை செய்ய முடிந்தது. சிரமதான முயற்சியில் பலர் உதவிய போதும் இவர் தாமே முன்னின்று தம் சொந்தக் கரங்களால் மண்வெட்டி, பிக்கான் பிடித்து குன்றுகளை அகற்றியும் - குழிகளை நிரப்பியும் - கல் மண் சுமந்து வந்து வீதிகளில் பரவியும் - தோள்களில் பாரங்கற்கள், கலவைகளைச் சுமந்துவந்தும் வியத்தகு பணியாற்றினார். சுதேசிகள்

அவரது சுயநலமற்ற பணியினை உணர்ந்து தாமும் இப்பாரிய பணியில் அவரோடு பாடுபட்டனர்.

இப்பணிகளுள் மருத்துவமனைகள் சில திறக்கப்பட்டதும், இங்கு குறிப் பிடப்பட வேண்டும். மதபோதகர்கள் நற்செய்திப்பணியில் நோயாளிகளைப் பராமரிப்பதையும் முக்கிய தொண்டாகக் கருதி உழைத்தனர். கிறிஸ்துவின் பிரதிநிதிகளெனத் தம்மை அறிக்கையிட இம்மருத்துவப்பணி அவர்களுக்கு கைகொடுத்தது. அன்பு செய்தல், அயலவர்களுக்குதவுதல் என்ற நற்செய்திப் போதனைக்கு மருத்துவப்பணி கைகொடுத்துதவியது. இன்று சான் லாஸரோ விலும் சான் யுவான் டிடி யோசிலும் காணப்படும் பாரிய மருத்துவமனைகள் அன்று பிரான்சிஸ்கன் சபையைச் சேர்ந்த பிறேயுவான் டிகிளமெந்தோவினால் அடியிடப்பட்டவைகளே.

சான் ஜோர்ஜியாவில் (பிலிப்பைன்சின் ஒரு மாகாணம்) கத்தோலிக்க விசுவாசத்தை அடியிட்டவர்கள் தாங்கள் பணியாற்றிய இடங்களில் நோயாளர் பராமரிப்பையே முக்கியமாகக் கருதினர். கிறிஸ்துவின் பணியில் ஆதரவற்றோ ருக்கு உதவுதலே பிரதான அம்சம். மத பணியாளர்கள், ஆதரவற்ற நோயாளர் களை அடிக்கடி தரிசித்தும் அன்போடு அரவணைத்து ஆதரித்தும், தமக்குக் கிடைக்கும் அன்பளிப்புப் பொருட்களை உதவியும் வந்ததால் அப்பகுதி மக்களின் நல்லெண்ணத்தைப் பெற்றுக் கொண்டனர். இதனால் அஞ்ஞானிகளும் இவர் களை மதித்தனர். காருண்யம் மிகுந்த இரக்கச் செயலில் ஈடுபடும் கிறிஸ்தவ மதபோதகர்கள், தங்கள் தலைவர் இயேசுக் கிறிஸ்துவின் போதனைகளுக்கி ணங்கவே இவற்றைச் செய்வதால், அவர்களின் தலைவர் இயேசுக்கிறிஸ்துவை அறிய வேண்டும். அவரது பிறபோதனைகளையும் செவிமடுக்க வேண்டும். ஆகவே கிறிஸ்தவமதத்தில் சேரவேண்டும் என்ற எண்ணம் அந்த அஞ்ஞானி களின் மனதில் உருவாகியதில் அதிசயமேதுமில்லை.

இவ்வித காருண்ணிய சிந்தனையைத் தம் சீடரிடம் கண்ட நல்லதேவன் அவர்களுக்கு மகிழ்ச்சியோடு உதவமுன்வந்தார். மணிலாவில் முதலாவது மருத்துவமனை சிறிய அளவில் உருவாக்கப்பட்டது. இங்கு நோயாளர்களான சுதேசிகளுக்கே முன்னுரிமை அளிக்கப்பட்டது. இந்த விடயத்தில் உழைப் பதற்கு மதபோதகரும் புனித வாழ்வு வாழ்ந்தவருமான பொதுநிலைத் துறவி யுவான் கிளமெந்தி என்பவரை இறைவன் தெரிந்து கொண்டார். இவர் ஆரம்பத்தில் புண்களுக்கு பூசுவதற்கான ஒரு தைலத்தை தேங்காயெண்ணை யிலிருந்து தயாரிக்கும் மருத்துவராகவே தன் வைத்தியப்பணியைத் தொடங் கினார். நோயாளிகள் அவரில் நம்பிக்கை வைத்து அவரையே தேடிவந்ததால் பிறநோய்களுக்கும் வைத்தியம் செய்யத் தலைப்பட்டார். இங்கும் அவர் நல்ல சித்திபெறும்போது தன்னை நாடி வருவோரின் தீய பழக்கங்களும் பாவச் செயல்களும் அவர் மனதை வருத்தின. எனவே உடற்புண்களுக்கு மட்டுமல்ல, உள்ளத்தை புண்படுத்திய பாவங்கள், தீய செயல்களுக்கும் பரிகாரம் செய்பவராக மாறினார்.

தங்கள் மட்டில் மருத்துவ வழிகளால் இரக்கச் செயல்களைப் புரிந்து வரும் புனித பிரான்சீஸ்கன் சபைக்குருக்கள், துறவிகள் மட்டில் அந்த அஞ் ஞானிகள் தளராத நம்பிக்கையும் பெருமதிப்பும் வைத்ததில் அதிசயமேது மில்லை. மருத்துவமனைகளிலிருந்து பூரண சுகத்துடன் வெளியேறும் ஒவ் வொரு சுதேசியும் (இந்தியோக்களும்) பிரான்சீஸ்கன் சபையாரைப் புகழ்ந்து

பேசியது மட்டுமன்றி, கிறிஸ்துவின் போதனைகளைப் போதிப்போராகவும் விளங்கினர். கடினமனமுடைய பாவிகள்கூட இந்த மருத்துவமனைக்கு நோயைக் குணமாக்க வந்து, பின்னர் மனம்மாறி, தங்கள் தீயசெயல்களை விட்டொழிப்பதாக வாக்களித்து, அவற்றுக்காக பிராயச்சித்தம் செய்து மன்னிப்புப் பெற்று, திருமுழுக்குப்பெற்று, திருச்சபையின் அங்கத்தவராகத் திரும்பிச் சென்றனர். தங்களுக்கு இறைவனளித்த விசுவாசக் கொடைகளுக்காக அடிக்கடி நன்றிகூறினர்.

பிரான்சீஸ்கன் சபையாரின் இக்காருண்ணிய செயல்கள் (நோயாளரை பராமரித்தல், ஏழைகளுக்குதவுதல், அகதிகளை ஆதரித்தல், தொழிலற்றோருக்கு வழிகாட்டல் முதலியன) அச்சபையின் நிறுவுனரான புனித பிரான்சீஸ் அசிசியாரின் கொள்கைகளுக்கும் வழிகாட்டலுக்கும் இசைந்தும் கிறிஸ்து நாதரின் நற்செய்திப் போதனைகளின் குறிக்கோள்களுமாகும்.

வந்தனைக்குரிய இறைத்தூதுவர் பிறே பிளாஸ் டி லா மட்ரே டி டயஸ் லிஸ்பன் நகரை (போர்த்துக்கல் தேசத்தின் தலைநகர்) பிறப்பிடமாகக் கொண்டவர். அவர் சுதேசிகளின் மொழியைக்கற்று, இச்சுதேசிகளை மனந்திருப்பும் பணியில் (லகுனா டி பே மாகாணத்தில்) இறங்கினார். இயேசுவை அறியாத இச்சமூகத்துக்கு அறிமுகம் செய்துவைப்பதில் அவர் பட்ட பிரயாசைகள் அளவிட முடியாதவை. அவர்களது அநாகரிகப் பழக்கங்களை ஒழித்து, பண்புள்ள மனிதராக மாற்றுவதில் அரும்பாடுபட்டார். இம் மக்களைக் கொண்டு நாகரிகமிக்க மொரோங், மாபிற்றேக் என்ற நகரங்களை உருவாக்கினார். மேலும் ஏனைய கிராமங்களில் இதுபோன்று ஏழைமக்களின் தேவைகளையும் மருத்துவ வசதிகளையும் கொண்ட மனைகள் தொடக்கப்பட்டன. இவற்றுக்கு மாட்சிமை தங்கிய மன்னரின் ஆதரவும் உதவியும் தாராளமாகக் கிடைத்தது. இம்மதபோதகர்களின் காருண்ணிய, தன்னலங்கருதாத பிறரன்புச் செயல்கள், சுதேசிகளின் மனதைத் தொட்டன. தாங்களும் இவ்விரக்கச் செயல்களில் முழுநேர அல்லது பகுதி ஊழியர்களாக உழைக்கவும் இயேசுவை அஞ்ஞானிகளிடையே அறிவிக்கவும் நற்செய்தியைப் பரப்பவும் அனுமதியளிக்குமாறு பல தொண்டர்கள் கேட்டுக்கொண்டனர். அவர்களது தகுதி அறிந்து பணியில் சில பகுதிகள் வழங்கப்பட்டன. இவ்விதம் மதபரப்புப் பணியில் உழைத்த சுதேசிகளுள் சிலர் மிகப்பெரிய சாதனைகளை நிலைநாட்டினர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் வரிவசூலிப்பாளரான டொன் கொன்சலோ (சமார் மாகாணம்) என, யேசு சபையினரின் 1599ஆம் ஆண்டு அறிக்கையில் காணக்கிடக்கிறது.

எமது மதபோதனைகளில் சில அம்சங்களை எடுத்து வாதாட்டங்களை எழுப்பி உண்மையை உணரச் செய்தல், காரணகாரிய போதனை என்பன அதிக பயனளிக்கவில்லை. ஆயின் குரு ஒரு விடயத்தை சுருக்கமாக விளக்கி அதுபற்றி வினாக்களை எழுப்பி, மக்களிடமிருந்தே விடைகளை வரச்செய்து அதன்மூலம் உண்மைகளை உணரச் செய்வது பெரும் பயனளித்தது. அவ்வருடத்தில் 700க்கு மதிகமானோர் திருமுழுக்குப் பெற்று, திருச்சபையின் அங்கத்தவராயினர். இவர்கள் இருகிராமங்களைச் சேர்ந்தவர்கள். அக்கிராமங்களின் கிறிஸ்தவ விசுவாசநிலை, மேற்படி ஊழியத்தினால் ஸ்திரமாகவிளங்கியது.

பான்ரே பட்டிணத்தின் ஒரு முக்கிய நிகழ்வு டொன் பீட்ரோ புகானக் பிறப்பிலேயே இரு கண்களும் பார்வையற்றவன். பெற்றோர் இக்குழந்தையை ஒரு கூடையில் வைத்து (பழைய ஏற்பாட்டில் மோயீசனுக்கு நடந்ததுபோல)

ஆற்றில் எறிந்து விட்டனர். ஒரு பக்தியுள்ள சுதேசியப் பெண்மணி, இக்கூடையைக் கண்டு வீட்டுக்கு கொண்டுவந்ததுடன், வண.ஜெரோணிமோ காப்ரோ அடிகளுக்கு இதை அறிவித்தாள். இப்பிள்ளை கொன்வென்ரோவில் வளர்க்கப்பட்டான். இறை விசுவாசம் நிரம்பியவனாக, நற்செய்தியில் நிபுணத்துவம் பெற்றவனாக, கிறிஸ்துவை அவரது நற்செய்தியை தன் இனத்தாருக்கும் பிறருக்கும் அவர்களறிந்த மொழியில் வழங்குபவனாக விளங்கினான். மதபோதகர்களுக்கு மொழிப்பிரச்சனை நேரும்போது நல்ல மொழிபெயர்ப்பாளனாகவும் பணியாற்றினான். அப்போஸ்தலிக்க தூதுவர் அதிவண. பிரான்சீஸ்கோ லோப்பஸ் அடிகள் இத்தொண்டனின் அரும்பணிபற்றி தனது அறிக்கையில் வெகுவாகப் பாராட்டியுள்ளார். இதன் வழியாக அவர் அவர்களுக்கு கூறுவது: இறைவன் ஒரு சுதேசிய மனிதனைக் கொண்டே மண்ணின் மைந்தர்களுக்கு தன்னை அறிவித்துள்ளமை மதபோதக அலுவலில் ஈடுபடும் அனைவரும் ஆண்டவனில் விசுவாசம் வைத்து பணிபுரிதல் ஆண்டவனின் மகத்தான உதவியைப் பெற உதவியாகுமென்பதே.

இவ்விதம் பெண்கள் பலரும் மதபரப்புப்பணியில் மகத்தான தொண்டுகள் புரிந்தனர். ககாயன் பள்ளத்தாக்குகளில் சுதேசிகள் உயர்குடிவரிசையைச் சேர்ந்த டொனா லூயிசா பாலினன், தன் சகோதரனுக்கு (மதபிரசாரகன்) உதவியாக இருந்தாள். அவன் இறைவனடி சேர்ந்தபின் தானே மிக ஆர்வத்துடன் மதபோதகர்களுக்கு உதவியதுமன்றி, தனியாகவும் கிறிஸ்துவை அவர் போதனைகளைப் பிரசாரம் செய்து வந்தாள்.

டொன் லூயிஸ் பாகுலயன் **1620**இல் தன் வாலிபப் பராயத்தில் காலமானான். மதபோதகர்களும் அவனது உறவினர், நண்பர்களான சுதேசிகளும் அவனது அருமைச் சகோதரி டொனா லூயிசா பாலினனும் அவனது இழப்பினால் ஆறாத்துயரும் அதிர்ச்சியுமடைந்தனர். மதபோதகத்துக்கு அவனது அகால மரணம் ஓர் பேரிழப்பு. எனினும் இந்த இழப்பை அவனது சகோதரி லூயிசா (மேற்கூறியது போல்) ஈடுசெய்தாள். தனது குடும்பப் பொறுப்புகளை மிகக் கவனமாகச் செய்து கொண்டே மதபோதக அலுவல்களிலும் மிகச் சிறப்பாக ஓய்வின்றி உழைத்தாள். மேலும் தனது நல்ல கிறிஸ்தவ வாழ்வாலும் முன்மாதிரி காட்டினாள். நியூகோ செகோவியா மாகாணத்தில் அவள் வசித்த கிராமமே மிகவும் பெரியது.

சிறிது காலத்தின்பின் அப்பகுதியில் கடும் பஞ்சம் உண்டாகியது. ஏழை மக்கள் பசிபட்டினியால் தவித்தனர். அதே தருணத்தில் டொனா லூயிசாவின் வயல்களில் நல்ல விளைச்சல் கிடைத்தது. எனவே அவள் பசிபட்டினியால் தவித்த ஏழைகள் அனைவரையும் தினசரி தனது மாளிகைக்கு வந்து உண வருந்திச் செல்லுமாறு அன்புடன் அழைப்பு விடுத்தாள். மேலும் அப்பகுதியில் மக்களிடையே பிரச்சனைகள், பிணக்குகள் ஏற்படின் டொனா லூயிசாவிடம் வந்து தீர்ப்புப்பெறுவர். அவளது தீர்ப்புகளும் சமரச முயற்சிகளும் நீதி, நேர்மை, பக்கம் சாராமை, உண்மைத்தெளிவு என்ற அம்சங்களை உள்ளடக்கியதால் சிறந்த நீதி வழங்குபவள் என்ற பாராட்டையும் பெற்றாள். லூயிசா சீமாட்டியின் நற்குண நற்செயல்கள் பரலோகத்தைத் தொட்டன. தமது திருவேதப் பரம்புதலுக்கும் தமது ஏழை நண்பர்களின் நல்வாழ்வுக்காகவும் தனது உடல், பொருள், ஆவி அத்தனையையும் அர்ப்பணித்து அயராது பணியாற்றிய இச் சீமாட்டியின் காணிபூமிகள், வயல்கள், கனிமரச் சோலைகள், தோட்டங்கள்

என்பவற்றை நல்ல தேவன் ஆசீர்வதித்து எப்போதுமே அபரிமிதமான விளைச் சலையும் ஏராளமான வருவாயையும் தங்குதடையின்றி உதவிக்கொண்டேயிருந் தார்.

ரேற்ரே, கயின்ரா என்ற பட்டிணங்கள் கைப்பற்றப்பட்டபின் சுற்று வட்டத்திலுள்ள மோரோஸ் சாதியார், சுதேசிகளுடன் நட்புறவோடு கலந்து ரையாடும் தருணங்களில் ஸ்பானியரின் கடவுள் நிச்சயமாகவே வல்லமை மிக்கவர் என்று கூறினர். அவ்விதம் சொல்வதற்கான காரணத்தை வினாவிய போது, கயின்ராவை ஸ்பானியர் தாக்கியபோது 700 வீரர்களை தங்கள் நகரங் களிலிருந்து சுதேசிகளுக்குத் துணையாக அனுப்பியதாகவும், 50 பேர் போரி னால் ஏற்பட்ட காயங்களால் மரணித்ததாகவும், ஏனையோர் தப்பியோடி காடுகள் குன்றுகளில் மறைந்திருந்தபோது ஏற்பட்ட நோய்களினால் இறந்த தாகவும், ஒருவர்கூட தப்பிவரவில்லை எனவும் தெரிவித்தனர். மேலும் ஸ்பானியக் கடவுள் வல்லமைமிக்கவர் என்றும் தெரிவித்தனர்.

டொமினிக்கன் சபையினர் பங்காசினான் மாகாணத்தில் நற்செய்திப் போதனையைத் தொடங்கி 11 ஆண்டுகளின்பின் எடுத்த கணிப்பில் அங்கு ஏறத் தாழ எல்லா மக்களினமும் திருமுழுக்குப்பெற்று கிறிஸ்து சபையில் நிலை கொண்டிருந்தனர். இது வேதபோதக அலுவல்களில் இறைவனின் நல்வழி காட்டுதலால் ஏற்பட்டது என்றே மதபரப்பாளர் திடமாக நம்பினர்.

ஆரம்பத்தில் ஆறு மதபோதகர்கள் அங்குசென்றபோது அவர்களுக்கு நல்வரவேற்புக் கிடைக்கவில்லை. இம்மதபோதகர்களை வெளியேற்றும் வழி வகைகளையே சுதேசிகள் ஆராய்ந்தனர். மதபோதகர்கள் சுதேசிகளின் தொல் லைகளை சகித்து நடந்தனர். தொடர்ந்து உணவோ அல்லது உப உணவுப் பொருட்களையோ கொடுக்காதுவிட்டனர். மதபோதகர்கள் உணவுப் பொருட்களை பணத்துக்கு கொள்வனவு செய்யவும் முடியவில்லை. ஏறத்தாழ 3 வருடங்கள் இம் மதபோதகர்கள் துன்பத்தின்மேல் துன்பத்தையே அனு பவிக்க வேண்டியதாயிற்று. குருக்களின் பொறுமைக்கு அதிகமாக சுதேசிகளின் வெறுப்பு மேலோங்கியது. இதன் காரணமாக ஐவர் வியாதியாய் வீழ்ந்தனர். 5 மாதங்களுக்கு மேல் உணவு, மருந்து மற்றும் டாக்டர்களின் தகுந்த பரா மரிப்பு இல்லாமல் அவதியுற்றனர். ஆயினும் இறைவனின் திருவருளால் அற்புத மாகக் குணமடைந்தனர். சுதேசிகளின் மனப்பான்மையை நன்கறிந்ததால் இக் குருக்கள் மதபோதக அலுவல்களை நிறுத்தினர். இத்தீவுகளின் ஆயர் அதிவண. டொன் பிறே டொமிங்கோ டி சலாசர் ஆண்டகை ஸ்பானிய தளபதிகள் மூலம் இதனை அறிந்தார். இவ்வித குரூர மனம் கொண்ட மக்கள் மத்தியில் பணியாற் றுவது அவசியமில்லை என்று கருதி அக்குருக்கள் உடனடியாக வேற்றிடம் அனுப்புமாறு குருமுதல்வருக்கு உத்தரவிட்டார்.

மூன்றாண்டுகளின் பின் சில பையன்கள் மட்டுமே பெற்றாரால் திரு முழுக்குப் பெற அனுமதிக்கப்பட்டனர். மதபோதகர்கள் வாழ்ந்த அறநெறி வாழ்வு சுதேசிகளை கவர்ந்து கொண்டதாயினும் திருமுழுக்குப் பெறும் ஆண்கள் மட்டுமே இவ்விதம் வாழ முடியுமென்ற தவறான நம்பிக்கை சுதேசிகள் மனதில் வேரூன்றியமையே காரணி.

ஆயின் மதபோதகர்களின் அறநெறி வாழ்வை பாராட்டியவர்களும் அவ்வாழ்வின் நல்ல இலட்சியங்களைக் கண்டு இயேசுவை விசுவசித்தவர்களும்

உண்டு. ஒரு உதாரணம், இங்கு தரப்படுகிறது. சுதேசிகளின் தலைமகன் ஒருவன் ஒரு குருவிடம் ஒருநாள் இரவு சென்று கூறினான். "மூன்றாண்டுகளாக, சுவாமி! உங்கள் வாழ்க்கை முறைகளை அவதானித்து வந்துள்ளேன். உங்கள் குழுவினர் அனைவரும் ஒரே விதமாகச் செயற்படுகிறீர்கள். நள்ளிரவில் ஒருவர் எழுந்து செபம் செய்தால் மற்றெல்லோரும் அதே நேரத்தில் எழுந்து செபிக்கிறீர் கள். ஒருவர் பெண்ணாசையை தவிர்த்து நடந்தால் மற்றவர்களும் தவிர்க் கிறீர்கள். தலைவர் கூறும் விதிமுறைகளை அனுசரிக்கிறீர்கள். மூத்தோரைக் கனம் பண்ணுகிறீர்கள். பொன்னையோ வெள்ளியையோ நீங்கள் விரும்புவ தில்லை. அதிக இன்பத்தையும் சொகுசான ஆடம்பர வாழ்வையும் நீங்கள் நாடுவதில்லை. உங்கள் உடலை வருத்தி கடுமையாக உழைக்கிறீர்கள். பொறு மையுடனும் சகோதர மனப்பான்மையுடனும் வாழ்க்கை நடத்துகிறீர்கள். எங்களுக்கு நன்மை செய்வதே உங்கள் குறிக்கோளாகத் தெரிகிறது. உங்களை வெறுத்தாரையும் சினத்தாரையும் அரவணைத்து அன்பு செய்கிறீர்கள். எனவே உங்கள் போதனைகளை ஏற்றுக்கொள்ள முடிவு செய்துள்ளேன். இவ்வளவு அறநெறி முறைகளில் வாழ்பவர்கள் கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டுடன் நடப்பவர்கள் பொய்ப்பிரசாரம் செய்யமாட்டார்கள்''.

ஒருமுறை ஆறு தலைவர்கள், கூரான ஈட்டிகளை கைகளிலேந்தி, கோபா வேசத்துடன் வந்தனர். மலைநாடுகளில் நான் மறையுரை நிகழ்த்தவோ மத மாற்றம் செய்யவோ விடப்போவதில்லை என ஆக்குரோசத்துடன் பேசினர். எனக்கு உதவி செய்யும் பையனிடம், அவர்கள் களைத்துப்போயிருப்பதால் ஆகாரம் அருந்த அழைத்து வருமாறு கூறினேன். அவர்கள் பருகுவதற்குப் பானம் வழங்கினேன். அவர்கள் பசியாறியபின் எனது குடிசைக்கு ஒவ்வொருவராக வருமாறு கூறினேன். நான் தங்களைத் தாக்கும் தீய எண்ணத்துடன் ஒவ் வொருவராக அழைக்கவில்லையென்றும் எனது குடிசையில் இருவருக்குமேல் இடமில்லை என்பதையும் அவர்கள் நன்கு புரிந்து கொண்டனர். ஒவ்வொரு வருக்கும் என்னிடமிருந்த பருத்தித்துணிகள், ஊசிகள், சிறு தங்கத் தகடுகள் (வெள்ளி, பித்தளை கலந்தவை) என்பன சிலவற்றை அன்பளிப்புச் செய்தேன். இவற்றை அவர்கள் மனமகிழ்வோடு பெற்றுக்கொண்டனர். தாங்கள் பிரதியு பகாரமாக என்ன தரவேண்டுமெனக் கேட்டனர். எமது இரட்சகர் இயேசு, பிரதியுபகாரம் எதையும் எதிர்பார்க்காது நன்மை செய்ய வேண்டுமெனப் போதித்தாரெனக் கூறி அவரை அவர்கள் நன்கறிந்து கொள்ள சில கருமங்களைத் தந்துதவுமாறு கூறினேன். என்னை அவர்கள் மலையடிவாரத்துக்கு அழைத்துச் சென்றனர். அங்கு எனக்குத் தேவையான காணிகளை காட்டுமாறு கேட்டனர். ஒரு ஆலயம், குருமனை, கொன்வென்ரோ கட்டுவதற்கான இடங்களைத் தெரிவு செய்தேன். உடனடியாக பக்கத்திலிருந்த காடுகளில் தேவையான மரங்களைத் தறித்து எனது தேவைகளைச் செய்து முடித்தபின்னரே, தங்களுக்கான வீடு களை அமைக்கத் தொடங்கினர். சில காலத்தின்பின் அவர்கள் அனைவரும் எங்கள் வாழ்க்கை முறைகளை வியந்து போற்றி, இந் நடைமுறைக்கு வழி காட்டும் கிறிஸ்தவ மதமே சிறந்ததெனக் கூறி எம்மதபோதகர்களிடம் வந்து முறையாக ஞான உபதேசம் கற்று, கிறிஸ்தவர்களாயினர். இவ்விதம் ஏறத்தாழ 3000க்கும் அதிகமானோர் (ஏழு கிராமங்களில்) திருமுழுக்குப் பெற்றனர்.

இவ்விதம் திருமுழுக்குப் பெற்றுத் திருச்சபையில் சேர்ந்தோர் கிறிஸ்தவ வாழ்வு வாழவும், திருவருட்சாதனங்களை முறையாகப் பெற்றுக்கொள்ளவும், பத்துக் கட்டளைகள் திருச்சபைக் கட்டளைகளை முறையாக அனுசரிக்கவும்,

ஞாயிறு கடன் திருநாட்களை அனுசரிக்கவும், ஒரு சந்தி - மாமிசத்தவிர்ப்புக்களில் நிலைபிறழாதிருக்கவும், மறை போதகர்களும் தொண்டர்களும் கண்டிப்பாக இருந்தனர். இவ்விடயத்தில் சிலர் இரகசியமாகத் தவறியபோது நல்லதேவனே அவர்களுக்குத் தண்டனையளித்து ஏனையோர் அறநெறி பிறழாதிருக்க உதவினார். உதாரணமாக சில நிகழ்வுகள்.

ஒரு மண்ணின் மைந்தர், ஞாயிறு கடன் திருநாட்களில் பூசைக்குப் போவதில்லை. கோயிலுக்குச் செல்வதிலும் வேதக்கடமைகளை அனுசரிப்பதிலும் வெறுப்புக் காட்டினான். ஒரு ஞாயிறு காலை நாய்களால் கடிக்கப்பட்டு பிணமாகக் கிடந்தான். இன்னொருவன் ஞாயிறுகளிலும் வேலைக்குச் செல்வான். இத்தவறை எடுத்துக் கூறியவர்களையும் ஏசித் திட்டினான். ஒரு ஞாயிறு தினத்தில் வேலை செய்யும்போது கை கூரிய ஆயுதத்தால் வெட்டுண்டது. மற்றொருவன் வேத விதிமுறைகளை மீறி வெள்ளிக்கிழமைகளில் மாமிசம் புசித்தான். அவனும் நாய்களால் கடியுண்டு அவலமாய் மரித்தான். சிலர் பாவசங்கீர்த்தன அருட்சாதனத்தை அனுசரிப்பதில்லை. கடலில் குளிக்கும்போது முதலைகளுக்கு இரையாகினர். பொய்ச்சத்தியம் செய்தவரும் முதலைகளின் பற்களுக்குப் பதமாயினர். இவற்றின் காரணமாக மண்ணின் மைந்தர்கள் தவறுசெய்யவே அஞ்சினர்.

ஒருமுறை அடுத்த ஞாயிற்றுக்கிழமை எல்லோரும் ஆலயத்துக்கு வருமாறு அழைப்பு விடுக்கப்பட்டது. எல்லோரும் ஆலயத்துக்குச் சமூகமளித்தனர். அங்கிருந்து திருச்சிலுவைமுன் கொண்டு செல்லப்பட்ட, பவனியாக ஒரு மைதானத்தையடைந்தனர். அங்கு கத்தோலிக்க விசுவாச சத்தியங்களை விளங்கப்படுத்தும் ஒரு மறைக்கல்வி வகுப்பு இடம்பெற்றது. பின்னர் வண. மனுவல் மார்ட்டினுஸ் அடிகளார் உணர்ச்சிபூர்வமான, உருக்கமான மறையுரையொன்றை ஆற்றினார். கல்லான மனங்களும் கனிந்து கண்ணீர்விட்டன. இளகாத இதயங்களும் இளகின. எலியன் என்பவன் கல்மனங் கொண்டவன். பல வருடகாலம் பாவசங்கீர்த்தனத்தொட்டியை அறியான். பகிரங்கமாக மக்கள் முன்னிலையில் பாவப் பொறுத்தல் கேட்டான். தனக்கு திருமுழுக்குத் தருமாறு வேண்டினான். கொடுக்கல் வாங்கல்களை நேர்மையாகச் சமன்படுத்தினான். யாருக்காவது பணம் கொடுக்க வேண்டியிருந்தால் அல்லது எவர் மனதையும் துன்புறுத்தியிருந்தால் அவற்றுக்கு மன்னிப்புக்கோரியும், தான் தீங்கு செய்தாரை மன்னிக்குமாறும் வேண்டுகோள்விடுத்தான். தனது மனைவியருள் ஒருத்தியைத் தவிர மற்றவர்களை அவர்கள் கொண்டுவந்த சீதனப் பணங்களுடன் திருப்பியனுப்பினான். குருமனையில் தங்கி செபங்களை மனனம் செய்தான். மறைக் கல்வியை ஒழுங்காகக் கற்றான். மக்கள் தலைவனான எலியனின் மனம்மாறுகை அவன்கீழ் இயங்கிய குடும்பங்களையும் மதமாற்றஞ் செய்யத் தூண்டியது. இந் நிகழ்வைத் தொடர்ந்து மதபோதகக் குழுவினர் மக்கள் தலைவர்களின் மதமாற்றத்தில் அதிக அக்கறை காட்டினர். இவ்வித மதமாற்றங்களுள் ஒன்றுபற்றி வண.வலேரிபோ டி லெட்ஸ்மா கூறியதன் சுருக்கம்: இறைவனுக்கு நன்றி. ஆற்றங்கரையோரமெங்கும் திருமுழுக்குகள் நிரம்பி வழிகின்றன. எங்கு வேலை செய்பவர்களும் எத்தகைய நிலையில் பணியாற்றுபவர்களும் கிறிஸ்தவ கீதங்களைப் பாடிக்கொண்டே கடமையாற்றுகின்றனர். இப்பாடகர்களுள் சிறுவர்களே உற்சாகமுடன் முன்னணி வகிக்கின்றனர். மக்கள் தலைவன் சிலோன்கன் பற்றியும் அடிகள் குறிப்பிடுகின்றார். அவனுக்கு ஆறுமனைவியர். முதல்மனைவியை மட்டுமே வைத்துக்கொண்டு ஏனையோர் ஐவரையும்

(அவர்கள் கொண்டுவந்த ஏராளமான சீதனப் பணத்துடன்) திருப்பியனுப்பி விட்டான்.

இந்த நாட்டின் பலபகுதிகளிலும் நடைபெறும் மதபோதக அலுவல்களைச் சுற்றிப்பார்த்து அறிவதற்காக வருகைதந்த எனது பயணம் கிழக்குப்பக்கத்திலும் சென்றது. இப்பகுதியை 'ரலிபென்சுரங்கம்' என அழைப்பர். கரையிலிருந்து ஆறு நாட்களாவது பயணம் செய்யவேண்டும். முதலில் நான் புல்வெளிகளைத் தாண்டிச் சென்றேன். பின்னர் சில மலைகளைக் கண்டேன். இந்த மலைகளில் தான் சுரங்கங்கள் அமைந்துள்ளன. அங்கு தங்கத்தை தேடிப்பலர் வருகை தந்திருந்தனர். ஒரு நல்ல ஸ்பானியர் என்னைச் சந்திக்க வந்து ஒரு சிறந்த வெகுமதியைத் தருவதாகக் கூறினார். அவர் அமைத்த ஒரு அழகிய ஆலயமே அந்த வெகுமதி. அடுத்த ஞாயிறு தினத்தில் நான் அங்கு திருப்பலி நிறைவேற்றி னேன். ஏராளமான மக்கள் வருகை தந்தார்கள். நான் மறையுரை நிகழ்த்து கையில், ''நான் தங்கத்தையல்ல, ஆன்மாக்களையே தேடி வந்திருக்கிறேன். ஸ்பெயினிலிருந்து இவ்வளவு தூரம் வந்திருப்பது அந்த நல் நோக்கத்திற்கா கவே. எனக்கும் என் சகோதரர்களுக்கும் பொன், மண்ணுக்குச் சமானம்'' என்று கூறியபின் சிறிது பொன்தூளை எடுத்து நிலத்தில் வீசினேன். கால்களால் அத்தூள்களை அலட்சியமாக மிதித்தேன். அவர்கள் இச்செயலை ஆச்சரியத் தோடு கண்வெட்டாமல் பார்த்தனர். என் சொற்படியே நடந்ததால் திருப்தியும், என்னில் விசுவாசமும் கொண்டனர். இந்நிகழ்வு பற்றி தீவுகளெங்கும் பேசப்பட்டு, எமது ஆன்மீக வாஞ்சை, அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

வண. டொமிங்கோ டி நிவா என்ற தியாக்கோன் மட்டுமே சுதேசிகளின் மொழியில் பரிச்சயம் உள்ளவரானார். அவர் உடனடியாகவே நற்செய்திப் போதகத்தில் இறங்கினார். மண்ணின் மைந்தர்களும் அவரை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டனர். இவர்களது நற்செய்திப் போதகமுறை ஏனைய நற்செய்திக்கு மக்களுக்கு முன்மாதிரிகையாக இருந்தது. மேலும் பேச்சுவல்லுநரான இத்தியாக்கோனால் மட்டுமல்ல ஏனைய மறை போதகர்களின் அறநெறி வாழ்வும் மண்ணின் மைந்தர்கள் கிறிஸ்தவத்தைத் தழுவுவதற்கு காரணி களாயின. இவர்களனைவரும் இயேசுவுக்காக இரவுபகலென்று பாராது வெகு ஆர்வத்துடன் பணியாற்றி வந்தனர். நோயாளிகளான அஞ்ஞானிகளுக்கும் திருமுழுக்குப் பெறும் ஆர்வமிருந்ததால், இந்தியாக் கோன் (டொமிங்கோ டி நிவா), அவர்களைத் தரிசிக்க, ஏராளமான தன்பணிகளின் மத்தியில் வீடு களுக்கும் செல்வர். மொழி தெரியாத ஏனைய மதபோதகர்களுக்கு இத்தியாக் கோன் மொழிபெயர்ப்பாளராகவும் பணியாற்றினார்.

ஒரு தீவிலிருந்து இன்னொரு தீவுக்குச் செல்வதற்கு சிறு படகுகள், வள்ளங் களின் துணையுடன் சேறு சகதிகளுக்குள் செல்ல வேண்டும். பாத அணி களின்றியே நடப்பது மற்றொரு தொல்லை. ஓரிடத்திலிருந்து மற்ற இடத்துக் குச் சென்றவுடன் சேறுசகதியால் மூடிய பாதங்களைக் கழுவி, அழுக்கான உடைகளை மாற்றி சிறிது களைப்பாற நேரமின்றி, ஏராளமாக வந்து காத்தி ருக்கும் மண்ணின் மைந்தர்கள் மத்தியில் மதபோதகப் பணியை ஆரம்பிக்க வேண்டும். பாவசங்கீர்த்தனம், திருமுழுக்கு ஆகிய அருட்சாதனங்களை வழங்க வேண்டும். இவ்விடைவிடாத அலுவல்களின் மத்தியில் தங்கள் உணவையும் தயாரிக்க வேண்டும். தண்ணீரில் அவிந்த அரிசிச் சோறும் சிறுமீன்குழம்புமே அவர்களது உணவு. அவர்களது உடை, இல்லிடம் அனைத்தும் ஏழை மண்ணின்

மைந்தர்கள் போலவே அமைந்திருந்தன. மண்ணின்மைந்தர்களின் ஆன்ம நலனைக் கவனிக்கவும் இயேசுவுக்காக எத்துன்பதுயரங்களையும் ஏற்றுக் கொள்ளத் தாம் ஆயத்தம் என்பதைப் பகிரங்கப்படுத்தவுமே அம்மதபோதகர்கள் இவ்விதம் செயற்பட்டனர். பகலிலும் இரவிலும், இடி, பெருங்காற்று, புயலி லும், எந்நேரத்திலும் மண்ணன் மைந்தர்கள் உதவிகோரி வரும்போது, மத போதகர்கள் மறுக்காது, சினக்காது, வெறுக்காது, ஆதரித்தும் அரவணைத்தும் தம்மாலியன்ற உதவிகளை வழங்கினர். இதனால் தங்களுக்கேற்பட்ட தாழ்வுகளை யும் அசௌகரியங்களையும் இயேசுவுக்காக அர்ப்பணித்து பொறுமையோடு சகித்து நடந்தனர்.

நற்செய்திப் பணிக்கு இப்பகுதியில் இருந்த அசௌகரியங்களுள் முக்கிய மானவை மிக நீண்ட பயணங்களும் மதபோதகர்களின் பற்றாக்குறையுமே. அடுத்து ஸ்பெயினுக்கு முற்றிலும் மாறான சீதோஷ்ணமும் காலநிலையும், நற்செய்திப் போதனை தொடங்கி 60 ஆண்டுகளின் பின் அதாவது 1620களில் பிலிப்பைன்சில் அரைவாசித் தொகைக்கு மேல் திருமுழுக்குப் பெற்றிருந்தனர். இப்பகுதி மக்களில் பெரும்பான்மையினர் விவசாயத்தை தம் முக்கிய தொழி லாகக் கொண்டவர்கள். எனவே பரந்து வாழ்பவர்கள். ஆகவே மதபோத கர்கள் பரந்த இடங்களில் வசிக்கும் கிறிஸ்தவர்களை அல்லது கிறிஸ்தவத்துக்கு அழைக்கப்படுபவர்களை அடிக்கடி சந்திப்பது முடியாத கருமமாக இருந்தது.

சாதாரணமாகப் பெரிய பிரதேசங்களில் ஒரு குருவும் அவருக்கு உதவி யாக துறவிகளும் துறவறச்சாலைகளில் உள்ளோரும் நற்செய்திப்பணிகளில் ஈடுபடுவர். உதவியாளர் மதபோதகம், பிரச்சனைகளைத்தீர்த்தல், பங்கு நிர்வாகம் என்பனவற்றை, துறவிகள் முதலியோர் கவனிக்க, குரு திருப்பலி அருட்சாதனங்களை வழங்குவதிலும் மறை உரைகளிலும் கவனம் செலுத்துவார். சிறிய ஊர்களாயிருந்தால் ஒரு குருவுக்கு பல கோவில்கள் அல்லது சிறு கிராமங் களிருக்கும். எனவே குருவின் அலுவல்கள் அளவுக்கு மீறியிருப்பதால் மக்கள் தரிசனை, அருட்சாதனங்கள் ஞாயிறு கடன் திருநாட் திருப்பலிகளும் முறையாக நடத்தமுடியாது சில வாரங்களுக்கொருமுறையே குருவின் செயற்பாடுகள் (திருப்பலி, பாவசங்கீர்த்தனம் முதலியவை) இடம்பெறும்.

மதபோதக சபையினர் நற்செய்திப்போதனை சாதனைகளுக்காக சபையி னருக்கிடையே பிணக்கு ஏற்படாதிருக்க, ஒவ்வொரு சபையினர்களுக்கும் ஒவ்வொரு பிரதேசமாகப் பிரித்துக்கொண்டனர். திருநாட்கள், அல்லது முக்கிய வைபவங்களின் போதே ஏனைய சபைகளும், சிறப்பாகக் குருக்களும் உதவி செய்வர்.

அனேகமாக எல்லா மக்களும் (சாதாரண விவசாயிகள், தொழிலாளர்) எந்தவித பிரச்சனையுமின்றி, போதனைகளைக் கேட்டு மனமாற்றம் பெற்று, திருமுழுக்குடன் கிறிஸ்தவர்களாயினர். ஒரு உயர் வகுப்பினனுக்குச் சில பிரச்ச னைகள், அவனுக்கு மூன்று மனைவியர் மூவரும் உயர்குடியினர். எவரை வைத் திருப்பது? ஏனைய இருவரது குடும்பங்களாலும் வரக்கூடிய தொல்லைகளை சமாளிப்பது எவ்விதம்? விலக்கப்படும் மனைவியருக்காக ஏற்கனவே வாங்கிய பெருந்தொகைச் சீதனப் பணத்தை எப்படித் திருப்பிக் கொடுப்பது?

இந்த நிலையில் இப்பிரச்சனைபற்றி குரு ஆழ்ந்து சிந்தித்தார். இடை விடாது இறைவனைப் பிரார்த்தித்தார். பின்னர் அந்த மனிதனின் அன்பை அதிகமாகப் பெற்ற, அம்மனிதனை அதிகம் நேசித்த மனைவியை அழைத்து

அவளது கணவனும் குடும்பத்தாரும் திருமுழுக்குப் பெறவேண்டுமாயின், அவன் தன் மனைவியர் இருவரை, திருச்சபைச் சட்டப்படி முற்றாக விலக்க வேண்டும் என்பதை விளக்கினார். அவள் உண்மையை உணர்ந்தாள். கிறிஸ்த வத்தில் தானும் இணைவதானால் அதன் விதிமுறைகளைத் தானும் அனுசரிக்க வேண்டும் என்பதை ஏற்றுக் கொண்டாள். அத்துடன் தான் அதிகம் அன்பு செய்த கணவனுக்காக ஒரு தியாகத்தையும் செய்ய விரும்பினாள். பலபேர் முன்னிலையில் பகிரங்கமாக தான் கணவனை நிரந்தரமாகப் பிரிந்து செல்வ தாக அறிவித்தாள். ஞான உபதேசத்தை முறையாகக் கற்று, திருமுழுக்குப் பெற்றாள். அவளது திருமுழுக்கை திருச்சபையினர் கோலாகலமாகக் கொண் டாடினர். இந்த நிகழ்வினால் மனமாற்றம் பெற்ற கணவன், ஏனைய இரு மனைவியரையும் அவர்கள் கொண்டுவந்த சீதனத்துடன் விடுவித்து தானும் திருமுழுக்குப் பெற்றான். இவனது திருமுழுக்கும் ஆடம்பரமாகக் கொண் டாடப்பட்டது. இதைத் தொடர்ந்து மேலும் 11 குழுத்தலைவர்கள் தங்கள் பாவ வாழ்க்கையை விடுத்து, அநியாயமாகத் தேடியவற்றை உரியவர்களுக்கு அல்லது திருச்சபையின் நலன்களுக்குக் கையளித்து தங்கள் குடும்பத்தினர் நண்பர்களோடு திருமுழுக்குப் பெற்றனர். மேலும் அடிமைகளை நீண்ட காலமாக வைத்திருந்த சீமான்களும் அவர்களுக்கு சுதந்திரமளித்து, குடியிருக்க நிலமும் சுயதொழில் முதலீட்டுக்குப் பணமும் வழங்கினர்.

அடிமைகளாவதற்கு முக்கிய காரணி ஏழ்மையும் வறுமையுமே. ஒருவருக்கு பணமோ அல்லது வேறு தேவைகளோ ஏற்படும்போது அயலார் உதவுவார்கள். இவற்றை உரியகாலத்தில் வட்டியுடன் கொடுக்கவேண்டும். கொடுக்க இயலா விடில் வட்டி வளரவளர அதன்பயன் கொடுத்தவருக்கு, வாங்கியவர்கள் அடிமைகளாகி அவரிட்ட வேலைகளை கட்டளைகளை செய்து கொடுக்க வேண்டும். சிலவகை அடிமைத்தனம் பிள்ளைகள், பேரப்பிள்ளை வரை நீடிக்கும். உள்நாட்டுப் போர்களில் தோற்றவர்களும் அடிமைகளாகக் கொண்டு போகப்படுவதுண்டு. அடிமைகள் வெகு குரூரமாக நடத்தப்படுவர். சிறு தவறுகளுக்கும் கடும் தண்டனை விதிக்கப்படும். ஏழைகள் பணக்காரரால் கொடு மைப்படுத்தப்படுதல் சர்வசாதாரணம். இவ்வித சமூகவிரேதச் செயல்களை திருமுழுக்கு அளிக்கும் போதும், அடிக்கடி மறைக்கல்வி வகுப்புகளை நடத்தியும் ஒழிப்பதற்கு மதபோதகர்கள் அரும்பாடுபட்டனர். ஓர் மொக்பிரதேசத்திலும் லெயிற்றி தீவுகளிலும் சமூகவிரேதச் செயல்களை ஒழிப்பதில் முதல் வெற்றி காணப்பட்டது. ஏனைய தீவுகளிலும் பெருமுயற்சியின்பின் கைகூடியது. கிறிஸ்தவ நோக்கில் அடிமைப்பண்பு இல்லையென்பதையும் சகோதர சமத்துவ வாழ்வு என்ன என்பதையும் மண்ணின் மைந்தர்கள் மற்றும் சுதேச குழுத் தலைவர்களிடம் மட்டுமல்ல இத்தீவுகளில் ஏக போக ஆட்சி நடத்தும் ஸ்பானி யாரிடமும் புகுத்துவதற்கு மதபோதகர்கள் பட்டபாடுகள் ஏராளம்.

இப்பழக்க வழக்கங்கள் நீண்டகாலமாக அனுசரணையிலிருந்தவை. அவர் களது இரத்தத்திலும் தசையிலும் ஊறிப்போயிருந்த இத்தீய பண்புகளை வெகு கஷ்டப்பட்டே அகற்றவேண்டியிருந்தது. சிலர் அடாவடித்தனமாக அபகரித் ததை திருப்பிக் கொடுப்பதற்குத் தங்கள் பெற்றோர் அல்லது மூதாதையர் யாரிடம் அநீதியாக இவற்றை அபகரித்தனர் என்பது தெரியவராது திண்டாடி னார்கள். பல மண்ணின் மைந்தர்கள் அடிமை வாழ்வில் பெறக்கூடிய பல நலன்கள், சுதந்திர வாழ்வில் சுயதொழில் பார்த்தல் அல்லது யாருக்கும் கூலிவேலை செய்து பிழைப்பது கிடையாதென வாதாடினர். நற்பண்புகளை அனுசரிப்ப

தால் தாங்கள் ஊறிப்போயிருந்த தீய பழக்கவழக்கங்களை (மது அருந்துதல், காமவேட்கை, சூதுவிளையாடுதல் முதலியவை) துறக்க விரும்பவில்லை.

மண்ணின் மைந்தர்களின் மிகப்பெரிய பெலவீனமும் வெறுக்கத்தக்க தீய பண்பும் குடித்து வெறித்து கூத்தாடுவது. பிலிப்பைன்ஸ் தீவுக்கூட்டங்களில் இப்பகுதி மக்களே குடிவெறிக்கு அடிமைப்பட்டிருந்தனர். அளவுக்கு அதிக மாக மதுவருந்தி கலாட்டா செய்வதும், மதுபோதையில் அயலாருடன் மோது வதும் அடிக்கடி நடைபெறும் நிகழ்வுகள். எனவே குருமுதல்வர் சில கடுமை யான கட்டளைகளை விதித்தார். அளவுக்குமீறிய மதுபோதையால் வெறி யாட்டம் நடத்தும் எவரையும் உறவினர், நண்பர்கள் தங்கள் வீடுகளுக்கு வர விடக்கூடாது அதிக மதுபாவனையாளருடன் எந்தவித தொடர்பும் வைக்கக் கூடாது. இம்முறைகளால் கட்டுப்படாத மதுபாவனையாளரின் பெயர்கள் ஆலய அறிவித்தல் பலகையில் எழுதப்பட்டு அவர்களது சமூகத்தொடர்பு அனைத்தும் துண்டிக்கப்படும். அவர்களது திருச்சபைத் தொடர்புகளும் ரத்து செய்யப்படும். இவ்வித கடும் கட்டுப்பாடுகளினால் பலர் மதுபோதைத் தனத்திலிருந்து காப்பாற்றப்பட்டனர்.

எனினும் ஸ்பானியரின் தீயபண்புகள், பழக்கவழக்கங்களிலிருந்து அவர்களில் பலரை மீட்டெடுக்க முடியாது மதபோதகர்கள் திண்டாடினர்.

மண்ணின் மைந்தர்களின் நலன்களுக்காகவும், பாதுகாப்புக்காகவும் அவர் களில் சிலர் நியாயாதிபதிகளாக நியமிக்கப்பட்டனர். சாதாரண நீதிபதிகளுக் குரிய அதிகாரங்கள், உரிமைகள், சலுகைகள் பெருமளவில் இவர்களுக்கு வழங் கப்படவில்லை. மண்ணின் மைந்தர்களில் சிறந்தவர்களாகக் கருதப்பட்டவர் களில் திறமைசாலிகளும் நற்பண்புகளும் கொண்ட சிலர் நியாயாதிபதிகளாகத் தெரியப்பட்டனர். இவர்கள் உண்மையாகவே நற்பண்புகள் உடையவர்க ளாகக் காணப்படவில்லை. பிழையான வழிகளில் செல்வோராக, தீயவழி செல் வோராக, சட்ட திட்டங்களை சுயநலத்துக்காகப் பயன்படுத்துவோராக நடந்து கொண்டமையால் சுதேசிகளின் வெறுப்புக்கும் அதிருப்திக்குமுள்ளாயினர்.

இதன் காரணமாக அநீதியும் அக்கிரமமும் தாண்டவமாடின. சட்டம், நீதி, நேர்மை புறக்கணிக்கப்பட்டது. சட்டங்களும் ஒழுங்குகளும் சுவாமி மாருக்குத்தான், எங்களுக்கல்ல என்று விதண்டாவாதம் பேசுவோர் அதிகமாயி னர். இது சம்பந்தமாக ஒருபகுதி நிர்வாகிகள், இன்னொரு பகுதியினரை குற்றஞ் சாட்டத் தொடங்கினர். குருக்கள் மீதே பொதுவாகப் பழிபோடப்பட்டது.

பேராயர் பெனிவிடாஸ் ஆண்டகை பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில், அரசருக்கு எழுதிய திருமடலில் பொதுவாக மதபோதக சபைகளையும் அவர் களது நற்செய்திப் போதனை - சாதனைகளையும் பாராட்டியிருப்பினும் சில குறைபாடுகளையும் சுட்டிக் காட்டியுள்ளார். 'டோமினிக்கன், பிரான்ஸீஸ்கன் சபையினர் வெகுதிறமையுடனும் ஆர்வத்துடனும் இப்பணியில் உழைக்கிறார்கள். அகஸ்தீனிய சபையாரில் அவ்வளவு ஆர்வம் இல்லை. மெக்சிக்கோவிலிருந்து வந்த இவர்களில் முன்னாள் இராணுவ வீரரும் அறநெறி செல்லாத துறவிகளு மடங்கியதே காரணி.'

துறவற சபைகளின் மதபரப்பு அலுவல்களில் உள்ள ஒரு முக்கிய குறை பாடு அவர்கள் ஓரிடத்தில் தங்கி கிறிஸ்துவையும் அவரது நற்செய்தியையும் அறிவிக்கிறார்கள். திருமுழுக்கு, பச்சாத்தாபம், நற்கருணை முதலிய அருட்

சாதனங்களை வழங்குகிறார்கள். பின் அவ்விடத்தைவிட்டு அடுத்த இடத்துக்குப் போகிறவர்கள் முந்திய இடத்தில் அவர்கள் நடத்திய மறைபோதகத்தைத் தொடரவும், பாவசங்கீர்த்தனம், நற்கருணை முதலிய அருட்சாதனங்களை அடிக்கடி வழங்கவும் போதிய குருக்கள் இல்லை. எனவே அவர்கள் பெற்ற விசுவாச நிலையை ஸ்திரப்படுத்தி வளர்க்க முடியாமலிருப்பதால் இவ்வான் மாக்களை சிறிது காலத்தின் பின் திருச்சபை இழந்துவிடக்கூடும். முன்னைய தீய நாட்டங்கள் இவ்வான்மாக்களை மேற்கொள்ளும். எனவே நல்ல குருக்கள் பற்றாக்குறையால் நல்ல விதைப்பு நடைபெறும் அமோகமான அறுவடை இல்லை.

டோமினிக்க, பிரான்சீஸ்க சபையாரின் நிர்வாகம் மிகக் கடுமையானது. அப்பழுக்கற்றது. இதற்காக இறைவனுக்கு நன்றி கூறக்கடமைப்பட்டிருக் கிறோம். தமது வாழ்ந்து காட்டல் முன்மாதிரிகையால் சுதேச மக்களை அற நெறியில் வளர்ப்பதுடன் நிதிவசூலிப்பு சம்பந்தமாகவும் வெகு இளக்காரமா கவே நடந்து கொள்கின்றனர்.

மாட்சிமைமிக்க மன்னர், ஒரு தகுதிவாய்ந்த தரிசகரை அகஸ்தீனிய சபையை மதிப்பீடு செய்ய, ஸ்பெயினிலிருந்து அனுப்ப வேண்டும். அத்தரிசகர் ஒரு குருவாகவும், பல்திறமை மிக்கவராகவும், பொறுமைமிக்கவராகவும், எளிமையான வாழ்வை விரும்புபவராகவும் இருக்க வேண்டும். அவர் தனி யொருவராக அன்றி ஸ்பெயினில் உள்ள அனுபவமிக்க சிறிய சபைகளின் துறவிகள் சிலரையும் அழைத்துவர வேண்டும். ஒரு குறுகியகால தரிசகர் விரும்பத்தக்க தல்ல. இச்சபையின் நீண்ட கால பிரச்சனை இதுவாதலால், இவ்விடயம் மிக ஆறுதலாக ஆய்வு செய்யப்பட வேண்டும்.

இங்கிருக்கும் யேசுசபையானது, ஏனைய துறவற சபைகளுக்கு முன்மாதிரி யாக அமைந்துள்ளது. ஏனைய மேய்ப்புப்பணி நாடுகளிலும் அவர்கள் அவ் விதமே நடந்து கொள்கிறார்கள். தமக்கு பகிர்ந்தளிக்கப்பட்ட பிலிப்பைன்ஸ் கிராமங்களில் மதபோதகம், அருட்சாதனங்கள் வழங்குகை என்பனவற்றை நன்கு திட்டமிட்டு திறமையாகச் செய்கின்றார்கள். ஆயின் அவர்கள் தேவாலய தேவைகளுக்கென சுதேசிகளின் நல்ல வருமானந்தரக்கூடிய காணிநிலங்களைக் கைப்பற்றி அவைகளைத் தமது சபைத் தேவைகளுக்காக பாவிப்பது சம்பந்த மாக மாட்சிமைமிக்க மன்னரின் தலையீடு அவசியமானது.

அடுத்ததாக எனது மதிப்பீட்டு அறிக்கை, நற்செய்திப் போதனையில், சாதனையில் ஈடுபட்டுள்ள குருக்கள் உட்பட மதபோதகர்களது செயல்முறை சம்பந்தமானது. கிறிஸ்துவைப் போதிப்பவர்கள் கிறிஸ்துவாக - கிறிஸ்துவின் முன்மாதிரிகையாக வாழ்வதில்லை. அடக்கச் சடங்குகளுக்கும் - திருமுழுக்கு கள், திருமணங்கள் மற்றும் அருட்சாதனங்களை வழங்குவதற்கும் ஏழை பிலிப் பைன்சியரிடம் கையூட்டு வாங்குவதும் தங்கள் சீவனோபாயத்துக்காக, பரந்து கிடக்கும் வயல்நிலங்களில் குடிசைகள் அமைத்து வாழ்பவர்களை மறைக்கல்வி, பாவசங்கீர்த்தனத்துக்காக நீண்டதூரம் வரச்சொல்லுமாறு வருந்தி அழைப் பதும் சர்வாதிகாரச்செயல்கள். மேலும் மரணத் தருவாயிலிருக்கும் ஒரு நோயாளியை பாவசங்கீர்த்தனம், நற்கருணை, நோயில் பூசுதல் முதலிய அருட் சாதனங்களை வழங்குவதற்கு ஆலயத்துக்கு நீண்டபயணம் கொண்டு வருமாறு வற்புறுத்துவது காருண்ணியமற்ற செயல். ஒருவர் மரித்தால் அடக்கச்சடங்கு கள் கல்லறைக் கட்டணமாக நூறு அல்லது அதற்கு அதிகமாகத் திருச்சபை

விதிக்கும் பெசோஸ் என்ற நாணயங்களைக் கொடுக்கவேண்டும். இப் பணத்தைச் செலுத்த இயலாத ஏழை மைந்தர்கள் வீட்டுப் பின்புறத்தில் அல்லது தோட்டத்தில் புதைப்பதுண்டு. எனவே பிலிப்பைன்சில் கடமையாற்றும் ஸ்பானியருக்கு விதிக்கப்படும் மரணச் சடங்குகள் சம்பந்தமான அதேதொகையை ஏழைச் சுதேசிகளுக்கும் விதிக்காது அவர்களது நிலைமைகளுக்கேற்ற ஒரு சாதாரண தொகையை விதிக்குமாறு இது சம்பந்தப்பட்ட அனைத்து அதிகாரிகளுக்கும் மதகுருக்கள் போதகர்களுக்கும் அறிவிக்கப்பட்டது. பல அஞ்ஞானிகள் மனம் மாறித்திருமுழுக்குப்பெற விரும்பினாலும் கத்தோலிக்கத் திருச்சபையின் அருட்சாதனங்கள், சடங்குகள் வைபவங்களுக்காக குருக்களுக்கோ ஆலயங்களுக்கோ அடிக்கடி தம் சொந்த வைபவங்கள், திருவிழாக்களுக்காக அதிக பணம் கொடுக்க நேரிடும் என்ற அச்சத்தாலேயே திருமுழுக்குப்பெறாது கடத்தி வருகிறார்கள் என்பது சுட்டிக்காட்டப்பட்டது.

ஸ்பானியரின் ஆளுகையில் பிலிப்பைன்ஸ் தீவுகளில் மறைபரப்புப் பணியும் மதமாற்றமும் எல்லாத் தீவுகளிலும் ஒரே மாதிரியாக இடம்பெற வில்லை. ஸ்பானியரின் சலுகைகளை எதிர்பார்த்து சில இடங்களிலும், ஸ்பானியரின் ஆயுத பலத்துக்கு அஞ்சி, சில தீவுகளிலும், குருக்கள் துறவிகளின் பரிசுத்தம், பண்பு, தியாகம், பரந்த மனப்பாங்கு, இயேசுவுக்காக எத்துன்பத்தையும் தாங்கும் இதயம் என்பனவற்றால் கவர்ந்திழுக்கப்பட்டு கத்தோலிக்க மதத்தின் அங்கத்துவம் பெற்றோர், இயேசுவின் நற்செய்திகளால் மனம்மாறியோர் எனப் பலவழிகளில் கிறிஸ்தவம் பரவியது.

ஒருமுறை பயங்கரவாதியும் பண்பற்றவனுமான ஒரு முரடனுக்கு வேத விளக்கம் கொடுக்க நேர்ந்தது. பரலோகத்தின் மகிமையையும் பேரின்பத்தையும் விளக்கிய பின் நரகத்தின் கொடுமையையும் பயங்கரத் துன்பங்களையும் விளக்கினேன். பின்பு, மரணத்தின்பின் எங்கு செல்ல விரும்புகிறாய் என வினாவியபோது, 'நரகத்துக்கு' என்றபதில் கிடைத்தது. வியப்படைந்தேன். அவன் தனது இன மக்கள் குழுவின் தலைவனாதலால், அவன் விசுவாசநிலையை மனமகிழ்வுடன் அடையின், அவனது குழுவில் ஆயிரக்கணக்கானோர் மனந் திரும்புவராதலால், சோர்வடையாது மீண்டும் கேள்விக்கணை தொடுத்தேன். 'எதற்காக நரகம் செல்ல விரும்புகிறாய்?' என்று வினாவியபோது, 'தனது பெற்றோரும் உறவினரும் விசுவாசநிலையைப் பெறாது மரித்த படியால் நரகத்திலிருப்பார்களாதலால் தானும் அவர்களுடன் செல்வதையே விரும்புவதாகத் தெரிவித்தான்.' நரகநெருப்பின் மகாபயங்கரத்தை சித்தரித்தேன். அவன் சிரித்துவிட்டு (குழந்தைகள் மணலையோ கற்களையோ கையில் அள்ளி வியைாடுவது போல்) அடுப்பில் இருந்த நன்கு வெந்த நெருப்புத்தனல் கொள்ளிகளை தன் கைகளால் அள்ளி சிலநிமிடம் சிரித்தபடி வைத்திருந்தான். அவனது பேச்சுப் போல அவனது செயலும் கடினமாகவே காணப்பட்டது. ஆயின் சில தினங்களின் பின் அவனது சொல்லிலும் செயலிலும் பெரும் மாறுதல் காணப்பட்டது. தனது உறவினர், நண்பர்கள் அனைவரையும் கூட்டிச்சேர்த்து, ஒரு பெரும் குழுவாகத் திருச்சபையில் இணைந்தான்.

சுதேசிகளிடையே நிலவிய பழைய பழக்கவழக்கங்களை, மூட நம்பிக்கைகளை மாற்றுவது மதபோதகர்களுக்கு மிகமிகக் கஷ்டமானதாகக் காணப்பட்டது. இறையியல் காரணங்களை ஆதாரமாகக் காட்டி இந்த மக்களைத் திருத்த முடியாது. நன்கு உணரக்கூடிய விளக்கங்களைக் காட்டி, மூடநம்பிக்

கைகளுக்கெதிராக ஆர்ப்பாட்டங்கள் செய்து இவற்றைக் களையவேண்டி யிருந்தது.

அடிக்கடி யப்பானைத்தாக்கும் பூகம்பம், எரிமலை அக்கினிக் குழம்புகளை வெளியேற்றுவதையே இக்குருமார் 'நரகநெருப்பு' எனக் கூறுகிறார்கள் என்றெல் லாம் எதிர்வாதம் பேசப்பட்டது. சிலதடவைகள் மலைகளின் உச்சியில் இருந்துவரும் குள்ள, அவலட்சண மனிதர்களையே இம்மனிதர் 'நரக பசாசுகள்' என்கிறார்கள் என்பதையெல்லாம் ஆதாரங்களுடன் குருக்கள் எடுத்துக்காட்ட வேண்டியிருந்தது. எரிமலைபற்றிய விளக்கங்களோடு நின்றுவிடாது; இறை வனின் குருவான வண.பிறே பீட்ரோ பெரா அடிகள் எரிமலைகள் சாதாரண மாக அமைதியாயிருந்த வேளையில் தம்மோடு சில மண்ணின் மைந்தர்களை அழைத்துக்கொண்டு ஒரு மலையில் ஏறி அக்கினிக் குழம்புகள் அள்ளிவீசப்படும் பெரிய பொந்தை அவர்களுக்குக் காட்டி யதார்த்தமாக அவ்விடங்கள் நரக மல்ல என்று மெய்ப்பிக்க முயற்சி செய்தார். பயங்கொண்ட மண்ணின் மைந்தர் கள் முன்வரவில்லை. இறுதியாக நெஞ்சுரம் படைத்த சிலர், துணிந்து குருக்களு டன் ஏறினராயினும் பாதி வழியில் பயங்காரணமாக, குருக்களுக்குக் கட்டுப் படாமல் வேகமாக இறங்கிவிட்டனர். குரு மட்டுமே எரிமலை உச்சியில் வெற்றி கரமாக தடம்பதித்தார். எனினும் மண்ணின் மைந்தர்கள் தாம் எவரும் உடன் வராததால் இதை ஏற்றுக்கொள்ள மறுத்தனர்.

எனவே மற்றொரு குருவான வண.பிறே எஸ்ரபென் அடிகள் தாமும் எரி மலை உச்சிக்கு ஏறிக்காட்ட விரும்பினார். தம்முடன், முந்திய மலையேறியான வண.பிறே பீட்ரோ பெரா அடிகளுடன் மலையேறத்தொடங்கி, பாதியில் திரும்பி வந்தோர் சிலரையும் கூட்டிச்சென்றார். (இவர்கள் அச்சம் காரணமாகத் திரும்பி வந்தார்களென பொதுமக்களால் அவமானப்படுத்தப்பட்டமையால் தாங்கள் கோழைகளல்லர் என்பதை நிரூபிக்க விரும்பினர்) இக்குழு ஆறுநாட் களுக்குத் தேவையான உணவு, நீர் என்பவற்றைத் தம்முடன் எடுத்துச்சென்றது. எரிமலையின் உச்சியை நோக்கி நடக்க நடக்க சுழல்காற்றும் அனற்காற்றும் சீதோஷ்ண திடீர்மாற்றங்களும் மண்ணின் மைந்தர்களை உடலாலும், அதிக பயம் நம்பிக்கை இழப்பு காரணமாக உள்ளத்தாலும் பயங்கரமாக வாட்டின. ஏழாவது நாளில் சிலர் மேலே செல்வதைக் கைவிட்டு இறங்கத் தொடங்கினர். ஒரே ஒருவன் மட்டும் எஸ்ரபென் அடிகளுடன் சென்றான். எரிமலையின் உச்சியை நெருங்கிக் கொண்டிருக்கையில் பயங்கர, ஆழம் மிகுந்த பொந்து களைத் தாண்டிச்செல்ல முடியாதிருந்தது. அனற்காற்றும் எதிர்பாராதெழுந்த அக்கினிக் குழம்பும் அவர்களை முன்னேற விடவில்லை. அடிகளார் மண்ணின் மைந்தரிடம் ''நீயும் உனது சனமும் நம்பியதுபோல இங்கே உன்னை பேய், பசாசு எதுவும் எதிர்க்கவில்லை. இங்கே நீங்கள் நம்பும் பொய்த் தேவதைகள் உண்டா? கூப்பிட்டுப் பார்! இந்த எரிமலைக்கும் அக்கினி (நெருப்பு) குழம்பு களின் சக்தியிலும் பார்க்க நரகநெருப்பு பலமடங்கு கூடிய சக்தி கொண்டது. ஆகவே இந்த மூடநம்பிக்கைகளை விட்டொழித்து இறைமகன் இயேசுவில் நம்பிக்கை கொள். அவரது போதனைகளை உன் இனத்தாருக்கும் பிறருக்கும் தெரிவித்து அனைவரையும் ஆண்டவரின் சீடராக்கு'' எனப்பணித்தார். அவனும் அவ்விதமே செய்தான். ஏராளமானோர் திருமுழுக்குப் பெற்று நற்செய்தியை அனுசரித்ததுடன் ஏனையோருக்கும் தெரிவித்தனர்.

இப்பட்டினத்தின் கிறிஸ்தவர்கள், நல்ல கிறிஸ்தவ வாழ்வு வாழ்பவர்கள்.

ஏனைய இடங்களில் மூடக்கொள்கைகளை நம்புவர்களே அதிகம். ஆகவே இவர்களில் ஊறிப்போயிருந்த பேய்க் கடவுளர்களின் பயத்தைப் போக்குவதற்கு மிக அதிகமாக உழைக்க வேண்டியிருந்தது. மலைகளில் வதிவதாக நம்பப்படும் இந்தத் தேவர்களின் கோபாக்கினையைத் தவிர்க்க அச்சுதேசிகள் பல்வேறு காணிக்கைகளைப் படைத்து பலிசெலுத்துவர். நோயாளிகளைக் குணமாக்குவதற்கு பெரும் பொருட்களை நேர்த்தி செலுத்துவர். இல்லையேல் அத்தெய்வங்கள் சினங்கொண்டு நோயாளிகளை கொன்றுவிடும் எனத்திடமாக நம்பினர்.

அதிவண.யுவான் டி அல்வா அடிகள், டுமான்காஸ் பகுதியின் முதல் உபதேசகர் (அப்போஸ்தலர்). அலகை இவருடன் மும்முரமாகப் போராடியது. இப்பகுதி மண்ணின் மைந்தர்களின் மனதைக் கல்லாக்கியது. அவர்களை குருவின் போதனைகள், மனந்திருப்பமுடியாது போராடியது. அல்வா அடிகளின் குடிசைக்கு தீ மூட்டச்செய்தது. மூங்கில்களால் கட்டப்பட்டு, வைக்கோலால் வேயப்பட்ட தனது அடியானின் குடிசை எரிந்து சாம்பலாகாது இறைவன் அற்புதமாகக் காப்பாற்றினார். ஆத்திரங்கொண்ட மண்ணின் மைந்தர்கள் அவரது குடிநீரில் நஞ்சைக் கலர்ந்தனர். இறைவனின் கரம் அடிகளைக் காப்பாற்றியது.

1646இல் மண்ணின் மைந்தர்களில் ஒருபகுதியினர் அலகையினால் தூண்டப்பட்டு கிறிஸ்தவத்துக்கெதிராக எழுந்தனர். கபான் பிரதேசத்தில் அகப்பட்ட கிறிஸ்தவர்களைக் கொன்றனர். என்கெமின்டாவான றொட்றிக்கோ டி மெசாவின் சொத்துக்களை அபகரித்து, வீடுகளுக்குத் தீ மூட்டினர். அகதிகளான கிறிஸ்தவர்கள் மலையடிவாரங்களுக்குத் தப்பியோடினர். இத்திய குழுவின் தலைவன் தன்னை மூவொரு கடவுளாகவும், தளபதிகளை சுதன், தூய ஆவியாகவும் 'யகா' என்ற பெண்மணியைத் தேவதாய் எனவும் பிரகடனப் படுத்தினான். இவர்களை வழிக்குக் கொண்டு வருமாறு குருமுதல்வர் அதிவண. யுவான் டி அபர்கா, மற்றும் துணைவர் பிறே டியாகோ ரமயோ என்போர் ஏராளமான பம்பன்கோஸ் (சுதேசிகள்)களுடன் மலைக்குச் சென்றனர். பம்பன்கோஸ்களின் தலைவன் டொன் அகஸ்ரின் சொன்சன் மகாவீரன் மன உறுதி கொண்டவன். புரட்சியாளர்களில் பலர் சரணடைந்தனர். ஆயில் தலைவர்கள் இன்னமும் எதிர்ப்புக் காட்டினர். ஆகவே ஆளுநர் டொன் டியாகோ பயராடோ, புரட்சியாளர்களைச் சுட்டுத் தள்ளுமாறு உத்தரவிட்டார். புரட்சி ஒழிந்து அமைதி நிலவியது.

சுதேசிகள் முன்பு (கிறிஸ்தவர்களாகமுன்) அனுசரித்த பழைய மத அனுசரணைகளில் பலவித தீய பண்புகளும், பழிவாங்கல்கள், பொறாமை, எரிச்சல், காய்மகாரமுமே மிகுந்திருந்தது. இதனால் சத்திய திருச்சபையை பலவித துன்பங்கள் மேற்கொண்ட போதும் கத்தோவிக்க பீடாதிபதியின் (அதி.வண.டெல்விலார்) முன்னெச்சரிக்கை கொண்ட - திறமை மிகுந்த நிர்வாகத்தால் அதிக பாதிப்பு நேரவில்லை.

கிறிஸ்தவ அறநெறி வாழ்வு நடத்துபவர்களினதும் பல்வேறு பழைய (பிறமத) பழக்க வழக்கங்களில் இன்னமும் வேரூன்றிவிடாதிருப்பவர்களையும் அவர் முதலில் கணக்கெடுத்தார். பல்வேறு தெய்வங்களின் உருவச்சிலைகளை வீடுகளில் வைத்து பூசைசெய்யும் கிறிஸ்தவர்களையும் கண்டுபிடித்தார். இந்த உருவச்சிலைகள் தங்கம், வெள்ளி முதலிய விலைபெற்ற உலோகங்களால் உரு

வானவை. அந்தந்த மதப்பிரமுகர்கள், அல்லது பிரமுகிகள் இத்தெய்வச்சிலைகளை மந்திரித்து வீடுகளில் ஸ்தாபிதம் செய்வர். இதற்கான செலவுகள் அதிகமானாலும் அத்தெய்வங்கள் தங்களைக் காக்கும்; தங்கள் பிரச்சனைகளைத் தீர்க்கும் என்ற நம்பிக்கையில் இச்செல்வுகளை சுதேசிகள் பொறுத்துக்கொள்வார்கள்.

வண. பிரான்ஸ்சிஸ்கோ அல்மெரிக்கியூ அடிகள் இங்கு வந்தபோது கிராமத்தினர் அனைவருமே அவரைப் பார்க்க வந்தனர். அந்த நல்ல குரு அவர்களுக்கு காணிகளைப் பங்கிட்டு வழங்கியதுடன் வீடுகள் அமைக்கப் பணமும் கொடுத்தார். அன்ரி போலோ என்ற கிராமத்தில் ஓராண்டுக்காலத்தில் மட்டும் (1594 - 1595) ஆயிரத்துக்கும் அதிகமானோர் திருமுழுக்குப் பெற்றுத் திருச்சபையில் இணைந்தனர். இவர்கள் மலையடிவாரத்திலிருந்து வந்தவர்கள். இதுபற்றி அவர்களது பழைய மதகுருக்கள் கேள்வியுற்றுச் சினங்கொண்டு, அவர்களுக்கு பலவிதத்திலும் கேடுவிளைவிக்க முயன்றனர். புதுக் கிறீஸ்தவர்களுக்கு அல்மெரிக்கியூ அடிகள் உறுதுணையாயிருப்பது கண்டு அவரது உடலுக்கும் உயிருக்கும் ஆபத்து விளைவிக்க முனைந்தனர். இத்திட்டங்களில் முனைப்பாய் நின்றவன் தன்னை அத்தேவதைகளை ஆட்டி வைக்கும் குரு என்றும் குழுத்தலைவன் என்றும் விளம்பரப்படுத்தி எல்லாவகையாலும் அல்மெரிக்கியூ அடிகளுக்கு பலத்த தொல்லை கொடுக்க முயன்று படுதோல்வியடைந்தான். அவனது பசப்பு வார்த்தைகள் மக்கள் மனதை மாற்றவில்லை. அவனது திட்டங்கள் அனைத்தும் தோல்வியுற்றன. அல்மெரிக்கியூ அடிகளின் மதபோதக - மதபரப்பு முயற்சிகளுக்கு மக்கள் பேராதரவு வழங்கினார்கள். தோல்வியுற்ற தலைவன் அடிகளைத் தேடிவந்து அவர் பாதங்களில் வீழ்ந்து மன்னிப்புக்கோரினான். அவனுக்கு பலத்த தண்டனை வழங்குமாறு, மக்கள் குருவை வேண்டினர். அவரோ இரட்சகர் இயேசுவைப் பின்பற்றி பூரண மன்னிப்பு அளித்தார். அத்தலைவன் தன் ஆடம்பரங்களனைத்தையும் துறந்தான். நீண்ட தலைமயிர்ச்சுருள்களை வெட்டித்தள்ளினான். தனக்கும் குழுத்தலைவர்களுக்கும் அடிமையான ஏராளமான மக்களுடன் சத்திய மறையில் சேர்ந்தான்.

இப்பகுதிகளில் மதபோதக, மறைபரப்புப் பணிகளிலீடுபட்டோர் சுதேசிகளின் மொழிகளை அறிந்துகொள்ளல் அவசியம். ஆரம்பத்தில் சென்ற மதபோதகர்கள் ராகலக் பைகோல் மொழிகளை நன்கு அறிந்திருந்தனர். எனவே அம்மொழிகளில் நூல்கள், சிறுதுண்டுப் பிரசுரங்கள் என்பனவற்றை ஏராளமாக வெளியிட்டனர். இவைகள் அச்சு இயந்திரம் இல்லாத காரணத்தால் அச்சாகவில்லை. எனினும் ஆர்வமிகுந்த தொண்டர் பலரால் கையெழுத்துப் பிரதிகளாக வெளியிடப்பட்டன. இப்பிரசுரங்களுக்கு நல்ல வரவேற்பிருந்தது.

**1613** இல் வண.பிறே பீட்ரோ டி சான் பியுநவன்ருரா அடிகள் ராகலக் மொழியில் சொற்களஞ்சியமொன்றை அச்சடித்து வெளியிட்டார். தொடர்ந்து சில எழுத்தார்வமிகுந்த குருக்கள் பல முக்கிய விடயங்களை அச்சுப்பிரதிகளாக வெளியிட்டனர். இவற்றுக்கு நல்ல வரவேற்பிருந்தது.

வெட்டுக்கிளிகள் பெருமளவில் விவசாயப்பயிர்களைச் சேதப்படுத்தின. இதனால் அமோக விளைச்சல் பெருமளவில் பாதிக்கப்படும் அபாயம் தோன்றியது. தேவகோபம் தணிய அன்னை மரியாள் மூலம் குருக்கள் தலைமையில் விசுவாசிகள் உருக்கமாகப் பிரார்த்தித்தனர். இப்பெரும் அபாயத்தை உடனடியாக அகற்றினால் அன்னையின் அமலோற்பவதினம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்

படுமென்றும் பொருத்தனை செய்தனர். இறைவன் அவர்களின் வேண்டுதலுக்குச் செவிசாய்த்தார். வெட்டுக்கிளிகள் கூட்டம் அவ்விடத்தைவிட்டகன்றது. குருக்கள் தலைமையில் அன்னையின் அமலோற்பவதினம் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அத்துடன் இவ்வித பெரும் இடையூறுகளுக்கு அஞ்ஞான தேவதைகளுக்குப் பலிசெலுத்துவித்து பொருள் சேர்க்கும் பூசாரிக் குருக்களை, மந்திரவாதிகளை நம்பிவந்த விவசாயிகள் சத்திய மறைக் குருக்களை துறவிகளை நம்பவும், அவர்காட்டிய கிறிஸ்தவ வாழ்வை வாழவுந் தொடங்கினர். இறைவனருளால் அமோகமான விளைச்சலும் கிடைத்தது. இதனைத் தொடர்ந்து இவ்விவசாயிகள் நோயுற்றவேளை குருக்களை அழைத்து அவர்கள் விவிலியத்தை (நற்செய்தி நூலை) தங்கள்மேல் வைத்து ஆசிநீரால் மந்திரிக்கப்படுதல் அல்லது ஆலயத்துக்கு நோயாளிகளை தூக்கிச் சென்று அங்கு மேற்கூறிய சடங்குகள் நிறைவேற்றப்படுவதையே விரும்பினர். விதைக்கும் வேளைகளிலும் தானியங்களைக் குருவிடம் கொண்டுவந்து ஆசீர்வதித்த பின்னரே விதைப்பர். அறுவடையின் போது முதலில் ஒரு கணிசமான பங்கை கோவிலுக்கு அல்லது குருவுக்கு கொண்டு சென்று காணிக்கை கொடுத்தபின்னரே மிகுதி விளைச்சலை வீட்டுக்கு எடுத்துச் செல்வர். குருசு, வரவணிக்கம் போன்றவை பரிசுத்த பண்டங்கள் குருவால் ஆசீர்வதிக்கப்பட்டு வீடுகளில் தனியிடத்தில் ஸ்தாபிக்கப்பட்டு ஆராதிக்கப்படும். கழுத்தில் அணியப்படும் இந்த வரவணிக்கங்கள், உத்தரியங்களில் சுதேசிகள் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார்கள்.

உதாரணமாக ஒரு நிகழ்வு:

ஒரு துறவி சில மண்ணின் மைந்தர்களை மலையடிவாரத்திலிருந்து சில புற்கற்றைகளை வெட்டிவருமாறு பணித்திருந்தார். அவர்களிலொருவன் மலையொன்றில் ஏறினான் பின் அச்சமடைந்தவனாக ஒரு குன்றிலிருந்து இன்னொரு குன்றுக்குத் தாவினான். இவ்விதமே மாறி மாறி குன்றுகளின்மேல் ஏறிஓடுவதும், இறங்கி வருவதுமாக திரிவதை அவதானித்த சில சக மண்ணின் மைந்தர்கள் அவனை கவனமாக இறக்கி வீட்டுக்கு கொண்டுவந்தனர். அந்த மண்ணின் மைந்தர் தன்னை அலகைகள் அலைக்கழித்ததாகவும் தான் மிகவும் பயந்து போயிருப்பதாகவும் ஒரு குருவைச் சந்திக்க விரும்புவதாகவும் தெரிவித்தான். துறவி அவனை ஒரு குருவிடம் அழைத்துச் சென்றார். அவர் அவனது பாவசங்கீர்த்தனத்தைக் கேட்டு, அவனை ஆசீர்வதித்து ஆறுதற்படுத்தி அனுப்பினார். சில தினங்களின் பின் மீண்டும் அந்த மண்ணின் மைந்தர் தனக்கு அலகையின் பிரச்சனை வருவதாகத் தெரிவித்தான். அவர் புதுமை வரவணிக்க பக்தியை அவனுக்கு விளக்கி, குருவிடம் கூட்டிச்சென்று ஒரு வரவணிக்கத்தை ஆசீர்வதித்து அவனது கழுத்தில் அணிவித்து அனுப்பினார். இதைத் தொடர்ந்து அந்த மண்ணின் மைந்தர் எங்கு சென்றாலும் அதனை அணியாது செல்வதில்லை. தனக்கு பசாசுகளின் தொந்தரவுகள் எதுவும் இல்லை என்றும் ஒருநிமிடம் அதைக் கழற்றினாலும் தன்மனதுக்கு நிம்மதி இராது என்றும் கூறினான். இதைத் தொடர்ந்து எல்லா மண்ணின் மைந்தர்களும் வரவணிக்கம், குருசு உத்தரியம் அணியத் தொடங்கினர். ஆசி நீரும் பிலிப்பினோ கிறிஸ்தவர்களால் வெகு நம்பிக்கைக்குரிய பரிசுத்தபண்டமெனக் கருதப்பட்டது.

ஒரு பிளேக்நோயாளியை மக்கள் இனங்கண்டனர். அவனது வயிறு, தலை ஆகிய இடங்களில் புண்கள் அரிக்கத்தொடங்கின. மக்கள் அவனை நாடுகடத்துமாறு அவசரக்குரல் எழுப்பினர். ஆயினும் எம் கிறிஸ்தவ சுதேசிகள் ஆசிநீரை

நம்பிக்கையுடன் அவனுக்குப் பருக்கி, அவன் மேல் தெளித்தனர். அந்த நோயாளி பூரண குணமடைந்தான். அப்பகுதியில் எவரும் நோயினால் மரிக்கவுமில்லை, நோய்பரவவுமில்லை. ஒரு அஞ்ஞானப் பெண் இந்த நோயின் அகோரத்தாக்கு தலுக்குள்ளானார். அன்றே அவள் இறந்துவிடுவாளென எதிர்பார்க்கப்பட்டது. எனவே நோயாளியின் உறவினர் சிலர் குருவிடம் வந்து அவரை அழைத்தனர். அவளுக்குத் திருமுழுக்கு வழங்குமாறு விண்ணப்பித்தனர். சாதாரணமாக வளர்ந்தோர் எவருக்கும் அவர்கள் கத்தோலிக்க அறிவுபெறாதிருக்க திருமுழுக்கு அவசரமாக வழங்கப்படுவதில்லை. ஆயின் ஒரு ஆறுதலுக்காக குரு, அப் பெண்ணிடம் காலைவரை பொறுத்திருக்குமாறும் அவள் விரும்பினால் ஆசிநீரால் அவளை மந்திரிப்பதாகக் கூறி, அவளை மந்திரித்து சிறு அளவு குடிக்கவும் கொடுத்தார். அதிகாலையில் அப்பெண் நற்சுகமாக இருப்பதாகத் தெரிவித் தனர். ஒரு சிறுபெண் இந்தநோயினால் பெரிதும் அவதிப்பட்டாள். அவளால் ஆசிநீரைக்குடிக்க முடியாதிருந்தது. குரு ஆசிநீரைத் தெளித்து செபித்தார். அவள் பூரணகுணமடைந்தாள். இவற்றால் அப்பகுதி மக்களுக்கு ஆசிநீரில் ஒரு நல்ல நம்பிக்கை ஏற்படலாயிற்று. மண்ணின் மைந்தர் அன்னையர் தங்கள் குழந்தை களை ஆலயத்துக்குக் கொண்டவரும்போது ஆசிநீர்த் தொட்டியருகில் கொண்டு சென்று ஆசிநீரை உடலில் தெளித்து சிறிதளவு பருக்கவும் மறக்கமாட்டார்கள்.

நோயுற்ற அஞ்ஞானிகளுக்கு திருவேதத்தைக் கற்பித்து திருமுழுக்களித்த போது பலதடவைகள் நோயாளிகள் பூரணகுணமடைந்ததைக் கண்ட அந்த அஞ்ஞான மண்ணின் மைந்தர்கள் திருமுழுக்கு (ஞானஸ்நானம்) ஒரு அற்புதமான மருந்து - சுக சஞ்சீவி என்ற மூட நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர். அது ஒரு அருட்சாதனம். அற்புதமான மருந்தல்ல. ஒருமுறைதான் பெறலாம் என்ற உண்மை நிலையை அவர்களுக்கு அறிவுறுத்துவதில் அக்குருக்கள் அரும் பாடுபட்டனர்.

ஒருமுறை ஒரு அஞ்ஞானி, தனது மகன் வருத்தமுற்றபோது குருக்களுக்கு அழைப்புவிடுத்தான். அவரால் போக முடியவில்லை எனவே ஒரு சிறு மரச்சிலு வையை கொடுத்து அதனால் சிறுவனைத் தொடுமாறும் தான் அவனுக்காக செபிப்பாரெனவும் சொல்லியனுப்பினார். சிறுவன் பூரண குணமடைந்தான். சிலுவையை மீண்டும் பெறவந்த துறவிகளிடம் அதைக் கொடுக்க மறுத்தான். காரணம் கேட்டதற்குத் தன்மகனுக்கு மீண்டும் நோய்பீடித்தால் தேவை என்று சொல்லிவிட்டான் அந்த தந்தை.

மண்ணின் மைந்தர் பிரின்சிப்பால்ஸ்கள் (பிலிப்பைன்ஸ்) திருமுழுக்குப் பெற்றபின் தங்கள் பழைய நம்பிக்கைகள், மூடக்கொள்கைகளிலிருந்து முற்றாக விடுதலை பெற்றார்களெனச் சொல்வதற்கில்லை. எனினும் அவர்கள் இறை வனுக்கு உண்மையாகவும் பிரமாணிக்கமாகவும் விளங்க - வாழ, தம்மாலியன்ற வரை முயற்சித்தனர். எனவே இத்தீவுகளின் ஆளுநர்கள் ஸ்பானிய பிரமுகர்கள், தளபதிகளுக்குக் கொடுக்கும் மதிப்பு, மரியாதை, கௌரவத்தை இச்சுதேசி களின் குழுத் தலைவர்களுக்கும் கொடுத்து அவர்களது நல்லெண்ணத்தைப் பெற முயற்சிக்க வேண்டும். ஏனெனில் அஞ்ஞானிகளை மனந்திருப்ப - நற் செய்தியைப் போதிக்க, ஆணிவேராக இருந்து உதவுபவர்கள் இம்மக்கள் குழுக்களின் தலைவர்களே.

புதிய கிறிஸ்தவர்கள் குருக்களிடம் சென்று ஒரு விசேட விண்ணப்பம் செய்தனர். ''நீங்கள் எமக்குத் தந்த போதனைகளுள் ஒன்று ஒரு பாத்திரம் முழுவதும் திரவத்தால் நிரம்பியிருக்கும்போது இன்னொரு பாத்திரத்திலுள்ள

திரவத்தை முன்னைய பாத்திரத்தில் செலுத்த முடியாது. ஒன்றில் பாத்திரத்தை வெறுமையாக்க வேண்டும். அல்லது திரவம் கீழே சிந்தி வீணாகும். நீங்கள் எங்களுக்குப் போதித்த அறநெறி வாழ்க்கைமுறையை நாம் தினசரி கடைப் பிடித்து வருகிறோம். எங்களிடத்தில் முன்பிருந்த தெய்வச் சிலைகளுக்கும் உருவங்களுக்கும் நாம் பலிசெலுத்தினால் உங்கள் போதனையால் நாம் பெற்ற பெருவாழ்வுக்கும் எமக்கு புதுவாழ்வு தந்த திருமுழுக்கு அருட்சாதனநிலைக்கும் அர்த்தமேயில்லை. எங்களில் சிலர் இன்னுமே இந்தத் தெய்வச் சிலைகளை வைத்து வணங்குவதும் பலிகளைச் செலுத்துவதும் எம்மையும் அப்பழைய அர்த்தமற்ற வாழ்வு வாழச்சோதனைக்களமாக அமைகிறது. எனவே இவ்விதம் இன்னும் அஞ்ஞான தேவதைகளின் உருவச்சிலைகள் படங்களை வைத்திருப்ப வர்கள் அவற்றை உங்களிடம் கையளிக்க வேண்டும். அப்போது நாம் எல்லாக் கிறிஸ்தவர்களும் சமநிலையில் ஒரே கடவுளை - ஒரே விதத்தில் வாழ்த்த - ஆராதிக்க முடியும்''

குருக்கள் இவ்விண்ணப்பத்தை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டனர். ஆயினும் அவர்களது அறிவித்தல் எல்லோராலும் அனுசரிக்கப்படுமா? எனவே முதலில் அவர்களின் குழுத்தலைவர்களை அழைத்து ''உங்களிடமுள்ள விக்கிர கங்கள், தேவதைகளின் படங்கள் உருவச்சிலைகளை எம்மிடம் கையளிப்பின் இதைப் பின்பற்றி உங்கள் கீழுள்ள மக்களும் அவ்விதமே செய்வர்'' என அறிவித்தனர். அக்குழுத்தலைவர்களும் எல்லாவகையிலும் ஏனைய மக்களுக்கு முன்மாதிரிகையாக இருப்பதாக வாக்களித்தனர்.

முதலில் தங்கள் வைபவங்களில் தேவதைகளை மகிழ்ச்சிப்படுத்துமாறு குடித்து வெறித்துக் களியாட்டம் நடத்தும் கருப்பஞ்சாற்றைக் (கரும்பிலிருந்து வடிக்கப்படும் முதற்தரச் சாராயம்) கொண்டுவந்தனர். இவையனைத்தும் வெளியே ஊற்றப்பட்டன. பாத்திரங்கள் அடித்து நொருக்கப்பட்டன. விக்கிர கங்கள், மெழுகுசிலைகள், படங்கள் மற்றும் அஞ்ஞான தேவதைகளின் வணக் கத்துக்குரிய அனைத்தும் பெருநெருப்பில் வீசப்பட்டன.

யேசு சபையினரின் நிர்வாகத்துக்குட்பட்ட நகரங்களான அன்ரிபோலோ, ரயாற்றே என்னுமிடங்களில் இரு சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன. இவை இரு பெரும் தீமைகளை எதிர்த்துப் போராடும் இலட்சியத்தை அடிப்படையாகக் கொண்டன. மதுபோதை, உருவச்சிலைகளுக்கு அல்லது அஞ்ஞானக் குருக்கள் மந்திரவாதிகளுக்கோ அளவுக்கு மீறிய மதிப்புக் கொடுத்து கடவுளர்களாக பாவித்தல் என்பனவே அவை. இவற்றினால் கிறிஸ்தவ வாழ்வு பல்வேறு சோதனைகளுக்கும் வேதனைகளுக்குமிடையே அல்லலுற்றதால் இவற்றை கிறிஸ்தவரிடமிருந்து வேரோடு களைவதில் முனைப்பாகப் பணியாற்றினர். சிறப்பாக கடும்நோயால் வருத்தமுறல், மரணவேளை, மரணச்சடங்குகளின் போது ஒப்பாரி வைத்தல், அளவுக்குமீறிய அழுகுரல், திருமணம் மற்றும் வைப வங்களின்போது ஆபாசவார்த்தைகளை உபயோகித்தல், மதுபோதை, விக்கிரக ஆராதனை என்ற மூடநம்பிக்கைகள், பழைய கொள்கைகளை அகற்றி கிறிஸ்தவ சகோதரத்துவ, சமரச குடும்ப வாழ்வை, கூட்டுறவு முறைகளை அனுசரிக்கச் செய்வதில் அரும்பாடுபட்டுழைத்தனர்.

குருக்களின் மற்றொரு மகத்தான பணி மண்ணின் மைந்தர்களுக்கு பாவ சங்கீர்த்தன அருட்சாதனத்தை நன்கு அறிமுகப்படுத்தியமை. இந்த அருட் சாதனத்தால், பாவத்தால் இழந்த மோட்சபேறுக்கு மீண்டும் உரிமையாதல்,

ஆன்மாவை அருள்நிலையில் வைத்திருக்க உதவுதல். நற்கருணை பெறத்தகுதி யுடையவராதல் என்றெல்லாம் இவ்வருட்சாதனத்தின் உபயோகங்களை தெட்டத்தெளிவாக சுதேசிகளுக்கு அறிவுறுத்தினர். சுதேசிகள் இவற்றை நன்கு விளங்கிக் கொண்டாலும் இரகசியம் காப்பாற்றப்படும் என்ற விளக்கத்தில் முழு நம்பிக்கை வைக்கவில்லை. மேலும் இது ஒரு புதுமாதிரியான விடயமாக அவர்களுக்குப்பட்டது. ஒருமுறை பன்னிரு மண்ணின் மைந்தர்கள் ஒன்றுகூடி பாவசங்கீர்த்தனம் பற்றி நன்கு ஆராய்ந்தனர். இது ஒரு நல்ல கருமம் என முடிவுக்கு வந்தனர். யாராவது ஒருவர் முதலில் பாவசங்கீர்த்தனம் செய்து, தன் அனுபவத்தை மற்றவர்களுக்கும் தெரிவிப்பது என முடிவுக்கு வந்தனர். யார் முதலில் போவது என்ற பிரச்சனை அடுத்ததாக வந்தது. முதலில் போக எவரும் விரும்பவில்லை. தங்களுக்குள் பிரச்சனைப்பட்டு இறுதியில் எவருமே பாவ சங்கீர்த்தனம் செய்யவில்லை.

ஆயினும் இதற்கு எதிர்மாறான நிகழ்வுகளும் உண்டு. ஒரு பிலிப்பைன்ஸ் பெண் உற்சாகத்துடன் பாவசங்கீர்த்தனம் செய்யப் புறப்பட்டாள். இதுபற்றி அறிந்த குரு ஆலயத்தில் பலமணிநேரம் பொறுமையுடன் காத்திருந்தார். பிலிப் பைன்ஸ் மக்கள் பயத்தினால் குருவிடம் செல்லத் தாமதிப்பதும் மதபோதனை மனதை உறுத்த முன்னேறுவதும் குருவுக்கு நன்கு தெரியும். சில தாமதிப்புகளின் பின் இறுதியாக அவள் ஆலயம் சென்றாள். வெகு பயத்துடன் பாவசங்கீர்த்தனம் செய்தாள். ஆயின் ஆலயத்தைவிட்டு மகிழ்ச்சியோடு - மனநிறைவோடு வெளி யேறினாள் வெளியில் காத்து நின்ற அவளது சிநேகிதிகள் அவளிடம் "குருவா னவர் அவளது பாவங்களைக் கேட்டுக் கோபித்தாரா? பேசினாரா? ஏசித்திட்டி னாரா" என்றெல்லாம் ஏராளமான கேள்விக் கணைகளைத் தொடுத்தனர். குரு தன்னுடன் ஒரு அன்பான தந்தைபோல் பழகினாரென்றும் தன் தீயசெயல் களைத் தடுக்க வழிவகைகளைத் தெரிவித்தாரென்றும் அவள் விபரித்தபோது அவர்களும் மனநிறைவோடு பாவசங்கீர்த்தனம் செய்யச் சென்றனர்.

பாவசங்கீர்த்தனம் ஒரு அருட்சாதனம் என்பதிலும் பார்க்க அது உளத் துக்கு ஆறுதலளிக்கும் ஒரு கருமம் என்பதையே மண்ணின் மைந்தர்கள் கருத்தில் கொண்டனர். ஒருமுறை பாவசங்கீர்த்தனம் செய்வது மாதகாலத்துக்கும் போதுமானது என்பது அவர்களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஒவ்வொரு ஞாயிறிலும் சங்கீர்த்தனம் செய்வதே அவர்களது அவா. மேலும் அவர்களது உள்ளக்கிடக்கைகளை வெளியாக்க, சங்கீர்த்தனமளிக்கும் குரு வினாக்களை தொடுப்பதும் அவர்களுக்கு விருப்பமல்ல. தாங்கள் தங்கள் உள்ளத்தை ஆழ்ந்து அலசி குற்றங்களை வெளியிடுவது மட்டும் போதும் என்பது அவர்கள் கருத்து. எனினும் முன்பு பொன்னே (பணமே) தெய்வம் எனப்போற்றிய இந்த மண்ணின் மைந்தர்கள் இப்போது மன அமைதியே பெரிது என எண்ணுமளவுக்கு முன்னேறி யிருப்பது பாராட்டுதற்குரியது.

திருமுழுக்குப் பெற்ற மண்ணின் மைந்தர்களுக்கு பாவசங்கீர்த்தன அருட் சாதனத்தை உயிரூட்டமுடையதாக்கியபின் அவர்களை தேவநற்கருணை பெறு வதற்கு ஆயத்தப்படுத்துவதில் அதிக அக்கறை செலுத்தப்பட்டது. இந்தத் தயார் படுத்துதல் எவ்வளவு சிறப்பானதாகக் காணப்பட்டதெனின் ஸ்பானியக் கிறிஸ்தவர்கூட நற்கருணையில் அவ்வளவு பக்தியருட்சி கொண்டிருக்க வில்லையென மத போதகர்கள் கவலைப்பட வேண்டியதாயிற்று.

இது சம்பந்தமாக, திருமுழுக்குப் பெற்ற மண்ணின் மைந்தர்களின் விசுவாச

நிலை நன்கு பரீட்சிக்கப்பட்ட பின்பே அவர்களுக்குப் பாவசங்கீர்த்தனம் வழங்கப் பட்டது. இதன் பின்பும் அவர்களது கத்தோலிக்க அறிவும் அறநெறி வாழ்வும் நன்கு ஆராயப்பட்ட பின்பே நற்கருணை அருட்சாதனம் வழங்கப்பட்டது. முதல்நன்மை பெறுபவர்களுக்கு இரட்சகர் யேசுவின் தெய்வீகம், மனுஷீகம் பற்றிய பூரண விளக்கமளிக்கப்பட்டது. முதல் நன்மைப் பெறுவதற்கு எட்டு நாட்களுக்கு முன்பிருந்து இவர்களுக்காக ஆலயத்தில் விசேட கலந்துரையாடல் நடத்தப்படும். மண்ணின் மைந்தர்களின் கத்தோலிக்க அறிவு மனநிலைக்கு ஒரு உதாரணம்.

பாட்டா நகரில் டொன் பிரான்சிஸ் கோயுரிநகன் பிரபலம் மிக்கவர். செல்வாக்குடையவர். அவரிடம் ஸ்பானியர் ஒருவர் விருந்தாளியாக வந்திருந் தார். விருந்தாளிக்கு நல்ல உபசரணை அளிக்கப்பட்டது. எனினும் ஸ்பானியர் திருப்தியடையவில்லை. தனது காமவெறியைத் தீர்க்க ஒரு பிலிப்பைன்ஸ் பெண்ணை ஒழுங்கு செய்யுமாறும் அதற்குப் பரிசாக தங்க நகைகள் தருவதாகவும் கூறினார். பிலிப்பைன்ஸ் பிரமுகர் வெறுப்புடன் அது ஒருதீய செயலென்றும் தலைவன் என்றமுறையில் தனது குழுப்பெண்களின் மானத்தைக் காக்கும் கடமை தன்னுடையது என்றும் கூறிவிட்டான். ஆத்திரங்கொண்ட ஸ்பானியன் பிலிப்பைன்ஸ் பிரமுகரை அடித்தான். உதைத்தான். நையப்புடைத்தான். அனைத்தையும் அந்த பிலிப்பைன்ஸ் தலைவன் பொறுமையோடு ஏற்றுக் கொண்டான். அவன் விரும்பியிருந்தால் தன்னினத்தாருக்குக் கட்டளையிட அவர்கள் இந்த ஸ்பானியனைக் குரூரமாக வதைத்துச் சிரச்சேதம் செய்திருப்பர். தலைவனுக்குரிய பொறுப்புணர்வுடனும் கிறிஸ்தவப் பண்பாட்டுடனும் அந்த பிலிப்பைன்ஸ் தலைவன் நடந்து கொண்டான்.

இப்புதிய கிறிஸ்தவர்கள், நற்கருணை, பாவசங்கீர்த்தனம் ஆகிய அருட் சாதனங்களுக்கு அடுத்ததாக திவ்விய பூசைப்பலிக்கும் பக்தியுடன் கூடிய கௌரவம் அளித்தனர். திருப்பலி தொடங்கி முடியும் வரை முழந்தாளில் நின்று பலியில் பங்குபற்றினர். தினசரி தவறாது திருப்பலி காண்பர். ஒரு நாளில் பல பூசைகள் காணும் தருணம் கிடைத்தால் தவறாது பங்குபற்றுவர். குரு வேறு ஊர்களுக்குச் செல்லநேர்ந்தால் திருப்பலியில் பங்குபெறவில்லையே என மிகுந்த வியாகுலம் அடைவர். தூர இடங்களுக்கும் கால்கடுக்க நடந்துசென்று திருப்பலி கண்டுமகிழ்வர். நற்கருணை பெறுதற்கான திருச்சபை விதிமுறைகளை கண்டிப்பாக அனுசரிப்பர். நன்மைபெறுவதற்கு முன்னிரவில் கணவன் மனைவி உடலுறவு கொள்ளார். தவக்காலம் முழுவதும் மாமிச உணவைத் தவிர்ப்பர். அக்காலத்தில் வாரத்தில் மூன்று நாட்களும் பரிசுத்த வாரம் முழுவதும் ஒருசந்தி (அரிசிச்சோறு தவிர்த்து அப்பம், பாண் சிறிதளவு) அனுசரிப்பர்.

குருக்கள் மறையுரைகள் மூலம் போதிக்கும் கருத்துரைகள், நற்செய்தி விளக்கவுரைகள், செபங்கள், போன்றவை என்றும் பிரயோசனப்படுத்தப்படும் வகையில் அவற்றை தங்கள் சொந்த வசனநடைகள், அல்லது மனனம் செய்த செய்யுள்கள், பாடல்களின் நடையில் சிறிய அல்லது கைக்கடக்கமான கொப்பிகள், ஏடுகள், எழுத்துச்சுருள்களாக எழுதிப் பயன்படுத்தும் ஒரு நல்ல வழக்கம் மண்ணின் மைந்தர்கள் பலரிடையே காணப்பட்டது. இந்த வகையில் தேவதாய் மற்றும் புனிதர்களின் வரலாறுகள், சிறப்பாக மனந்திருப்பிப் புனிதர்களாக வாழ்ந்த பகிரங்க பாவிகளின் வாழ்க்கை வரலாறுகள் அனைத்தும் கையெழுத்துப் பிரதிகளாக, துண்டுப்பிரசுரங்களாக உபயோகிக்கப்பட்டன. அச்சுக்கலை,

பிலிப்பைன்சில் அறிமுகப்படுத்தப்பட்டபின் இவற்றுள் பல கையெழுத்துச் சுருள்களை குருக்கள் அழகிய நூல்களாக அச்சிட்டு மலிவு விலையில் வெளியிட்டு கத்தோலிக்க விசுவாசம் ஸ்திரப்படுத்தப்பட, எளிதில் எல்லோருக்கும் கிடைக்கத் தக்கமுறையில் பரப்பிவந்தனர்.

சாதாரணமாக எமது வாழ்க்கை நடைமுறைகளில் நாம் செய்யும் சில மாறுதல்கள் அல்லது தியாகங்கள், ஒறுத்தல்கள் அனைத்துமே அவற்றின் அளவு - மதிப்பீடுகளுக்கேற்ப சிறிய - பெரிய பரித்தியாங்களாகக் கணக்கிடப் படுகின்றன. அங்ஙனமே இரட்சகர் இயேசு பட்ட பாடுகளைத் தியானித்து, தங்கள் பாவங்களுக்குப் பரிகாரமாக உணவை ஒறுத்தல், இடாம்பீகங்களைக் குறைத்தல் முதலிய பல தியாகங்களைச் செய்யத் தொடங்கினார்கள். சாக்கு உடைகளை அணிதல் கசைகள், பிரம்புகளால் தங்களையே வாறாக அடித்துக் கொள்ளுதல் முதலிய சுய தண்டனைகளைப் பொறுமையோடு ஏற்றுக்கொண்டனர்.

தாங்கள் எவ்விதம் பரித்தியாகங்கள் செய்யலாமென்பதைக் காட்டித்தரு மாறு, தங்கள் விசுவாச நிலையில் மிகுநிலையைக் கண்ட மண்ணின் மைந்தர்கள் நம்பிக்கையோடு வேண்டுவர். அவரும் அவர்களுக்கு அதைக் காட்டித்தந்தார். தங்கள் உணவில் உப்பைக் குறைத்தல் அல்லது முற்றாகவே தவிர்த்தல் (உப்பு மண்ணின் மைந்தர்களுக்கு மிகப் பிடித்தமானது) முதலிய பல சாதாரண வாழ்க்கை நடைமுறைகளையும் இயேசுவுக்காக ஒறுத்தல் செய்தனர். துறவிகள் நள்ளிரவில் ஓதும் மந்திர மாலையையும் விசுவாசமிக்க மண்ணின் மைந்தர்கள் நள்ளிரவுகளில் எழுந்திருந்து ஓதுவர்.

தவக்காலத்தில் இச்சுய மறுப்புச்செயல்களும் பரித்தியாகங்களும் உச்ச நிலையை அடையும். கனமான சிலுவைகளைச் சுமந்த வண்ணம் வீதிகளில் சிலுவைப்பாதை சுற்றுதல் இரத்தம் பெருக தங்களைத் தாங்களே கசை, பிரம்பு, மூங்கில் தடிகளால் வாறாக அடித்துக்கொள்ளுதல், தங்கள் தீய செயல்களுக் காகத் தங்களைத் தண்டிக்குமாறு தம்மால் துன்புறுத்தப்பட்டோரைக் கெஞ்சிக் கேட்கவும் இந்த நல்ல ஆன்மாக்கள் பின்வாங்கவில்லை. சுருக்கமாகக் கூறினால் யாராவது ஒரு கத்தோலிக்கர் தவக்காலத்தில் அல்லது பரிசுத்தவாரத்தில் பிரவேசிப்பார்களானால் தாங்கள் ஒரு கன்னியர் மடத்தில் அல்லது துறவிகளின் ஆச்சிரமத்தில் இருப்பதாகவே உணர்வார்கள்.

நடிப்புக்கலையிலும் இவர்கள் வல்லவர்கள். புனிதர்களின் வரலாற்றை தங்கள் மொழி, கலை, கலாசார ஆற்றுகைகளுக்கிணங்க (தமிழில் நாடகம், வாசிப்பு, கூத்து, டிறாமா போல்) சிறந்த முறையில் மேடையேற்றுவார்கள். இவர்களது நடிப்புத் திறனை ஸ்பானிய கலைஞர்களே பலதடவை பாராட்டியிருக்கிறார்கள். அவர்கள் கொண்டாடும் திருநாட்களுள் நற்கருணைத் திருநாளுக்கு விசேட மதிப்பு மரியாதை அளிப்பர். செபமாலைக்கும் சிறப்பிடமுண்டு. குருக்களால் ஆசீர்வதிக்கப்பட்ட செபமாலையை எப்போதும் தம்முடன் கொண்டுதிரிவர். தம் வைபவங்கள் அனைத்தையும் திருச்செபமாலை ஓதுவதுடனேயே தொடங்குவர். தேவதாயினதும் புனிதர்களினதும் சிறுபடங்கள், சிறு உருவங்களுக்கு ஆசாரவணக்கம் காட்டி, தம்முடன் கொண்டு செல்வர். செல்வந்தர்கள் தங்கள் வீடுகளிலொன்றை, ஏழைகளுக்கு இலவச மருத்துவ மனையாக உபயோகிக்குமாறு மதபோதகர்களிடம் கையளித்துள்ளனர்.

யேசு சபையார் தொடங்கிய தேவதாயாரின் பக்திச் சபையில் (பொது

நிலையினர்க்காக) பிலிப்பைன்ஸ் கிறிஸ்தவர்கள் உற்சாகத்துடன் இணைந்து, விதிமுறைகளை ஒழுங்குமுறையாகக் கடைப்பிடித்தனர். இச்சபையினர் காலத்துக்குக் காலம் தங்கள் ஒருநேர உணவை அருந்தாது, குழுத்தலைவர்களிடம் அனுப்புவர். இவ்வாறு ஒன்று சேரும் உணவுப் பொதிகள் ஏழைகள், அகதிகள் சிறைக்கைதிகளிடையே பங்கிடப்படும். இதனை அருந்திய ஏழைகளின் கைகளையும் (இயேசுவின் பேரால்) கழுவித்துடைத்து அக்கரங்களை அன்புடன் முத்தமிடுவர். கைதிகள், அகதிகள், அனாதைகளும் உணவருந்தியபின் நிலத்தில் முழந்தாளிட்டு தமக்கு உணவுதந்த பரோபகாரிகளின் நலன்களுக்காகச் செபித்துச் செல்வர். பிலிப்பைன்ஸ் பக்திச்சபைகளின் அங்கத்தவர் இலவச மருத்துவ மனைகளுக்குச் சென்று ஏழை நோயாளரைக் கழுவித்துடைத்துக் காயங்களுக்கு மருந்திட்டு, உணவூட்டி, ஆறுதல் அளிப்பதை கிரமமாக மகிழ்ச்சியுடன் செய்தனர். பக்திச்சபையார் தீமைகளிடமும் தீயவர்களிடமுமிருந்து தங்களைக் காக்க, செபத்திலும் தவத்திலும் நீண்டநேரத்தைச் செலவிட்டனர். தவஞ்செய்யும் போது அவர்களது உணவு வெறும் அப்பமும் தண்ணீருமே. இக்காலங்களில் நீண்ட நேரம் பாவங்களை நினைத்து வருந்தியபின் பாவசங்கீர்த்தனம் செய்து, சம்மனசுகளின் அப்பத்தை அருந்தி மனமகிழ்வர்.

இவர்களது ஆன்மீகத் தலைவர் கட்டளைக் குருவே. ஒவ்வொரு பங்கிலும் பங்குக் குருவின் வார்த்தை இறைவார்த்தையாகக் கருதப்பட்டது. தங்களது துன்பங்களில் ஆறுதலும் அடைக்கலமும் பெற பங்குமக்கள் பங்குத்தந்தையிடமே செல்வர். பிரச்சனைகளில் அவரது மத்தியஸ்தத்தையே நாடுவர். குற்றவாளிகள் அவர் அளிக்கும் தண்டனையை ஏற்றுக்கொள்வர்.

மண்ணின் மைந்தர்களின் குழுத்தலைவர்கள் மூலம் பிலிப்பைன்ஸ் சுதேசிகளின் ஆன்மீக லௌகீக தேவைகளை கவனிப்பதில் திருச்சபை வெற்றியடைந்தது. எனினும் நீதிவழங்குதல் சம்பந்தமாகத் குழுத்தலைவர்களின் தீர்ப்புகள் பலதடவைகள் மண்ணின் மைந்தர்களின் வெறுப்பையும் தேடித்தந்தன. சுயநலம் - பக்கச்சார்பு - பாரபட்சம் என்ற காரணிகள் சிறந்த நீதி வழங்குகைக்கு இடையூறாய் முளைத்தன.

மறைபரப்பாளரின் நற்செய்தி விளக்க உரைகள் மிகத்தெளிவாக எல்லாத் தரத்தினரும் விளங்கிக் கொள்ளும் வகையில் அமைந்திருந்தன. அவை வெறும் விளக்க உரைகள் மட்டுமல்ல, கல்மனதையும் கரையவைத்தன. இரும்பு உள்ளங்களும் இளகின. எனவே எத்தனையோ பாவிகள் தங்கள் ஆன்மாக்களின் நிலை பற்றி ஆழ்ந்து சிந்தித்தனர். நல்ல பாவசங்கீர்த்தனத்தால் புரையேறிக்கிடந்த தங்கள் ஆன்மாக்களைக் கழுவித் தூய்மையாக்கினர். பின்னர் அவ்வான்மாக்கள் பாவக்கறையால் மாசறாதிருக்கும்படி நல்ல கிறிஸ்தவ வாழ்வு வாழ்ந்தனர்.

ஒரு நிகழ்வு - ஒருநாள், ஒரு மதபோதகர் மண்ணின் மைந்தர்களுக்கு மறைக் கல்வி போதித்துக்கொண்டிருந்தார். அவர் எடுத்தாண்ட பொருள் 'நரகம்' - அருள் நில்ல கெட்ட பாவக்கறை மிகுந்த நிலையில் மரித்த ஒரு மனிதனின் முடிவில்லாத பயங்கரத் தண்டனை. அக்குருவின் நல்ல விளக்கம் எத்தனையோ பாவிகளின் உள்ளங்களைத் தொட்டது. மற்றவர்களின் காணிநிலங்களை நேர்மையற்ற விதத்தில் கொள்ளையடித்தவர்கள், அநியாயவட்டி முதலியவற்றால் தம் செல்வத்தை பலமடங்கு பெருக்கிக் கொண்டவர்களும் கனமான பாவிகளே. இவர்களுக்கு நரகத்தில் கிடைக்கும் தண்டனையின் பயங்கரம் எத்தகையது

என அவர் விளக்கியபோது அவ்வித பாவச் செயல்களைச் செய்தபலர் உண்மை யாகவே மனம் வருந்தி விரைவில் நல்ல பாவசங்கீர்த்தனம் செய்யத் தீர்மானித் தனர்.

அந்தக் குழுவில் இருந்த ஒருவன் அழுகையும் கண்ணீருமாக அக்குருவின் முன் முழந்தாளிட்டான். "நான் திருமுழுக்குப் பெற்றதிலிருந்து இதுவரை நரகம் பற்றி இவ்வளவு விபரமான ஒரு மறையுரையைக் கேட்டதில்லை. ஒரு பெரிய பாவ வாழ்க்கையில் மூழ்கியிருந்த என்னை நல்லதேவன் கைப்பிடித்து தூக்கி யிருக்கிறார். நான் ஒரு இடாம்பீக வாழ்க்கையில் வாழ்ந்துவந்தேன். ஆடம் பரமும் கேளிக்கைதரும் இன்பமே பெரிது என எண்ணி வாழ்ந்தேன். அனைத்தும் சிற்றின்பம், இந்த இன்பம் சிறிது காலத்துக்கு மட்டுமே என்ற பேருண்மையை நான் இன்று தெரிந்து கொண்டேன். என் கைவசமுள்ள பொன்னும் பொருளும் எனது செல்வாக்குக் காரணமாக நேர்மையற்ற வழிகளில் கிடைத்தவையே. அனைத்தையும் யாரை வஞ்சித்துப் பெற்றேனோ அவர்களுக்கு வட்டியோடு விரைவில் கொடுக்கப்போகிறேன். மேலும் என்னிடம் குவிந்துள்ள எனக்குச் சொந்தமில்லாத சொத்துகளனைத்தையும் எனது அடிமைகள், வேலையாளர் கள், உதவியாளர்களுக்குப் பங்கிட்டளித்து அவர்களை இனிமேல் அடிமை களாயல்ல, தொழிற்கூட்டாளிகளாகக் கொள்வேன். தயவுசெய்து என்க்கு இப் போதே பாவசங்கீர்த்தனம் தாருங்கள்'' என்றான். உடனே அங்கிருந்த பலரிடம் அபகரித்த பணத்தை நல்ல வட்டியோடு கொடுத்தான். குருவோ அவனது ஆன்ம வாஞ்சை கண்டு மகிழ்ச்சியுற்று, ''நான் இப்போது அவசரமாக வேறு கிராமம் செல்லவேண்டும். நாளை உனது பாவங்களைச் சங்கீர்த்தனம் செய்ய லாம்'' என்று கூறினார். அவனோ உடன்படவில்லை ''இன்றிரவு நான் இறக்க நேரிட்டால் என் ஆன்மாவின் கதி என்ன? உங்களோடு நானும் பயணம் செய்கிறேன். பயணத்தின் போது என்பாவங்களைச் சங்கீர்த்தனம் செய்வேன்'' என்றான். அவ்விதமே பயணம் செய்து கொண்டே அவன் பாவங்களைக் கேட்டு, நற்புத்தி கூறி பாவப் பொறுத்தலும் அருளாசியும் அளித்தார் அந்த நல்ல குரு.

பிலிப்பைன்ஸ் கத்தோலிக்கரின் விசுவாச நிலைபற்றி முந்திய பத்திகளில் தரப்பட்டது. தொடர்ந்து பிலிப்பைன்ஸ் மங்கையர் திருமுழுக்குப் பெற்றபின் பெண்மையின் மேன்மையைக் கட்டிக்காத்தமைபற்றி இரு நிகழ்வுகளால் அறிவோம். ஒரு அழகிய திருமணமாகாத பிலிப்பைன்ஸ் பெண்ணின்மேல் ஸ்பானிய தளபதி ஆசைகொண்டான். பிலிப்பைன்ஸ் மக்கள் தங்கள் அடிமை கள். ஒரு சில நாணயங்களைக் கொடுத்து தன் காமவெறியை தீர்த்துக்கொள்ள லாம் என்பது ஸ்பானியனின் எண்ணம். எனவே தனது வேலையாளிடம் பணத்தைக் கொடுத்து அவளை அழைத்துவருமாறு கட்டளையிட்டான். அந்த மங்கை, அவ்வேலையாளை எச்சரித்து இனிமேல் இவ்விதம் வந்தால் பணத் தையும் அவனையும் யன்னலினூடாக வெளியே சாக்கடையில் எறிந்து விடுவ தாகத் தெரிவித்தாள். ஆத்திரங்கொண்ட ஸ்பானியன் தனது உயர்பதவிமூலம் அப்பெண்ணை பலவழிகளாலும் துன்புறுத்த முயன்றான். பிலிப்பைன்ஸ் மாது தன்கற்பைக் காக்க எல்லாத் துன்பங்களையும் பொறுத்துக் கொண்டாள். இறை வனும் தன் அடியாளைக் கைவிடவில்லை. பலவழிகளாலும் முயன்று தோல்வி கண்டபின் தனதெண்ணத்தைக் கைவிட்டான் இராணுவ தளபதி.

இன்னொரு பிலிப்பைன்ஸ் பெண்ணின் மேல் ஆசைகொண்ட ஸ்பானிய உயரதிகாரி பல்வேறு அன்பளிப்புகளையும் அனுப்பிப்பார்த்தான். இறுதியாக

விலையேறப்பட்ட ஒரு தங்கநெக்லசை அனுப்பினான். இவளது ஆக்கினைகளிலி ருந்து தப்ப அந்த அழகிய கத்தோலிக்க மங்கை, தனது அன்னையுடன் நெடுந் தொலைவிலுள்ள கிராமமொன்றுக்குச் சென்று ஒளித்திருந்தாள். இதனால் அவ மானமடைந்த ஸ்பானிய அதிகாரி வேற்றூருக்கு மாற்றம் பெற்றுச்செல்ல, அவள் மீண்டும் திரும்பி வந்தாள்.

மற்றொரு பிலிப்பைன்ஸ் இளநங்கை (வயது 18) பேரழகி. அவள் ஒரு அகதி. எனவே பல ஸ்பானியர்கள் பணத்தால் அவளை வசப்படுத்த முயன்றனர். அவளை வேலைகொடுத்து பெருந்தொகைப்பணத்தால் அவளை அடைய எண்ணிய பல பணம்படைத்த ஸ்பானிய இளம் அதிகாரிகள் தோல்வியே கண்டனர். ஒரு நேர உணவுக்கே திண்டாடிய அந்த நங்கை "அன்பர் இயேசுவை துரோகிக்க நான் விரும்பேன் பட்டினிகிடந்து இறந்தாலும் கற்புநெறி தவறேன்'' என அறுதியிட்டுக் கூறிவிட்டாள்.

மதபோதக குருக்களின் இல்லத்தில் பணியாற்றும் ஒரு மண்ணின் மைந்தர் அங்கு அனுசரிக்கப்பட்ட ஒழுங்கமைப்பு முறைகள், செபவழிபாடுகள், தன்னைத் தானே கசையடியால் வருத்துதல் போன்ற பல கிறிஸ்தவ அனுசரணைகளில் அதிக நாட்டங்கொண்டான். தானும் சுயதண்டனை அனுபவிப்பதில் நாட்டங் கொண்டான். அவ்விதமே இயேசுவுக்காக கனமான கசையடிகளால் தன்னை வருத்துவதில் தேர்ச்சியும் பெற்றான். ஒருமுறை இராணுவ வீரருடன் நீண்ட பயணஞ் செய்ய வேண்டியிருந்தது. எனினும் தனது செபதப முயற்சிகளை இராணுவ வீரர்களுக்கு பறைசாற்றாது இரகசியமாக அனுசரித்தான். ஒரு நாளிரவு மண்ணின் மைந்தர் தனது கூடாரத்திலிருந்து வெளியேறிச்செல்வதை அந்த இராணுவப் பிரிவின் தளபதி அவதானித்தான். இந்த மண்ணின் மைந்தர் நள்ளிரவில் கூடாரத்திலிருந்து வெளிச்செல்லும் மர்மத்தை அறியுமாறு, இரகசிய மாகப்பின் தொடர்ந்தான். மண்ணின் மைந்தர் கோவில் சேமக்காலைக்குள் சென்று முழந்தாளிட்டுச் செபித்தான். பின் கசைகளால் தன்னை வாறாக அடித்துக் கொண்டான். யாவும் முடிந்தபின் இராணுவ தளபதி மண்ணின் மைந்தரிடம் சுய தண்டனைக்கான காரணத்தை வினாவினான். தான் பாவசங்கீர்த்தனத் துக்குப் போனதாகவும், குரு கொடுத்த அபராதம் வெறும் செபதபமுயற்சிகளே என்றும் தனது பாவங்களுக்கு பரிகாரமாக (குருக்கள் துறவிகள் செய்வது போல) தான் இவ்விதம் செய்ததாகவும் மண்ணின் மைந்தன் கூறினான். தளபதி மகிழ்ச்சியுடன் அவனுக்கு சிறிது பணம் அன்பளிப்புச் செய்து, எங்கள் இராணுவ வீரர்களின் பழக்கவழக்கங்களில் நாட்டம் கொண்டு, உனது நல்ல ஆன்மாவை நாசமாக்கிவிடாதே என எச்சரித்தனுப்பினான்.

தங்கள் கற்பைக்காக்க, பல்வேறு கஷ்டங்களையும் அனுபவித்த - தங்கள் உயிரை முதலாய் இரட்சகர் இயேசுவுக்காக அர்ப்பணித்த புனிதைகளின் வீர வரலாறு திருச்சபைச் சரித்திரத்தில் அன்றிருந்து இன்றுவரை காணக்கிடக்கிறது. பிலிப்பைன்சில் ரகாலொக் கிராமத்தைச் சேர்ந்த அழகான ஒரு சிறுமி; வயது பதினைந்து மட்டுமே. அழகான அச்சிறுமியின் நீண்ட கூந்தல் மயிர் ஒட்ட வெட்டப்பட்டிருந்தது. இதுபற்றி கூறப்பட்ட நிகழ்வு: அவள் வசித்த புலாங் ஆற்றுப்படுக்கைப் பிரதேசக் குழுத்தலைவன் அவளைத் திருமணம் செய்ய ஆசைப்பட்டான். அவன் விதித்த ஒரேயொரு நிபந்தனை கத்தோலிக்க மதத்தி லிருந்து விலகவேண்டும் என்பது. அவனது மதமான இஸ்லாம், வேற்றுமதங் களிலிருந்து பெண் எடுப்பதை தடுக்கிறது. அத்தலைவன் முதலில் நயத்தாலும்

பின் பயத்தாலும் தன் கோரிக்கையை வற்புறுத்தினான். இறுதியாக கத்தோலிக்க மதத்தை துறந்து தன்னை மணக்காவிடில் அவளுக்கு அழகுகொடுக்கும் கூந்தலை ஒட்டவெட்டி அவளை அலங்கோலப்படுத்தப்போவதாக இறுதி எச்சரிக்கை விடுத்தான். அச்சிறுமி தயங்கவில்லை. கூந்தல் பெரிதல்ல: அழகல்ல. இயேசுவே என் ஒரே தெய்வம். அவருக்காக எதையும் இழக்கத் தயாராயிருக்கிறேன் என்று கூறி, கத்தரிக்கோலை எடுத்து தன் கூந்தலை வெட்டித்தள்ளி விட்டாள். அவளின் மனஉறுதிகண்டு அவ்வூரையே விட்டகன்றான் குழுத்தலைவன்.

கிறிஸ்தவ விசுவாச நிலை எவ்வளவுக்கு ஆழமாக பிலிப்பைன்ஸ் விசுவாசிகளிடம் வேரூன்றியிருந்ததென்பதற்கு உதாரணமாக ஒரு நிகழ்வு. பம்பான்கோ பிரதேசத்தில் ஒரு அஞ்ஞான செல்வந்தன் இருந்தான். அவனிடம் ஏராளமான அடிமைகள். ஒருவன் மரணப்படுக்கையில் அவன் இறக்குமுன் திருமுழுக்குப் பெற்று முடிவில்லா வாழ்வு பெறுதல் நலம் என கிறிஸ்தவ விசுவாசிகள் கருதினர். எனினும் செல்வந்தன் சம்மதிக்கவில்லை ''அவன் எனது அடிமை மதம்மாற அனுமதிக்க மாட்டேன்'' எனப் பிடிவாதம் பிடித்தான். பம்பன்கோ குழுத் தலைவர்களிலொருவன் இந்த ஆன்மா அழிந்துபோவதை விரும்பவில்லை ''அப்படியானால் அந்த அடிமையை நான் விலைக்கு வாங்குகிறேன்'' என்று கூறினான். இருவரும் பேரம்பேசி ஒருமுடிவுக்கு வந்தனர். குழுத்தலைவன் உடனே பொருட்களாகக் கொடுத்து அடிமையை மீட்டு குருவிடம் கொண்டு வந்தான். அடிமை மகிழ்ச்சியோடு திருமுழுக்குப் பெற்று சிறிது நேரத்தில் தனதாவியை இறைவனிடம் ஒப்படைத்தான். பணம், பொருள், காணிநிலத்தை பெரிதாக மதிக்கும் ஸ்பானியரும் ஐரோப்பியரும் தனக்காவோ தன் குடும்பத்தினர்க்காகவோ அல்ல, சக மனிதனுக்காக - பிறரன்புச்செயலாக இன்னொரு மண்ணின் மைந்தரை நரகவாயிலிலிருந்து மீட்டெடுக்க பெரும் பொருளை இலவசமாகத்தந்த இப் புதிய கிறிஸ்தவ சுதேசியைப் பெரிதும் பாராட்டினர். அந்த அளவுக்கு தங்களிடம் விசுவாச ஸ்திரநிலை இல்லையே என வெட்கி நாணினர்.

புதுவேதக்காரரின் விசுவாச நிலைக்கு மற்றொரு உதாரணத்துடன் இவ் அத்தியாயத்தை முடிவுக்குக் கொண்டு வருவோம். அந்த சுதேசிய நங்கை லெயிட்டி நகர பிரின்சிபாலஸ் குடும்ப பரம்பரையைச் சேர்ந்தவள். உள் நாட்டுப்போர் காரணமாக ஒரு நீண்ட பயங்கர பிரயாணத்தை இறை நம்பிக் கையுடன் நடத்தினாள். பின்னர் வயிற்றுப் பிழைப்புக்காக ஒரு அஞ்ஞான முதலாளியின் கீழ் பணியாற்ற வேண்டியதாயிற்று. அந்தக் காமவெறியனின் ஆசைக்கு இணங்காததால் அவனது குரூரமான சித்திரவதைகளுக்கு இலக் கானாள். மீண்டும் பல பயங்கரங்கள் மத்தியில் இறைவனருளால் தப்பியோடி மதபோதகர் குழுவொன்றினால் காப்பாற்றப்பட்டு, பின் அமைதியாக பிற் காலத்தைக் கழித்தாள்.

மகலன் **1521**இல் பிலிப்பைன்ஸ் தீவுகளில் கால்வைத்து இயேசுவின் நற்செய்தியை அறிவித்து ஆரம்பித்த மனந்திரும்புதல் இயக்கம், மெக்சிக் கோவில் இருந்து அனுப்பப்பட்ட அகுஸ்தீனியன் சபையாரின் வருகையுடன் வேர்விட்டு, அடுத்து வந்த 50 வருடங்களில் ஏனைய மிசனரிகளின் உதவியுடன் நிலைகொள்ளலாயிற்று.

இந்த 50 வருட வளர்ச்சிக்குப் பின், பிலிப்பைன்ஸ் திருச்சபை இருபாரிய எதிர் சக்திகளை **1600 - 1648**க்கும் இடையே எதிர்கொள்ள நேரிட்டது

60 வருடங்களின் நற்செய்தி அறிவிப்பின் 1620களில் பல தனியார் பிரச்சனைகள் மனம் திரும்புதலுக்கு இடையூறாக இருந்தன. பல மனைவிகளை வைத்திருத்தல், அடிமைகளை வைத்திருத்தல், வட்டிக்கு கடன் கொடுத்தல், குடிப்பழக்கம், எல்லாவற்றிலும் விட துறவிகளும் குருக்களும் மக்களிடம் அருட்சாதனங்களுக்கும் அறவிடும் பணம்.

நரகம், மோட்சம் பற்றிய சத்தியங்கள், சிலருக்குள் சர்ச்சைகளை எழுப்பின. 1601இல் யேசு சபை வலேரியோ லெடெஸ்மா அடிகள் தன் குறிப்பேட்டில் ஒருவன் தன் மூதாதையரோடு நரகத்திற்குபோக விரும்பினான். இருந்தும் சில வாரங்களுக்குப் பின் மனம் மாற்றம் அடைந்து அவரிடம் திரும்பி வந்தான்.

வேறு சிலர் தங்கள் மூதாதையர் மரணத்துக்குப் பின் தமக்கு அருகேயுள்ள எரிமலைகளுக்குள் தூக்கி எறியப்பட்டு உருமாறி வாழ்ந்தார்கள் என்று நம்பினர். அவர்கள் மூடக்கொள்கைகளை நிரூபிக்க மிசனரிகள் அவர்கள் தலைவர்களை எரிமலை விழிம்பு மட்டும் கூட்டிச் சென்று அவர்கள் மூட நம்பிக்கைகளை களையவைத்தனர்.

பொய் தெய்வ வழிபாடும், பலியிடலும், மூடக்கொள்கைகளும், மந்திர தந்திரங்களும் மறைவாகக் கிடந்தன. மிசனரிக் குருக்கள் இவற்றின் எச்சங்களையெல்லாம் கோவில் முன் இருந்த வளாகத்தில் மூட்டப்பட்ட தீயில் எறியச் சொன்னார்கள். பல மக்கள் தங்கள் மலை வீடுகளில் இருந்து இறங்கி வந்து, குருக்கள் அமைத்துக் கொடுத்த வீடுகளில் குடியேறினர். புதிய கிறிஸ்தவர்களுக்கு தடையாக நின்றவர்கள் வெளியில் இருந்து வந்த ஸ்பானிய ராணுவத்தினர் சிலரும் தான். தங்கள் ஆபாச சீர்கெட்ட நடத்தைகளால் தடைக்கல்லாக அமைந்தாலும் பல கிறிஸ்தவப் பெண்களின் வீரமிக்க கிறிஸ்தவ நன்னடத்தை அவர்களை வெட்கமுற வைத்தது.

1596ஆம் ஆண்டு எஸ்ரேபான் றொட்றிகஸ் டி பிகுறாவோவின் ராணுவ பின் வாங்குதலின் பின், பிலிப்பைன்ஸ் தென் பகுதியில் வாழ்ந்த மின்டனாவோ கிறிஸ்தவர்களுக்கு, மொரோ இஸ்லாமிய ராணுவ குழுக்களால் பெரும் துன்பங்கள் ஏற்பட்டன. ஸ்பானிய தளபதிகள் சுதேச கிறிஸ்தவர்களை ஊதியம் பெறா தொண்டர்களாகவே பாவித்தனர்.

ஸ்பானிய கடல்படைக் கலங்களுக்குத் தேவையான மரங்களை வெட்டி நீண்ட தூரம் அவற்றை கொண்டு வந்து சேர்க்கும் பணியில் ஸ்பானிய அதிகாரிகளிடம் இருந்தும் பிலிப்பினோ உயர் அதிகாரிகளிடம் இருந்தும் தாங்கொணாத் தொல்லைகள் ஏற்பட்டது.

இத்தடைகளை விட ஒல்லாந்தர் கம்பனிக்காரராலும் மின்டனாவே முஸ்லிம்களாலும் உயிர் சேதமும் உடல் சேதமும் ஏற்பட்டது. ஐரோப்பாவில் ஸ்பெயின் ஒல்லாந்தர் போர்கள் இங்கும் பாரிய பாதிப்புகளை ஏற்படுத்தலாயிற்று. ஒல்லாந்தரிடம் இருந்து மொலுக்காஸ் தீவுகளை காப்பாற்ற ஸ்பானிய கடற்படை எத்தனித்ததனால் மின்டனேவோவில் அக்கறை செலுத்தாமல் விட, மிசனரிகளுக்கும் கத்தோலிக்கக் கிராமங்களுக்கும் இஸ்லாமியர் பேரழிவை ஏற்படுத்தினர். வேலைப்பழுவும் அதிகரித்ததனால் 2ஆம் பிலிப்பு மன்னன் 1609இல் அனுப்பப்பட்ட மனுக்களை கவனத்தில் கொண்டு பிலிப்பைன்ஸ் கத்தோலிக்கரை கட்டாய அரச சேவையிலிருந்து விடுவித்தான். வேறு சிலரை

சம்பளத்திற்கு வேலை செய்ய வாய்ப்புக்கொடுத்தான்.

ஒல்லாந்தர் பல சலுகைகளை இவர்களுக்கு அளிப்பதாக வாக்கு பண்ணினும், அவர்கள் பதிதர் என்று அறிந்ததும் பாரிய கண்டனங்களுக்கு மத்தியிலும் 1646இல் ஒல்லாந்தர் நீட்டிய கரத்தை பற்ற மறுத்தனர். அவர்களின் கத்தோலிக்க விசுவாசத்தை இறுக்கப் பற்றிக்கொண்டனர். இதில் ஸ்பானிய அரசிடம் இருந்து தான் அரிசியை குறிக்கப்பட்ட வரிபோன்று கொடுக்க வேண்டிய அநியாய சட்டம் இருந்தது. இது 1650 மட்டும் செயல்பட்டு பின் அரச ஆணையின் கீழ் செயல் இழந்தது.

கவனர் டொன் செபஸ்தியன் ஏற்படுத்திய 'வன்டலாள்' என்ற கட்டாய சேவை கப்பல் கட்டுவதற்கு வேண்டிய மரம் வெட்டி பல மைல்களுக்கு இழுத்து வரும் வேலைப்பழுவுடன் அரச கட்டாய அநியாய விலையில் விநியோகிக்கப் பட்ட அரிசி, இந்த அநீதியை எதிர்த்து டொமினிக்கன் குரு டொமின்கோ டி நவாறற் முதலியோர் அரச அவை கண்டனம் தெரிவித்து வெற்றி கண்டனர்.

மின்டனாவே தீவைப் பொறுத்தவரை மிசனரிகள் ஆன்மீக தலைவர்க ளாக மாத்திரமல்ல சில வேளைகளில் இராணுவத் தலைவர்களாகவும் மாறினர்.

கேஜன் பகுதிக் கிராமமொன்றில் பிறே பெட்றோசான் அகுஸ்தீன் அடிகள் தன் மக்களை பாதுகாக்க ஊரைச் சுற்றி பாதுகாப்பு வேலி போட்டு, அரண் சுவர் அனைத்து, தன் மக்களுக்கு போர் பயிற்சியும் அழித்து அவர்களை அடிக் கடி தாக்கி அழிக்க வந்த கோராலற் போன்ற எதிரிகளின் தாக்குதல்களில் இருந்து பாதுகாத்துகொள்ள வல்லமை கொடுத்தார். ஒருமுறை 2000 மொரூரா படையினர் அவர் கிராமத்தைத் தாக்கிய பொழுது அவர்கள் வெற்றிகரமாக துரத்தி அடிக்கப்பட்டனர்.

ஆனால் எல்லா ஊர்களிலும் அப்படி பாதுகாப்பு நிலை நிலவவில்லை. மன்டநாவோவில் 7 குருக்கள் வேத சாட்சிகளாகக் கொல்லப்பட்டனர். வேறு சிலர் கைதிகளாக்கப்பட்டு காணாமற் போயினர்.

யேசுசபை குரு யோசே டுசோஸ், யேசு சபை கிராமங்களின் ராணுவ தளபதியாக வெற்றிகரமாக செயலாற்றினார். அவரை மக்கள் 'கப்ரின் பாதர்' என அழைத்தனர். குறிப்பாக இலிகன் நகர் 2000க்கும் அதிகமாக மொரோ பயங்கரவாதிகளால் ஆக்கிரமிக்கப்பட்ட பொழுது கப்ரின் பாதரின் போர் திறமை தெளிவாக தெரியவந்தது. ஒருமுறை 600க்கும் அதிகமான எதிரிகள் லுபுன்கள் பகுதியை தாக்கிய பொழுது, கிறிஸ்தவர்கள் குறைவாகவே இருப்பினும் புனித சந்தியோகுமையோர் தன் வெள்ளைக் குதிரையில் தோன்றி ஊக்குவித்ததின் நிமித்தம் நகரை வெற்றிகரமாகப் பாதுகாக்க முடிந்தது.

இவ் வரலாற்று ஏற்றத் தாழ்வுகளினூடாக பிலிப்பைன்ஸ் கிறிஸ்தவம் கல்வியிலும் பிறர் அன்புச் சேவை ஆற்றும் அமைப்புகள், வைத்திய சாலைகள், ஏனையவை அமைக்கப்பட்டாலும் சுதேச குருத்துவ வளர்ச்சி 1708இல் தான் ஆரம்பித்தது. 1720 தொட்டு திட்டமிடப்பட வளர்ச்சி தோன்றியது. 1760களில் 111 மேற்றாசனக் குருக்கள் காணப்பட்டனர்.

மணிலாவில் இவர்களுக்கென 4 கல்விக்கூடங்கள் நிறுவப்பட்டன.[72]

அத்தியாயம் பன்னிரண்டு

# சீனா, தாய்லாந், இந்தோநேசிய, மலேசிய திருச்சபைகள்.

ஆசியத் திருச்சபை வரலாற்றில் சீனா, இந்தோசீனா (தாய்லாந்), மலேசியா, இந்தோநேசியா முதலியவை இடம் பெறவில்லை. இருந்தும் சில குறிப்புகளை சுருக்கமாகச் சொல்லிவிடலாம்.

## சீனா

*781 ஆம் ஆண்டு சீன சாசனம் கிறிஸ்தவம் அலோபென் என்ற நெஸ் தோரியர் வருகையோடு 635இல் கொண்டுவரப்பட்டது. தாவோஸ்த சக்கர வர்த்தி 845இல் அதையும் பௌத்தத்தையும் தடைசெய்தான். 10ஆம் நூற் றாண்டில் அது சீனாவில் முற்றாக அழிவுற்று திரும்பவும் 14ஆம் நூற்றாண்டு நடுவில் மொங்கோலிய அரசர்கள் காலத்தில் கொண்டுவரப்பட்டு 30,000 கிறிஸ்தவர்கள் அங்கு வாழ்ந்தனர். பிரான்சீஸ்கன் சபை துறவி யோன் மொன் ரேகோர் வீனோ 1305இல் 6000 பேரை மனம் திருப்பினார். 1330இல் அவர் இறந்தார். 1368க்கு பின் மிந்ராட்சியத்தின்கீழ் திரும்பவும் கிறிஸ்தவம் அழிவுற்றது. பிரான்சீஸ் சேவியர் மக்காவே மட்டும் நுழைந்தார். சன்சுவான் தீவில் அவர் சீனாவின் பெரும் நிலப்பரப்பைப் பார்த்துக்கொண்டே இறந்தார். 16ஆம் நூற்றாண்டின் முடிவில் தான் சீனாவின் பெரும் கற்சுவர் தகர்ந்தது. ருகேறியஸ், மத்தேயு றிசி என்ற இரு யேசு சபைத்துறவிகள், சீன மொழியை நன்கு கற்று, தம் நவீன விஞ்ஞான அறிவின் துணையோடு குவான்ருந், பின் சா ஓசிங்கில் சுவிசேச ஊழியத்திற்கு 1583இல் கால் பதித்து, பின் நன்கிங்கும், இறுதியாக 1601இல் பீக்கிங்குள்ளும் நுழைந்தனர். இதன்பின் சீனாவுக்கு டொமினிக்கன், பிரான்சீஸ்கன், பிரஞ்சு வெளிநாட்டு மிசன் இயக்கம், லாசாறிஸ்ற் முதலிய சபைகளும் திருச்சபை வளர்ச்சியுற்றது. 1674இல் முதல் சீன ஆயர் திருநிலைப்படுத்தப்பட்டார். சுதேச குருக்கள் தொகை பெருகிற்று. 1840இல் 300,000 கத்தோலிக்கர் சீனாவில் இருந்தனர்.*

*யேசுசபைக் குருக்கள் விஞ்ஞானிகள், கணித மேதைகள், புவியியல் படங்கள் வரையும் நிபுணர்கள் என்ற மதிப்பீட்டில் சீன மன்னர்கள் அவர்களை கௌரவித்து சீன கலண்டர் நாட்கணிப்பு, சீர்திருத்தம் வரையவும், நவீன கடி காரங்களை செய்து இயக்கவுமே வரவேற்றனர். சீன மன்னர்களின் அரச பரம் பரை செருக்கோ, தம் கலாசார பெருமையையோ, கிறிஸ்தவத்தின் தேவை யையோ அவர்கள் உணரவில்லை. இதனால் அடிக்கடி கிறிஸ்தவர்களுக்கு எதிராக கலாபனைகள் எழுந்தன. 1610இல் ரிச்சி அடிகளாரின் மரணத்தின்பின், 1660இல், பின் 1724, 1737, 1774, 1784, 1805, 1811 முதலிய ஆண்டுகளில்*

பெரும் வேதகலாபனைகள் எழுந்தன. இறைவனைக் குறிக்கும் தகுந்த சீன சொல் எது? மூதாதையர் வழிபாடு, கொன்பூசியஸ் வணக்கம் இவை வெறும் பாரம்பரிய கலாசார ஆசாரங்களா? அல்லது சமய வழிபாடுகளா? என்ற கேள்விகள் காரசாரமாக டொமினிக்கன் குருக்களால் விமர்சிக்கப்பட்டு, யேசு சபையினருக்கு எதிரான பிரசாரமாக உரோமாபுரி மட்டும் சென்றது. அரசன் கங்சி யேசு சபையினர் பக்கம் சாய்ந்து பாப்பரசர் பிரதிநிதிகள் ஏற்க மறுத்து 1715இல் கிறிஸ்தவத்தையே தடைசெய்யப் புறப்பட்டான். 1742இல் அவன் உரோமாபுரியின் சீனா பற்றிய சுற்றுமடல் அவனுக்கு சென்றடையுமுன்பே இறந்து போனான். சீர்திருத்த சபையினரின் றொபட் மொரிசன் 1807இல் தான் கன்ரோன் வந்து சேர்ந்து 10 பேரை மனந்திருப்பினார்.

## தாய்லாந்து

நவம்பர் 13, 1552இல் புனித சவேரியார் தான் இறக்கு முன் 20 நாட்கள் சான்சியானில் இருந்து எழுதிய கடிதத்தில், ''இங்கிருந்து சீனாவின் கன்ரோனுக்குள் நுழைய முடியாவிடின், நான் சியாமுக்குள் போவேன்'' அவர் இறந்திராவிடில் கூட சியாமுக்குள் அதாவது இந்தோசீனாவுக்குள் நுழையும் முதல் கத்தோலிக்க மிசனரி அவராக இருந்திருக்க முடியாது. 1511இல் அல்போன்சோ டி அல்பர்கேயின் பிரதிநிதிகள் குழுவில் சில குருக்களும் சியாமுக்குள் நுழைந்தனர். இருந்தும் 1555இல் ஜெரோம் டி குரூஸ் அடிகளும், செபஸ்தியன் டி கன்ரோ அடிகளும், இருவரும் டொமினிக்கன் துறவிகள் மலக்காவில் இருந்து சியாமிற்குள் நுழைந்தனர், அவர்கள் பின் வேறு டொமினிகன் சபையினர், 2 பிரான்சிஸ்கன்ஸ், வேறு 3 குருக்கள் 1662இல் காணப்பட்டனர். இவர்கள் எல்லோரும் போர்த்துக்கேயர் ஒருவர் மாத்திரம் ஸ்பானியர் அயுத்தி என்ற அன்றைய தலைநகரில், 2000 கிறிஸ்தவர்களோடு வாழ்ந்தனர். பலர் போர்த்துக்கேயரை மணம் புரிந்தவர்கள்.

22 ஆவணி 1666இல் பியர் லம்பநெற் டிலா. மொரே வேறு இரு பிரஞ்சு குருக்களும் எம் ஈ பி சபையினர். அவர்கள் புறப்பட்டது சீனாவுக்கும், கொச்சின் சீனாவிற்கும், ஆனால் அங்கு வேதகலாபனை ஆரம்பித்திருந்ததினால் அவர்கள் சியாமிலேயே தங்க நேரிட்டது.

இன்று 230,000 கத்தோலிக்கருக்கு பத்து ஆயர்களும், 10 மறை மாவட்டங்களும் உள்ளன.

## இந்தோநேசியா

ஏழாம் நூற்றாண்டின் நடுப் பகுதியில் எகிப்திய வரலாற்று ஆசிரியன் அபு சலா அல்ஆர்மினி, வட சுமாத்திராவின், பாருஸ் நகரில் கிறிஸ்தவர்கள் அதிகம் வாழ்ந்ததாகக் குறிப்பிடுகிறார். 14ஆம், 15ஆம் நூற்றாண்டுகளில் தெற்கு சுமாத்திராவில் கிறிஸ்தவர்கள் வாழ்ந்த எச்சங்கள் உண்டு. 1511இல் சில போர்த்துக்கேய மிசனரிகளால் ஆரம்பிக்கப்பட்டது. அம்பியோனாவிலும், றெற்நேற்றிலும், கோவா, மலாக்காவில் இருந்து வந்த குருக்கள் 1534 ஆம் ஆண்டோ திருச்சபை சுதேசிகள் மத்தியில் ஆரம்பிக்கப்பட்ட ஆண்டுடன் 1984இல் திருச்சபை 450ஆம் நூற்றாண்டு என கொண்டாடியது. ஆரம்ப பகுதியில் டயனேஷஸ் டெலாநற்றிவேயும், றொச்சுஸ் டெலகுறுவா வேத சாட்சிகளானார்கள். 1546ஆம் ஆண்டு மே மாதம் புனித பிரான்சிஸ் றெநேற்

வந்து இறங்கி ஒரு யேசுசபை மிசன் ஒன்றை ஆரம்பித்து வைத்தார். அவர் வருகைக்கு முன்பே குருக்கள் ஆயத்தம் செய்ய ஒரு உயர் பள்ளி தொடங்கப் பட்டது. புனித பிரான்சிஸ் சவேரியார் அதை மேலும் தரமுள்ளதாக வளர்த் தார். இதனால் நாட்டிற்கு தேவையான சுதேச குருக்கள் உருவாகினர். 16ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலேயே 10,000 கத்தோலிக்கர் இருந்தனர்.

மொலோக்கோஸ் தீவுகளின் ரெநேற்றில் இருந்தே, 1529இல் சொலோர் தீவுகள், புலோறஸ் 1529, சுலவேளி 1563, கலிமன்றான் 1688, யாவா 1569 முதலான தீவுகளுக்கு பரவலாயிற்று. பின் வந்த கொலனித்துவ டச் அரசு கத்தோலிக்கர் மீது கடுமையான சட்டங்களை போட்டு திருச்சபை மங்காது பிரகாசித்து வளர்ந்து கொண்டே போனது

## மலேசியா

மலேசியாவை சபா, சரவாக் உள்ளடக்கிய கிழக்கு மலேசியாவென்றும், மலேசிய குடா நாடென்றும் (முன்பு மலே) என்றும் இரண்டாகப் பார்க்கலாம்.

1403ஆம் ஆண்டில் பரமேஸ்வரா மலாக்கா அரசை நிறுவி இந்துவாய் இருந்தவன் இஸ்லாத்தை தழுவினான்.

1511இல் போர்த்துக்கேயர் மலாக்காவை கைப்பற்றி மிசனரிகளும் கூட வந்தனர். இஸ்லாம் ஏற்கனவே வேரூன்றி, கிறிஸ்தவத்திற்கு பெரும் எதிர்ப்பைக் காட்டிற்று. பரிஸ் தூர மிசன் சபையினரே திருச்சபையை மலேசிய மண்ணில் நிரந்தரமாக ஊன்றிய பெருமையைப் பெறுவர். சீயாம் மன்னன் திருச்சபைக்கு எதிராகக் கலாபனையை எழுப்பி மிசனரிகளை வெளியேற்றினான். 1780 டிசம்பர் குடே, கார்னோ மலாக்கா வந்தடைந்தனர். பெனாந் 1786இல் வாங்கப்பட்டது. இங்கு கலாசாலைகள், பள்ளிக்கூடங்கள், அமைப்புகள் எல்லாம் கட்டியெழுப்பப் பட்டு திருச்சபை வளரலாயிற்று.

சபா, சரவர்க் நற்செய்தி அறிவிப்பு 1881இல் தான் மில்கில் குருக்களின் வருகையுடன் ஆரம்பமாயிற்று. இங்கு நடைபெற்ற நற்செய்திப்பணி (MEP) எம் ஈ பி யினரைத் தவிர்த்து கிறிஸ்தவ கல்விக்கூடங்களின் சகோதரரின் பங்களிப்பு கல்வி மறைக்கல்வித் துறையிலும் முக்கியமாகிற்று. அத்துடன் மரியாளின் சேனை, சதா சகாய மாத நோவினைகள் முக்கிய பங்களிப்புகளைச் செய்து இல்லறத் தலைவர்களை உருவாக்க உதவிற்று.

மலேசியாவைப் பொறுத்த மட்டில் மலேயர், சீனர், இந்தியர், ஈழத்தமிழர் வாழ்கின்றபடியால்; யாழ்ப்பாணத்துத் தமிழர் ஆயர்களானார்கள். அதாவது குவால்ம்பூர் ஆயர் 1955 வண.டொமினிக் வன்டர்கன், பெனாங் ஆயர் வண. செல்வநாயகம் அடிகள் ஆகியோரைக் குறிப்பிடலாம். மலேசியக் குடாவில் கத்தோலிக்கர் 33சதவீதமும், சபாவிலும் - சரவாக்கிலும் 12சதவீதத்திற் கும் அதிகமாக காணப்படுகின்றனர். சரவாக்கில் இருந்து அநேக குருத்துவ அழைத்தல்கள் வருகின்றன.

காலனித்துவ காலத்தில் இருந்த திருச்சபையின் கல்வி சமூக சேவையின் வளர்ச்சி இன்று குறைந்துவிட்டதாயினும், சமூகப் பிரச்சனைகளில் அதன் தாக்கம் இருந்து கொண்டே வருகின்றது. சபாவிலும், சரவாக்கிலும் திருச் சபையின் தாக்கம் அதிகமாக காணப்படுகிறது.[73]

# முடிவுரை

பேராசிரியர் இந்திரபாலவின் கீழ் ஆசியாவின் தேசிய விடுதலை இயக்கங்கள் என்ற ஒரு அலகு வரலாற்றுப் பாட மாணவர்களுக்கு உருவாக்கப்பட்ட பொழுது அதில் ஒருவராக நான் பாடங் கேட்டேன்: இந்தியா, இலங்கை, இந்தோநேசியா, பிலிப்பைன்ஸ், வியற்நாம் நாடுகளைத்தான் ஆய்வு செய்தோம், அதே ஆய்வுப் பார்வையைக் கொண்டு அங்கு வேரூன்றிய கத்தோலிக்க விசுவாசத்தை இரண்டு சகாப்தத்தின் பின் பார்க்க ஆசை பிறந்தது.

அங்கு தேசிய விடுதலை இயக்கங்கள் தடம்புரண்டு நவகாலனித்துவத்தின் பிடியிலும் சில அடிப்படைவாத மதப் புரட்டிலும் அலைகின்றன. ஆனால் நம் விசுவாசம் உலகத்தை வெல்லப் பிறந்ததாகையால் அதன் வேர்களை தோண்ட முற்பட்டிருக்கிறோம். அது நமக்குத் தேவையான விசுவாச பரீட்சியம். நம் கத்தோலிக்க விசுவாசம் எதிரிடைகளிடையே தழைக்கும் தூய ஆவியின் உயிர்துடிப்புக் கொண்டதென்பதை முன் சென்ற பன்னிரண்டு அத்தியாயங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

வளர்கின்ற புது மிலேனியம் விசுவாச யுகமாக மலர இது உதவலாம்.

சுவாமி ஞானப்பிரகாசர் இலங்கை (போர்த்துக்கேயர் காலம்) யாழ்ப்பாணத் திருச்சபைச் சுருக்கம், அன்ரனைனஸ் மடுமாதா வரலாறு முதலியவற்றை நன்கு படைத்தனர். ஆனால் நம் உலகு கிராமமாகி, ஆசியாவின் பிராந்திய வல்லரசுகளான இந்தியா, சீனா நம் கவனத்தை கோருகின்றன.

திருச்சபை எல்லா கலாசாரங்களுக்கும் பொதுத்தளம். அது வரவேற்று அன்பு செய்யும் தாய் உள்ளம் கொண்டது. நம் உள்ளமும் குறுகி இராது, ஆவியானவரின் அரவணைப்பைக் கண்டு எல்லா ஆசிய சபைகளின் இதயத் துடிப்பை நமதாக்குவோமாக.

*வாழ்க அவர் நாமம்!*
*வருக அவர் அரசு.!!*

# அடிக்குறிப்புகள்

அத்தியாயம் ஒன்று

1. 72 யூதக் குருக்கள் கொன்ற ஜெருசலேமின் யூத நீதிமன்றம்
2. Bellarmino Bagatti, The church from the circumeision, Jerusalem frameiscan printing press. 1971. p.7
3. அதே 8
4. அதே 14 - 18
5. அதே 13
6. அதே 20
7. அதே 21
8. அதே 21
9. அதே 23
10. அதே 24
11. அதே 26
12. அதே 26
13. அதே 28
14. அதே 52
15. அதே 57
16. அதே 58
17. அதே 60
18. அதே 62
19. அதே 64, 65
20. அதே 182 - 184
21. அதே 194
22. அதே 213 - 228
23. அதே 293
24. அதே 293

அத்தியாயம் இரண்டு

25. Christopher O'Mohony, vol I Church History. India 1974. p.62
26. Encyclopedia Britanica London 2002. p.721
27. அதே
28. அதே
29. அதே
30. அதே

அத்தியாயம் மூன்று

31. Kaduloubovsky and palmer early Fathers from the philokalia London, Faber + Faber 1954.
32. அதே

### அத்தியாயம் நான்கு

33. Vincent Smith Oxford History of India 1908. p.126
34. V. செரியன் Cherian. Kerala Xtianity World conference of malayalam keralaculture development trivandrum 1917.
35. சுவாமி. ஜெ.இ.ஜெயசீலன், யாழ்ப்பாண திருச்சபை வரலாறு, பிலோமின அச்சகம், யாழ்ப்பாணம் 1997.
36. Hermon de Souza in the Steps of St. Thomas. India. p. 33
37. அதே
38. H.J.Klimkeit, R Merserve Religions & Religions movements Moseow - Paris 2003.
39. அதே

### அத்தியாயம் ஐந்து

40. Osservatore Romano 29.9.96 Rome 1996. p. 7
41. அதே
42. Joseph Thekkedath History of Xtianity in India V. II. Bangalore Theology publications India 1982. p. 155
43. அதே 156 - 163
44. அதே 164 - 174
45. அதே 175 - 180

### அத்தியாயம் ஆறு

46. அதே 182
47. அதே 195
48. அதே 197
49. அதே 200
50. அதே 205

### அத்தியாயம் ஏழு

51. S. Rajamanicam S.J, The First oriental seholar Diocesean press madras. 1967.
52. அதே 26, 27
53. அதே 28, 29
54. அதே 29
55. அதே 30
56. அதே 30
57. அதே 31
58. அதே 32,33
59. அதே 34
60. அதே 33,34
61. அதே 33
62. அதே 34
63. அதே 35
64. அதே 37
65. அதே 38

66. அதே 44,45
67. அதே 39
68. அதே 49 - 54

**அத்தியாயம் எட்டு**

69. சுவாமி வீரமாமுனிவர் நினைவு மலர், கத்தோலிக்கு சேவா சங்கம், டி நோபிலி அச்சகம், மதுரை 1944.

**அத்தியாயம் ஒன்பது**

70. Joseph Jennes CICM A history of the catholic church in Japan. (1549 - 1873) Tokyo oriens Institute for Religious Research 1973. (யப்பான் பற்றிய வரலாறுகள் இந்நூல் தழுவியதே)

**அத்தியாயம் பத்து**

71. Joseph Jennes CICM A history of the catholic church in Japan. (1549 - 1873) Tokyo oriens Institute for Religious Research 1973. (யப்பான் பற்றிய வரலாறுகள் இந்நூல் தழுவியதே)

**அத்தியாயம் பதினொன்று**

72. John. N. Sehumacha Readings in Philippine Church History Manila Ateneo De Manila University 1987. (பிலிப்பைன்ஸ் பற்றிய வரலாறுகள் இந்நூல் தழுவியதே)

**அத்தியாயம் பன்னிரண்டு**

73. 1987இல் மின்டனாவேவில் உள்ள கயின் டிஒரோவில் சாள்ஸ் டி புக்கோ வின் குருக்கள் ஞானவொடுக்கத்தில் நான் சேகரித்த கணனி குறிப்புகளில் இருந்து பக். 197 - 200



கலாநிதி சுவாமி ஜெ.இ.ஜெயசீலன் அடிகளார், கலைமாணிப் பரீட்சைக்கு ஆசிய வரலாற்றை ஓர் அலகாக்கிப் பட்டம் பெற்றவர். இவர் மைசூரில் முதுமாணிப் பரீட்சைக்கு ஆங்கில இலக்கியத்தையும், மெய்யியல் முதுமாணி ஆய்வுக்கு ஈழத்து தாந்திரிக மரபையும் ஆய்வு செய்தவர்.

இவர் ஆங்கில இலக்கியத்தில் கலாநிதிப் பட்டத்தைப் பெற்றாலும் வரலாற்றுத் துறையில் கொண்ட ஈடுபாடும், ஆய்வுப் புலமையும் இவரை பல வரலாற்றுக் கட்டுரைகளையும், வரலாற்று நூல்களையும் எழுத வைத்துள்ளது.

இவர் எழுதிய வரலாற்று நூல்கள் 'யாழ்ப்பாணத் திருச்சபை வரலாறு' (1997), 'ஆசியத் திருச்சபை வரலாறு' (2007), 'இலத்தீன் அமெரிக்கத் திருச்சபை வரலாறு' (அச்சில்) என்பனவாகும். இவையெல்லாம் விசுவாச ஆழப்படுத்தலையே நோக்கமாகக் கொண்டவை.

மேலும் பல தொகுப்புக்களையும், துண்டுப் பிரசுரங்களையும் வெளியிட்ட இவர்; 'தேவதாயின் குரல்' எனும் இதழை 1997 முதல் வெளியிட்டு வருகின்றார்.

ISBN: 978-955-50109-0-0